பொண்டாட்டி

அராத்து



First Edition : 2008
First Edition by Ezutthu Prachuram : November 2018
(An imprint of Zero Degree Publishing)
ISBN: 978 93 87707 75 7
Title No. EP: 39



**Zero Degree Publishing**
No. 55(7), R Block, 6th Avenue,
Anna Nagar,
Chennai – 600 040

Website : www.zerodegreepublishing.com
E Mail : zerodegreepublishing@gmail.com
Phone : 98400 65000

To my **Mum**

Who loves me unconditionally not ‘because of'
but ‘in spite of...'

A tribute to **Charu Nivedita**

# ஆணுரை

பொண்டாட்டிகளைப் பற்றிய நாவல் என்றாலும் கதையில் ஆண்களும் வருகிறார்கள். ஆண்கள் கணவர்கள் ஆனால்தான் பெண்களால் பொண்டாட்டிகள் ஆகமுடியும் என்ற கசப்பான உண்மையை ஏற்றுக்கொண்டு வேறு வழியில்லாமல் ஆண்களையும் உலவ விட்டிருக்கிறேன். ஆனால் முழுக்க முழுக்க பெண்களையும் பொண்டாட்டிகளையும் மையப்படுத்தியே கதை நகரும். ஆண்களின் பார்வையில் கதை எங்கும் தவழாது.

என்னதான் பொண்டாட்டிகளின் கதையைப் பற்றி எழுதி இருக்கிறேன் என்று சொன்னாலும், நான் ஒரு ஆண்.

ஒரு பெண்ணால் மட்டுமே அவளைப் பற்றியும் பெண்களின் மனதையும் பொண்டாட்டிகளின் உலகை உண்மைக்கு மிக அருகிலாவது எழுத முடியும்.

ஒரு ஆண் என்னதான் சார்பில்லாமல் இதய சுத்தியோடு எழுதினாலும் அவனை மீறி சார்புத்தன்மை வந்து விடும். அது மட்டுமல்லாமல் தான் புரிந்து கொண்டதை போதாமை கலந்துதான் எழுத முடியும்.

இது நிச்சயம் ஃபெமினிஸ்ட் நாவல் அல்ல. புரட்சி நாவலும் அல்ல. எந்த பிரச்ச்சாரமோ நீதி சொல்லுதலோ இருக்காது. யாருக்கும் ஆதரவு எதிர்ப்பு என ஏதும் இருக்காது. தமிழ்ச் சூழல் தவறவிட்ட பொண்டாட்டிகள் அல்லது வேண்டுமென்றே பார்க்காமல் கண்களை மூடிக்கொண்டதால் தெரியாமல் போன பொண்டாட்டிகள் இந்த நாவலில் வருவார்கள்.

இந்த ஆண் – பெண் வேறுபாடு, சண்டைகள் எனக்கு மிகவும் ஆச்சர்யத்தைக் கொடுக்கிறது. இயல்பாக ஒரு ஆணுக்கு பெண்ணையும், பெண்ணுக்கு ஆணையும் தானே பிடிக்க வேண்டும். ஆனால் ஏன் ஆண்கள் மொத்த பெண்களுக்கு எதிராகவும், பெண்கள் மொத்த ஆண்களுக்கு எதிராகவும் வெறிகொண்டு, திட்டிக்கொண்டு திரிகிறார்கள் என்பது எனக்கு புரிபடுவதே இல்லை.

எனக்கு பெண்களைத்தான் கொள்ளை கொள்ளையாய்ப் பிடிக்கும்.

ஐ லவ் கேர்ள்ஸ்!

ஒரு ஆணாக, என்னுடைய இந்த வெளிப்படையான ஆணுரையை பெண்களுக்குச் சமர்ப்பிக்கிறேன்.

அன்பன்

அராத்து

# அன்னம்

மா ரியம்மா உக்கிரத்துடன் முறைத்துக்கொண்டிருந்தாள். அவள் கண்களின் உக்கிரத்தைக் குறைக்கும் பொருட்டு, கண்களில் பொருத்தியிருந்த பித்தளைக் கண்கள் தோற்றுப்போயின. பட்டுப்பாவாடை, மல்லிகை மலர்கள், காப்பு, முத்துமணி மாலைகள் என அணிவித்திருந்த எதுவும் அவள் கோபத்தைக் குறைக்க உதவவில்லை. அவளுடைய கோபத்தை அழகாக்கிக் காட்டிக்கொண்டு இருந்தன.

தன்னுடைய கோபத்தின் வீரியம் இந்த அழகாக்குதல்களினால் குறைந்ததை உணர்ந்து, மாரியம்மனின் கோபம் இன்னும் பலமடங்கு பெருக்கெடுத்து கர்ப்பக்கிரஹம் முழுக்கப் பரவியதுபோல இருந்தது. பூஜை முடிந்து கதவு பூட்டப்பட்டிருந்தாலும், மெல்லிய மங்கிய வெளிச்சத்தில் கர்ப்பக்கிரஹமெங்கும் குங்குமம் சிதறிக் கிடக்க பிரகாசமான கோபத்துடனே மாரியம்மனைப் பார்க்க முடிந்தது.

சின்ன கோவில்தான்; சின்ன கர்ப்பக்கிரஹம்; அதற்கு முன்னால் சின்ன மண்டபம், திறந்த வெளி மண்டபம்; எட்டு கற்தூண்கள்; மேலே கூரை, கீழே சிமெண்ட் தரை; ஒரு லிங்கம் மற்றும் ஒரு நந்தி. நந்திக்குப் பக்கத்தில் இரண்டு கிண்ணங்கள்; ஒன்றில் விபூதி, ஒன்றில் குங்குமம்; விபூதி கிண்ணத்தில் அதிகமாக இருக்க, குங்குமம் குறைவாக இருந்தது. மாரியம்மன் கோவிலில் குங்குமத்திற்குத்தானே டிமாண்ட்..?

ஒழுங்காக, ஜாலியாக, நறுக்குத் தெறித்த மாதிரி எழுதுபவன், நாவல் என்றவுடன் இழுத்து முழக்குகிறானே என்று நினைத்த மாரியம்மனுக்குக் கோபம்; உக்கிரத்தை மீறி நக்கல் சிரிப்பு ஒன்று வெளிப்பட்டது. அந்த நக்கல் சிரிப்பில் மாரியம்மனைப் பார்க்க அவ்வளவு அற்புதமான, அழகியாகக் காட்சியளித்தாள். உலகமே ஒருகணம் தளும்பியதுபோல இருந்தது.

‘பொண்டாட்டி என்ற பெயரில் நாவல் எழுதப்போகிறேன். எந்தத் தவறு செய்தாலும் உன்னிடம்தான் சரணடைவேன்; இப்போது, முதலிலேயே சரணடைந்து விடுகிறேன். தவறு செய்யப்போகிறேனா என்று தெரியாது, எது நடந்தாலும் நீதான் பொறுப்பு’ என்று எழுதி முடித்தபடி அம்மனை ஏறிட்டான்.

நக்கல் சிரிப்பு முடிந்து அம்மன் குறும்பாகப் பார்ப்பதுபோல இருந்தது.

‘‘நீயும் ஒரு பொண்டாட்டிதானே..?" என்று சத்தமாகக் கேட்டான்.

அந்த மண்டபத்தில் நான்கைந்து கிழவிகள் தூங்கிக்கொண்டு இருந்தனர். இல்லையில்லை, படுத்துக்கொண்டு இருந்தனர். யாரும் இவன் அம்மனிடம் பேசியதை கவனித்தது போலத் தெரியவில்லை. பல பேர் வருகிறார்கள், சத்தம் போட்டு அம்மனிடம் பேசுகிறார்கள், அம்மனையே திட்டுகிறார்கள், மண்ணை வாரித் தூற்றி விட்டுச் செல்கிறார்கள், அழுகிறார்கள், அங்கலாய்க்கிறார்கள். அவர்கள் யாரையும், படுத்திருக்கும் இந்த கிழவிகள் கவனத்தில் கொள்வதில்லை. குழந்தையைப் பறிகொடுத்து விட்டு வந்து விழுந்து புரண்டு அழுது, ‘‘ஒம்புள்ளைய பறிகுடுத்தாதாண்டி ஒனக்குத் தெரியும்" என்று, மண்ணை வாரியிறைத்து விட்டு மயங்கிச் சரியும் பெண்ணைக் கூட இந்தக் கிழவிகள் கண்டு கொள்வதில்லை. அந்தப் பெண் தானாக மயக்கம் தெளிந்து எழுந்துத் தளர்வாக, ‘‘உனக்கென்னா, நீ நல்லா இரு, இப்படியே மொறைச்சிகிட்டு ஒக்காந்துட்டு இரு" என்று சொல்லியபடி கிளம்பிச்செல்லும்போது மட்டும் இந்தக் கிழவிகள் கையேந்துவார்கள். அந்தப் பெண்ணும், ஆளுக்கு கொஞ்சம் சில்லறையைக் கொடுத்து விட்டுச் செல்லும்.

குழந்தையை அல்பாயுசில் பறிகொடுத்து விட்டு, மாரியம்மனைத் திட்டுவதற்காக வந்த பெண்மணி, எப்படிச் சில்லறை எடுத்து வைத்துக்கொண்டு வந்தாள் என்பது வியப்பாக இருக்கும் இவனுக்கு.

பொண்டாட்டிதானே என்ற கேள்வி அம்மனுக்குக் கோபத்தை அதிகப்படுத்தியதுபோல இருந்தது. அதுதான் இவனுக்கு வேண்டும். கையில் இருந்த சூலம் ஏதேனும் நகர்கிறதா என்று உற்றுப் பார்த்தான். தொங்கிக்கொண்டு இருந்த விளக்குகள் மட்டும் ஆடின. அது, காற்றால் இருக்கலாம்; அல்லது பிரமையாக இருக்கலாம். அம்மனுடைய முகமாற்றம்

தெளிவாகத் தெரிந்தது. அது பிரமையல்ல... கோபமா அல்லது தீர்க்கமாக ஏதேனும் சொல்ல வருகிறாளா என்று மட்டும் புரியவில்லை.

‘‘கேக்கறேன் இல்ல... நீயும் ஒரு பொண்டாட்டிதானே..?'' என்று சத்தமாகக் கேட்டான்.

ஒரு கிழவி மட்டும், நீட்டியிருந்த கால்களைக் குறுக்கிக்கொண்டாள். அம்மனுக்குக் கோபம் ஏறி இவனை சூலத்தால் குத்தினால்கூட தேவலை என்றுதான் நினைத்திருந்தான். அம்மனின் சூலத்தால் குத்தப்படுவது எவ்வளவு பெரும்பாக்கியம்..? குத்தவே நினைத்துக்கூட பார்க்க முடியாத அம்மனின் கைகளில் சூலத்தைக் கொடுத்தது எவ்வளவு பெரிய வக்கிரம்..? முதன்முதலில் சூலத்தை அம்மன் கையில் கொடுத்தவனையே இந்த அம்மன் குத்தியிருக்க வேண்டும்; குத்திவிட்டுச் சூலத்தைத் தூக்கி எறிந்திருக்க வேண்டும். ஏன் செய்யவில்லை எனத் தெரியவில்லை. இல்லை, குத்தி விட்டு, எதற்கும் இருக்கட்டுமென்று சூலத்தைக் கைக்கொண்டாளா என்றும் தெரியவில்லை.

புகையேறிய நாற்பது வாட்ஸ் மஞ்சள் பல்பும் தன் வெளிச்சத்தை நிறுத்திக்கொண்டது. அம்மன் கண் பார்வையில் இருந்து மறைந்து போனாள். அவள் நெற்றியில் தீட்டியிருந்த குங்குமம் மட்டும் தெரிவது போல இருந்தது. அது வளர்ந்து, நிலா அளவுக்கு பெரியதாகத் தெரிவது போல இருந்தது.

ஒரு டிவிஎஸ் 50 அந்தக் கோவில் வளாகத்திற்குள் நுழைந்தது. அதனுடைய முகப்பு விளக்கும் நாற்பது வாட்ஸ் மஞ்சள் பல்பின் வெளிச்சத்தில் பாதியையே உமிழ்ந்தது. நான்கு ஏக்கர் அளவுக்கு இருந்தது இந்தக் கோவில் வளாகம். கோவில் ஒரு கிரவுண்டுக்குள் அடங்கி விடும். சின்னதும் பெரிதுமாக கோவில் நிலத்தை ஆக்கிரமித்துக் கட்டப்பட்ட குடிசைகள். கட்டப்பட்ட குடிசைகள் என்று சொல்வது மாரியம்மனின் கோபத்தைக் கிளறிவிடும். எனவே, போடப்பட்ட குடிசைகள். அந்த குடிசைகளுக்கு இடையே மெலிந்து நெளிந்து செல்லும் தெருக்கள். கோவில் வளாகத்தினுள் நுழைந்த டிவிஎஸ் 50 ஒரு சந்துக்குள் நுழைந்து முன்னேறியது. அந்தச் சந்தின் கடைசியில் இருந்த ஒரு குடிசையின் முன்பு நின்றது. அக்குடிசைக்கு முன்னே ஒரு பெரிய வேப்பமரம் இருந்தது. அதனடியில் வண்டி கமர்ந்து அடங்கியது.

இதைக் குடிசை என்று சொன்னாலும், கொஞ்சம் வசதி தோய்ந்த குடிசையாக காணப்பட்டது. அதற்குக் காரணம், இந்த டிவிஎஸ்— 50ஐ நிறுத்திய ஜாஃபர். ஜாஃபர், அந்த ஊரில் கட்சியின் முக்கிய புள்ளி. ஜாஃபர் வண்டியை நிறுத்தி விட்டு அந்த குடிசைக்குள் நுழைந்தார். குடிசை, தூக்கி வைத்து உயரமாக கட்டப்பட்டு இருந்ததால், உள்ளே விசாலமாக இருந்தது. ஜாஃபரின் தலையீட்டால், குடிசையே ஒரு முகலாய பாணி கட்டடத்தின் அமைப்புகளை உள்வாங்கிக் கட்டப்பட்டு இருந்தது.

குடிசைக்கு வெளியே மூங்கில் வேலி, சவுக்குக் கழிகள் வைத்துக் கட்டிய கதவு, அதன் பின்னே கித்தான் சாக்கு இழுத்துப் பிடித்துக் கட்டப்பட்டு இருந்தது. வெளியே இருந்து பார்த்தால் உள்ளே ஒன்றுமே தெரியாது. சவுக்குக் கதவை திறந்து கொண்டு உள்ளே நுழைந்தால், வீட்டைச் சுற்றி வெற்றிடம். செடிகள் கொடிகள் பூத்துக்கிடந்தன. வீட்டின் முன்பு ஒரு செம்பருத்திச் செடி, ஒரு குண்டு மல்லிகைக் கொடி. அத்துடன் ஒரு சிமென்ட் தொட்டி பெரியதாக இருந்தது. தண்ணீர் தெளிவாகத் தளும்பிக்கொண்டு இருந்தாலும், தொட்டியின் அடியில் பச்சைநிறப் பாசி தென்பட்டது.

சின்ன வராந்தா, அதில் இரண்டு மர நாற்காலிகள், அதைத்தாண்டி உள்ளே நுழைந்தால், விசாலமான வரவேற்பறை. இனி இதைக் குடிசை என்று சொல்லக்கூடாது. ஜாஃபர் குடில் என்றோ அன்னம் குடில் என்றோ சொல்வோம்.

இத்தகைய மொகலாயப் பாணி குடிசைகள் இந்தியாவைத் தவிர வேறெங்கும் இருக்கிறதா என்று தெரியவில்லை. இந்தக் குடிசையிலேயே வராந்தா, ஹால், சமையலறை மற்றும் படுக்கையறை இருந்தன. நீண்ட மூங்கில்கள் தூண்களாகத் தாங்கி நிற்க, கீழே மண்தரையில் போடப்பட்டு இருந்த வண்ண மயமான பாய்கள் அந்தக் குடிசைக்கு ஒரு மயக்கலோகத் தோற்றத்தைக் கொடுத்தன. மூங்கில்களுக்கும் வண்ணம் அடிக்கப்பட்டு இருந்தது. மொகலாயப் பாணி மஹால்களின் கட்டடப் பாணியையும் நுணுக்கத்தையும் அப்படியே உள்வாங்கி, அதைக் குடிசையாக வடித்து எடுத்திருந்தது போலத் தெரிந்தது அன்னத்தின் குடிசை.

லாந்தர் விளக்கில் படித்துக்கொண்டு இருந்த பொடியன் பாலு, ஜாஃபரை ஏறிட்டுப் பார்த்து விட்டு, மீண்டும் எழுத்துக்கூட்டிப் படிக்க ஆரம்பித்தான். ஜாஃபர், கொண்டுவந்த மிக்சர் பொட்டலத்தைப் பாலுவிடம் கொடுத்தார். அதை வாங்கி வைத்துவிட்டு மீண்டும் அவன் எழுத்துக்கூட்டலானான்.

அன்னம், தோட்டத்தில் கீற்றால் மறைக்கப்பட்ட குளியலறையில் பெரிய தொட்டியில் இருந்து தண்ணீரை எடுத்து வாளியில் ஊற்றிக்கொண்டு இருந்தாள்.

ஜாஃபர், ‘‘அன்னம்...’’ என்று குரல் கொடுத்தபடியே குடிசையின் பின் கட்டுக்குச் செல்ல, ‘‘அடுப்படியில சோறு இருக்கு, சாப்புடுங்க, குளிச்சிட்டு வந்துடறேன்" என்று, அன்னம் குரல் கொடுத்தாள்.

ஜாஃபர் வந்துவிட்ட பதற்றம் ஏதுமில்லை அன்னத்திற்கு.

தன்னுடைய சேலையைக் களைந்து கொடியில் போட்டாள். யாருமில்லாத நிலையிலும், துண்டை எடுத்து மார்பின் மீது போட்டுக் கொண்டு, ஜாக்கெட்டின் ஊக்குகளைக் கழற்ற ஆரம்பித்தாள். இந்த கோவில் குடிசை வளாகத்திலேயே அன்னம் மட்டும்தான் ஜாக்கெட்டில் பின்னால் வைத்த ஊக்குகளைப் போடுபவள். ஜாக்கெட்டைக் கழற்றிக் கொடியில் போட்டதும், கருப்பு கலர் பாடியையும் கழற்றினாள். அன்னம் கருப்பு நிறம்தான். ஆனாலும், கருப்பு பாடிதான் அணிவாள். அன்னம் கருப்பு என்றாலும், ஒரு மினுமினுப்பான கருப்பு. அந்த மினுமினுப்பான கருந்தேகத்திற்கு நடுவே பளிச்சிடும் வெண்மை அவள் விழிகளில் இருந்து கிளம்பும். பெரிய விழிகள், அந்தப் பெரிய விழிகளினுள், பெரிய வெண் விழிப் பிரதேசம், சிறிய கருவிழிகள்.

பச்சை நிற பாவாடையை மார்பின் மீது தூக்கிக் கட்டிக்கொண்ட பின்னரே, துண்டை எடுத்துக் கொடியில் போட்டாள். கால்கள், வடிவாகவும் மினுமினுப்பாகவும் தீர்க்கமாக நின்று கொண்டிருந்தன; அந்தக் கால்களில் அதீத தன்னம்பிக்கை வெளிப்பட்டது. எவர்சில்வர் சொம்பை எடுத்து வாளியில் இருந்து தண்ணீரை மொண்டு தலையில் ஊற்றிக்கொண்டாள். அவள் கட்டியிருந்த பாவாடை மெல்லியதாக இல்லாமல் வல்லியதாக இருந்ததால் தண்ணீர் ஊற்றியும் அவளது மார்பகங்கள் கொஞ்சங்கூட தெரியவில்லை.

அதன் வடிவம்கூட புலப்படவில்லை. என்னதான் வல்லிய பாவாடையாக இருந்தாலும் அதனால் அளவை மறைக்க முடியுமா..? பாவாடை பின்னால் கொஞ்சம் கீழே தொங்கியபடியும், முன்னால் கொஞ்சம் மேலே ஏறியபடியும் இருந்ததே அவளின் மார்பகங்களின் அளவை உலகுக்கு உரக்கச் சொல்வதுபோல இருந்தது. தண்ணீர்த் துளிகள் முழங்காலில் இருந்து பாதம் வரை வழிவது மட்டுமே இப்போதைக்குப் பார்க்கக் கவர்ச்சிகரமானக் காட்சியாக இருந்தது.

ஜாஃபர், தட்டில் சோற்றை மலை போலப் போட்டுக்கொண்டு, கறிக்குழம்பை எடுத்துக் கொட்டிப்பிசைந்து, அவளின் முலைகளை விட பெரிய உருண்டையாகப் பிடித்து உள்ளே தள்ள ஆரம்பித்தார்.

அன்னம், கல்லில் மஞ்சளை தேய்த்து அதை எடுத்து முதலில் பாவாடைக்குள் கையைக்கொண்டு போனாள். இன்னொரு முறையும் மஞ்சளைத் தேய்த்துக் கைகளைப் பாவாடைக்குள் கொண்டு சென்றாள்.

மீண்டும் சொம்பை எடுத்து நிதானமாக ஊற்றிக்கொண்டு குளித்து முடித்து விட்டு, தயாராக இருந்த இன்னொரு பாவாடையை தலை வழியாக நுழைத்தாள். புது பாவாடையை மார்புக்கு அருகே பிடித்துக்கொண்டு, ஈரப்பாவாடையையை அவிழ்த்து விட்டாள். அது, அவளின் கால்களைச் சுற்றி வட்டமடித்தது. புதுப் பாவாடையை மார்புக்கு மேலே கட்டிக்கொண்டாள்.

உடலைத் துவட்டாததால், புதுப் பாவாடையில் ஈரம் கோலம்போட ஆரம்பித்தது. பல கிளைப்பாதைகள் அவளின் பாவாடையில் சரசரவென தோன்றி ஓடின. கொடியில் கிடந்த ஒரு சீட்டித்துண்டை எடுத்துத் தலையை துவட்டிக்கொண்டே, அடுப்பங்கரைக்குள் நுழைந்தாள். ஜாஃபர், பாதி சாப்பாட்டில் இருந்தார்.

‘‘ரசம் வேணுமா" என்றாள்.

‘‘எடுத்து வையேன்" என்றார்.

அவர், அன்னத்தையோ, அவளின் ஈர உடலையோ, அந்த ஈர உடலில் ஒட்டிக் கொண்டிருக்கும் பாவாடையின் மூலம் பகீரடிக்கும் வளைவு நெளிவுகளையோ கண்டு கொள்ளவேயில்லை; சாப்பாட்டிலேயே குறியாக இருந்தார்.

“நார்த்தங்கா ஊறுகாய் குடு” என்றார்.

மண்சட்டிப்பானை ஒன்றை எடுத்து, அதனுள் இருந்த நார்த்தங்காய் ஊறுகாயை அவருக்குப் போட்டுவிட்டு, உடை மாற்றப்போனாள் அன்னம்.

உடை மாற்றிக்கொள்ளும் சின்னத் தடுப்பு போன்ற அறையில் ஒருவரின் கருப்பு—வெள்ளை போட்டோ மாட்டப் பட்டிருந்தது. அவர் பெயர் கங்கநாதன். பெயர்தான் விசித்திரமாக நகைக்கடை வைத்திருப்பவர்போல இருந்தாலும், ஐயா உண்மையில் அப்படி இல்லை.

கங்கநாதன் தள்ளுவண்டி வைத்திருந்தார். முந்திரிப்பழம், மரவள்ளிக் கிழங்கு, வேகவைத்த நிலக்கடலை, நுங்கு, எலந்தப்பழம், கரும்பு என, சீஸனுக்கு தகுந்தபடி விற்பார். தெருத்தெருவாக அலைந்து திரிந்து விற்பார். சில சமயம் எந்த சீஸனும் இல்லாமல் போனால், சோன் பப்டி, பஞ்சு மிட்டாய் என ஏதேனும் விற்பார். அல்வாகூட விற்பார்.

அல்வா விற்கும்போது மட்டும்,

‘அல்வாத் துண்டு

ஆடுவது சிண்டு

உன் மோவாயைக் கண்டு

துடிக்கிதடி நண்டு" என, பாட்டுப்பாடி விற்பார்.

ஒவ்வொரு பதார்த்தத்தையும் விற்கும்போதும் அதை ராகம் போட்டு விசித்திரமாகக் கத்துவார். அவரது கத்தலுக்கும், அந்தப் பொருளின் பெயருக்கும் சுத்தமாகச் சம்பந்தம் இருக்காது.

உதாரணமாக, ‘க்க்கேனக்கல்... க்கேனக்கல்’ என்று தொண்டை கிழியக் கத்திக்கொண்டு போவார். என்னதாண்டா விற்கிறார் என்று போய்ப்பார்த்தால், அது கொண்டைக் கடலையாக இருக்கும்.

கொண்டைக்கடலை — இதை மென்மையாகச் சொன்னால் கொண்டைக்கடலை என்றுதான் சொல்லமுடியும். இதையே சத்தமாக ராகம் போட்டுச் சொல்கையில் கொண்டேக்கடலே என்று வரும். இன்னும் சத்தமாகத் தொடர்ந்து சொல்லிப்பாருங்களேன், ண்டேக்க்கடலே, ண்டேக்கடலேஏ,

டேக்கடலேய், டேக்கடலேஏஏய், இப்படியே சொல்லிக்கொண்டே போனால், ஒரு கட்டத்தில் சன்னதம் அதிகமாகி ஒக்கேனக்கல் என்று ஆகிவிடும்.

மலர்கள் மலர்வது நமக்குத் தெரியாது என்பதுபோல, கொண்டைக் கடலை எப்போது க்கேனக்கல் ஆனது என்பதையும் நம்மால் அறிய முடியாது. ஆனால், ஒரு சத்தியத்துக்குக் கட்டுப்பட்டுக் கொண்டைக்கடலை க்கேனக்கல் ஆனதோடு நிறுத்திக்கொண்டார். அடுத்த வருடம் கொண்டைக்கடலை விற்கும்போதும், க்கேனக்கல் என்றே விற்பார். க்கேனக்கல் வேறு ஏதும் மாற்றம் அடையாது.

இதெல்லாம் அல்லாமல், ரோஸ் கலரில் ஜவ்வு மிட்டாய்போல ஏதோ ஒன்றை விற்பார். ஒரு சவுக்குக் கழி அல்லது மெல்லிய தடிமனான கவக்கழியை நினைத்துக்கொள்ளுங்கள். அந்தக் கழியை பாலீஷ் போட்டு, அந்தக் கழியின் உச்சியில் அந்த ரோஸ் கலர் ஜவ்வு மிட்டாயைச் சுற்றி வைத்திருப்பார். இப்போது மல்டி கஸின் ரெஸ்டாரண்டுகளின் வெளியே கவனித்து இருந்தீர்கள் என்றால், ஷவர்மா போடுவதைப் பார்த்து இருக்க முடியும்.

அதை எப்படி ஒரு இரும்பு கம்பியில் சுற்றி வைத்து, தேவையானபோது பிறாண்டி எடுக்கிறார்களோ, அதைப்போலவே இவர் இந்த மிட்டாயைச் சுற்றி வைத்து, அதிலிருந்து உருவி மோதிரம் செய்து குழந்தைகளுக்குப் போடுவார். மோதிரம் ஐந்து காசு. வாட்ச் செய்து போட்டால் பத்து காசு. பெரும்பாலான குழந்தைகள் முண்டக் கட்டையாகத்தான் மிட்டாய் வாங்கும் என்பதால், வாட்சோ மோதிரமோ செய்து போட்டுவிட்டுக் கொசுறாகக் கொஞ்சம் மிட்டாயைப் பிடுங்கி , குஞ்சிலோ, அப்புச்சியிலோ ஒட்டி விடுவார்.

இதையெல்லாம் இவ்வளவு விளக்கிச் சொல்லியும் ஒரு புண்ணியமும் இல்லை. அட, ‘நல்ல — வித்தியாசமான மனிதராக இருக்கிறாரே... நாவல் முழுக்க இவரை ரசிக்கலாம்’ என்று நீங்கள் முடிவு செய்தால், அது முடியாது.

ஏனென்றால், கங்கநாதன் இறந்து விட்டார். அவரது தள்ளு வண்டியைக்கூட விற்றாகி விட்டது. ஆனால், கங்கநாதன் இயற்கை யாக சாகவில்லை; கொலை செய்யப்பட்டார். காலங்கருக்கலில், வீட்டிற்குள்ளேயே தூக்கில் தொங்கிக்கொண்டு இருந்தார்.

அன்னம் தலைவிரி கோலமாக அழுது கொண்டிருந்தாள். ‘ஜா∴பர், முதல் நாள் இரவு வந்து அடித்துக்கொன்று தூக்கு மாட்டிவிட்டுப் போய் விட்டார்’ என்பது ஊர் முழுக்கப் பேச்சாக இருந்தது. அன்னம் அதற்கு உதவினாள் என்றோ, தலையணையை முகத்தில் வைத்து அழுத்தினாள் என்றோ, தூக்கில் தூக்கி மாட்டும்போது, என்னா இந்த கனம் கனக்குறாரு என்று சொன்னாள் என்றோ யாரும் பேசிக்கொள்ளவில்லை.

ஜா∴பர், கட்சியின் முக்கியப்புள்ளி என்பதாலும், அன்னம் அந்த ஊரின் மெஜாரிட்டி ஜாதியைச் சேர்ந்தவள் என்பதாலும் பிரச்னை ஏதும் ஆகாமல், அன்று மாலையே சவ ஊர்வலம் புறப்பட்டது. போலீஸ் ஸ்டேஷனுக்கு கவர் கொடுக்கப்பட்டது. கங்கநாதனின் அம்மா மட்டும் ‘கொலைகாரப் பாவிங்களா…’ என அந்த குடிசை மஹாலின் முன்பு அழுது புரண்டு அரற்றியபோது, அன்னத்தின் சொந்தக்காரர்களால் மிதிக்கப்பட்டாள். தலையில் ரத்தம் வடிய, அந்தக் கிழவி மாரியம்மனின் முன்பு போய் நின்றுகொண்டு, தன் ஜாக்கெட்டை உருவிக் கீழே போட்டாள்.

‘‘எம்புள்ள பால் குடிச்ச மொலையை அறுத்துக் குடுக்குறேன், அறுத்து எறியறேன். எப்புள்ளையக் கொன்ன அந்த தேவிடியா சிறுக்கியயும், அந்த கொலைகாரப் பாவியையும் காவு வாங்குவியாடீ..?’’ என்று கதறினாள். கீழே கிடந்த கருங்கல்லை எடுத்து முலையை அறுக்கத் தொடங்கினாள். தொங்கிப்போய் இருந்த கிழவியின் முலையில் இருந்து ரத்தம் வடிய ஆரம்பித்தது.

அன்னத்தின் ஜாதிய சொந்தக்காரர்கள் இங்கேயும் வந்து கிழவியைத் தாக்கினார்கள். மண்ணில் உருண்டாள். வாயில் ரத்தம் வழிய வழிய மண் வாய்க்குள் போனது.

பொது ஆட்கள் சிலர் வந்து, ‘‘கெழவியை இப்படியா போட்டு அடிக்கிறது..?’’ என்று சொல்லியபடியே, அவர்களிடமிருந்து அவளை காப்பாற்றிக் கொண்டு போனார்கள்.

‘‘என் ஈரக்கொலை நடுங்குதுடீ, எம்மவனைக் கொன்ன பாவத்துக்கு நீ மண்ணாப் போய்டுவ, ஒரு பாவமும் பண்ணாத எம்புள்ளையைக் கொன்னியேடீ, நீ நக்கத் தவுடில்லாம போயிடுவ, உன்னை காளியாயி வாரிகிட்டு போவ…’’

என, அதிர அதிரக் கதறிக்கொண்டே போனாள் கிழவி. அந்தக் கிழவியின் பெயர், பாக்கியத்தம்மாள். இந்தக் கிழவி மாரியம்மன் முன்பு கதறியபோது, மாரியம்மன் அமைதியாக அமர்ந்து இருந்தாள். எந்தச் சலனமும் தெரியவில்லை. இந்த பாக்கியத்தம்மாள், இள வயசில் அழகாக இருப்பார். இவர் கணவர் பெயர் முருகேசன். முருகேசி என்று அழைப்பார்கள். முருகேசி தூங்கிக்கொண்டு இருக்கையில் உலக்கையால் தலையில் அடித்து கொன்றவர் இந்த பாக்கியத்தம்மாள். அப்போது இந்த மாரியம்மன் கோயில் கட்டியிருக்கவில்லை. அதனால், மாரியம்மனுக்கு இந்த உலக்கை சம்பவம் தெரிந்திருக்காது என்பது பாக்கியத்தம்மாளின் பல நம்பிக்கைகளில் ஒன்றாக இருக்கலாம்.

அதற்குப்பிறகு அந்தக்கிழவி இறந்ததற்குக்கூட அன்னம் போகவில்லை. கிழவி சுருக்கு பையில் சேமித்து வைத்திருந்த சொற்ப ரூபாய்கள் மட்டும் பேரன் பாலுவின் வசம் ஒப்படைக்கப்பட்டன. பாலு மட்டும் இழவு வீட்டுக்குச் சென்றான். நெய்ப்பந்தம் பிடித்தான். ஜாஃபர்தான் பாலுவை டிவிஎஸ்—50 வண்டியில் ஏற்றிக்கொண்டுபோய் இழவு வீட்டில் இறக்கி விட்டார். அந்த டிவிஎஸ்——50ல் பாலு அன்றுதான் முதன்முதலில் ஏறினான். பின்னால் உள்ள சீட்டில் அமராமல், முன்னால் ஏறி நின்று கொண்டான். சிறிது தூரம் ஓட்டியதற்குப்பின், வண்டியை நிறுத்தி, ‘‘பின்னால போய் ஒக்காந்துக்கடா’’ என்று சொன்னார். பிடிக்காமலேயே பின்னால் போய் அமர்ந்து கொண்டான் பாலு.

தனியாக கங்கநாதன் இருப்பது போன்ற ஒரு போட்டோ அல்லாமல் கங்கநாதன், அன்னம், பாலு மூவர் இருக்கும் ஒரு கலர் போட்டோவும் அன்னம் உடை மாற்றிக்கொண்டு இருந்த அறை போன்ற தடுப்பில் இருந்தது.

அன்னம், நீலா பவுடரை பஃப் வைத்து முகத்தில் ஒற்றிக்கொண்டாள். சிங்கார் சாந்து பொட்டு இட்டுக்கொண்டு, மை தீட்டிக்கொண்டாள்.

வெளியே வந்தாள். பாலு அரைத் தூக்கக் கலக்கத்துடன் படித்துக் கொண்டு இருப்பதைப் பார்த்தாள்.

‘‘வாடா தூங்கலாம்’’ என்று அவனைக் கைத்தாங்கலாக அணைத்தபடி கோணி சாக்கு மற்றும் கித்தான் சாக்கால் தடுத்திருந்த ஒரு அறைக்கு அழைத்துச்

சென்று படுக்க வைத்தாள். பக்கத்தில் படுத்துக்கொண்டு பாலுவை முதுகில் தட்டிக்கொடுத்தாள்.

பாலுவுக்கு அம்மாவின் சோப்பு நறுமணமும் பௌடர் நறுமணமும் பிடிக்கவில்லை. ஏனோ எரிச்சலாய் இருந்தது, பிடிக்கவேயில்லை. முரண்டு பிடித்தபடியே அரைத்தூக்கத்துக்கு போனான்.

ஜாஃபர், மூங்கில் பெடலைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். ஒரு சார்மினாரை எடுத்துப் பற்ற வைத்தார். மாரியம்மன் கோவில் மண்டபத்தில் படுத்து இருந்த ஒரு கிழவி தலையைத் தூக்கிப் பார்த்தாள். சைகையில் அழைத்தார் ஜாஃபர். கிழவி, புடவையைச் சுருட்டிக்கொண்டு கீழே கவனமாக பார்த்தபடி ஜாஃபரை நோக்கிச் சென்றாள். நிலவு வெளிச்சம் கொஞ்சம்தான் இருந்தது. கோவில் வளாகத்தில் விளக்குகள் இல்லை. கிழவி கொஞ்சம் வேகம் எடுக்கையில் ஒரு பாம்பு அவசரமாகக் கடந்து சென்றது. அதை கவனித்து விட்ட கிழவி, 'தூ தூ தூ' என மூன்று முறை துப்பினாள். ஜாஃபரிடம் சென்று நின்றாள்.

ஜாஃபர் அவளுக்கு ஒரு சார்மினார் கொடுத்தார். வாங்கிக்கொண்டு ஏதும் பேசாமல் கோவிலுக்குத் திரும்பிய கிழவி, கீழே கிடந்த ஒரு பேப்பரை எடுத்து சுருட்டினாள். அதை கோவில் கர்ப்பக்கிரஹத்தின் இரும்பு கிரில் கேட்டில் இருக்கும் ஓட்டை வழியாக உள்ளே செலுத்தினாள். தொங்கிக்கொண்டிருந்த விளக்குகளில் அந்த பேப்பரைக் காட்டி பற்ற வைத்து, வெளியே இழுத்து சார்மினாரை பற்ற வைத்தாள். மீண்டும் தான் படுத்திருந்த இடத்திற்கு வந்து அமர்ந்து ஆழமாக இழுத்து ஒரு இழுப்பை விட்டாள்.

சார்மினாரை முடித்த ஜாஃபர், வீட்டுக்குள் மீண்டும் வந்தார். நடு ஹாலில் சிற்பச்சிலை போல நிமிர்ந்து அமர்ந்து நெளிந்து இருந்தாள் அன்னம். பக்கத்திலேயே பாய் போடப்பட்டு இருந்தது.

அந்த பாயில் படுத்துக்கொண்ட ஜாஃபர், "காலை அமுக்கி விடு அன்னம்" என்றார். காலை அமுக்கி விட்டுக்கொண்டே அவரின் மார்பருகே வந்த அன்னம் அவரின் காதில் கிசுகிசுத்தாள்.

முண்டா பனியனோடு படுத்திருந்த ஜாஃபர், "ந்தா... சட்டை மாட்டிருக்கு பாரு, அதை எடு" என்றார்.

அன்னம் அவரின் சட்டையை எடுத்துக்கொடுத்தாள். அந்த சட்டை யின் உள் பாக்கெட்டில் இருந்து பணத்தை எடுத்தார். அதிலிருந்து ஒரு 50 ரூபாய் நோட்டை எடுத்து அன்னத்திடம் கொடுத்தார். அன்னம் அதை ஜாக்கெட்டில் சொருகிக்கொண்டாள்.

மீண்டும் காலமுக்கச் சொன்னவர் படுத்து விட்டார். தூங்கியும் போனார். அன்னம் இன்னொரு பாயைப் பக்கத்தில் போட்டு, இரண்டு தலையணை வைத்து படுத்துக்கொண்டாள். ஜாஃபர் தூங்கி எழுந்திருக்கும்போது அன்னம் பக்கத்தில் படுத்திருக்கவில்லை யென்றால் ஜாஃபருக்கு பெருங்கோபம் வந்து விடும். சிடுக்கென்று கிளம்பிச் சென்று விடுவார். நன்கைந்து நாட்கள் வரமாட்டார். அவர் வழக்கமாக செல்லுமிடங்கள், அமர்ந்து கதை பேசிக்கொண்டிருக்கும் கடைகள் என அன்னம் அவர் பின்னாலேயே அமைதியாய்ச் சுத்த வேண்டும். அவர் கண்ணில் படுவதுபோல போய்ப்போய் நிற்க வேண்டும்.

ஒருவழியாய் மனமிறங்கி, சைக்கிள் கடை பையனிடம் சொல்லி அனுப்புவார், ‘ராவைக்கு வரேன்னு போய் சொல்லு’ என்பார். அவர் சொன்னது அன்னத்திற்கே கேட்கும். இருந்தாலும், சைக்கிள் கடை பையன் வந்து சொல்லும் வரை நின்றுகொண்டு இருப்பாள். பிறகு, ஜாஃபருக்கு ஒரு புன்முறுவல் காட்டிவிட்டு, துள்ளலாக நடந்து செல்வாள். அன்று இரவு அல்வா, மிக்சர், பூரிக்கிழங்கு என தடபுடலாக வாங்கி வருவார். நூறோ இருநூறோ கையில் கொடுப்பார். பாலுவுக்கும் இருபது ரூபாய் கிடைக்கும். மாரியம்மன் கோவில் திருவிழாவிற்கும் சுளையாக நன்கொடை கொடுப்பார். அவரது நன்கொடைதான் முதல் போணி. அதனால், கோவில் வளாகத்திலும் ஜாஃபருக்கு நல்ல மரியாதை.

அந்தக் கோவில் நிலத்தில், மின்சாரம், தண்ணீர் குழாய், அடி பம்பு என அனைத்தும் ஜாஃபரின் முயற்சியால்தான் வந்தது.

ஜாஃபருக்கும் அன்னத்திற்கும் முதன்முதலில் எப்போது தொடர்பு ஏற்பட்டது, எப்படி பேசிக்கொண்டார்கள், எப்போது பார்த்துக் கொண்டார்கள் என்பது ரகசியமாகவே உள்ளது. அந்தச் சின்ன ஊரில், எந்தத் தருணத்தில் இருவருக்குள்ளும் ஒரு உடன்பாடு ஏற்பட்டது..? என்ன

பேசிக்கொண்டிருப்பார்கள்..? என்ன ஒப்பந்தத்திற்கு வந்திருப்பார்கள்..? என்பது போன்றதெல்லாம் யூகிக்கக்கூட முடியாதபடி இருக்கிறது.

எப்படியோ, இருவருக்கும் ஒரு தொடர்பு உருவாகி, ஒரு நள்ளிரவில், தன்னுடைய வண்டியைக் கோவில் வளாகத்துக்கு வெளியே நிறுத்தி விட்டு, கங்கநாதன் இருக்கும்போதே அன்னத்தின் வீட்டுக்குள் நுழைந்து விட்டார். எந்தத் தகவல் தொடர்பும் இல்லாத அந்தக் காலத்தில் அன்னமும் தூங்காமல் விழித்து இருந்தாள். கங்கநாதன் நன்றாகக் குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டிருக்க, அன்னமும் ஜாஃபரும் வீட்டின் தோட்டத்திற்குச் சென்றார்கள்.

ஜாஃபருக்கு முத்தம் கொடுக்கவெல்லாம் தெரியாது. நேரடியாக அன்னத்தின் புடவையை விலக்கிவிட்டு, ஜாக்கெட்டைக் கழற்றி னார். அன்னம் அவரை அவிழ்க்க விடாமல் கட்டிக் கட்டிப் பிடித்துக்கொண்டிருக்க, ஜாஃபர் அவளைத் தள்ளி விட்டுக்கொண்டே ஜாக்கெட்டைக் கழற்றி விட்டார்.

அன்னத்திற்கு வெட்கம் தாங்க முடியாமல் அவரை இறுக்கி அணைத்துக்கொள்ள, அவளின் உள்பாடியையும் கழற்றி விட்டு, இரண்டு கைகளாலும், ஆரங்கப் பாக்கு கொட்டை விஸ்வரூபம் எடுத்தால் எப்படி இருக்கும்..? அல்லது பனம் பழம் பார்த்து இருக்கிறீர்களா..? அதைப்போல திரண்டு உருண்டிருந்த முலைகளை இரண்டு கைகளாலும் ஏந்திக்கொண்டு, ஆவேசமாக அமுக்க ஆரம்பித்தார்.

அன்னத்திற்கு வலித்தாலும், தாங்கிக்கொண்டு அவர் மீது சாய முயற்சித்தாள். இப்படி சில நிமிடங்கள் அமுக்கி விட்டு, அவள் மடி மீது படுத்துக்கொண்டார். அன்று உடலுறவுக்கு முயற்சிக்கவில்லை. இதைப்போல சில இரவுகள் ரகசிய சந்திப்புகளாகச் சென்று கொண்டு இருந்தன. ஒவ்வொரு சந்திப்பிலும் இதே கதைதான். அன்னத்தின் முலைகளை நெகிழச் செய்து விட்டார். இரண்டாவது சந்திப்பில் இருந்து பணம் கொடுக்க ஆரம்பித்தார்.

ஒரு இரவு சிக்கலான இரவாகிப்போனது. இவர் முலையமுக்கும் செயலில் மும்முரமாக இருக்க, மழை பெய்ய ஆரம்பித்தது. அவசர அவசரமாகச் சட்டையைப் போட்டுக்கொண்டார். அன்னம் உள்பாடியை போட்டுக்கொண்டு இருக்கும்போது சரியாக கங்கநாதன் தோட்டத்திற்கு வந்து பார்த்து விட்டார்.

அப்போது அன்னத்தின் குடிசை சிறியதுதான். ஒழுகவும் செய்யும். மழைத்தண்ணீர் ஒழுகி கங்கநாதன் எழுந்து, அன்னத்தைக் காணாமல் தோட்டத்திற்கு வந்து பார்த்து விட்டார். உடனே உடம்பு பதற, “நாயே, என் வீட்டுக்குள்ளயே பூந்துட்டியா” என்று, பக்கத்தில் கிடந்த செறாவை எடுத்து ஜாஃபரைத் தாக்க ஆரம்பித்தார். தடுத்த அன்னத்திற்கும் செறா அடியும் கீறல்களும் விழுந்தன. செறாக்கட்டையில் இருக்கும் சின்னச் சின்ன செதில்கள் அன்னத்தின் உடலுக்குள் புகுந்தன. வலி உயிரே போனாலும் அன்னம் கத்தவேயில்லை.

இந்த களேபரத்தில் ஜாஃபர் ஓட்டமும் நடையுமாக ஓடி, தன்னுடைய வண்டியைத் தள்ளிக்கொண்டே ஓடி விட்டார். அந்தக் கோயில் குடியிருப்பில் இருந்த ஒரு சிலர் ஜாஃபர் ஓடுவதை பார்த்தார்கள். அன்று இரவு முழுக்க அன்னதுக்கு அடி விழுந்து கொண்டே இருந்தது. அன்னம் சுருண்டு படுத்துக்கொண்டாள். கங்கநாதன் மிதித்தார், உதைத்தார், சமயங்களில் வெறியேறி, கையில் கிடைத்தவற்றையெல்லாம் கொண்டு அடித்தார். ஒரு குடம் தண்ணீரை எடுத்து அன்னத்தின் மேல் ஊற்றினார். வௌக்குமாரை எடுத்து வாங்கு வாங்கென்று வாங்கினார். அதிகாலை, அசதியில் உட்கார்ந்த வாக்கில் உறங்கிப்போனார். இப்படி அடியும் உதையுமாக சில நாட்கள் கடந்து சென்றன. பொடியன் பாலுவுக்கு ஏதோ வீட்டில் மாற்றம் இருப்பதாகத் தோன்றியது.

எப்படித்தான் தகவல் பரிமாறிக்கொண்டார்களோ, ஒரு நாள் நள்ளிரவு ஜாஃபர், தன் டிவிஎஸ்—50 ஐ கோவிலுக்கு வெளியே நிறுத்தி விட்டு, அன்னத்தின் வீட்டுக்குள் பெடலை நகர்த்தி விட்டு நுழைந்தார். அன்னம் தன்னை அற்புதமாக அலங்கரித்துக்கொண்டு, மல்லிகைப்பூவை வழக்கத்தைவிட தூக்கலாக வைத்திருந்தாள். குங்குமம் ரத்தச் சிகப்பில் பெரிதாக வட்டமடித்தது. இருவரும் ஒன்றும் பேசிக்கொள்ளவில்லை. ஜாஃபர் தன் தலையை மேலாக தூக்கி இறக்கினார். அவருடைய புருவங்களும் கண்களும் மேலே ஏறி இறங்கி, ‘எல்லாம் சரியா..?’ என்று கேட்டது.

அன்னம் தன் தலையை, தலையாட்டி பொம்மைபோல இருபுறமும் ஆட்டினாள். இருவரும் சேர்ந்தே வீட்டினுள் சென்றார்கள். கங்கநாதன் மல்லாக்க படுத்துத் தூங்கிக்கொண்டு இருந்தார். ஜாஃபர், மாடு கட்டும் கயிறு இரண்டு

எடுத்துக்கொண்டு வந்திருந்தார். இருவரும் கொல்லைப்புறத்துக்குச் சென்றனர். தோட்டத்தில் சின்ன தகரக் கூண்டு இருந்தது. அதில் கத்தி, மண் வெட்டி, கடப்பாரை போன்ற உபகரணங்கள் இருந்தன. ஒரு அடி உயரமுள்ள கடப்பாரை, மூன்று அடி உயரமுள்ள கடப்பாரை, ஐந்து அடி உயரமுள்ள கடப்பாரை என வெவ்வேறு அளவுகளில் இருந்தன. ஒரு அடி மற்றும் மூன்று அடி கடப்பாரைகளை எடுத்துக்கொண்டார். வீட்டிற்குள் வந்தார். அன்னத்திடம் தலையணையைக் கை காட்டினார். அன்னம் தலையணையை எடுத்துக்கொண்டாள்.

அன்னத்தை தயாரக நிற்கும்படி சைகையில் சொல்லிவிட்டு, மூன்று அடி கடப்பாரையை எடுத்து நீள வாக்கில் வலுவாக கங்கநாதனின் மார்பில் இறக்கினார் ஜாஃபர். தூக்கத்தில் இருந்த கங்கநாதன் குழறலாகத் திமிறிகொண்டு எழ, இன்னொரு அடியை இறக்கினார். எழுந்தவர் மீண்டும் அப்படியே சரிய, அன்னம் தலையணையை கங்கநாதன் முகத்தின் மீது வைத்து அமர்ந்துகொள்ள, தடால் தடால் என்று ஜாஃபர் கடப்பாரையை மார்புப் பகுதியிலேயே தொடர்ந்து இறக்கினார். எதிர்ப்பு குறைந்துபோய், உயிர் இழுத்துக்கொண்டு கிடக்க, அன்னம் தலையணையை எடுத்துவிட்டு அவர் வாயில் துண்டை வைத்துச் சொருகினாள். ஒரு அடி கடப்பாரையை எடுத்து வாயில் வைத்து குத்தினாள். துண்டு தொண்டை வரை சென்றது. இன்னும் குத்திக் குத்தி தொண்டைக்குள்ளும் துண்டைத் தள்ளினாள்.

கங்கநாதனின் வேட்டியை எடுத்து அவரின் முக்கை மறைத்து இருவரும் கட்டினார்கள்.

ஜாஃபர், கயிற்றால் கங்கநாதனின் குரல்வளையை நெறித்துக் கொண்டிருக்க, சமையலறைக்குச் சென்ற அன்னம் அம்மிக்கல்லை எடுத்து வந்தாள். ஜாஃபர் எழுந்து நின்றுகொள்ள, அம்மிக்கல்லைக் கங்கநாதனின் நெஞ்சிலேயே போட்டாள். மெல்லிழையாக இழுத்துக் கொண்டிருந்த உயிர் விடுவித்துக்கொண்டது. அன்னம் அந்த அம்மிக்கல்லை மீண்டும் சமையலறையில் கொண்டுபோய் வைத்தாள்.

அன்னமும் ஜாஃபரும் கங்கநாதனை முதலில் ஒரு நாற்காலியில் அமர வைத்தனர். அதற்கே இருவருக்கும் மூச்சு வாங்கியது. அப்போதுதான்

கவனித்தார்கள். கங்கநாதன் சிறுநீர், மலம், விந்து என சகலத்தையும் கொழ கொழவென வெளியேற்றி இருந்தார். நாற்றம் குமட்டியது. அன்னம் ஊதுவத்தி ஏற்றி வைத்தாள்.

“கழுவிட்டுத் தூக்கி மாட்டலாமா?” என்று கிசுகிசுப்பாகக் கேட்டாள் அன்னம்.

“இல்ல, இப்டியே இருக்கட்டும், அதான் சரியா இருக்கும்” என்றார் ஜாஃபர்.

ஜாஃபர், தான் கொண்டு வந்த இரண்டு கயிறுகளையும் எடுத்துக் கொண்டார். கயிறுகளில் ஒன்று சிறியதாகவும், இன்னொன்று நீளமானதாகவும் இருந்தது. இரண்டு கயிறுகளையும் நாற்காலியில் அமர்ந்து தலையை தொங்கப்போட்டுக்கொண்டு இருந்த கங்கநாதன் கழுத்தில் சுருக்கு மாட்டினார். சிறிய கயிற்றின் மறுமுனையைச் சும்மா விட்ட ஜாஃபர், நீளமானதாக இருந்த கயிற்றை எடுத்து உத்திரத்தில் போட்டார். உத்திரத்தின் வழியாக தொங்கிய மறுமுனை யைக் கைகளால் பற்றி இழுத்துக்கொண்ட ஜாஃபர், அந்தக் கயிற்றைத் தான் இழுப்பதாகவும், கங்கநாதனை மேல் நோக்கி தூக்கிக் கொடுக்கும்படியும் அன்னத்திடம் சொன்னார். ஜாஃபர், பலம் கொண்ட மட்டும் இழுத்தார். அன்னத்தால்தான் கங்கநாதனைத் தூக்க முடியவில்லை. எவ்வளவு தூக்கியும் முடியவில்லை. நாற் காலியை விட்டு மேலெழும்பவில்லை. கங்கநாதனை இறுக்கக் கட்டி அணைத்துத் தூக்க முயற்சித்தாள் அன்னம். அவர்களுடைய தாம்பத்திய வாழ்வில் ஒருமுறைகூட இந்த அளவுக்கு நெருக்கி அணைத்ததில்லை. எவ்வளவு இறுக்கமாக அணைத்து தூக்கினாலும் கங்கநாதனின் சட்டைதான் மேலே வந்ததே தவிர அவருடைய உடல் மேலெழும்ப மறுத்தது.

ஜாஃபர், வேலையை மாற்றிக்கொள்ளலாம் என்று சொல்லி, கயிற்றை அன்னத்திடம் கொடுத்து இழுக்கச் சொன்னார். ஜாஃபர், கங்கநாதனை அணைத்துத் தூக்கினார். நாற்காலியை விட்டுக் கொஞ்சம் மேலெழுந்தார் கங்கநாதன். இப்போது அன்னம் கொஞ்சம் சுலபமாகக் கயிற்றை இழுத்தாள். ஜாஃபர் தூக்க, அன்னம் இழுக்க, மெதுமெதுவாக மேலேறினார் கங்கநாதன்.

இழுக்கும் கயிறின் நீளம் அதிகரிக்க அதிகரிக்க அன்னம் இழுத்துக் கொண்டே ஒரு மூலையை நோக்கிச் சென்றாள். ஒரு கட்டத்தில், மூலையைப் பார்த்து அமர்ந்துகொண்ட அன்னம், தன் பாதங்கள் இரண்டையும்

இரண்டு பக்கவாட்டுச் சுவர்களுக்குக் கொடுத்து அழுத்திக் கயிற்றை இழுத்துப் பிடித்துக்கொண்டு இருந்தாள். இப்போது கங்கநாதன் உடல் லாவகமாகத் தொங்கிக்கொண்டு இருந்தது.

“அப்படியே புடிச்சிக்கோ, விட்டுடாத” என்று சொன்ன ஜாஃபர், கங்கநாதன் அமர்ந்திருந்த நாற்காலி மேல் ஏறி கங்கநாதன் கழுத்தில் தொங்கிக்கொண்டு இருந்த சிறிய அளவிலான கயிறை எடுத்து உத்திரத்தில் மறுமுனையை கட்டிச் சுருக்குப் போட்டார். இப்போது அன்னத்துக்கு இழுக்க வேண்டிய பலம் குறைந்தது. நாய் மாதிரி மூச்சிரைந்தாள்.

கங்கநாதன் கழுத்தில் சுருக்கிட்டு இருந்த, இதுவரை இழுக்கப் பயன்பட்ட பெரிய கயிற்றை ஜாஃபர் கழட்டி எடுத்துக்கொண்டார். இப்போது, இயற்கையான முறையில் தூக்கு மாட்டிக்கொண்டதைப் போல் கங்கநாதன் உடல் தொங்கிக்கொண்டு இருந்தது.

எடுத்த பொருட்களை எடுத்த இடத்தில் வைத்து விட்டு, அன்னம் போட்டுத் தந்த டீயைக் குடித்தார் ஜாஃபர்.

ஜாஃபருக்கு பக்கத்தில் வந்து அமர்ந்தாள் அன்னம். ஜாஃபர், அவளின் ஜாக்கெட்டை அவிழ்த்து முலைகளைப் பிசைய ஆரம்பித்தார். அன்னம் ஜாஃபருக்கு மார்புகளை காட்டிக்கொண்டே, யதேச்சையாக பார்வையை கங்கநாதன் பக்கம் திருப்பினாள். கங்கநாதனின் லுங்கி அவிழ்ந்து விழுந்தது. உள் ஆடை ஏதுமில்லாமல் அரை அம்மணமாக ஊஞ்சல் ஆடிக்கொண்டு இருந்தது கங்கநாதன் உடல்.

இந்த இழவு மற்றும் சுடுகாட்டுக் களேபரங்களெல்லாம் முடிந்த பின்னர், ஜாஃபர் அடிக்கடி வந்துபோக ஆரம்பித்தார். அவரது டிவிஎஸ்——50 இரவில் அன்னம் வீட்டு வாசலில் நிற்பது, ஜாஃபருக்கான ஹோதாவாகிப்போனது.

இந்த சம்பவம் நடந்த சில நாட்களில் முலையைக் கசக்குவதையும் நிறுத்திவிட்டார் ஜாஃபர். வருவார், உருண்டை பிடித்து உண்பார்; கால் அமுக்கச் சொல்வார்; உறங்கிப்போவார்.

கங்கநாதன் உயிரோடு இருந்த காலகட்டத்தில் ஒருநாள், ஒரு சில்வர் தூக்கில் பட்டைச் சாராயத்தை எடுத்து வந்திருந்தார் ஜாஃபர். கொல்லைப்புறத்தில்,

அன்னம் ஊற்றிக் கொடுக்க, ஊறுகாய் தொட்டுக்கொண்டு அடித்த ஜாஃபருக்கு, ஜட்டிக்குள் ஏதோ ஊர்வது போலத் தோன்றியது.

நீண்ட நாட்கள் கழித்து அசைவு தெரிந்ததால் உற்சாகமான ஜாஃபர், அன்னத்தைப் படுக்கவைத்து ஜாக்கெட்டைக் கழற்றிப் பிசைய ஆரம்பித்தார். அன்னத்தின் புடவையைப் பாவாடையோடு சேர்த்து மேலே தூக்கி, இருட்டில் அவளின் கால்கள் மற்றும் தொடைகளின் வனப்புகளைப் பார்க்காமலேயே மேலே படுத்தார்.

முன்னும் பின்னும் ஊர்ந்த ஜாஃபர், ஏதோ உணர்ந்து கொண்டவராக தன்னுடைய லுங்கியைக்கூட மேலேற்றவில்லை. ஆனால், அன்று மட்டும் வித்தியாசமாக அன்னத்தின் முலைகளைக் கடித்தார். அதோடு சரி, அதற்குப் பிறகு எந்த  பரிட்சார்த்த முயற்சியிலும் ஈடுபடவில்லை ஜாஃபர்.

அன்னம், தயிர்க்காரி, பால்காரி போன்ற எல்லோரது கணக்குகளையும் சுவற்றில் சாக்பீஸால் கோடுபோட்டு வைத்துக்கொண்டு மாதக் கடைசியில் செட்டில் செய்வாள். தயிர்க்கணக்கு மாதம் பதினைந்து ரூபாயும், பால் கணக்கு மாதம் முப்பது ரூபாயும் வரும். கங்கநாதன் இருந்தபோதும் இந்தக் கணக்கை செட்டில் செய்தாள்தான். எனினும், ஜாஃபர் வந்த பின் சுலபமாக செட்டில் செய்தாள். வேறெதுவும் பெரிய மாற்றமில்லை அன்னத்துக்கு.

ஜாஃபருக்கு, கூத்தியா வச்சிருக்கான் என்கிற கெத்து; அன்னத்திற்கு, ஜாஃபரின் கூத்தியா என்கிற கெத்து.

ஜாஃபரின் கூத்தியா என்கிற பயத்திலேயே எந்த ஆண்களும் அன்னத்தை தொட முயலவில்லை. ஜாஃபரின் கூத்தியா என்கிற பெருமையிலேயே அன்னமும் யாரையும் அண்டவிடவில்லை. அவளின் பாலியல் தேவையைப் பற்றி அவளுக்கே தெரியுமா என்பது சந்தேகம்தான்.

நாட்கள் நகர்ந்தன. பொடியன் பாலு இளைஞனானதும், அவனை இஸ்லாமிய மதத்துக்கு மாற்றி, இஸ்லாமியப் பெண்ணை கட்டி வைத்தார் ஜாஃபர். டிவிஎஸ் எக்ஸ் எல் சூப்பருக்கு மாறினார் ஜாஃபர். அன்னத்துக்கு மாடி வீடு கட்டிக்கொடுத்தார். ஆனாலும், தன் வண்டியை வெளியேதான் நிறுத்தி வைத்தபடி இருந்தார்.

# பொற்செல்வி

டவுனில் இருந்து பத்து கிலோ மீட்டர் தொலைவிலுள்ள கிராமம் அது. மொத்த கிராமத்து மக்கட்தொகையில் ஆறு பேர் மட்டும் அதிகாலை ஐந்து மணிக்கெல்லாம் சாத்திக்கிடக்கும் தேநீர்க் கடைக்கு முன் வந்து சில நிமிடங்கள் ஒன்றரைக் காலில் நிற்பார்கள். வயதைக் கேட்டால், 66 என்பார்கள். மறுநாள் கேட்டால் 72 என்பார்கள். இதுவரை 54 வயது முடிய கீழே சென்றிருக்கிறார்கள். அவர்கள் ஏதோவொரு பூடகமான காலப் பயணத்தை மேற்கொண்டது போலவே இருக்கும். ஆனால், கால இயந்திரம் மட்டும் அந்த சிற்றூரில் வீட்டுக்கும் இந்தத் தேநீர்க்கடைக்கும் மட்டுமே டிரிப் அடித்துக்கொண்டு இருக்கும்.

ஒவ்வொருவராக லுங்கியை மடித்துகட்டிக்கொண்டு, இடது கையை உள்ளே விட்டுச் சொறிந்துகொண்டு பக்க வாட்டில் கிடக்கும் கல் பெஞ்சில் அமர்வார்கள். அதே இடம், அக்கிராமத்தின் பேருந்து நிறுத்தமும் ஆகும். இரண்டு கல் பெஞ்சுகள் எதிரும் புதிருமாக போடப்பட்டிருந்தாலும், யார் அவற்றைப் பொதுமக்கள் பயன்பாட்டுக்காகத் திறந்து வைத்தது என்கிற அறிவிப்புப் பலகை ஏதும் அங்கில்லை. ஒரு கல் பெஞ்சில் மூன்று பேர் வரை அமரலாம் என்பதை கீழே மண் தரையில் இருக்கும் ஆறு குழிகள் உணர்த்தும்.

பேருந்து நின்று திரும்புவதற்காக அந்த இடத்தில் மட்டும் சாலை சற்று அகலமாக இருக்கும். சாலையை ஒட்டி ஒரு மைதானமும் இருந்தது. அதை மைதானம் என்று சொல்ல முடியாது. கருவேல மரங்கள் ஆங்காங்கே இருக்கும். சின்னச் சின்னக் குழிகளில் தண்ணீர் தேங்கி நிற்கும். வைக்கோல், சைக்கிள் டயர் என வகை தொகை இல்லாமல் பல பொருட்கள் விரவிக் கிடக்கும்.

எருக்கஞ் செடிகளும் ஆங்காங்கே வீராப்பாக நிற்கும். இவை வெள்ளெருக்கு கிடையாது, வெள்ளெருக்கன் பூ சிவனுக்கு உகந்தது. இங்கே இருப்பவைகள் சாதா எருக்கு. வெளிர் வயலட் கலரில் பூ பூக்கும்; இதை பூ என்றுகூட சொல்ல முடியாது; மொக்கு என்று சொல்லலாம். மூடிக்கொண்டு இருக்கும். இந்த மொக்குகள் அந்த செடிகளுக்கு கீழே விரவிக் கிடக்கின்றன பாருங்கள், அது வேறொன்றும் இல்லை, இந்த ஊர் குழந்தைகள் அவ்வப்போது விளையாடியபடியே இங்கே வந்து விட்டால், இந்த மொக்கைப் பறித்து கன்னத்திலோ, நெஞ்சிலோ, கையிலோ குத்துவார்கள். அது ‘டப்’ என்று வெடிக்கும்; அது ஒரு விளையாட்டு; அதிலிருந்து பால் வடியும்; அதை எடுத்துக் காலில் முள் குத்தியவர்கள் தடவிக்கொள்வார்கள்.

எருக்கஞ்செடி. இதனால் என்ன புண்ணியம் என்றுதானே சாதாரணமாக எண்ணிவிட்டீர்கள். இந்த ஊரில் ஒரு மாத்வர் குடும்பம் உள்ளது. ஒரேயொரு மாத்வர் குடும்பம்தான், கன்னட பிராமின். அவர்கள் ரத சப்தமி என்று ஒரு பண்டிகையோ அல்லது வேறு ஏதேனும் நிகழ்வோ, அது வரும்போது இந்த எருக்கிலைகளைப் பறித்து இரண்டு தோள்களிலும் வைத்துக்கொண்டு தலையில் தண்ணீர் விட்டுக்கொள்வார்கள்.

அதைப்பார்த்த வேறு சில குடும்பங்களும், இதைச் செய்து ஏதேனும் நல்லது நடக்கிறதா, காசு வருகிறதா என்று முயன்று பார்த்தனர். இன்றும் இதை ஏன் என்று தெரியாமல் தொடரும் குடும்பங்களும் இந்த ஊரில் உள்ளனர்.

ஆடாதோடைச் செடிகள் அரைகுறை இலைகளோடு, வெறுப்போடு நிற்கும். ஒன்றிரண்டு ஆட்டுக்குட்டிகளோ, கன்றுக்குட்டிகளோ அரைத்தூக்கத்தில் வாலை அவ்வப்போது ஆட்டி, ஆட்டுகிறேன் அதனால் இருக்கிறேன் என்று சொன்னபடி இருக்கும்.

தேநீர்க்கடைக்கு முதலில் பால்காரன் வருவான். அவன் வந்து மிதிவண்டியை ஸ்டேண்ட் போட்டு நிறுத்தி, பின்னாலிருக்கும் பெரிய ஸ்டேண்டில் பக்கவாட்டில் தொங்கிக்கொண்டிருக்கும் பித்தளைக் குவளையை எடுத்துக் கீழே வைப்பான். கீழே வைத்துவிட்டுத் தேநீர்க்கடைக்கு மேலே அளந்தபடி இருக்கின்ற மரத்தை ஒரு பார்வை பார்ப்பான். பாலைக் கண்ணில் பார்த்ததும் ஆறு பேரில் ஒருவர்,

‘‘ஒக்காரு ராசு, மணிப்பய இப்ப வந்துடுவான்’’ என்று எழுந்து இடம் கொடுப்பார்.

பின் எழுந்து அந்த மைதானம் என்ற பெயரை சுமந்து கொண்டிருக் கும் அந்த தனித்துவமான இடத்துக்குச் செல்வார். செல்கையிலேயே ஏதோ முதலிரவுக்குச் செல்வது போல குஞ்சானைத் தயார் செய்துகொண்டு போவார். அவர் சற்று நேரம் முன்னர்தான் எழுந்து சிறுநீர் கழித்து இருப்பார். இருந்தாலும் இந்த அதிகாலை வேளையில் செய்ய என்னதான் இருக்கிறது..?

இன்றும் இதேபோல எல்லாம் சரிவர நடந்தது. இன்னும் சூரியன் உதயமாகவில்லை. உதயமாவதற்கு முன்னதாகச் சூரிய வரவேற்பு ‘கீச் கீச்’ என ஆரம்பமாகி இருந்தது.

அடுத்து டீ மாஸ்டர் மணியும் சைக்கிளில் வந்து இறங்கினார். அந்த அதிகாலை நேரத்திலேயே குளித்து முடித்து, நெற்றியில் பெரிய பட்டை போட்டிருந்தார். நெற்றியில் மட்டும் என்றும் சொல்ல முடியாது. நெற்றி முழுக்க பரவி இருந்த பட்டை, நெற்றியை விட்டு இரண்டு புறமும் கீழிறங்கி, கன்னத்தில் தன் தடத்தை விடாமல் காது மடல்களில் முடிந்து இருந்தது. மணி சட்டை அணியவில்லை. உடலிலும் ஆங்காங்கே மூன்று பட்டைகள் நிறுத்தி நிதானமாக இடப்பட்டு இருந்தன. தேநீர் போடுவதற்கு இவ்வளவு ஆன்மீகமயமாக வந்து இறங்கிய மணி, ‘‘அந்த ஒல்லார ஓழி பய இன்னும் வரலயா..?’’ என்று மென்குரலில் கேட்டார்.

டீ கிளாஸ் கழுவும் முருகனைத்தான் அப்படி கேட்டார்.

‘‘இல்ல’’ என்று அந்த ஆறு வயசாளிகளில் ஒருவர் சொன்னதும், ‘‘எந்த கூதில தலையை உட்டு தூங்கிட்டு கெடக்கறானோ, சிவ சிவா’’ என்று காற்றில் ஒரு கும்புடு போட்டுக் கடையைத் திறந்தார்.

சொட்டு நீரை கழிக்கச் சென்றவர், ‘‘அய்யய்யோ அய்யய்யோ’’ என்று கத்தும் சத்தம் கேட்டது. அனைவரும் பதறியடித்து மைதானத்தை நோக்கி ஓடினார்கள். அங்கே, உடல் உபாதையுடன் நிற்கும் வேப்ப மரத்தில், இந்த ஆறு வயசாளிகளில் ஒருவரான ஆறுமுகத்தின் மனைவி தொங்கிக்கொண்டு இருந்தாள்.

“யய்யாய்யோ மகமாயி” என்று கத்திக்கொண்டே ஆறுமுகம் அவளின் கால்களை பற்றிக்கொண்டார். ஆறுமுகத்தின் நண்பர் பழநி, ஆறுமுகத்தை பற்றிக்கொண்டார். அப்போது அங்கு ஓடிவந்த ‘டீ கிளாஸ்’ முருகனை மாஸ்டர் மணி ஒரு அறை விட்டார்.

“பழநி பழநி” என்று கத்திக்கொண்டே வந்த ஒரு நபர், இந்தக் காட்சியைப் பார்த்து விட்டு, “ஆறுமுகம் சம்சாரமா..? அடடா..!” என்று உதிர்த்து விட்டு, “பழநி, உன்னை பெரிய வீட்ல அவசரமா கூப்புடுறாங்க. சின்னய்யா சம்சாரத்துக்கு திடீர்னு பிரசவ வலி வந்துடிச்சாம், வண்டி கட்டிகிட்டு டவுனுக்கு போகணுமாம்” என்றார்.

பழநி, ஆறுமுகத்தை விட்டுவிட்டு அந்த ஊரிலேயே மாடி வீடு என்றழைக்கப்படும் வீட்டை நோக்கி ஓட்டமும் நடையுமாக ஓடினார்.

ஆறுமுகம் தளர்ந்து கீழே விழ, சூரியன் கீச் கீச்களோடு மெதுவாக முகம் காட்டாமல் முக வெளிச்சத்தை மட்டும் காட்ட ஆரம்பித்தான்.

சின்னய்யாவின் மனைவி வேம்பு பிரசவ வலியில் துடித்துக்கொண்டு இருந்தாள்.

பழநி, கூண்டு வண்டியை சாலைக்கு கொண்டுவந்து நிப்பாட்டி, உட்காருமிடத்தில் வைக்கோலை போட்டு நிரப்பினார். அதன் மேல் ஜமுக்காளத்தை போட்டு சரி செய்தார். மாடுகளைக் கொண்டு வந்து பூட்டித் தயார் செய்தார். மாடுகள் மணிகளை ஆட்டியபடி சுறுசுறுப்பாகவும் மகிழ்ச்சியாகவும் நின்றன.

சின்னய்யாவும் பெரியய்யாவின் மனைவியும் வேம்பைத் தூக்கிக் கொண்டு வண்டிக்கு வந்தனர்.

ஆறுமுகத்தின் மனைவியைக் கீழே இறக்கினார்கள்.

ஆறு டீ முதலில் போடுகின்ற மணி, அன்று பன்னிரண்டு டீ போட்டார்.

இறக்கி வைத்திருந்த ஆறுமுகத்தின் மனைவியையும், டீ க்ளாஸ்களையும் பார்த்தபடி பழநி மாட்டை விரட்டிக்கொண்டு வண்டியில் கடந்து சென்றார்.

வண்டிக்குள்ளே, சின்னய்யாவும் பெரியய்யாவின் மனைவியும் வேம்பைப் பிடித்தபடி இருந்தனர்.

வேம்பு திமிறிக்கொண்டு இருந்தாள். மாட்டு வண்டி குறுக்கு வழிச் செம்மண் சாலையில் சீறிப்பாய்ந்தது.

பிரசவ வலியோடு சேர்ந்து வண்டிக் குலுக்கலில் வேம்பு துயரத்தின் உச்சிக்கே போனாள். வண்டி செம்மண் சாலையில் விரைந்து கொண்டிருக்க, இரண்டு பக்கமும் நாற்று நட்ட வயல்கள்.

சூரியன் உதயமாக ஆரம்பித்து இருந்தான். வண்டி ஒரு குளத்தை நெருங்கியது. குளத்தின் பக்கத்தில் ஒரு அங்காளம்மன் கோவில் இருந்தது; அந்தக்கோவில் ஒரு மாபெரும் மரத்தின் அடியில் இருந்தது.

வண்டி கோவிலை நெருங்கியதும் வேம்பு, சின்னய்யாவை ஒரு உதை விட்டாள், வலி தாங்காமல்தான்.

வண்டியின் பின்னால் வில் கம்பி போட்டு இருந்தாலும் அதை உடைத்துக்கொண்டு போய் கீழே விழுந்தார் சின்னய்யா .

வண்டி நின்றது.

“என்னால இனிமே முடியாது” என பெருங்குரலெடுத்து அலறினாள் வேம்பு. வாயிலிருந்து கோழை கோழையாக ஊற்றியது.

குளத்தில் சூரியனை பார்த்த மகிழ்ச்சியில் மீண்டும் தாமரைகளாயின தாமரைகள்.

பெரியய்யா மனைவியும் சின்னய்யாவும் வேம்புவை தூக்கிக்கொண்டு போய் கோவில் வாசலில் கிடத்தினார்கள்.

மென் சூரிய வெளிச்சத்தில் காற்று சில்லென்று வீசி அங்காளம்மனைக் குளிர்வித்தது.

ஆறுமுகத்தின் மனைவியைப் போர்வையில் கிடத்தி, ஆறுமுகத்தின் வீட்டுக்குத் தூக்கிக்கொண்டு போனார்கள்.

மணி மாஸ்டர், தானே ஒரு டீ போட்டுக்குடித்தார்.

“நீங்க போங்க, நான் பாத்துக்கறேன்” என்றாள் பெரியய்யாவின் மனைவி சின்னய்யாவிடம். அரை மயக்கத்துக்கு போனாள் வேம்பு.

மாடுகளில் ஒன்று வேம்புவை நோக்கித் திரும்பியது. தாமரைகள் தண்ணீர் போக்கால் நர்த்தனம் புரிய ஆரம்பித்தன.

‘‘ம்ம்மாமாம்மா...’’ என்று கத்தி வேம்பு மயக்கமாக, பொற்செல்வி பிறந்தாள்; மென்மையாக ‘‘ங்கா’’ என்று ஒரு முறை கத்திவிட்டு, அமைதியானாள்.

# உத்திரம்

தென்பெண்ணையோரக் கிராமம்.

சீட்டிப் பாவாடை கட்டிக்கொண்டு, சட்டையில்லாமல் திரிந்த காலத்திலிருந்து உத்திரத்தின் கதையை ஆரம்பித்தால் போதும்.

அப்போதெல்லாம் வயதுக்கு வருவதற்கு வருடங்கள் எடுக்கும். வயதுக்கு வருவதற்கு முன்னமே லேசாக முலைகள் எட்டிப் பார்க்கும். எலுமிச்சைப்பழம் அளவுக்கு முலைகள் வளரும் வரையில் உத்திரம் சட்டை போடாமலே திரிந்து வந்தாள். ஆனால், சீட்டிப்பாவாடையைத் தொப்புளுக்கு மேலே ஏற்றிக் கட்டியிருப்பாள்.

அவள் வயதுக்கு வந்த கதையெல்லாம் கோராமையாக இருக்கும். அவள் அப்பன் ஆத்தாள் கதை அதைவிடக் கோராமையாக, சுத்த தமிழ் இலக்கிய நாவல் போலவே இருக்கும். அதனால் இங்கே கத்தரித்து, உத்திரத்துக்கு நினைவிருக்கும் இடத்தில் இருந்துதொடரலாம்.

அதிலும் ஒரு சிக்கல். உத்திரத்துக்கு இப்போது ஏதும் நினைவில் இருக்காது. ஏனெனில் அவள் இறந்து விட்டாள். ஆம், அவள்தான் கடந்த அத்தியாயத்தில் இறந்த ஆறுமுகத்தின் மனைவி.

அவள் உயிருடன் இருந்த காலத்தில், அவளுக்கு ஞாபகம் இருக்கிற இடத்துக்குப் போவோம்.

ஒரு தாத்தா அவள் முலையில் சுண்ணாம்பைத் தடவுவதிலிருந்து ஆரம்பமாகிறது அவள் ஞாபகங்கள்.

அந்தத் தாத்தா வெற்றிலைப்பாக்கு வாங்குவதற்கு உத்திரத்திடம்தான் காசு கொடுத்து அனுப்புவார். ஒரு கவுளி வெற்றிலை, ஆரங்கப்பாக்கு 25 காசு, மண்பாக்கு 10 காசு, புகையிலை ஒரு கட்டு என்பது உத்திரத்துக்கு மனப்பாடம். அதை வாங்கி வரும் உத்திரத்துக்கு 5 காசு. அந்த 5 காசுக்கு உத்திரம் தூள் ரொட்டி வாங்கிக்கொள்ளலாம்.

வெற்றிலை பாக்கு போடும் தாத்தா சுண்ணாம்பை உத்திரத்தின் வேர்விடும் முலையில் தடவுகையில் ஒருவித காரத்தை உணர்ந்து இருக்கிறாள் உத்திரம். அந்தத் தாத்தா அதைத் தவிர வேறெதுவும் செய்ததில்லை.

சில அண்ணன்கள், அவ்வப்போது உத்திரத்தின் யோனியை கிள்ளியது மட்டும் உத்திரத்துக்கு விளையாட்டாகத்தான் இருந்தது.

உத்திரம் வயதுக்கு வந்து தாவணிபோட்டு, அதை மடித்துக் கட்டிக் கிட்டிப்புள் விளையாடிய காலத்தில், சாமா என்றொரு பிராமண சமையல்காரர் அந்த ஊருக்கு வருகிறார். அவர் வந்தது அந்த ஊர்க் கோவிலின் விழாவுக்கு. மிகச் சிறப்பான முறையில் கைங்கர்யத்தைச் செய்து முடிக்கிறார்.

ஊரை விட்டுக் கிளம்புகையில், 15 வயதான உத்திரத்தைக் கூட்டிக் கொண்டு செல்கிறார். உத்திரத்தின் தாய் தந்தையரே வழியனுப்பி வைக்கிறார்கள்.

இதில் முக்கியமாகப் பார்க்க வேண்டியது என்னவென்றால், இந்தக் கதையில் இப்போதுதான் உத்திரத்தின் தாய் தந்தை அறிமுக மாகிறார்கள் என்பதே..!

உத்திரத்தைக் கூட்டிக்கொண்டு வந்த சாமா அவளை, பதினைந்து ரூபாய் மாத வாடகைக்கு ஒரு வாழ்ந்து கெட்ட அம்மணி வீட்டில் தங்க வைக்கிறார்.

இந்த கதை நடக்கும் கால கட்டம், வருடம் அது, இது என்று பிரச்னை செய்யக்கூடாது. சொல்லிக்கொண்டு இருக்கும் தரவுகளை வைத்துப் புத்திசாலித்தனமாகக் கூட்டிக்கழித்துத் தெரிந்து கொள்ள வேண்டும்.

ஒன்றுமில்லாத வெற்று அறையில் விடப்படுகிறாள் உத்திரம்.

அந்த மண் சுவர் சூழ்ந்த காற்றில்லாத அறையில், வெற்று மாடத்தைக் கைகளால் கோலம் போட்டுக்கொண்டு இருக்கிறாள்.

அவளுக்குப் பசி இல்லை; தாகம் இல்லை; ஏன் இங்கே இருக்கிறோம் என்ற யோசனையும் இல்லை; தாய் தந்தையரைப் பிரிந்த ஒரு எண்ணமும் இல்லை.

அவளுக்கு மாற்று உடையும் இல்லை; அடுத்த கணத்திற்குத் தேவையான எதுவும் இல்லை.

கதவைத் திறந்துகொண்டு வெளியேவந்து, பின்பக்கமாக தோட்டத் திற்குச் சென்றால், ஒரு குப்பை மேடு; அங்கே வேண்டுமானால் சிறுநீர் கழிக்கலாம்.

மலம் கழிக்க வேண்டுமென்றாலும் அங்கேதான் செல்ல வேண்டும்.

ஏதோ ரொம்ப நாள் பழகியவள்போல வெளியே வந்த உத்திரம், அந்த ஊரின் வாய்க்காலை நோக்கி நடந்தாள். வாய்க்காலில் சிரமப் பரிகாரம் செய்து கொண்டவள், மக்குடு கட்டிக்கொண்டு, நீந்திக் குளித்தாள்.

அதே உடையால் துவட்டிக்கொண்டு, மீண்டும் அந்த அறைக்கு வந்தவள், ஓடிக்கொண்டு இருக்கும் எலிக்குஞ்சை பூனைக்குட்டிபோல நினைத்துக் கொஞ்சினாள்.

சாமா உள்ளே வந்தார்; சாமாவுக்கு வயது ஐம்பதுக்கு அதிகமாக இருக்கலாம். தூய வெண்வேட்டியுடன் அறியப்பட்டவர். சாமா உள்ளே வந்தநேரம், விளக்கு வைத்த நேரம் எனலாம்.

சாமா சில இனிப்புகளையும் சிற்றுண்டிகளையும் வாங்கி வந்திருந்தார். அவற்றை உத்திரத்தின் ஊடாகத் தள்ளி விட்டார். உத்திரம், அவற்றில் ஏதோ ஒன்றை எடுத்துத்தின்றாள்.

சாமா, கைகளைத் தலைக்குக் கொடுத்தபடி படுத்துக்கொண்டார்.

உத்திரம் சற்று நேரம் கழித்து, சுருண்டு படுத்துத் தூங்கிவிட்டாள்.

காலையில் எழுந்து பார்த்தால், சாமா இல்லை.

இப்படியே சில நாட்கள் சென்றன.

சாமா உத்திரத்தைத் தொட்ட ஒருநாளும் வந்தது. அப்போது உத்திரம் நல்ல உறக்கத்தில் இருந்தாள்.

அந்த சம்பவத்தை இப்போது சொல்வது சரியாக இருக்காது. அதை,

ஆறுமுகத்தைக் கல்யாணம் செய்து கொண்டபின் சொல்வதுதான் ஏதுவாக இருக்கும்.

உத்திரம் ஆறுமுகத்தைக் கல்யாணம் செய்து கொண்டபின், ஆறுமுகம் மிகவும் அன்பாக இருந்தார்.

முதலிரவின்போது, அதாவது முதல் தொடுகையின்போது, ‘‘புகையிலை வேணுமா?’’ எனக் கேட்டார்.

அதுவரை புகையிலை போடாத உத்திரம், எதையாவது செய்யலாமே என்று கருதி, ‘‘குடுங்க’’ என்றாள்.

ஆறுமுகம் தன் பட்டை பெல்ட்டில் இருந்து புகையிலையை எடுத்து உத்திரத்திடம் கொடுத்தார். அதை வாங்கி முகர்ந்து பார்த்த உத்திரத்திடம், ‘‘கடவாயில வச்சிக்கோ’’ என்று சொல்லி, வைத்துக் காட்டினார்.

ஆறுமுகம் அந்த ஊரிலேயே கொஞ்சம் குஷாலான பேர்வழி. அதனால், தானும் புகையிலை போட்டுக்கொண்டு உத்திரத்துக்கும் கொடுத்தார். அதோடு நில்லாமல், உத்திரத்தை இழுத்து உதட்டோடு உதடு பதித்தார். அந்த ஊரில் உதட்டு முத்தம் பதிக்கத் தெரிந்த ஒரே ஆள் ஆறுமுகம்தான். அவருக்கு எப்படித் தெரியும் உதட்டு முத்தம்..?

அதற்கு ஒரு கிளைக் கதைக்குள் நுழைய வேண்டும். சின்னதாக, முக்கி யமான சம்பவத்தை மட்டும் பார்த்து விடுவோம். தர்க்கமெல்லாம் பார்க்கக் கூடாது. தர்க்கத்துக்காக இரண்டு பக்கங்கள் இழுக்க வேண்டாம்.

அந்த ஊரில் பாழடைந்த ஒரு புராதன பெருமாள் கோவில் உள்ளது. அதை எப்படியோ தெரிந்துகொண்ட ஒரு வெள்ளைக்கார ஜோடி மாட்டுவண்டியில் வந்து இறங்கியது. அந்த ஜோடி ரொம்ப நேரம் கோவிலுக்குள்ளேயே புகைப்படம் எடுத்துக்கொண்டு சுற்றிக்கொண்டு இருந்தது. ஆரம்பத்தில் மொய்த்துக்கொண்டு இருந்த கூட்டம், பின்னர் அவரவர் ஜோலியைப் பார்க்கக் கலைந்து சென்றது.

கிணற்றில் தண்ணீர் மொண்டு ஊற்ற அவ்வப்போது கோவிலுக்குச் செல்வது ஆறுமுகத்தின் பழக்கம். ஆறுமுகம் கோவிலுக்குள் சென்று தண்ணீர் மொள்ள ஆரம்பித்ததும் அனிச்சையாக அந்த ஜோடியைப் பார்த்து விட்டார். அவர்கள் உதட்டோடுஉதடு பதித்து உள்ளே சென்று கொண்டிருந்தார்கள்.

ஆறுமுகத்துக்குப் பாத நரம்பைப் பிடுங்கி விட்டது போல ஆனது. வாளியை விட்டுவிட்டார்.

அவர்கள் இவரைப் பார்த்து விட்டனர். அவள்தான் ஆறுமுகத்தை அருகே அழைத்தாள். ஆறுமுகம் அருகில் சென்றதும், அதேபோல மீண்டும் தன் காதலனுக்கு உதட்டு முத்தம் கொடுத்துப் பச்சரிசிச் சிரிப்பு சிரித்தாள்.

ஆறுமுகத்தை இயல்பாக்க வேண்டி, சின்னக் குழந்தைக்குக் கொடுப்பதுபோல மீண்டும் மீண்டும் விரைவாக 'சிக் சிக் சிக்' எனத் தொட்டுத் தொட்டு எடுத்தாள். ஆறுமுகத்தைப் பார்த்து மீண்டும் சிரித்தாள்.

ஆறுமுகம் ஓரளவு இயல்பானதும், தரையில் கையால் தட்டி அமரச் சொன்னாள்.

ஆறுமுகம் அமர்ந்ததும், தன் காதலனிடம் ஆங்கிலத்தில் ஏதோ சொல்லியவள், அவன் அலுப்பாகத் தலையைச் சிலுப்பிக் கொண்டதும் ஆறுமுகத்தை அருகில் இழுத்து, ஆறுமுகத்தின் உதட்டோடு உதடு பதித்து, மேலுதட்டுக்குக் கீழே இருக்கும் ஆறுமுகத்தின் ஈறுகளோடு தன் நாக்கைத் துழாவினாள்.

கிணற்றில் விழுந்த தண்ணீர் வாளி போல ஆறுமுகம் கீழே விழத் தொடங்கி இருந்தார். அவரை விலக்கி விட்டுவிட்டு ஆறுமுகத்தின் குஞ்சானை வேட்டியோடு சேர்த்து விளையாட்டாகக் கிள்ளினாள். ஆறுமுகத்துக்கு ஒரே சிரிப்பாகவும் கலவரமாகவும் இருந்தது.

தன்னிடம் உள்ள புகைப்படக் கருவியை எப்படி இயக்குவது எனச் சொல்லிக கொடுத்தாள். அவர்கள் இருவரும் உதட்டு முத்தம் பதித்துக் கொள்வதைப் புகைப்படம் எடுக்கச் சொன்னாள். பின்னணியில் கோவில் மதில் சுவர் கோபுரம் வருவது போல சில படங்கள் எடுத்ததும் ஆறுமுகம் கையில் ஒரு ரூபாய் நோட்டைத் திணித்தாள்.

கோவிலுக்கு இடது பக்கத்தில், எப்போதோ ஓடிய தேர் சிதிலமடைந்து நின்று கொண்டிருந்தது. அதில் தொங்கிக்கொண்டிருந்த சிவப்பு மற்றும் பச்சைவண்ண ஆடைகள் தொட்டால் நொறுங்கிவிடும் பதத்தில் இருந்தன.

அங்கே சென்ற அவள், ஆறுமுகத்தைப் புகைப்படம் எடுக்க பணித்தவள் தன் காதலனைக் கூட்டிக்கொண்டு தேரின் மேல் ஏறினாள். இருவரும் தேவையான அளவுக்கு உடைகளைக் களைந்ததும், ஒருவரை ஒருவர் காதலிக்கத் தொடங்கினார்கள். திக்பிரமை பிடித்து நின்று கொண்டிருந்த ஆறுமுகத்தைப் 'படம் எடு', என்று சைகையில் சொன்னாள். ஆறுமுகம் கிளர்ச்சியுடன் அந்த புகைப்படக் கருவியின் பொத்தானை அமுக்கத் தொடங்கினார்.

தன் காதலனைத் தேரின் இரு தூண்களுக்கு இடையே கீழே படுக்க வைத்த அவள், அவன் மீது ஏறியமர்ந்து, தேரின் இரு தூண்களையும் பிடித்துக்கொண்டு ஆழமாகக் காதல் செய்ய ஆரம்பித்தாள்.

ஆறுமுகம் பொத்தானை அமுக்கிக்கொண்டு இருக்கையிலேயே, அவள் காதலனுக்கு வருவதற்கு முன்பே இவருக்கு வந்துவிட்டது.

அவள் தன் காதலனை முத்தமிட்டு ஆசுவாசப்படுத்தி முடித்து வைத்துவிட்டு இறங்கி, ஆறுமுகத்தையும் அணைத்துக் கன்னத்தில் முத்தமிட்டு ஆசுவாசப் படுத்தினாள்.

இந்தச் சம்பவத்திற்குப் பிறகு, ஆறுமுகம் உதட்டுமுத்த விரும்பியானார். தன் சகாக்களிடம் உதட்டுமுத்தம் பற்றிச் சொல்லி, அனைவரும் காறி உமிழ்ந்ததைப் பார்த்துக் கடுப்பானார்.

கைக்கு வாகாய் அவ்வப்போது மாட்டும் பெண்களிடம் தன் வாய் ஜாலத்தைக் காட்டுவார். சில பெண்கள் அடக்க முடியாமல் சிரித்துக்கொண்டே ஓடிவிடுவார்கள். சில பெண்களுக்கு இவர் முத்தமிட்டுக்கொண்டு இருக்கும்போதே சிரித்துப் புரையேறி, இவர் வாயிலேயே அவர்களின் சளியை அனுப்பி விடுவார்கள். இவர் நாகரீகம் காரணமாக அதைத் துப்பியதேயில்லை.

சிலர் முத்தமிட்டு முடித்ததும் 'த்பூ த்பூ' எனத் துப்பிவிட்டுச் செல்வதையும் பெரிதாக எடுத்துக்கொண்டதில்லை.

ஏற்கனவே முயன்ற பெண்களை மீண்டும் முயல்கையில் அவர்கள் சிரித்துக்கொண்டே உதட்டை உட்புறமாக மடித்து மூடிக் கொள்வார்கள். அந்த வலுவான உதட்டு மூடலுக்கு எதிராக, இவர் சளைக்காமல் தன்னுடைய மென்நாவினால், நடுவில் பிளக்க போராடுவார். சில பெண்கள் தெரிந்தே தோற்று வழிவிடுவார்கள். இப்படியாக அந்த சிற்றூரில் உதட்டு முத்தப் பரப்பாளராகச் செயல்பட்டு வந்தார்.

இந்தப் பின்னணியில்தான் உத்திரத்துக்கு உதட்டு முத்தம் கொடுத்த ஆறுமுகம், தன் புகையிலை எச்சிலை அவள் வாயில் செலுத்தினார். அவள் நாக்கை தேடிப்பிடித்து, அதில் படிந்திருந்த புகையிலைச் சுவையை உறிஞ்சினார்.

உத்திரத்துக்கு இது வேடிக்கையாக இருந்தது. அதே வேடிக்கை உணர்வோடு ஆறுமுகத்தின் மீசையை இருபுறமும் பிடித்து இழுத்தாள்.

வலி மிகுந்த ஆறுமுகம், வாயை விடுவித்துக்கொண்டு செல்லமாக உத்திரத்தைக் கன்னத்தில் அடித்தார். பின் உத்திரத்தைப் படுக்க வைத்த ஆறுமுகம், அவளது கால்களை அகட்டினார். புடவையை மேலே தூக்கிய ஆறுமுகம், அவளது யோனியில் தன் கையை வைத்துப்பார்த்தார்.

அப்போது அவர் எதிர்பார்க்காதபோது, அவரை எட்டி உதைத்தாள் உத்திரம்.

உதை வாங்கிய ஆறுமுகம் சுதாரித்துக்கொண்டு, “என்னாம்மா” என்றார்.

உத்திரம் வெறித்துப் பார்த்தபடி, குழம்பிப்போய் இருந்தாள். மேலே ஏற்றிவிட்ட புடவை ஏற்றி விட்டபடியே இருந்தது. யோனி என்பதே தெரியாதவாறு கருகருவென ரோமங்கள் 'குமட்டி அடுப்புக்கரி' போல இருந்தன.

புடவையை இழுத்து மூடிவிட்ட ஆறுமுகம், பக்கத்தில் கிடந்த பாய் ஒன்றை இழுத்துப் போட்டு படுத்துக்கொண்டார்.

உத்திரம் எதற்கென்று தெரியாமலேயே அழுதபடி தூங்கிப்போனாள்.

ஆறுமுகம் பக்குவமானவர் என்பதால் வெகுநாட்களாக முத்தமிட்டுக் கட்டியணைத்துப் பழக்கப்படுத்தினார். ஒருநாள் அந்த பாழடைந்த புராதனக் கோவிலுக்கு மாலை நேரத்தில் அழைத்துச் சென்றார். கிணற்றில் தண்ணீர்மொண்டு பித்தளை அண்டாவை நிரப்பி விட்டுக் கிணற்றுக்குப் பக்கத்தில் இருக்கும் நந்தியாவட்டை மரத்தடியில் அமர்ந்தார்.

உத்திரத்தை மடியில் தலை வைத்துப் படுக்கவைத்துக்கொண்டார்.

உத்திரத்தைக் குனிந்து முத்தமிட ஆரம்பித்ததும் பதறி எழுந்தாள். “கோவிலுங்க” என்றவளை மீண்டும் படுக்க வைத்து, "கோவிலு அங்கல்ல இருக்கு?" என்றபடி அழுந்த முத்தம் பதித்தார். உத்திரம் உள்ளுக்குள் இளகுவது ஆறுமுகத்துக்குத் தெரிந்தது.

அவளது ரவிக்கையைத் தளர்த்தி முதன்முறையாக, மேற்புறத்தில் மென்மையாகவும் உள்ளே கெட்டித்தும் இருந்த முலைகளில் முகம் பதித்தார். உத்திரத்தின் வயிற்றில் கை துழாவிக்கொண்டு நகர்கையில் குழைந்திருந்த

வயிற்றில் சூடு தெறித்தது. அந்த நேரத்தில் குருக்கள் கோவிலுக்குள் வரும் சத்தம் கேட்க, இருவரும் விலகிக் கொண்டார்கள்.

உடனே வீட்டுக்குச் செல்லாமல், உத்திரத்தை ஊரின் எல்லையில் இருக்கும் வயல்வெளிகள், தோப்பு எனக் கூட்டிக்கொண்டு சுற்றினார். இருட்ட ஆரம்பித்ததும், ஊரின் தென்புறத்தில் ஓடிக்கொண்டு இருக்கும் சிற்றாற்றின் கரைக்கு அழைத்துச் சென்றார். துறையில் யாருமில்லை. இருவரும் உடைகளைக் களைந்து நிர்வாணமாகக் குளித்தனர்.

துவட்டிக்கொண்டு அவளை ஆற்றின் கரையில் இருக்கும் புல்தரையில் படுக்க வைத்தார். புல்தரை மேடு பள்ளமாக இருந்ததும் வசதியாகவே இருந்தது. உத்திரம் தயாராக இருந்ததாக ஆறுமுகத்துக்குப் பட்டது. இந்த முறை கையை வைத்து ரிஸ்க் எடுக்காமல், முகத்தைப் புதைத்துக்கொண்டார்.

இதை அவருக்கு யாரும் சொல்லித்தரவில்லை. அவரே சடுதியில் எடுத்தமுடிவு. இந்த ஆற்றங்கரை, அரை வட்ட நிலவு, ஆற்று நீரின் சலசலப்பு; இவைகூட சொல்லிக்கொடுத்து இருக்கலாம். அல்லது புல்தரையில் அந்த மேடு பள்ளத்திற்கு ஏற்ப வளைந்து கிடந்த உத்திரத்தின் வளைவுகள் கூடச் சொல்லிக் கொடுத்திருக்கலாம்.

முகம் புதைத்தலுக்குப் பின் எந்த அசம்பாவிதமும் நடக்காததால் ஆறுமுகம் இயல்பான உடலுறவை மென்மையாக முயன்றார். உத்திரம் இவரை உள்வாங்கிக் கொண்டதும் தன் உடல் பலத்தை இறக்காமல் தன் கைகளில் தாங்கிக்கொண்ட ஆறுமுகம், மெல்ல மெல்ல இயங்கினார். உத்திரம் ருசி அறிந்து கொண்டாள் என்ற சமிக்ஞை தெரிந்ததும் ஆறுமுகத்துக்கு அந்த தேர்க்காட்சி ஞாபகம் வந்தது.

மெல்லப் பின்வாங்கிப் பக்கத்தில் சரிந்தவர், உத்திரத்தை அள்ளி மேலே அமர்த்திக்கொண்டார். வெட்கமும் ஆச்சர்யமும் முகத்தில் பொங்கப்பொங்க ஆறுமுகத்தை அரசாண்டாள் உத்திரம்.

மீண்டும் குளித்து முடித்து வீடு வந்த சேர்ந்த இருவரும் அடித்துப் போட்டது போல தூங்கினர்.

ஆறுமுகம் செல்லும் வேலைக்கே உத்திரமும் உடன்செல்வாள். ஏழ்மையான வாழ்க்கை முறைதான் என்றாலும் கஷ்ட ஜீவனம் இல்லை. அந்த ஊருக்கு அதிகப்படியான கொண்டாட்டத்தையே இருவரும் அனுபவித்து வந்தார்கள்.

ஒரு நாள், ‘‘ஏம்புள்ள, நான் அன்னிக்கி கை வச்சதும் எட்டி ஒதைச்ச’’ என்று கேட்டார் ஆறுமுகம்.

உத்திரத்துக்கு முகம் மாறியது.

உத்திரம் நல்ல உறக்கத்தில் இருந்தபோது சாமாவும் நல்ல உறக்கத்தில்தான் இருந்தார். திடீரென விழிப்பு வந்ததும் வெளியே போய் சிறுநீர் கழித்தவர், திரும்ப வந்து உத்திரத்தின் பாவாடையை லேசாக தூக்கிப் பார்த்தார்.

அவளின் எலுமிச்சை நிற கெண்டைக் கால்கள் சாமாவுக்குக் கிளர்ச்சியை ஏற்படுத்த, ஒரே நொடியில் முழு கிளர்ச்சியடைந்து முற்றிலும் தயாரானவர், அவளின் பாவாடையை முழுதாகத் தூக்கி விட்டு மேலே படுத்தார்.

உடலுறவுக்கு நேரடியாக முயல்கையில், அதீத வலியோடும் எரிச்சலோடும் விழித்தெழுந்த உத்திரம், இவரைத் தள்ளி விட்டு, மடங்கிப் படுத்துக் குலுங்கிக் குலுங்கி அழலானாள். இருட்டில் ரத்தம் தெரியாவிட்டாலும் பிசுபிசுப்பு தெரிந்தது.

சாமா கையில் பிடித்தபடி சிறிது நேரம் அமர்ந்திருந்தார். பின் அவளுக்கு ஈரத்துண்டைத் தயார் செய்து கொடுத்து உதவினார்.

இதைக்கேட்ட ஆறுமுகம், எங்கோ வெறித்துப்பார்த்து விட்டு தலையில் அடித்துக்கொண்டு, படுத்துத் தூங்கினார். படுப்பதற்கு முன் ‘‘மோடுமுட்டித் தேவடியாப்புள்ள’’ என்று முணுமுணுத்தார்.

இதேபோல இரண்டு மாதங்களில் நான்கைந்து முறை முயன்று உத்திரம் கத்தி களேபரம் செய்ய, வீடு கொடுத்த பெண்மணி என்ன ஏதென்று விசாரிக்க, சாமா விவரத்தைச் சொல்ல,

‘‘அது பச்சை மண்ணுய்யா, அதை விட்டுடு. ஒனக்குவேற ஆள் கெடப்பா’’ எனக் கூறி, அந்த வீட்டம்மாவே பக்கத்து ஊரில் இருக்கும் ஆறுமுகத்துக்குக் கட்டிவைத்தது. ஆறுமுகத்துடனான சீரான வாழ்க்கையில் — உத்திரத்துக்கு

முதல் குழந்தை பிறந்த சில வருடங்களுக்குப்பின் உத்திரத்தின் ஊருக்கு சாமா வந்தார். திருமண சமையல் வேலைக்காக வந்திருந்தார்.

திருமண மண்டபத்தில் வேலை செய்துகொண்டிருந்த உத்திரத்தைப் பார்த்தார். மளிகைச்சாமான் வைத்திருக்கும் அறையில் பூட்டிக் கொண்டு இருவரும் புணர்ந்து முடித்தனர். முடித்ததும், உத்திரம் எழுந்து கதவைத் திறந்துகொண்டு ஓடிவிட்டாள்.

சாமா அந்த ஊரை விட்டுக் கிளம்புவதற்கு முன் இருவரும் நான்கு முறை உடலுறவு கொண்டனர்.

கடைசியாகக் கிளம்பும் போது, ‘‘எங்கூட வந்துடறியாடீ’’ என்றார் சாமா.

‘‘அப்புறம் பாத்துக்கலாம்யா’’ என்றபடி உத்திரம் விடைகொடுத்தாள்.

# பொற்செல்வி — 2

மெ துவாக ஒரு முறை 'ங்கா' சொன்ன பொற்செல்வி, உதடுகளைக் கோணிக்கொண்டு தூங்கமுயற்சித்தாள். ஒரு கண்ணை முக்கால்வாசியும், இன்னொரு கண்ணை அரைவாசியும் திறந்து மூடியபடி இருந்தாள்.

வேம்புவையும் பொற்செல்வியையும் மீண்டும் வண்டியில் வீட்டுக்கே கொண்டுவிட்ட பழநி, அவசர நடையாக ஆறுமுகம் வீட்டுக்கு ஓடினார்.

தீச்சட்டி, பாடை கட்டுதல் போன்ற வேலைகள் ஆரவாரமாகவும் குதூகலத்துடனும் நடந்துகொண்டிருந்தன.

இங்கே மாடிவீடு முழுக்க மகிழ்ச்சி. டவுனுக்கு போய் தந்தி, ஆளனுப்பிச் சொல்லுதல் போன்ற வகைகளில் பொற்செல்வி பிறந்த செய்தி பறந்தது. பொற்செல்வியைப் பார்க்க பலரும் பல ஊர்களில் இருந்து கிளம்ப ஆரம்பித்தனர்.

மாடி வீட்டுக் குடும்பத்துக்கு முதல் பெண் குழந்தை என்பதால், அதுவும் கோவிலில் பிறந்ததால், ஒரு மங்களகரமான மகிழ்ச்சி அந்த வீட்டில் பரவியது.

அருகில் இருந்த உறவினர்கள் ஒவ்வொருவராக வரத் தொடங்கினார் கள். பொற்செல்விக்குத் தங்கமும் வெள்ளியும் குவிய ஆரம்பித்தது. இன்னும் வெளியூர்களில் இருந்து நிறைய உறவினர்கள் வரவேண்டும். நான்கைந்து நாட்கள் நடக்க இருக்கும் கொண்டாட்டத்திற்கு, அந்த மாடி வீடு தயாராகிக்கொண்டு இருந்தது.

உத்திரத்தின் உடல் மாடிவீட்டு வழியாகத்தான் சென்றது. பாலுதான் நெய்ப்பந்தம் பிடித்துக்கொண்டு சென்றான். வீட்டில் இருந்த அன்னம், "எனக்கு எல்லாமா இருந்தியேடீ... என் ஆத்தா, என்னைத் தனியா தவிக்கவிட்டுப் போயிட்டியேடி" என்று அரற்றிக்கொண்டு, தொண்டை கம்மக் கம்ம அழுதுகொண்டு இருந்தாள்.

“இன்னும் பத்து வருஷம் இருந்திருக்க வேண்டியவ. வில்லு மாதிரி இருந்தா... மவராசி, அவசரப்பட்டுப் போய்த் தொலைஞ்சிட்டா” என்றவாறே மூக்கைச் சிந்திப்போட்டு விட்டு அன்னத்தை அணைத்துத் தேற்றியபடி இருந்தாள் சந்திரா.

ஆறுமுகத்தைக் கல்யாணம் செய்து கொண்டு இந்த ஊருக்கு வந்த உத்திரத்துக்குக் கிடைத்த முதல்தோழி சந்திரா. அப்போது சந்திராவுக்குப் பழநியுடன் திருமணம் ஆகியிருக்கவில்லை.

இருவரும் காலையில் ஒன்றாக ஆற்றுக்குச் செல்வது, துணி துவைக்க ஒன்றாகப் போவது என இவர்களின் தோழமை அதிகரித்தது.

சந்திராதான் ஒருநாள், ஆற்றில் மதிய வேளையில் யாருமில்லாத போது உத்திரத்துக்கு முதுகு தேய்த்துவிட ஆரம்பித்தாள். முதுகு தேய்க்க ஏதுவாக நெஞ்சினில் ஏற்றிக்கட்டியிருந்த பாவாடையை உத்திரம் நெகிழ்த்தி இருந்தாள்; ஆனால் தன்கையால் பாவாடையை மார்பகங்களோடு ஏற்றிப்பிடித்து இருந்தாள். முதுகைத் தேய்த்துக்கொண்டே வந்த சந்திரா, உத்திரத்தின் மார்பகத் தின் அருகே கையைக்கொண்டு வந்ததும் உத்திரம், “கூசுதுடி” என்று சிரித்தபடி நெளிந்தாள்.

அதன் பிறகு ஒருவருக்கொருவர் முதுகையும் தேய்த்துக்கொண்டனர்; மார்பகங்களையும் அமுக்கி விட்டுக்கொண்டனர்.

குளிக்கும்போது ஆற்றுநீரில் வந்து ஒட்டிக்கொள்வாள் சந்திரா. முதன்முதலில் ஒரு மாதிரி இருந்தது உத்திரத்திற்கு. பிறகு சுமாராகப் பிடித்துப் போனது.

முன்னாலும் பின்னாலும் இருவரும் மாறி மாறிக் கட்டிக்கொள்வார்கள். சந்திரா அவ்வப்போது எல்லை மீறும்போது மட்டும், “சும்மாருடி எரும” என்று அடக்குவாள் உத்திரம்.

தான்தான் உத்திரத்திற்கு சாமா ஏற்படுத்திய வலியையும் வெறுப்பையும் மறக்கடித்ததாக இன்றும் ஆறுமுகம் நினைத்துக்கொண்டிருக்கிறார். சந்திரா மலரச்செய்த உத்திரத்தின் உடலைத்தான் ஆறுமுகம் அனுபவித்தார்.

ஆறுமுகம் உத்திரத்தினுடன் கலந்த பிறகும், சந்திராவின் உரசல்கள் ஆற்றில் தொடர்ந்தபடியேதான் இருந்தது. உத்திரமும் மறுத்தாளில்லை.

பழநியுடன் சந்திரா திருமணம் செய்து கொண்டபிறகு சில வாரங்கள் ஆகின, இருவரும் சேர்வதற்கு.

சந்திராவுக்கு சுமதி பிறக்கும் வரையில், சந்திரா உத்திரத்தின் மீது காதலுடன்தான் இருந்தாள்.

இன்று இரவு பழநி வீட்டில்தான் அன்னமும் பாலுவும் தங்க ஏற்பாடு ஆகி இருந்தது. சுமதிக்கு உத்திரத்தின் மீது பாசம் அதிகம். சுமதிக்கு உத்திரத்திற்கும் சந்திராவுக்கும் பெரிய வேறுபாடு தெரியாது.

இன்று இரவு சுமதி பக்கத்தில் படுத்து தூங்கிய பாலுவைக் கட்டிப்பிடித்து முத்தமிட்டு தன் முலைகளை அவன் முகத்தில் வைத்து அழுத்திச் சுமதி என்னென்னவோ செய்ய, கமுக்கமாக இருந்த பாலு, அடுத்த சிலநாட்களில் ஏதோ எண்ணம் உந்தித்தள்ள, ஜாஃபர் வராத அன்று பக்கத்தில் படுத்து உறங்கிக்கொண்டு இருந்த அன்னத்தைக் கட்டிக்கொண்டான்.

அன்று அன்னத்திற்கு அது வித்தியாசமாகத் தெரியாததால் அவளும் பாலுவின் மீது கையைப் போட்டுக்கொண்டாள். ஆனால் அடுத்தடுத்த நாட்களில் வேண்டுமென்றே செய்கிறான் எனத் தெரிந்து துணுக்குற்றாள்.

பாலு சுடுகாட்டில் இருந்து வந்ததும் சந்திரா, அவனைத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்றாள். கூடவே சுமதியும் சென்றாள். தன் வீட்டுக்குக் கிளம்புவதற்கு முன்னால் அன்னத்திடம் “உத்திரத்துக்கு அடிக்கடி கனவு வந்திச்சிடீ ராசாத்தி, உன் தங்கச்சி மல்லிதான் கனவுல வந்து தெனமும் அழுவாளாம். எங்கிட்ட வந்துடுன்னு சொல்வாளாம். சீக்கிரம் மல்லி கிட்ட போயிடணும்னு உத்திரம் சொல்லிட்டு இருந்தா. சும்மா ஒளர்ரான்னு நினைச்சிட்டு விட்டுட்டேன். இப்ப போயிட்டா...” என்று இழுத்து முழக்கி அழுதபடியே சொல்லி விட்டுத்தான்போனாள்.

# மல்லி

மல்லி கொலையாகி ஒரு வருடம் கூட ஆகியிருக்கவில்லை. அன்னம் மாநிறம் என்றால் மல்லி சிவப்பு. முக ஜாடையில் கூட இருவருக்கும் ஒற்றுமை இருக்காது. அன்னத்தின் உடல்வாகு சக்கர வள்ளிக்கிழங்குபோல என்றால், மல்லியின் உடல் பலாச்சுளை போல.

சின்ன வயதில் அன்னம் முக்கா பாவாடைபோடுவாள். மல்லி முட்டி வரை வரும் அரைப் பாவாடை போடுவாள். மல்லியின் தொடை சிவப்பாக இருக்கும் என்பதால் ஊர் சிறுசு முதல் பெருசு வரை மல்லியின் தொடையைப் பிடித்துக் கிள்ளுவார்கள். தொடைக்கு மேலே கை போனால் மல்லிக்குத் தட்டிவிடத் தெரிந்து இருந்தது.

அன்னத்திற்கு கங்கநாதனை கட்டிக் கொடுப்பதற்கு முன்பிருந்தே, மல்லிக்கு இளங்கோவோடு காதல் இருந்தது. இளங்கோ வெளியூரி லிருந்து இவர்களது ஊரில் தங்கி தண்டல் தொழில் செய்து வருபவன். டைட் பேண்ட், சுருள் முடி, மரவட்டை ஊறும் மீசை; இவையெல்லாவற்றையும் தாண்டி, மல்லிக்கு இளங்கோ மீது மையல் வரக் காரணம், அவனிடம் இருந்த ஹீரோ புக் மொபட்.

இந்த ஊரில் காதலிக்க எல்லாம் எந்த வசதியும் கிடையாது. கண் பார்வையிலும் காற்று உரசல்களிலும் காதலித்துக்கொள்ள வேண்டியதுதான்.

மல்லி – இளங்கோ காதல் வெளியே தெரிந்திருந்தால் யாரும் எதிர்ப்பு தெரிவித்து இருக்கமாட்டார்கள் இந்த ஊரில்; உத்திரமே கட்டி வைத்திருப்பாள். ஆறுமுகத்துக்கு அதைப் பற்றி எந்தக் கவலையும் கிடையாது.

ஆனாலும் காதலை வெளியே சொல்லாமல் ஊரை விட்டு இருவரும் ஓடிப்போனார்கள். இளங்கோ ஊரில் இவர்களைத் துரத்தி அடித்தார்கள். அப்போதாவது இதே ஊருக்குத் திரும்பி வந்திருக்கலாம். குறைந்தபட்சம்

அன்னத்தின் ஊருக்காவது போயிருந்தால் ஜாஃபர் ஏதேனும் ஏற்பாடு செய்து கொடுத்திருப்பார். ஆனால் இவர்கள் இருவரும் அந்த நேரத்துக்கு எந்த பேருந்து வந்ததோ அந்த ஊருக்குப் போனார்கள்.

முதல் நாளே ஒரு வாடகை வீடு எடுத்தான் இளங்கோ. பூங்காவனத் தம்மன் கோவிலில் வைத்து இளங்கோ மல்லிக்குத் தாலி கட்டினான். ‘‘அம்மனை வேண்டிகிட்டு புருஷன் கால்ல வுழுந்து கும்புடுமா’’ என்று பூசாரி சொன்னார்.

‘‘ஆத்தா, நீதான் என் தாலியைக் காப்பாத்தணும்’’ என்று மல்லி வேண்டிக்கொண்டாள்.

திருமணம் முடிந்த கையோடு ஒரு புதுப்பாயும் தலையணையும் போர்வையும் வாங்கிக்கொண்டு வீட்டுக்கு வந்தார்கள். பூங்காவனத்தம்மன் கோவிலில் பூசாரி கொடுத்த வாழைப்பழம் மற்றும் தேங்காய் மூடியை உண்டார்கள்.

இருவரும் திகட்டத் திகட்ட இளமையைக் களைப்பாக்கினார்கள். முதல் சில நாட்களில் மல்லியை எப்போது பார்த்தாலும் இளங்கோவுக்குக் கிளர்ச்சி ஆகிவிடும். வெண்ணிறத்தில் சிவந்த அவளின் கெண்டைக்காலோ, அணில்குட்டி முடி ஒட்டிக்கிடக்கும் குழைந்த வயிறோ, ஏதோ ஒன்று அவனைக் கிளர்த்திவிடும். திளைத்துக் கிளைத்து வீட்டினுள்ளேயே அடைந்து கிடந்தார்கள்.

கையிலுள்ள காசை வைத்து இளங்கோ மெதுவாக அந்த ஊரில் காலூன்றத் தொடங்கினான்.

இவர்கள் வீட்டின் எதிர்வீட்டு மொட்டை மாடியில் ஒரு டியூஷன் செண்டர் இருந்தது. அந்த டியூஷன் வாத்தியார் அவ்வப்போது மல்லியை கவனிப்பது வழக்கம். அந்த மாடியில் இருந்து பார்த்தால் தோட்டத்தில் மல்லி குளிப்பது தெரியும்.

தோட்டத்தில் மறைப்பு ஏதும் கிடையாது. ஒரு சிமெண்ட் தொட்டி, ஒரு கொடி, ஒரு துணி துவைக்கும் கருங்கல், ஒரு அடிபம்பு, அதைச் சுற்றி சிமெண்ட் தளம்; அந்த தளத்தில்தான் அமர்ந்து குளிப்பாள் மல்லி.

என்னதான் பாவாடை கட்டிக்கொண்டு குளித்தாலும் சோப்பு போட வேண்டுமல்லவா..? இதற்கே மல்லி பாவாடைக்கும் உடலுக்கும் ஒரே

சோப்புதான் போடுவாள். பாவாடை மேலே சோப்பைத் தேய்த்து விடுவாள். அதற்குப் பிறகு பாவாடை மூடாத மேனியெங்கும் சோப்பைப் போடுவாள். பிறகு பாவாடையை லூசாக்கிக் கொண்டு, மேனியெங்கும் கையைவிட்டு அழுக்குத்தேய்ப்பாள். ஒரு கையால் பாவாடையைப் பிடித்துக்கொண்டு, இன்னொரு கை சர்ப்பம் போல உடலெங்கும் வளைந்து நெளிந்து ஓடும்.

இதுவரை கண்டுகளித்துக் கொண்டிருந்த டியூஷன் வாத்தியாருக்குப் படபடப்பு ஏறும். சோப்பை போட்டுமுடித்துக்கொண்டு மஞ்சள் போட வேண்டும் அல்லவா..? அப்போது ஒரு கையால் மஞ்சளைக் கல்லில் வைத்து தேய்க்க வேண்டும். இன்னொரு கையால் கல்லைப் பிடித்துக்கொள்ள வேண்டும். மஞ்சள் தேய்க்க என்று பிரத்யேகமாக ஒரு கல்லை வைத்து இருந்தாள் மல்லி.

இரண்டு கைகளும் மஞ்சள் தேய்ப்பதில் ஈடுபடும் அந்த சிறிய நேரத்தில் அவளின் பாவாடை அவள் மடியில் கிடக்கும். அப்போது முழுக்கத் தெரியும் அவளின் மார்பகங்களை கண்டுகளித்து கண்ணை மூடிக்கொள்வார் டியூஷன் வாத்தியார். இளங்கோ கூட இப்படி அவளின் மார்பகங்களை முட்ட முழுக்கப்பார்த்ததில்லை.

இப்படி ஒருநாள் மார்பகங்களை முழுதாகப் பார்த்த டியூஷன் வாத்தியார் கீழே இறங்கி வந்துவிட்டார். மல்லியின் தெருக்கதவு சாத்தி இருந்தது. கதவைத் தட்டினார்.

அடித்துப் பிடித்து பாவாடையை தூக்கி கட்டியபடியே கதவைத் திறந்தாள் மல்லி. நீர்த்திவலைகள் உடலில் நடுங்கிக்கொண்டு இருந்தன.

ஒரு காலை உள்ளே எடுத்து வைத்த வாத்தியார், ஏதோ நினைத்தவராகக் காலை மீண்டும் வெளியே எடுத்துக்கொண்டு, ‘‘கொஞ்சம் தண்ணி குடுங்க’’ என்றார்.

மல்லி லோட்டாவில் கொடுத்த தண்ணீரைக் தொண்டைக்குழி குதிக்க குதிக்கக் குடித்தவர் திரும்பிச் சென்று விட்டார்.

இன்னொரு நாள் மார்பகங்களை ரசித்துக்கொண்டு இருந்தவர், மல்லி குளித்து முடித்து உள்ளே சென்றதும் மனதில் கணக்கு போட்டுக்கொண்டே

விரல்களால் சொடுக்க ஆரம்பித்தார்.

இப்போது உள்ளே நுழைகிறாள்,

சடக் சடக்...

இப்போது துண்டை எடுக்கிறாள்,

சடக் சடக் சடக்...

இப்போது பாவாடையை நழுவ விடுகிறாள், அதுஅவளின் காலைச்சுற்றி விழுகிறது,

சடக் சடக்...

துவட்டிக் கொள்ளத் துண்டை எடுக்கிறாள்,

சடக் சடக்...

முகத்தைத் துவட்டிக் கொள்கிறாள்,

சடக் சடக் சடக்...

கழுத்து,

சடக்...

மார்பகங்களை அழுந்த ஒத்தி எடுக்கிறாள்,

சடக் சடக் சடக் சடக்...

வயிறு,

சடக் சடக்...

இடது கை,

சடக் சடக்...

அக்குள்,

சடக்...

வலது கை,

சடக் சடக்...

அக்குள்,

சடக்...

முதுகு,

சடக் சடக் சடக்...

யோனி,

சடக்...

கால்கள்,

சடக் சடக் சடக் சடக் சடக் சடக்...

யோனி,

சடக்...

பிருஷ்டம்,

சடக் சடக் சடக்...

யோனி,

சடக்...

கூந்தல்,

சடக் சடக் சடக் சடக்...

புதுப் பாவாடை,

சடக் சடக் சடக் சடக் சடக் சடக் சடக் சடக்...

புது ரவிக்கை,

சடக் சடக் சடக் சடக் சடக் சடக் சடக் சடக் சடக் சடக்சடக் சடக்...

இப்போது புடவை கட்டிக்கொள்ள ஆரம்பித்து இருப்பாள்...

டியூஷன் வாத்தியார் வேகமாக இறங்கி மல்லி வீட்டின் கதவைத் தட்டினார்.

மல்லி கதவைத் திறந்தாள்.

கீழே பாவாடையும் மேலே பாதி அணியப்பட்ட ரவிக்கையும் அதன் மேல் துண்டு போர்த்தியிருந்தாள்.

உள்ளே சென்றார் டியூஷன் வாத்தியார்.

“தண்ணி குடுங்க” என்றார்.

மல்லி தண்ணீர் எடுக்கச் சென்றாள். குனிந்து தவலையில் இருந்துமொண்டாள். பின்னால் வந்திருந்த டியூஷன் வாத்தியார் மல்லியை பின்புறமாக அணைத்துக்கொண்டார்.

“வேணாங்க, விடுங்க” என்றாள் மல்லி. லோட்டா விழுந்து தண்ணீர் சிதறியது. அவளைக் கொஞ்சம் விட்டதும் திரும்பினாள். மீண்டும் இழுத்து அணைத்துக்கொண்டார் வாத்தியார்.

ரவிக்கை முழுவதும் போடாமல் இருந்த மல்லி, அப்போதுதான் குளித்து விட்டு வந்திருந்தபடியால் முலைகள் வெளியே குளிர்ச்சியாகவும் உள்ளே கதகதப்பாகவும் இருந்தன. ஆனால் டியூஷன் வாத்தியார் சட்டை அணிந்திருந்ததால் அவருக்கு இது தெரியவில்லை.

இப்போதும், “விடுங்க, வேணாம்” என்றே லேசாகத் திமிறினாள் மல்லி.

டியூஷன் வாத்தியார், ஒரு கையால் அவளை அணைத்துக்கொண்டு, இன்னொரு கையால், அவளின் பாவாடையைதூக்கிக் கையை மேல்நோக்கி நகர்த்துகையில், “வேணாம்” என்று சொல்லி அவரைத் தள்ளி விட்டாள் மல்லி.

தடுமாறிய டியூஷன் வாத்தியார் வெளியேறிச் சென்று விட்டார்.

வீட்டு வாசலில் சாக்குத்துணி போட்டு அதன் மீதமர்ந்து கனகாம்பரப் பூவை ஒருநாள் மல்லி கட்டிக்கொண்டு இருக்கையில், டியூஷன் வாத்தியார் மேலிருந்து பார்த்துக் கொண்டிருந்தார்.

டியூஷன் வாத்தியார் வைத்த கண் வாங்காமல் பார்த்துக்கொண்டி ருப்பதை தெரு ஆரம்பத்திலிருந்து பார்த்துக்கொண்டு வந்த இளங்கோ, வாசலில் மொபெட்டை நிறுத்தி ஸ்டேண்ட் போட்டான்.

இளங்கோ வீட்டினுள் நுழைந்து, மல்லியை அழைத்து இழுத்துப் போட்டு அடித்தான். மிதித்து எடுத்துவிட்டு, ‘‘உன் தேவடியா புத்தியை காட்டிட்ட இல்ல’’ என்றான்.

‘‘இப்ப என்னாச்சின்னுய்யா இப்பிடி இழுத்துப் போட்டு அடிக்கிற’’ என்று கேட்டு மேலும் உதைவாங்கிக் கொண்டாள் மல்லி.

இந்த அடி உதை தொடர்ந்து நடக்க ஆரம்பித்தது. ஒரு நண்பகலில் இளங்கோ வீட்டில் சாப்பிட்டுவிட்டு தூங்கிக்கொண்டு இருக்கையில் டியூஷன் வாத்தியாரோடு ஊரை விட்டு ஓடிப்போனாள் மல்லி.

டியூஷன் வாத்தியாரோடு ஒரு ஊரில் சிறிது நாட்கள் குடித்தனம் நடத்தினாள் மல்லி. டியூஷன் வாத்தியார் விட்டுவிட்டு ஓடிப்போன பின்பும் அதே ஊரில் அதே வீட்டில் சில வருடங்கள் இருந்தாள் மல்லி. சில சின்னச் சின்ன ரவுடிகளின் தொடர்பு கிடைத்து; அவர்கள் வீட்டுக்கு வந்து போக ஆரம்பித்தார்கள்.

ஒரு பிரச்சனைக்கு போலீஸ் ஸ்டேஷன்போய், அதன் மூலம் ஏட்டு பழக்கமாகி, ஏட்டு வீட்டுக்கு வந்து போக ஆரம்பித்தார். ஏட்டு வந்து போக ஆரம்பித்ததும் மல்லிக்குத் தெருவில் கொஞ்சம் செல்வாக்கு கூடியது. இப்படி சில நாட்கள் ஓடிக்கொண்டு இருக்கையில் ஒருநாள் குளத்தங்கரையில் பிணமாகக் கிடந்தாள் மல்லி.

‘ஏட்டுதான் அடித்துப் போட்டுவிட்டார்’ என்று அந்த ஊரில் பேச்சு ஓடியது.

உத்திரம் அடித்துப் பிடித்து ஓடி வந்து மகளைப் பார்த்து சித்தம் கலங்கிப்போய் அழுதுபுரண்டாள்.

ஒன்றும் புரியாமல் நின்று கொண்டிருந்த பேரன் அமிர்த கடேஸ்வரனைக் கட்டிக்கொண்டாள்.

மல்லி அமிர்தகடேஸ்வரனைப் பிள்ளையில்லாத, ஓரளவு வசதியான நிலபுலன்கள், சொத்து இருக்கும் தம்பதியினருக்குச் சின்ன வயதிலேயே தத்துக் கொடுத்திருந்தாள்.

# வேம்பு, செந்தாமரை, லோகேஸ்வரி

பொற்செல்வியைப் பெற்றெடுத்த வேம்புதான் சின்னய்யாவின் மனைவி என்பது தெரிந்திருக்கும். பொற்செல்வி பிறந்தபோது அறிமுகமான பெரியய்யாவின் மனைவியின் பெயர்தான் லோகேஸ்வரி.

பெரியய்யா, சின்னய்யா என்று சொல்லியதால் இரண்டு அண்ணன் தம்பி என்று நினைத்திருப்பீர்கள்; அது தப்பு. அண்ணன் தம்பிகள் மூன்று பேர். நடு அய்யா என்று ஒருவர் இருக்கிறார். அவர் மனைவியின் பெயர்தான் செந்தாமரை.

பெரியய்யாவுக்கு மொத்தம் நான்கு மகன்கள். சின்னய்யாவுக்கு பொற்செல்வி மட்டும். நடுஅய்யாவுக்குக் குழந்தைகள் கிடையாது. செந்தாமரைக்கு இரண்டு மகன்கள்.

பெரியய்யாவின் நான்கு மகன்களும் தனக்கு ஒன்றுதான் என்று வளர்த்து வந்தார்.

நடு அய்யா இரண்டு மகன்களை எந்த வித்தியாசமும்காட்டாமல் ஒரே பாசத்தோடு வளர்த்து வந்தார்.

பெரிய மாடி வீடு, கூட்டுக்குடும்பம்; வீட்டுக்கு ஒரேபெண் குழந்தை பொற்செல்வி.

வீட்டின் கொல்லைப்புறத்தில் 500 மீட்டர் நடந்துசென்றால் ஒரு குளம் இருக்கும். ஒரு பக்கத்து மொத்த குளமும் மாடி வீட்டின் நிலத்தின் கரையில் அலையடித்துக் கொண்டு இருக்கும்.

தற்போது தவழ்ந்து கொண்டிருக்கும் பொற்செல்வி, சில வருடங்களுக்கு அப்பால் இந்தக் குளத்தங்கரையில், கல்லூரி விடுமுறைக்கு வந்தபோது தந்தையிடம் சொல்லித் தனியாக நவீன வசதிகளைக் கொண்டு ஒரு படித்துறை கட்டி, அதனருகில் கண்ணாடி மாளிகைபோல ஒரு குளியலறையும் கட்டிக் குளத்தில் குளிர்ந்த நீரும் குளியலறையில் வெந்நீரும் என மாறி மாறிக் குளிப்பதற்கு ஏற்பாடு செய்து கொண்டாள். குளத்தில் அல்லி மலர்

பூத்திருக்க நீச்சல் அடித்துப்போய் பறித்து வந்த பொற்செல்வி, கண்ணாடிக் குளியலறையில் இருக்கும் பாத் டப்பில்அவற்றை மிதக்க வைத்தாள்.

ஊர்க்கார பையன் ஒருவன் பொற்செல்வியின் கட்டுடல் கண்டு மயங்கி, பொற்செல்வியின் பெரியதோப்பில் யாருமில்லாததைக் குறித்துக்கொண்டு, பொற்செல்வி குளியலறையில் தனியாகக் குளிப்பதை நினைத்துக் குதூகலமாகிக் குளியலறையில் அத்துமீறி உள்ளே நுழைந்தான்.

அடி தாங்க முடியாமல் தெறித்து வெளியே வந்து விழுந்து ஓடிப்போனான் அந்த வாலிபன். பொற்செல்வி மார்டியல் ஆர்ட்ஸ் கற்றுவைத்திருந்தாள்.

இப்போது குட்டிக்குழந்தையாக இருந்தாலும் அந்த குட்டியோண்டு அளவுக்குப் பட்டுப்பாவாடை சட்டைஅணிவித்து வேம்பு பாலூட்டிக்கொண்டு இருந்தாள்.

பொற்செல்வியின் கால்களில் தங்க கொலுசு இருந்தது. குழந்தை பிறந்ததை முன்னிட்டு நடந்த நிகழ்ச்சியில் ஏராளமான உறவினர்கள், தெரிந்தவர்கள், சாதிக்காரர்கள் கலந்து கொண்டு தங்கத்தாலும் வைரத்தாலும் பொற்செல்வியைக் குளிப்பாட்டி விட்டார்கள்.

தாய்ப்பால் வேம்புக்கு நன்றாக சுரந்துகொண்டிருந்ததால் எந்த நோய் நொடியும் வராமல் ஆரோக்கியமாக வளர முடிந்தது பொற்செல்வியால். மருந்து கொடுக்கக் கூடத் தங்கப் பாலாடைதான்.

லோகேஸ்வரி மற்றும் செந்தாமரையும்கூட பொற்செல்வியை கவனமாகக் கவனித்துக்கொண்டனர். இருவருக்கும் உண்மையான பாசம் பொற்செல்வி மேல் இருந்தது.

லோகேஸ்வரி பெரும் பணக்கார குடும்பத்தில் பிறந்து தடபுடலாகக் கல்யாணம் கட்டிப் பெரியய்யா குடும்பத்துள் அடியெடுத்து வைத்தாள். இரண்டு மகன்களைப் பெற்றெடுத்துப் பெரியய்யாவின் இரண்டு தம்பிகளையும் கவனித்துக்கொண்டிருந்தாள்.

முதல் தம்பி, அதுதான் நடுஅய்யா திருமணம் முடித்து வந்த அடுத்த மாதமே வீட்டில் பெரியய்யாவையும் செந்தாமரையையும் ஒன்றாகப் பார்த்து விட்டாள்; சில நாட்கள் அழுதாள். அதன்பிறகு பெரியய்யாவுடன் படுப்பதை

நிறுத்திவிட்டாள். அதற்குப் பதிலாக, தோட்டத்தில் மாடு பராமரிப்பதில் அதிக நேரம் ஈடுபட்டாள்.

செந்தாமரை இரண்டு மகன்களைப் பெற்றெடுத்த பின்பும் நடுஅய்யா இன்னும் பெரியய்யாவையும் செந்தாமரையையும் ஒன்றாகப் பார்த்ததில்லை.

பெரியய்யாவும் சின்னய்யாவும் கம்பீரமாக ஒரு மாதிரி ஆளுமையுடன் இருக்க, நடுஅய்யா ஏனோ கொஞ்சம் தெக்கலாகப் பல் எடுப்பாக இருந்தார்.

தெய்வீக அழகுடன் லோகேஸ்வரி இருந்தாலும் இந்தச் சம்பவத்திற்குப்பிறகு அவள் முகத்தில் ஒருவித தெய்வீக சோகம் குடிகொண்டது. வீட்டின் அருகில் இருக்கும் கோவிலுக்குச் சென்றால் அதிக நேரம் அமர முடியாது என்று குதிரை வண்டி கட்டிக்கொண்டு நீண்ட தூரத்தில் இருக்கும் கோவிலுக்குச் சென்று தீப்பாய்ந்த அம்மன் சன்னதியில் அமர்ந்து, அம்மனிடம் நீண்ட நேரம் பேசிக்கொண்டு இருப்பாள். ஆரம்பத்தில் சோகமாகப் பேசிக்கொண்டு அழுதுகொண்டு இருந்தவள் காலப்போக்கில் ஏன் கோவில் வருகிறோம்,என்ன பேசுகிறோம் என்பதையே மறந்தாள்.

ஆனாலும் தொடர்ந்து கோவிலுக்கு வருவாள். அம்மன் முகத்தைப் பார்த்தபடி அமர்ந்து இருப்பாள். ஒரு மணி நேரம் கழித்துதான் ஏதும் பேசாமல் அமர்ந்து இருக்கிறோம் என்பதே உறைக்கும் போல. அப்போதுதான் தலையைச் சிலுப்பிக்கொள்வாள். குங்குமத்தை எடுத்து நெற்றியில் வைத்துக்கொள்வாள்.

“உன்னிடம் எதைப் பேசுவது..?”, “ஏன் பேச வேண்டும்..?”, “என்ன பேசணும்..?”, “இனிமே எனக்கு என்ன..?”, “நான் ஏன் இப்படி ஆயிட்டேன்..?”, “ தீப்பாஞ்சம்மா..! நீ இருக்கியா..?” “நான் பேசறது கேக்குதா..?” என்று, மந்திரம் போல மெல்லிய குரலுடன் பேச ஆரம்பிப்பாள்; குதிரை கனைக்கும்; யாரோ மணியடிப்பார்கள்.

பூசாரி, இரு கை நிறையப் பூசைப் பொருட்களைத் தூக்கிக்கொண்டு அவசரமாகக் கோவிலுக்குள் ஓடுவார். லோகேஸ்வரியின் மந்திரங் களைக் கேட்கச் சகியாமல் தீப்பாய்ந்த அம்மன் கோவிலை விட்டு வெளியேறுவது போலக் காற்று வெளிப்புறமாக அடிக்கும். அம்மனின் பழைய உடைகள் கோவில் மண்டபத்தில் இருந்து, அமர்ந்திருக்கும் லோகேஸ்வரியைத் தாண்டிக்

கோவில் வாசலை நோக்கிப் பறக்கும். லோகேஸ்வரிக்கு மனம் கொஞ்சம் லேசானதுபோல இருக்கும்.

லோகேஸ்வரிக்கு அம்மன் இல்லாத கோவில் கர்ப்பக்கிரஹம் போலத் தோற்றமளிக்கும் கர்ப்பகிரஹத்தை ஒருமுறை வெறிக்கப் பார்த்து விட்டுக் குதிரை வண்டியில் ஏறி, அவளுக்கு உயிரற்று, வாழ்வற்றுக் கிடப்பது போலத் தோற்றமளிக்கும் அந்த மாடி வீட்டில் வலியனாகப் புகுந்து மாட்டுத் தொழுவத்துக்குச் சென்று விடுவாள்.

லோகேஸ்வரி அளவுக்கு இல்லையெனினும், செந்தாமரையும் வசதியான குடும்பத்தில் இருந்து வந்தவள்தான்.

ஆரம்பத்தில் நடுஅய்யாவை அவளுக்குப் பிடிக்கவில்லை. பெரியவர்களின் வற்புறுத்தலின் பேரில் கல்யாணம் செய்து கொண்டாள்.

நடுஅய்யா அவ்வளவு மோசமில்லை; உடலுறவில் எல்லாம் ஈடுபட்டார்தான்; இவளும் ஒருவாறு அவருடன் வாழ ஆரம்பித்தாள்.

ஒருநாள், மாலை மங்கிக்கொண்டு இருக்கையில், நடு அய்யா வீட்டில் இல்லாதபோது, பெரியய்யா செந்தாமரையிடம் “எப்படி போய்ட்டு இருக்கு..? ஒழுங்கா வச்சிருக்கானா..?” என்று கேட்டுக்கொண்டே நெருங்கினார்.

அவர் சாதாரணமாகத்தான் வந்தார். செந்தாமரைக்குத் தன் கணவனிடம் இந்தக் கம்பீரக்குறைவுதான் அவளது ஏக்கம் என்பது போல அவளது உடல் மொழியில் வெளிப்பட, ஒருக்கணம் இருவரும் தயங்கி நின்றனர். பின் பெரியய்யா, “சரி வா” என்று கூறி அவளின் கையைப்பிடித்து மாடியறைக்கு அழைத்துச் சென்றார்.

இதன் பிறகு பெரியய்யாவுக்கு இரண்டு பிள்ளைகளைப் பெற்றாலும் நடுஅய்யா வீட்டில் இருக்கும் போது பெரியய்யாவுடன் எந்த சங்கார்த்தமும் செந்தாமரை வைத்துக்கொண்டதில்லை.

நடுஅய்யாவுக்கு எல்லா கடமைகளையும் செய்துகொண்டு அவ்வப்போது நடுஅய்யாவுடன் படுத்துக்கொண்டும் இருந்தாள் செந்தாமரை. பாசம் என்று பார்த்தால் செந்தாமரைக்கு நடு அய்யா மீதுதான் அதிக பாசம்.

இரு அய்யாக்களுடனும் உறவு தொடர்ந்தாலும் எப்படியோ குழந்தைகளை மட்டும் பெரியய்யாவுக்குப் பெற்றெடுத்தாள்.

வேம்பு இந்த இருவரையும் விட செல்வந்தர் வீட்டுப்பெண். கல்லூரிப் படிப்பு முடித்தவள். அந்த மரியாதை புகுந்த வீட்டில் கிடைத்தது. பொற்செல்வியை பெற்றெடுத்ததுதான் திருமணத்திற்குப் பிறகு வேம்புவுக்கு மிகப்பெரிய மகிழ்ச்சியாக அமைந்தது.

வேம்புவின் கணவன் சின்னய்யா குடி, சிகரட் என்று எந்தக் கெட்டப் பழக்கமும் இல்லாதவன். அதேபோல நண்பர்கள் என்று யாருமில்லை. யாரிடமும் அதிகம் பேசமாட்டான். பேசாமல் இருந்ததுபோக வேறு எந்தக் காரியத்திலும் ஈடுபட மாட்டான். வேலை விஷயமாக வெளியே போவான். வீட்டுக்கு வந்தால் உட்கார்ந்து கொள்வான். வேலையைத் தவிர வேறெதெற்கும் வெளியே செல்லவும் மாட்டான்.

வேம்புவிடம் பேசிய வார்த்தைகள் மிகக் குறைவு. இவள் ஏதேனும் கேட்டால் பதில் சொல்வான். அந்த பதில் உரையாடலை வளர்ப்பது போல இருக்காது; அத்தோடு முடிப்பது போல இருக்கும். இரவு சாப்பிட்ட உடன் உறங்கும் பழக்கம் உள்ளவன். அதிகாலை எழுந்து விடுவான். எழுந்து கட்டிலிலேயே உட்கார்ந்து கொண்டு இருப்பான். எப்போதேனும் வேம்புவும் அப்போது விழித்துக்கொண்டு, அப்போது அவளுக்குச் சிறுநீரும் வராமல் இருந்தால் உறவு நடக்கும்.

அப்பாவைப் பொற்செல்விதான் மாற்றினாள். பத்தாவது படிக்கும் போதே, ‘‘உன்னோட இளமைக்காலத்தை நினைச்சா பாவமா இருக்கும்மா’’, என்று சொன்னாள் பொற்செல்வி.

‘‘அப்படியா சொல்ற..? உனக்கு புருஷன் எப்படி இருக்கணும்னு எதிர் பாக்கற..?’’ என்றாள் வேம்பு.

‘‘இப்ப எனக்கு புருஷனைப் பத்தி எண்ணமே மனசுல இல்லம்மா. அது இப்போ தேவையும் இல்ல’’ என்றாள் பொற்செல்வி.

பால் கொடுத்து விட்டுப் பொற்செல்வியைச் செந்தாமரையிடம் கொடுத்தாள் வேம்பு. பால் குடித்த அசதிக்குத் தூங்கிக்கொண்டிருந்த பொற்செல்விக்குக்

கன்னத்தில் சிரித்தால் குழி விழும் தன்மை இருந்தது.

# குருவம்மா

குருவம்மாவுக்கும் அவளது கணவன் சுப்பையாவுக்கும் இருபது வயது வித்தியாசம். குருவம்மாதான் இதற்கே முதல் மனைவி. காதல், காமம், தாம்பத்தியம் என எல்லாம் தெரிவதற்கு முன் குருவம்மாவைச் சுப்பையாவுக்குக் கட்டி வைத்து விட்டார்கள். திரௌபதி அம்மன் கோவிலில் தாலிக் கயிறு கட்டியதோடு கல்யாணம் முடிந்தது.

சுப்பைய்யா நெடுநெடுவென உயரம், திடகாத்திரமான உருவம்; இந்த வேலைதான் என்று இல்லை, எந்த வேலையாகினும் செய்வார். ஆனால் மூட்டை தூக்குதல், பள்ளம் தோண்டுதல் போன்ற வேலைகளைச் செய்ய மாட்டார். சமையல் செய்வார், பந்தல் கட்டுவார், வண்டி ஓட்டுவார்.

மிகப்பழமையான ஓட்டு வீடு இருந்தது சுப்பையாவுக்கு. அவருடைய சகோதரர்கள் ஏமாற்றி இந்த ஓட்டை ஓட்டு வீட்டைக் கொடுத்து விட்டார்கள் என்று பேச்சு. அந்த சகோதரர்களும் பெரிய அளவில் வசதியாக இல்லை. ஆனாலும் அவர்களுக்கு நிலம் இருந்தது; சுப்பையாவுக்கு இல்லை.

அந்த ஓட்டு வீட்டில் குடிபுகுந்த குருவம்மாவுக்குச் செய்வதற்கு ஏதுமில்லை. ஒரேயொரு மண் அடுப்பும் இரண்டு பாத்திரங்களும் மட்டுமே இருந்தன. படுக்கைகூட மண் தரையில்தான். இதை மண் தரை என்று கூடச் சொல்ல முடியாது; மண் தரை என்றால்கூட மொழுகி ஓரளவுக்கு வசதியாக இருக்கும். இது எப்போதோ சுண்ணாம்பு போட்டத் தரை. அது பெயர்ந்து குண்டும் குழியுமாக இருந்தது.

திருமணமாகிச் சில நாட்கள் இருவருக்குள்ளும் பேச்சு வார்த்தை ஏதுமில்லை. சில நாட்கள் கழித்து, நாளொன்றுக்கு ஆறு கேள்விகள் இரண்டு பதில்கள் என்ற ரீதியில் உரையாடல் நடந்து குடும்பம் சுமுகமாக உருள ஆரம்பித்தது.

கிடைக்கும் அரிசியைப் பொங்கி தண்ணீர் ஊற்றித் திங்க வேண்டும். வேப்ப மரப் பட்டையை எல்லாம் தொட்டுக்கொண்டு அந்த சோற்றைத்

தின்றிருக்கிறாள் குருவம்மா. சில சமயங்களில், சுப்பையாவே ஆசையாகப் புளியங்காய் கொண்டு வந்து தருவார் தொட்டுக்கொள்ள.

கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிந்த குருவம்மா, சுப்பையாவுடன் வேலைக்குச் செல்ல ஆரம்பித்தாள்.

சுப்பையா தொடுவதற்கு முன்பே வேலை செய்யுமிடத்தில் குருவம்மாவுக்குச் சீண்டல்கள் ஆரம்பித்தன. அதையெல்லாம் யாரிடம் சொல்வது என்றுகூட குருவம்மாவுக்குத் தெரியாது.

இருவருக்கும் நடுவில் ஓரளவு பேச்சு வார்த்தை சரளமானவுடன், அதே குண்டும் குழியுமான தரையில் வைத்துக் குருவம்மாவைப் புணர்ந்தார் சுப்பையா .

வேலைக்குச் சென்ற வீட்டில் இருக்கும் பெரிய மனிதர் குருவம்மாவுடன் தவறாக நடக்க முயற்சித்ததை சுப்பையாவிடம் சொன்னாள் குருவம்மா. சுப்பையா அதற்கு பதிலேதும் சொல்லவில்லை. எந்த முகவெளிப்பாடும் வெளிப்படவில்லை. சில நாட்கள் கழித்து சுப்பைய்யா அந்த மனிதர் ஏதோ சொல்வதைப் பவ்யமாக கேட்டுக்கொண்டிருந்ததை குருவம்மா பார்த்தாள்.

குண்டும் குழியுமான தரையில் படுத்து இனவிருத்தி செய்தால் குத்துகிறது என எதிர்ப்பு தெரிவிக்கும் விதமாக திரும்பிப் படுத்துக்கொள்ள ஆரம்பித்தாள் குருவம்மா. தோட்டத்தில் கிடைக்கும் ஆடாதோடை இலைகளைப் பறித்து வந்து போட்டு அதன் மேல் துண்டைப் போட்டு முதல் குழந்தையை ஏற்பாடு செய்தார் சுப்பையா.

குருவம்மா ஏழு மாதம் கர்ப்பமாக இருந்தபோது அந்த அடாசு ஓட்டை வீட்டுக்குச் சுப்பையாவின் உறவினர் விருந்தாளியாக வந்தார். மூவரும் ஒரே இடத்தில் தூர தூரமாகப் படுத்துத் தூங்கினார்கள். சுப்பையா தூங்கிவிட, அந்த உறவினர் கர்ப்பிணி குருவம்மாவின் கால்களை முதலில் நோண்ட ஆரம்பித்தார்.

குருவம்மா தள்ளிப்படுக்க, கைகளை மேலே தூக்கிப் போட்டார். இன்னும் தள்ளி சுவற்றுடன் ஒட்டிப்படுக்க, கட்டிப்பிடித்தார் அந்த உறவினர். இதற்கே முதலில் அந்த உறவினர் சுப்பையாவைத் தாண்டிதான் படுத்து இருந்தார்.

சுப்பையா இருக்கும்போதே தைரியமாக சுப்பையாவைத் தாண்டி வந்து படுத்துக் கட்டிப்பிடித்தார்.

இரவு இந்த தொந்தரவு தொடர, எழுந்து அமர்ந்து விட்டாள் குருவம்மா. அதன் பிறகு அந்த உறவினர் படுத்து தூங்கி விட்டார்.

இந்த விஷயத்தை விடிந்ததுமே சுப்பையாவிடம் சொன்னார் குருவம்மா. எங்கோ புளிய மரக்கிளையை பார்த்துக்கொண்டிருந்த சுப்பையா அந்த உறவினருக்கு பூரி செட் வாங்கிக்கொடுத்து அனுப்பி வைத்தார்.

தானாகவே பிள்ளை பெற்று வளர்த்தாள் குருவம்மா. முதல் குழந்தை ஆண்; இரண்டாவது குழந்தை பெண். குழந்தைகள் வளர்ந்து பள்ளி செல்ல ஆரம்பிக்கும் காலத்தில், ஊரில் பஞ்சம் வாட்டி எடுத்தது. சுப்பையாவுக்கு வேலையே கிடைப்பதில்லை.

குருவம்மாவுக்கும் எந்த வேலையும் கிடைக்கவில்லை. வேலை கேட்டுப் போன இடத்தில் அந்த வீட்டுக்காரர் குருவம்மா மீது கை வைக்க, பாக்கு இடிப்பானை எடுத்து ஒரு போடு போட்டு ஓடி வந்து விட்டாள்.

சுப்பையா குழந்தைகளை வெவ்வேறு வீட்டில் வேலைக்கு வைத்து விட்டு ஊர் ஊராகச் செல்ல முடிவெடுத்தார். குருவம்மாவும் அவருடன் கிளம்பினாள். குழந்தைகள் அந்த வீடுகளில் வேலை செய்து அதற்குப் பதிலாகச் சாப்பிட்டுக்கொள்ளலாம். பள்ளிக்கும் செல்லலாம் என்பது ஏற்பாடு.

குழந்தைகளைப் பிரிந்த குருவம்மா, கணக்கே இல்லாமல் சுப்பையாவுடன் ஊர் சுற்றிக்கொண்டு இருந்தாள். எந்த கோவிலில் அன்னதானம் அல்லது பிரசாதம் தருகிறார்களோ அங்கேதான் உணவு. கோவில் இல்லையெனில் மடம்; அல்லது ஏதேனும் திருவிழா.

மண்டபம், கோவில், திறந்தவெளி என படுக்கை; ஒரு கட்டத்தில், மாட்டைக் குத்தும் தார்க்குச்சி போன்ற ஒன்றை குருவம்மா பக்கத்தில் வைத்துக்கொண்டு தூங்க ஆரம்பித்தாள். யாரேனும், தூங்கும்போது கையை விட்டு துழாவினால் அதால் ஒரு குத்து. பிரம்பு, பிரம்பின் நுனியில் ஒரு கூர்மையான ஆணி; இதுதான் குருவம்மா வைத்திருந்தது.

கிட்டத்தட்ட ஏழெட்டு வருடங்கள் இப்படி சுற்றி மீண்டும் ஊருக்கு வந்தார்கள். குழந்தைகள் கடமைக்குப் பேசின. அம்மாவிடம் மட்டும் ஓரளவு ஒட்டிக்கொண்டன. மூத்தவன் பெரிய பள்ளிக்கூடம் போய்க்கொண்டு இருந்தான். சின்னப்பெண் தாவணி போட்டிருந்தாள். அவளும் நன்கு படிப்பதாகத் தெரிந்து குருவம்மா சந்தோஷப்பட்டாள்.

ஏனென்றே தெரியாமல் சில நாட்களில் சுப்பையா தலைமறைவானார். ஊரை விட்டு ஓடிப்போனவர் அதன்பின்பு வரவே இல்லை.

சின்னப்பெண் வேலை செய்து கொண்டு படிக்கும் வீட்டின் ஐயா, குருவம்மாவைக் கட்டிப்பிடித்து நெல் மூட்டை வைத்திருக்கும் அறைக்கு தூக்கிச் சென்றார். திமிறிக்கொண்டு ஓடி வந்து விட்டாள் குருவம்மா .

குருவம்மா வீட்டுக்கே வந்து பதமாக பேசிச் சரிகட்டப் பார்த்தார் அந்த ஐயா. அமைதியாக இருந்தாள் குருவம்மா.

மறுநாள் குருவம்மா அந்த ஊரில் இல்லை. சொல்லாமல் கொள்ளாமல் ஊரை விட்டு ஓடி விட்டாள்.

ஓடுவதற்கு முன், திரௌபதி அம்மன் கோவிலில், அம்மனிடம் பேசி விட்டுத்தான் ஓடினாள்.

“நான் இங்க இருந்தா, அந்தாளு என்னை பொண்டாள நினைப்பான். நான் மறுத்தா, என் மேல உள்ள கோவத்துல என் பொண்ணைத் திட்டுவான், அது படிப்பு கெட்டுடும். நான் போறேன் ஆத்தா, என் புள்ளைங்களுக்கு ஒரு நல்ல வழி காட்டு, நான் போறேன் என்னைச் சீக்கிரம் வாரிக்கோ” — இதுதான் குருவம்மா அம்மனிடம் பேசியது.

குருவம்மாவின் பையனும் பொண்ணும் படிப்பு நன்றாக வந்ததால், நன்கு படித்து, அந்த ஊரின் பலருடைய உதவியால் நல்ல வேலைக்கும் சென்றார்கள்.

குருவம்மாவின் பெண் வசதியானதும், அதே வசதியுள்ள ஒருவரைத் திருமணம் செய்து கொண்டு குழந்தை பாக்கியம் இல்லாததால் மல்லியின் பையனும் உத்திரத்தின் பேரனுமாகிய அமிர்த கடேஸ்வரனைத் தத்தெடுத்துக்கொண்டாள்.

இதுவரை சின்னப் பெண் என்றே குறிப்பிடப்பட்டு வந்த குருவம்மாவின் மகளின் பெயர் சின்னப்பொண்ணுதான்.

# சின்னப்பொண்ணு

சின்னப்பொண்ணு அமிர்த கடேஸ்வரனைத் தத்து எடுத்ததுமே இருக்கும் சொத்துக்களை அவன் பேருக்கு உயில் எழுதி வைத்து விட்டாள். அரசு வேலை பெற்ற சின்னப்பொண்ணு, உடன் வேலை செய்யும் ஒருவரையே நிச்சயிக்கப்பட்ட திருமணம் செய்து கொண்டாள். குருவம்மா முதன்முறை ஊரை விட்டு போனதோ இரண்டாம் முறை ஓடிப்போனதோ சின்னப்பொண்ணுவிற்கு எந்த பாதிப்பையும் ஏற்படுத்தவில்லை.

குருவம்மாவிடம் தவறாக நடந்து கொண்ட அந்த வீட்டுக்கார ஐயா சின்னப்பொண்ணிடம் எப்போதும் சரியாகவே நடந்து கொண்டார். அவரையும் அந்தக் குடும்பத்தையும் திருமணத்திற்கு அழைத்து இருந்தாள் சின்னப்பொண்ணு.

சின்னப்பொண்ணுவின் கணவர் மிகவும் சாதுவானவர். சின்னப் பொண்ணு என்ன சொன்னாலும் செய்து கொடுப்பார்; ஒரு முறைகூட சுடுசொல் சொன்னது இல்லை.

சின்னப்பொண்ணு கொஞ்சம் செலவாளி. உடை, நகைகள் விஷயத்தில் கைகள் நீளம். எங்கே போனாலும் குடை எடுத்துக்கொண்டுதான் போவாள் சின்னப்பொண்ணு.

திருமணமான பின்பு சின்னப்பொண்ணுவை எத்தனையோ பேர் ஆசை காட்டி அழைத்து இருக்கிறார்கள். இன்னும் கேட்டால், ஆசை காட்டி அழைக்கும்படிக்கு சின்னப்பொண்ணு நடந்து கொள்வாள்; ஆனால் மசிந்ததில்லை. மற்றவர்கள் அழைப்பது, இவள் மீது ஒரு கிறக்கத்துடன் இருப்பது, சின்னப்பொண்ணுவிற்குப் பிடிக்கும்.

கணவனை ‘அது, இது' என்று செல்லமாக அழைப்பாள்.

அது படுக்கையறையில் பெரிய ஜித்து இல்லையெனினும் அடிமை போல நடந்து கொள்வது சின்னப்பொண்ணுக்குப் பிடிக்கும். உதாரணமாக, அது முக்கிய வேலையை மும்முரமாகச் செய்து கொண்டிருக்கும்போது ‘‘கொஞ்சம் தண்ணி எடுத்துட்டு வாயேன்" என்பாள்.

அது முன்னும் பின்னுமான முக்கிய வேலையை நிறுத்தி விட்டுத் தண்ணீர் எடுக்க முன்னே செல்வதா பின்னே செல்வதா என குழம்பிப் போய் நிற்கும்.

அது தண்ணீர் எடுத்து வந்து தந்ததும் அதை குடித்துவிட்டு, ‘‘ம்... ம்’’ என்பாள் சின்னப்பொண்ணு.

அது தலையைத் தொங்கப்போட்டுக்கொண்டு நிற்கும்.

‘‘என்னா தொங்கப்போட்டுட்டு நிக்கிற..?’’ என்பாள். நிமிர்ந்து பார்க்கும்; தலை மட்டும்தான்.

இங்கே படுக்கை அறையில் அது இது என ‘அதுவைப்' போட்டு இப்படிப் படுத்தினாலும், பொது வெளியில் அது ‘அது’ அல்ல. அவர்தான். பெரிய மதிப்புதான். வேலை இடத்திலும் சரி, சமூகத்திலும் சரி; அதுக்கு ஒரு இது இருக்கத்தான் செய்தது.

தொங்கப்போட்டுக்கொண்டு நிற்கும் அதை, ‘‘சரி இங்க வந்து ஒக்காரு’’ என பாசமுடன் அழைப்பாள் சின்னப்பொண்ணு.

‘‘எனக்குக் கால் அமுக்கி விடு’’ என்பாள். அப்போது தன் பாவாடையை முழுக்க மேலேற்றிக்கொண்டு படுத்து இருப்பாள்.

அது கால் அமுக்கிவிட ஆரம்பித்ததும், ‘‘அமுக்கு, இன்னும் கொஞ்சம் மேல’’ எனச் சொல்லுவாள்.

அதற்கு இப்போது ரத்தம் சூடேறி ஆட்டத்துக்குத் தயராக இருக்கும். அமுக்குவதை விட்டுவிட்டு ஆட்டத்துக்கு இறங்குகையில், ‘‘முதுகைக் கொஞ்சம் அமுக்கி விடு’’ எனத் திரும்பிப் படுத்துக்கொள்வாள் சின்னப்பொண்ணு. குப்புறப்படுத்து அவள் சிரித்தாலும் பின்னந்தலையில் அவள் சிரிப்பு தெரியும். இது, முதுகை அமுக்கி விட்டுக்கொண்டு இருக்கும்.

ஏதோ நினைவில் முதுகை மும்முரமாக அமுக்கிக்கொண்டு இருக்கையில் மல்லாக்கப் படுத்துக்கொண்டு, ‘‘ம்ம்... வா’’ என்பாள். 'எங்கு வருவது, அரைத்

தூக்கத்துக்குப் போயிருக்கும் அனைத்தும்’.

அது விழிக்கும்; இந்தச் சமயத்தில் பாசம் பொங்க, போனால் போகிறதென்று இழுத்து ஏந்திக்கொள்வாள்; உச்சி முகர்வாள்; அதன் மார்பில் முகம் புதைத்துத் துழாவி மேலே போட்டுக்கொள்வாள். இப்போது உச்சத்துக்கு செல்லும் நேரத்தில், ‘‘கொஞ்சம் குடிக்க பால் எடுத்துட்டு வறியா..?’’ என்று கேட்கையில், அது நிறுத்தி விட்டு எழப்போகும். அந்நேரத்தில் அதன் முதுகில் அடித்து, ‘‘ச்சீ... செய்யி... எரும... என் சாமிடா நீயீ’’ எனக் கூறி இறுக்கி அணைத்துக்கொள்வாள்.

சில சமயங்களில் அது, கழுத்தில் முகர்ந்து விட்டு அவளின் ரவிக்கையைக் கழட்டாமல் மேல் தட்டி நிற்கும் முலை வளைவுகளை முத்தமென ஒத்தி எடுக்கும்.

அப்போது அதை விலக்கி விட்டு எழுந்து அமர்ந்து கொள்ளும் சின்னப்பொண்ணு, முந்தானையை மடியில் போட்டுக்கொண்டு ரவிக்கையுடன் அமர்ந்து கொண்டு அதை நோக்குவாள். அது செய்வதறியாமல் திகைத்து உட்காருகையில், ‘‘என்னா... பால் குடிக்கிறியா..?" என்பாள்.

அது லேசாகச் சிரிக்கும். ‘‘கழட்டிக்கோ’’ என்பாள்.

மெல்லிய விளக்கொளியில் அது ஒவ்வொரு பொத்தானாக ரவிக்கையைக் கழட்டுகையில் தலை மயிரைக் களைந்து கொண்டை போட்டுக்கொண்டு இருப்பாள். அப்போது சின்னப்பொண்ணு அமர்ந்திருப்பது ஒரு மகாராணி அமர்ந்திருப்பது போலத் தோன்றும்.

எந்தக் கூச்சமும் இல்லாமல் முலைகளை காட்டிக்கொண்டு சின்னப்பொண்ணு அமர்ந்திருக்க, அது நேராகக் கட்டிக்கொள்ளும்.

‘‘தோ, கட்டிக்காத... அதான் எப்பவும் பண்றியே, பால் குடி’’ என்பாள் சின்னப்பொண்ணு .

அது பால் குடிக்கையில், உண்மையிலேயே அதைக் குழந்தை போல நினைப்பாள். அது பால் குடித்துக்கொண்டிருக்கும் போதே

‘‘பால் வருதா’’ என்பாள்.

அது தலையைத் தூக்கி இடதும் வலமும் ஆட்டும்.

‘‘அப்புறம் என்னா பண்ணிட்டு இருக்க..?’’ என்பாள்.

அது சிரித்துக்கொண்டே விழிக்கும்.

‘‘சரி, வலிக்குது; ‘அங்க’ மசாஜ் பண்ணி விடு’’ என்பாள்.

அது தயங்கும்.

அதன் கையை எடுத்து வைத்துக்கொள்வாள்.

அது, மலர்ந்த தாமரைப் பூவை மீண்டும் மொட்டாக்குவதுபோல மசாஜ் செய்யும்.

ஒருமுறை கூட அதை வெட்கப்பட விடாமல், சிரிக்க விடாமல், விழிக்க விடாமல் கூடல் நடந்ததே இல்லை.

சின்னப்பொண்ணுவிற்கு குழந்தை இல்லை என்ற கவலையே இல்லை. அமிர்த கடேஸ்வரனை தத்தெடுத்துத் தன் குழந்தை போலவே எந்த வித்தியாசமும் இல்லாமல் வளர்த்து வந்தாள். மல்லி பக்கத்து ஊர் என்றாலும் சீரான இடைவெளியில் அமிர்தை மல்லி வீட்டுக்கு அனுப்பி வைப்பாள். அமிர்துக்கு அங்கே இருக்கப் பிடிக்காது. சீக்கிரமே இங்கு திரும்பி வந்து விடுவான்.

விடுமுறைக்கு உத்திரம் ஊருக்கும் போயிருக்கிறான். அன்னத்தின் ஊருக்கும் போயிருக்கிறான். பாலுவுடன் விளையாடி இருக்கிறான். ஜா◌ஃபரை அமிர்துக்கு பிடிக்காது. ஒருமுறை ஜா◌ஃபர் அன்னத்தின் முலைகளைச் சப்பிக்கொண்டு இருப்பதைப் பார்த்து விட்டான். அதை பாலுவிடம் சொல்லவில்லை.

ஆனால் ஒருமுறை, ‘‘என்னிய சில பேர் தேவடியாப் பையன்னு சொல்றாங்கடா பாலு’’ என்றான்.

பாலு, ‘‘என்னையும் அப்படி சொல்றானுங்கடா தேவடியாப்பசங்க" என்று பதில் சொன்னான் பாலு.

இருவரும் மாரியம்மன் கோவிலுக்குச் சென்று, ‘‘எங்களை தேவடியாப்பசங்கன்னு சொல்ற எல்லாரோட அம்மாவும் தேவடியா ஆயிடணும்’’ என்று வேண்டிக்கொண்டார்கள்.

இந்த விஷயத்தை அமிர்து எப்போதும் அம்மாவிடம் சொன்னதேயில்லை. அவனுக்கு அம்மா என்றால் சின்னப்பொண்ணுதான். மல்லி அவனுக்கு

‘ஆத்தா’.

சின்னப்பொண்ணுவுடன் வேலை செய்யும் இன்னொருத்தி ஒருமுறை சின்னப்பொண்ணு மேல் உயரதிகாரி ஆசையாக இருப்பதாகக் கொடி காட்டினாள். ஆசைக்கு இணங்கினால் நிறைய சௌகர்யங்கள் கிடைக்கும் என்றும், ஆளும் பேண்ட் சட்டை எல்லாம் போட்டு டிப் டாப்பாகத்தான் இருக்கிறார் என்றும் சொன்னாள்.

அப்போது சின்னப்பொண்ணு, “என்னைய நிறைய பேர் சுத்தறாங்கன்னு எனக்கே தெரியும். சுத்தட்டும்னு விட்டுடுவேன். அன்னிக்கி விழாவுக்கு வந்த எம்எல்ஏ—வே வழிஞ்சிட்டு வார்த்தை விட்டுட்டுதான் போனாரு. ஆனா நான் யார் கிட்டயும் என்னை விட்டுக் குடுக்க மாட்டேன். அவன் மன்மதனா இருந்தாலும் சரி, மவராசனா இருந்தாலும் சரி. இதை நான் என் புருஷனுக்காக செய்யலை. எனக்காக செஞ்சிக்கிறேன். எனக்கு இதான் புடிச்சி இருக்கு. என் வீட்ல எப்பவும் நான்தான் ராணி. இங்க மத்த எவன்கூட படுத்தாலும் மொத நாள் மட்டும்தான் ராணி; அடுத்த நாளே தேவடியா..! அதான் ஊர் முழுக்கத் தேவடியாளா சுத்திட்டு இருக்காளுங்களே, பத்தாதா..? மொத்த ஊரையும் தேவடியாளா ஆக்கிட்டுத்தான் ஓய்வானுங்களா..? அவனுங்க பொண்டாட்டிங்க தேவடியா ஆவகூட தகுதி இல்லாதவளுங்க. அவளுங்கள்ள ஒருத்தி முந்தி விரிக்கவே வரான்னு வச்சிக்கோயேன், எவனாவது திரும்பி பாப்பான்னு நினைக்கிறே..?” இப்படிக் கேட்டு, கேட்டுக்கொண்டிருந்தவளின் முகம் மாறியதைக் கண்டு காளி போலச் சிரித்தாள் சின்னப்பொண்ணு.

# நூருன்னிஷா

ப ள்ளிப்படிப்பு, பணக்காரப் பெரிய குடும்பம் என்று சந்தோஷமாகக் கழிந்த நூருன்னிஷா, ஜாஃபருக்கு வாக்கப்பட்டு வந்தும் பெரிய வித்தியாசம் தெரியவில்லை. அதே பரந்து விரிந்த வீடு, கூட்டுக்குடும்பம், வேலையாட்கள் என இயல்பாக ஜாஃபரின் குடும்பத்தில் கலந்தாள்.

அப்பா, அண்ணன்கள் எல்லாம் பணம் மட்டுமன்றி அவள் ஊரில் முக்கியஸ்தர்களாக இருந்தது போலவே ஜாஃபரும் இந்த ஊரில் முக்கியஸ்தராக இருந்ததும் அவளுக்கு சந்தோஷமாக இருந்தது. என்ன ஒரே வித்தியாசம் என்றால், அண்ணன்கள் புல்லட் வைத்திருந்தார்கள்; ஜாஃபர் ஏனோ டிவிஎஸ்—50 மட்டும்தான். வசதி இருந்தும் ஜாஃபர் புல்லட் வாங்காதது மட்டும் ஏன் என்று தெரியவில்லை நூருன்னிஷாவுக்கு.

ஜாஃபருக்கு பொம்பளை ஷோக்கு உண்டு என்று திருமணமாகி வந்த சில நாட்களிலேயே வேலைக்காரி பெருமையாகச் சொல்வது போலச் சொல்லிவிட்டாள். நூருன்னிஷா அம்மா வீட்டுக்கு சென்றபோது இதைப்பற்றி அம்மாவிடம் சொன்னபோது, ‘‘எவனுக்குத்தான் பொம்பளை ஷோக்கு இல்ல..? ஒங்கப்பனுக்கு இல்லாததா..? எவளையும் கல்யாணம் கட்டி வீட்டுக்கு கூட்டி வந்துடக்கூடாதுன்னு சொல்லிட்டேன். எங்க அண்ணனுங்க ஊர்ல பெரிய ஆளுங்க. அவனுங்க தயவும் இவருக்கு வேணும். அதனால, அப்பப்போ எவளையாச்சும் தொடறதோட நிறுத்திகிட்டாரு. உனக்கும் அண்ணனுங்க இருக்கானுங்க. அடிக்கடி உன் வீட்டுக்கு வந்துட்டுப் போகச் சொல்றேன். நீயும் தெரிஞ்சும் தெரியாத மாதிரி காட்டிகிட்டு, எவளையும் வீட்டுப் படி ஏத்திக் கூட்டிட்டு வந்துடாத மாதிரி ஜாடை மாடையா சொல்லி வை’’ என்று அறிவுரை வழங்கினார்.

உடலுறவின்போது ஜாஃபர் வாயில் இருந்து வரும் சார்மினார் வாடை நூருன்னிஷாவுக்கு ஒமட்டும். நூருன்னிஷாவுக்குப் புத்தகம் படிக்கும் பழக்கம் இருந்ததால் நூலகத்துக்குச் சென்று புத்தகம் வாங்கி வர ஒரு பையனை

ஏற்பாடு செய்தார் ஜாஃபர். அவன் சொந்தக்காரப் பையன்தான்; அவனுடைய அப்பா, ஜாஃபர் வீட்டில் வேலை செய்பவர்; வீட்டில் என்றால் வெறும் வீட்டு வேலை அல்ல; வீடு, வயல், தோப்பு, கட்சி என அனைத்து வேலைகளும்தான்.

வீட்டில் சில வேலைக்காரிகள் இருந்தாலும் ஹஸீனா மீது ஜாஃபருக்கு ஒரு இது இருந்ததை நூருன்னிஷா கவனித்து இருந்தாள். அதன் காரணமாகவே ஹஸீனாவை எப்போதும் திட்டிக்கொண்டு இருப்பாள்.

ஹஸீனாவுக்கு ஒரு பெண் குழந்தை. அதைப் பார்த்தால் நூருன்னிஷாவுக்கு ஜாஃபர் முக ஜாடை இருப்பது போலத் தோன்றும். இதை தன் அம்மாவிடம் ஒருமுறை சொன்னபோது அவள் சிரித்துக்கொண்டே, ‘‘அவன் தங்கச்சி கூடத்தான் அவன் ஜாடையில இருக்கு, இப்பிடி யோசிச்சா நீ உன் மாமனாரைத்தான் சந்தேகப் படணும்’’ என்று சொல்லிவிட்டு ஜோலியைப் பார்க்கப்போய் விட்டாள்.

நூருன்னிஷா உறுதியாக நம்பினாள். ஹஸீனாவின் பெண் மகவு ஜாஃபருக்கு பிறந்ததுதான் என்று. இந்த பெண் மகவான நதீராவைத்தான் அன்னத்தின் மகன் பாலுவை மதம் மாற்றிக் கட்டி வைத்தார் ஜாஃபர்.

ஹஸீனா மீதுள்ள வெறுப்பு நூருன்னிஷாவுக்கு நதீரா மீதும் இருந்தது.

நூருன்னிஷா, வீட்டில் இளவரசி போல வளர்ந்தவளாதலால் ஒரு இளவரசனைக் கனவு கண்டிருந்தாள். அவளின் கனவு விரிந்து கொண்டே போகும். அதை விரித்து எடுத்துச் செல்வதும் அவள்தான். நீண்ட நாட்கள் எடுத்து வரையும் ஓவியம் போல நூருன்னிஷா தன் இளவரசனையும் தன் காதல் வாழ்வையும் நீண்ட நாட்கள் நீண்ட கனவின் மூலம் உருவாக்கி வைத்திருந்தாள்.

ஜாஃபர் உருவத்தில் அவளுடைய இளவரசன் உருவத்துக்கு ஒத்து வராவிட்டாலும், கனவு அவளுடைய கனவு என்பதால், அதைச் சிறிது மாற்றி அமைத்துக்கொண்டு ஜாஃபரைப் பொருத்துவது அவளுக்குச் சிரமமாக இல்லை. ஏனெனில் ஜாஃபர் உருவத்தில், முக அமைப்பில் கொஞ்சமாகச் சரி செய்தால் ஒரு இளவரசன் ஆகக்கூடிய சாத்தியக்கூறில்தான் இருந்தார்.

ஆனால் தன் இளவரசன் எப்படி எல்லாம் நடந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தாளோ அதில் ஒரு சதவீதம் கூட நிறைவேறவில்லை. அதை அவளால் தன் கனவில் சென்று மாற்றியமைக்க முடியவில்லை. அதையும் அவள் வலுக்கட்டாயமாக மாற்றி அமைத்தால் கனவு தொலைந்து அவள் அப்போது வாழ்ந்து கொண்டிருந்த நனவு வாழ்க்கையில் வந்து விழவேண்டியிருக்கும். அது அவளுக்குப் பிடிக்காததால் அதைச் செய்யாமல், நனவில் கொஞ்சமும் கனவில் கொஞ்சமும் வாழ்ந்து வந்தாள்.

ஜாஃபரின் பெண்கள் தொடர்பு மட்டும் எதன் மூலமாவது தொடர்ந்து காதுக்கு வந்துகொண்டேயிருந்தது. அதிலும் அவர் அடிமட்ட விபச்சாரிகளிடம் எல்லாம் செல்கிறார் என்று தெரிந்த போது மனம் நொறுங்கிப்போனாள். அந்த செய்தி வந்தது முதல் ஜாஃபரைப் படுக்கையில் தவிர்த்தாள். ஆனால், அதற்கு முன்னமே ஸப்ரின் பிறந்து பள்ளி செல்ல ஆரம்பித்து விட்டிருந்தாள்.

நூலகத்தில் புத்தகம் எடுத்துக்கொண்டு வந்து கொடுக்கும் பையன் ஷாமிக்குடன் மட்டும்தான் மனம் விட்டு பேசுவாள்.

‘‘ஷாமிக், நான் அழகாயில்லையா..?’’

‘‘....’’

‘‘ஷாமிக், என் முகம் சொரூபமாகயில்லையா..?’’

‘‘...’’

‘‘ஷாமிக், மற்றவர்கள் கனவு காணும் மனைவிபோல நான் இல்லையா..?’’

‘‘ஷாமிக், என் கணவருக்கு என்னுடன் பேசுவதற்கு ஏன் ஏதுமில்லை..?’’

‘‘....’’

‘‘ஷாமிக், என் கணவர், என் கால் விரல்களை நெட்டி எடுக்க வேண்டும் என்றெல்லாம் கனவு கண்டேன் ஷாமிக்..!’’

‘‘...’’

‘‘எல்லாப் பெண்களும் நானும் ஒன்றுதானா இவருக்கு ஷாமிக்..?’’

‘‘...’’

‘‘நான் கொஞ்சுவதற்கு பிறந்தவள் இல்லையா ஷாமிக்..?’’

“...”

“என் மனதை என்னால் கொல்ல முடியவில்லை ஷாமிக்..!”

“....”

“என் கனவு இன்னும் உயிரோடு நீண்டுகொண்டே போகிறது ஷாமிக்..!”

“....”

ஷாமிக் எதற்கும் பதில் சொன்னதில்லை. தேங்காய்ப் பால் ஊற்றிய கண்களைப்போல, வெளுப்பாகப் பார்த்துக்கொண்டு அமர்ந்திருப்பான்.

ஸப்ரின் பிறந்து ஏழெட்டு ஆண்டுகள் கழித்து வனீஸா பிறந்தாள். வனீஸா உண்டானது தெரிந்து ஜாஃபர் நூருன்னிஷாவைப் போட்டு அடித்தார். அடிகளைப் பொறுமையாக வாங்கிக்கொண்ட நூருன்னிஷா, அமைதியாக எழுந்து நடந்து தன் அறைக்குப் போனாள். அதன்பிறகு இருவரும் பேசிக்கொள்வதில்லை. எதேனும் பேச வேண்டும் எனில் ஸப்ரின் மூலம்தான்.

ஷாமிக் கடைசி வரை யாரையும் திருமணம் செய்து கொள்ள வில்லை. ஆனால், வனீஸாவுக்கு ஷாமிக் அப்பா இல்லை..!

# சுமதி — நதீரா

உத்திரம் செத்த அன்று அமிர்துவை சின்னப்பொண்ணு அழைத்துச் சென்றிருந்தாள். அமிர்துவும் நெய்ப்பந்தம் பிடித்துச் சுடுகாடு சென்று திரும்பி வந்ததும் அன்றே திரும்ப ஊருக்கு அழைத்துச் சென்றுவிட்டாள்.

சுடுகாட்டுக்குப் பொற்செல்வி வீட்டு வழியாகச் சென்ற அமிர்துவுக்கு அப்போது தெரியாது, உள்ளே பொற்செல்வி பிறந்து இருக்கிறாள் என்றோ, அவளை இவன் தீவிரமாகக் காதலிக்கப்போகிறான் என்றோ..!

அமிர்து ஊருக்கு கிளம்பிச் சென்றதும்தான் அன்னம் பாலுவைச் சந்திரா வீட்டுக்கு அனுப்பினாள். சந்திரா வீட்டில் நன்கு உறங்கிக்கொண்டு இருக்கும்போதுதான், யாரோ கட்டியணைப்பது போல அரைத்தூக்கத்தில் தெரிந்தது பாலுவுக்கு. ஆனாலும் விழிப்பு வரவில்லை.

சுமதி ரவிக்கையை முழுவதுமாக அவிழ்த்து விட்டு, தன் இரு முலைகளையும் பாலுவின் முகத்தில் வைத்துத் தேய்த்துக்கொண்டு இருந்தாள். பின் அவனது டிராயருக்குள் கையை விட்டு அவனது குஞ்சாமணியை மென்மையாக வருடியபடி இருந்தாள்.

மூச்சு முட்டிய பாலுவுக்கு. தூக்கம் கலையாமல் சுமதியைக் கட்டிக் கொண்டான். பாலு, சுமதியைச் சித்தி என்றுதான் அழைப்பான்.

இது நடந்து சில வருடங்களுக்குப் பிறகு, அன்னத்தின் வீட்டுக்குச் சுமதி வந்தபோது பாலு விளையாட்டாகச் சுமதியை அங்கே இங்கே எனத்தொட, சுமதி கண்டு கொள்ளவில்லை. பாலுவின் விளையாட்டு கொஞ்சம் அதிகமானதும், ‘‘சும்மா இருக்க மாட்டியாடா’’ என்று அதட்டினாள்.

அன்று இரவு ஜாஃபர் வரவில்லை.

சுமதி, அன்னம், பாலு மூவரும் ஹாலிலேயே படுத்துக்கொண்டனர். பாலு முயற்சி எடுத்து சுமதி பக்கத்தில் படுத்துக்கொண்டான்.

இரவில் சுமதி மேல் காலைத் தூக்கிப் போட்டான். பிறகு, சுமதியின் வயிற்றில் கையைப் போட்டான். சுமதி ஏதும் தெரியாத மாதிரி கண்ணை மூடியபடி இருந்தாள்.

சுமதியின் கன்னத்தில் முத்தமிட்டான். மாராப்பை விலக்கி ரவிக்கையினூடாக கையை நுழைத்து முலைகளைப் பற்றினான்.

சுமதி எதற்கும் அசைந்து கொடுக்கவில்லை.

சுமதியின் பாவாடையை, புடவையோடு சேர்த்து முட்டிக்கால் வரைத் தூக்கினான். சுமதி சும்மா இருக்கவே, இன்னும் கொஞ்சம் மேலே யோனி தெரியும் அளவுக்குத் தூக்கி விட்டான். மெல்லிய இருளொளியில் முழுக்க தெரியாவிட்டாலும் அது யோனி என்பதில் எந்த சந்தேகமும் வராத அளவுக்கு இருந்தது.

பாலு, சுமதியைப் பார்த்துக்கொண்டே சுய இன்பம் அனுபவித்தான். அவன் சுய இன்பம் அனுபவிப்பது சுமதிக்குத் தெரிந்தது. சுமதி சும்மா இருந்தாள்; பாலு விந்தை எடுத்து சுமதியின் பாவாடையில் துடைத்தான்.

அன்னம் புரண்டு படுப்பது போலத் திரும்பினாள். சுமதி பதட்டத்துடன் தன்னுடைய பாவாடையைக் கீழே இழுத்து விட்டுக்கொண்டாள்.

சுமதி, உத்திரத்தின் சாவின்போது பாலுவின் முகத்தில் மார்பகங்களைப் புதைக்கும்போதே அவளுக்குக் கல்யாணம் ஆகியிருந்தது.

உத்திரத்தின் சாவில் இருந்து திரும்பி வந்து பல நாட்கள் கழித்து, இரவில் அன்னத்தைக் கட்டிக்கொண்டான் பாலு. அன்னமும் ஆதரவாக அணைத்துக்கொண்டாள்.

ஜாஃபர் வரும் நாளெல்லாம் இரவு விழித்துத் தூக்க கலக்கத்தில் குரலெழுப்புவான் பாலு. அன்னமும், ஜாஃபர் பக்கத்தில் இருந்து எழுந்துபோய் பாலுவின் பக்கத்தில் படுத்துக்கொள்வாள். கட்டிக்கொண்டு தூங்குவான் பாலு.

ஜாஃபர் வராத நாளொன்றின் இரவில் கட்டிக்கொண்டிருந்த பாலு, இறுக்கி அணைத்தது போலிருந்தது அன்னத்துக்கு. செய்வதறியாமல் திகைத்த அன்னம், அவன் முதுகில் தட்டிக்கொடுத்தாள். அன்னத்தின் மார்பில் முகம்

புதைத்தான் பாலு. அப்போது ஏதோ தவறாகப் போகிறதென்று புரிந்துகொண்ட அன்னம், எழுந்து விளக்கைப் போட்டுத் தண்ணீர் குடித்தாள்.

இருவருக்கும் இடையில் ஒரு தலையணையைப் போட்டுவிட்டு, ‘‘ஒழுங்கா தூங்குடா கண்ணு, காலைல சுருக்க எழுந்திருக்கணும்" என்று சொல்லிவிட்டு, வீட்டை விட்டு வெளியே வந்து மாரியம்மன் கோவில் மண்டபத்தில் அமர்ந்து கொண்டாள்.

அதன் பிறகு, அதிகாலையில் பாலுவை எழுப்பி விட்டு ஜாஃபரின் வயலுக்கு அனுப்பினாள். ஒரு கூஜாவில் தேநீர் எடுத்துக்கொண்டு நான்கைந்து கிலோ மீட்டர் சைக்கிள் மிதித்துக்கொண்டு போக வேண்டும்.

பள்ளிப்படிப்பு முடித்து இரண்டு மூன்று வருடங்கள் ஊர் சுற்றிக்கொண்டிருந்த பாலு, சில பெண்களிடம் சில்மிஷங்கள் செய்து அறை வாங்கினான். சிலரிடம் முத்தங்களும் பெற்றான்.

அன்னம், ஜாஃபரிடம் தொடர்ந்து கேட்டுக்கொண்டதின் பேரில், அவன் பெயரைத் தலீல் என்று மாற்றி நதீராவைக் கட்டி வைத்தார். ஊரின் முக்கியமானதொரு இடத்தை வளைத்துக் கறிக்கடையும் வைத்துக் கொடுத்தார். நதீரா ஷாமிக்கை காதலித்துக்கொண்டு இருந்தாள்.

# சந்திரா, செந்தாமரை, சௌந்திரம்

ஆறுமுகம், பழநி உள்ளிட்ட வயசாளிக் கூட்டம் வழக்கம்போல அதிகாலை டீக்கடைக்கு வந்தது. டீக்கடை இன்னும் திறக்கவில்லை. இரண்டு கல்பெஞ்சு மற்றும் அதன் கீழே ஆறு குழிகள் இருந்தன. டீக்கடைக்கு மேலே ஒரு பெரிய மரமும், டீக்கடையை ஒட்டி ஒரு பெரிய மைதானமும் இருந்தது. அதை மைதானம் என்று கூட சொல்லமுடியாது. பலவகை செடிகள் முளைத்துக் கிடந்தன. பல வகை குப்பைகளும், சில ஆடு மாடுகளும் படுத்துக் கிடந்தன. டீக்கடையை ஒட்டிதான் பேருந்து நிறுத்தமும் இருந்தது.

முதலில் பால்காரன் வந்தான், பிறகு டீ மாஸ்டர் மணி வந்தார். நெற்றியிலும் உடலிலும் பட்டை போட்டு வந்து இறங்கிய அவர், ‘‘அந்த சூத்துநக்கி இன்னும் வரலியா’’ என்று கிளாஸ் கழுவும் முருகனைத் திட்டியபடியே கடையைத் திறந்தார். அனைவருக்கும் டீ போட்டுக்கொடுத்த வேகத்தில் முருகன் வந்து அறை வாங்கினான். ‘கீச் கீச்' எனக் குருவிகள் கத்தும் சத்தத்தினூடாக சூரியன் உதயமானான்.

1) பழநி, பெரியய்யா வீட்டில் வேலை செய்வதும் அதனால் பெரியய்யா மனைவி லோகேஸ்வரியை வைத்திருப்பதுமாக ஊரில் ஒரு கிசுகிசு. இந்த கிசுகிசு பல வருடங்களாக இருக்கிறது. லோகேஸ்வரி கோவிலுக்குப் போகாத சில நாட்களில் பழநியிடம் தன் கஷ்டங்களைச் சொல்லி அழுவார். அதை வைத்துப் பெரியம்மா பாவம் என்பதாக பழநி பெரியம்மாவுக்கு ஆதரவாக பலரிடமும் பேசுவார். அதை வைத்து இந்த கிசுகிசு உருவானது. மற்றபடி இருவரும் தொட்டுக்கொண்டது கூட இல்லை. ஆனால் ஒருவருக்கு ஒருவரைப் பிடிக்கும்.

2) உத்திரம் இறந்ததும் சந்திரா தன் மகள் சுமதியின் ஊருக்குப் போய் தங்கி, தன் மகளுடன் சிண்டு பிடித்து அடிக்கும் அளவுக்குத் தெருத் தகராறு ஆகி, மீண்டு ஊர் வந்து சேர்ந்து பழநியுடன் சண்டை வளர்த்து, ஒரு பெட்டிக்கடை

மற்றும் மாலை நேரச் சிற்றுண்டிக்கடை வைத்துக்கொண்டாள். அவளும் அவ்வப்போது, ''பெரியம்மா கால்மாட்லயே கெட இங்க வரவே வராத'' என்று திட்டுவதுண்டு.

3) பெரியய்யா சொத்தைப் பிரிக்கும்போது அனைத்து குழந்தைகளுக்கும் சமமாகப் பிரித்தார். குழந்தைகள் வளர்ந்ததால் இனி இங்கே இருப்பது சரியாக இருக்காது என்று செந்தாமரை பெரியய்யாவிடம் எடுத்துச் சொல்லித் தனிக்குடித்தனம் போக அனுமதி வாங்கி விட்டாள். நடு அய்யாவுக்குத் தனியாக ஒரு விவசாய விளைபொருள் கடையும் வாங்கிக்கொண்டாள். அன்று இரவு பெரியய்யாவை கட்டிப்பிடித்துக் கிடந்தாள் செந்தாமரை. இருவரும் இரவு முழுக்கத் தூங்கவில்லை. செந்தாமரை அவர் மார்பைக் கண்ணீரால் நனைத்தபடி இருந்தாள்.

4) பொற்செல்வியின் படிப்புக்காக நகரத்துக்குப் போவதென தீர்மானித்தாள் வேம்பு. மகள் மேல் அதீத பிரியம் வைத்திருந்த சின்னய்யா உடனே அதற்கு ஒத்துக்கொண்டார். ஆனால் மொத்த மாகப் போக வேண்டாம்; நகரில் ஒரு வீடு; இங்கேயும் அவ்வப்போது வந்து போகலாம் என முடிவு செய்து கொண்டார்கள். இந்த வீட்டில் இருந்து ஒன்றையும் எடுக்காமல், நகரத்தில் புத்தம் புதிதாக ஒரு வீடு கட்டி அனைத்தையும் புதிதாக வாங்கினார்கள். பொற்செல்வி பரத நாட்டியம் கற்க ஆரம்பித்தாள்.

5) பெரியய்யாவின் பையன்கள் அங்கேயே இருந்தார்கள். லோகேஸ் வரி யாரிடமும் பேசாமல் சைகையாலேயே பேச ஆரம்பித்தாள்.

6) டீ மாஸ்டர் மனைவி சௌந்திரம் அந்த ஊருக்கு வரும் பேருந்தின் கண்டக்டரை இழுத்துக்கொண்டு ஓடி விட்டாள் என்று செய்தி பரவியது. மாஸ்டருக்கு ஒரு மகன், ஒரு மகள். மாஸ்டர் மணி எந்தச் சிக்கலும் இல்லாமல் கடை திறந்து டீ போட்டார்.

''முண்ட, இங்கயே இருந்து ஒழுத்துக்க வேண்டிதானே..? பொழுது முச்சூடும் நான் கடைலதான கெடக்கேன்..? இங்கயே கெடந்து ஒழுத்துட்டு கெடந்தா எந்த நாயி கேக்கப் போவுது..? ஊரை விட்டு ஓடி தொலைவுலதான் ஒழுக்கணுமா..? தேவடியா எவ்ளோ நாள் இருப்பா..? இங்க வந்துதான ஆகணும்..? வரட்டும், கூதியிலயே டிகாஷனை காச்சி ஊத்தறேன்'' என்றவாறு

சிரித்துக்கொண்டே அனைவருக்கும் டீ கொடுத்தார். குழந்தைகள் பள்ளி முடிந்து வந்து டீக்கடையில் அமர்ந்து படித்துக்கொண்டு இருந்தன.

# தீப்திகா, தீப்தி, தீப்து, தீபு, தீப்...

தீ ப்திகாவை எங்கிருந்து அறிமுகப்படுத்தலாம்..? தீவுகளுக்கு நடுவில் பிகினி உடையில் சார்டர்ட் போட்டை இயக்கிக்கொண்டே, ஆரஞ்சு கலர் காக்டெயிலை சிப்பி விட்டு ‘ஹூஹூ’ எனக் கத்தும்போதா..?

பள்ளிக்கூட யூனிஃபார்மில் ஸ்கர்ட்டுக்கும் சாக்ஸுக்கும் இடையே தெரியும் சின்ன ஏரியாவை கெமிஸ்டிரி வாத்தியார் சைட் அடிக்கையில், மேற்சட்டை பட்டன் ஒன்றை அவிழ்த்துவிட்ட போதா..?

கோவா பப்பில் வெளிநாட்டுக் கருப்பனிடம் குழைந்து நெளிந்து ஒட்டிவெட்டி ஆடிவிட்டு, அவனுக்கு போதையேற்றிக் கழற்றிவிட்டு வந்தவளை, ‘‘ஏண்டி வந்துட்ட..?’’ என்று தோழிகள் கேட்டபோது, ‘‘ஐ ஜஸ்ட் வாண்ட் டு ஃபீல் ஹிஸ் பெனிஸ்’’ என்று சொன்னபோதா..?

தோழிகளோடு தனி வீட்டில் தங்கி இருக்கும்போது இரவு தாமதமாக வந்த தோழியை, ‘‘யேய் நில்லுடீ, என்னா காயடிச்சிட்டு அனுப்பி விட்டானா..?’’ என கேட்கையில்,

‘‘யேய் ச்சீ’’ எனத் தோழி சொல்ல

‘‘அதான் டீ ஷர்ட் கரக்டா அந்த இடத்துல கசங்கி இருக்கே..? இதுக்கெல்லாம் வெள்ளை டீ ஷர்ட் போட்டுட்டு போகக்கூடாதுடீ, ரெண்டு முலையிலயும் அழுக்கா இருக்கு பாரு, அது சரி ஏசி கூட இல்லாத இடத்துல வச்சி மாவு பெசைஞ்சானா..? ஏசி இல்லைன்னா கை வேர்க்கும், அந்த வேர்வை அப்டியே மொலை இருக்கும் இடத்துல அழுக்கா இருக்கு பாரு’’ என்றதும் தோழி குனிந்து பார்க்க, மற்ற பெண்கள் 'ஹோ' வெனச் சிரிக்கத் தோழி உள்ளே ஓடி விட்டாள். தோழியின் நாமகரணம் கன்யா.

தீப்தி சரளமாகக் கெட்டவார்த்தை பேசுவாள். இந்த வீட்டில் இருக்கும் பெண்களின் பாய் ஃபிரண்டுக்கு எல்லாம் தீப்திதான் டெர்ரர். ‘‘தீப்தி கூட சேராத, உன்னைக் கெடுத்துடுவா’’ என்பார்கள்.

கன்யாவைத் தன்மேல் சாய்த்துக்கொண்டு, அவளின் இரண்டு மார்பகங்களிலும், ஆதரவாக அணைப்பதுபோல, கையை ஓட்டிக்கொண்டே, ‘‘நாம லவ் பண்றது தீப்திக்கு பொறாமை கண்ணு, அவ கூட சேராதே, உன்னைக் கெடுத்துடுவா’’ என்றான்.

கன்யா உடை மாற்றிக்கொண்டு வந்து ஹாலில் அமர, ‘‘என்னா, என்கூட சேரக்கூடாதுன்னு சொன்னானா உன் பாய் ஃபிரண்ட்..?’’ என்றாள் தீப்திகா.

‘‘இல்லடீ, அதெல்லாம் ஒண்ணும் சொல்லலை. நீதாண்டி அவனை தப்பா நினைக்கிற’’ என்றாள் கன்யா.

‘‘ச்சீ, எங்கயோ ஓப்பன் ப்ளேஸ்ல உன்னை தள்ளிட்டுபோய் பெசைஞ்சி அனுப்பி விட்டு இருக்கான். அவனுக்கெல்லாம் மரியாதை குடுக்க சொல்றியா..? கூட்டிட்டு போய் ஒரச ஒரு இடம் பிடிக்க துப்பு இல்ல, ஒரு ரூம் போட வக்கு இல்ல, எவனாச்சும் போலீஸ் வந்து திட்டி இருந்தா மானம் போயிருக்காது உனக்கு..?’’

கன்யா அமைதியாய் இருக்க,

‘‘சரிடீ, பிராவுக்குள்ள கையைவிட்டு தடவுனாகூட ஒரு மஜா. உன் ஆளு டி ஷர்ட மேல என்னத்தை தடவி மஜா ஆகுறான்’’ என்றதும், மற்ற தோழிகள் சிரிக்க, ‘‘போடி, சும்மா இதையே பேசிகிட்டு’’ என்றாள் கன்யா.

தீப்திகா என்ன பேசினாலும், தோழிகள் கோபித்துக்கொள்ள மாட்டார்கள். உண்மையில் தீப்திகா அவர்களை ஒரு காட்ஃபாதர் போல பார்த்துக்கொள்வாள். இந்த வீட்டு வாடகையை அனைவரும் சேர்ந்துதான் கொடுக்கிறார்கள் என்றாலும், தீப்திதான் இந்த வீட்டைப் பிடித்தாள். வீட்டுக்குத் தேவையான அனைத்தையும் வாங்கிப்போட்டாள். மொத்த வீடும் அவள் கண்ட்ரோல்தான். கணக்கு பார்க்காமல் செலவு செய்வாள்.

இவர்களுக்குத் தண்ணி அடிக்கச் சொல்லிக்கொடுத்தது தீப்திதான். பன்னிரண்டாவது விடுமுறையின்போது, அனைவரையும் கொடைக்கானல் சுற்றுலா அழைத்துச் சென்று, ரூம் போட்டுக் குடித்து விட்டு ரகளை கட்டி அடித்தார்கள். சரக்கு சப்ளை, தீப்தியின் சொந்தக்கார பையன்; அவன் அப்போது கல்லூரி முடித்து விட்டு வேலை செய்து கொண்டிருந்தான்.

சரக்கைக் கொடுத்த அடுத்த செகண்ட் அவனுக்கு 'பை பை' சொன்னவள் தீப்தி.

அறையில் இருக்கும் எல்லா தோழிகளுக்கும் பாய் ஃபிரண்ட் இருந்தாலும், தீப்திக்கு மட்டும் கிடையாது. கேட்டால், ‘‘நான் இன்னும் அவனை சந்திக்கலை’’ என்பாள். ஆனால், ஆண்கள் பெண்களை தடவுவதுபோல பாரில், பப்பில் பிடித்த ஆண்களைத் தடவிக் கொள்வாள். தெரிந்தும் தெரியாமல் தடவிக்கொள்ளும் வரைதான் அனுமதிப்பாள். 'அட, பாப்பா ஒத்துழைக்குதே' என இடையில் கை வைத்தாலோ, முத்தமிட வந்தாலோ 'பாஸ்டர்ட்' எனக் கிறீச்சிட்டுச் சீறும் பாம்பு முகம் காட்டி அவனைக் குழப்பியடிப்பாள்.

தீப்தியின் கேங்கில் இருக்கும் மற்ற மடவன்னங்கள் பிரபா, ஏஞ்சலின் மற்றும் இனியா.

பிரபா இப்போது புடவை கட்டிக்கொண்டு அமர்ந்திருப்பதைப் பார்த்து ஏமாந்து விடக்கூடாது. டாப்லெஸ்ஸாக வெளிநாட்டு பீச்களில் ஓடும் வீடியோ வைத்திருக்கிறாள். புடவை, பிரபாவை அழகாகக் காட்டுவதாகப் பலரும் சொல்லி அவளும் நம்பி விட்டாள். பார்ட் டைம் மாடலிங் செய்து கொண்டிருப்பவள் பிரபா. ‘‘எல்லோருமே பார்ட் டைம் மாடலிங் பண்றவளுங்கதானே’’ என்பது தீப்தியின் கமெண்ட்.

பேண்ட்டியை விடச் சின்னதாக ஒரு ஷார்ட்ஸ் போட்டு, யோகா செய்து கொண்டிருப்பவள்தான் ஏஞ்சலின். ஒரே நேரத்தில் நான்கைந்து தடிமாடுகளை காதலிக்கும் சிறப்பு மனவார்ப்பு பெற்றவள். உண்மையிலேயே நான்கு பேரையும் ஒரே தீவிரத்துடன் காதலிப்பாள். அதில் போலித்தனம் ஏதும் இருக்காது. ஒருவனுடன் போன் பேசிக்கொண்டு இன்னொருவனுடன் சாட் செய்து கொண்டிருக்கும் திறமை கொண்டவள். இருவரிடத்திலும் காதல் பொங்கி வழியும். நடுவில் வந்து அட்டெண்டென்ஸ் போட்டு ஃபிளிர்ட் செய்து வழியும் ஆளையும் ஹோல்டில் போட்டு வைப்பாள்.

இனியா, இவள்தான் கேங்கிலேயே ஒல்லி. கிட்ஸ் செக்ஷன் சென்றுதான் தனக்கான உடை எடுப்பாள். அதிலும், 13——14 இயர்ஸ், 15—16 இயர்ஸ் குழந்தைகளின் உடைகள்தான் ஓரளவுக்கு செட் ஆகும். உடல்தான்

ஒல்லியே தவிர, ஓ... உங்களுக்கே புரிகிறது அல்லவா..? ஆம் 32ஙி சைஸ். இவ்வளவு ஒல்லியாக கார்ட்டூன் அல்லது அனிமேஷன் பட ஹீரோயின் போல இருந்து கொண்டு 32ஙி சைஸ் போட்டால் எப்படி இருக்கும்..? பலரும் வைத்த கண்கள் வாங்காமல் பார்ப்பார்கள்.

அவள் அந்த இடத்தை விட்டு நகரும் போது, அவர்களது கண்களும் அவள் முலைகளிலேயே ஒட்டிக்கொண்டு செல்வதுபோல இருக்கும். இவர்கள் குருட்டுத்தனமாகக் திரிந்துகொண்டிருப்பார்கள். ஒரு சர்ரியலிஸ ஓவியர் இந்த காட்சிகளைப் பார்ததால், இனியாவை வரைந்து அவள் முலைகளில் சில நூறு கண்கள் ஒட்டிக்கொண்டு இருப்பது போலவும் பலர் குருடர்களாகத் தடவிக்கொண்டு இருப்பது போலவும் ஓவியம் வரைந்து விடுவார். என்ன சிக்கல் என்றால் கண்கள் ஒட்டிக்கொண்டு இருப்பதால் நம்மால் அவளின் முலைகளைக் காண இயலாது.

இருந்தாலும் கவலை வேண்டாம். இந்த நாவலின் வாசகர் என்ற முறையில் உங்களுக்கு ஒரு ஆஃபர் இருக்கிறது. கதையின் போக்கில் ஒரு 'பிரேக்அப்'பின்போது, ‘‘கடைசியா ஒரே ஒரு தடவை உன் முலையை மட்டும் பாத்துட்டு போயிடறேன்’’ என்று சங்கீத் கேட்கிறான். சங்கீத் ஏன் அப்படி கேட்டான்..? அப்படி என்ன ஸ்பெஷல்..? அப்போது அவள் என்ன முடிவெடுக்கிறாள்..? கழட்டிக் காட்டினாளா இல்லையா என இப்போது தெரியவில்லை. கதையின் போக்குதான் அதை முடிவு செய்யும்.

இருந்தாலும் வாசகர் நலன் கருதி, எப்படியாவது அவள் அதைக் காட்டும்படி செய்ய நான் கடுமையாக முயற்சிக்கிறேன். அப்படி முடியவில்லை என்றால், நாவல் முடிந்ததும் முற்றும் போட்டுவிட்டு, கடைசியில் தனிப்பத்தியாக எழுதி விடுகிறேன்.

தீப்தி சின்ன வயதிலேயே இன்ஷூரன்ஸ் கம்பனியின் உயர் பதவிக்கு வந்து விட்டாள். கார்ப்பரேட் க்ளையண்ட்ஸை ஹேண்டில் செய்யும் பொறுப்பு தீப்திக்கு. பகல் முழுக்க சீடை தின்பது போலச் சின்னச் சின்ன வேலைகளைப் பார்த்துக்கொண்டிருந்தாலும் தீப்தியின் வேட்டை முன் இரவில்தான் தொடங்கும்.

கிழட்டு சூப்பர் பாஸ்களை கா.ஃபி ஷாப், ப்ரீவரீஸ் க.ஃபே, ஐந்து நட்சத்திர விடுதி, பப் போன்ற இடங்களில் 'டின்னர்' என்ற பெயரில் சந்தித்து, அவர்கள் தங்கள் கண்ணால் இவளைக் கற்பழிக்க அனுமதி வழங்கி, அதற்கு ஏற்றாற் போல நெளிவு சுளிவுகள் தெரியும்படி உடை அணிந்து, கண்களாலும் உதடுகளாலும் பிஸினஸ் முடிப்பாள். கண்களுக்கும் உதடுகளுக்கும், க்ளீவேஜும் இடையும் ஹை ஹீல்சின் மீது அமர்ந்திருக்கும் கால்களும் உதவும்.

இதைப் போன்ற சந்தர்ப்பங்களில் பெரிய பிஸினஸ் டாக் இருக்காது. வெண்பொங்கல் மேல் இருக்கும் மிளகு போலப் பேச்சு அங்கே கொஞ்சம் இங்கே கொஞ்சம் என அள்ளித் தெளித்தபடியே ஓடிக்கொண்டு இருக்கும். சில கிழவர்கள் உண்மையிலேயே நல்ல ஜோக் அடிப்பார்கள். உண்மையான நல்ல ஜோக் தீப்தியின் முலைகளுக்குப் பிடிக்கும். அவை ஜோக் அடித்தக் கிழவனை ஏமாற்றாமல் சிரித்து நர்த்தனமாடிக் களிப்பூட்டும்.

சில சூப்பர் பாஸ்களிடம் உண்மையிலேயே விஷயம் இருக்கும். தீப்தி வெறும் க்ளாமர் டால் இல்லையென்பதால் அவர்கள் சொல்லும் அற்புதமான விஷயங்களை மண்டையில் ஏற்றிக்கொள்வாள்.கவனமாகக் கவனிப்பாள்; இந்த ஒரு தன்மைதான் தீப்தியை சூப்பர் பாஸ்களுக்கு பிடித்துப் போனதற்கு முக்கிய காரணம். பிஸினஸ் டாக் பெரிதாக இருக்காது என்றுதானே இந்த பத்தி ஆரம்பித்தது..? ஞாபகப் படுத்துவதற்காக மீண்டும் எழுத வேண்டியிருக்கிறது.

இப்போதெல்லாம் ஐந்து வரிகளைப் படித்துக் கடப்பதற்குள் முத வரி மறந்து விடுகிறது. அல்லது, ஐந்து வரிகளுக்கு மேல் யாரும் படிப்பதில்லை. தீப்தி அப்படி அல்ல, பேச்சின் ஆரம்பத்தில் விட்டதை கடைசியில் தொடர்ந்தாலும் சட்டெனப் பிடித்துக்கொள்வாள். இதைபோன்ற கேளிக்கை இடங்களில் ஆரம்பிக்கும் தொடர்புகள், பேச்சுகள், உறவை பலப்படுத்துதல்கள் போன்றவை அடுத்தடுத்த நாட்களில் பிஸினஸாக மாறும். உடனே தூக்கிக் கொடுத்து விடமாட்டார்கள். கடுமையான பேரங்கள், விதிமுறைகள் எல்லாம் பார்க்கப்படும்தான். அதையெல்லாம் ஈடுகொடுத்துச் சமாளிக்க வேண்டும். பிறகு எதற்கு இந்த பார்ட்டி... இதைப்போன்ற சந்திப்புகள் என்றால், ஒரு பிஸினஸ் டீலை ஆரம்பிக்க மட்டும்தான். அலுவலகத்தில் அப்பாயின்மெண்ட் கேட்டால்

அவ்வளவு சுலபமாகக் கிடைக்காது. ஆனால், டின்னருக்குக் கேட்டால் விரைவில் கிடைக்கும். மேட்டர் அவ்வளவுதான்.

சில நாட்களில் தீப்திக்கும் சுகமான ஏகாந்தமான பாஸிடிவ் போதை இருந்தால் சூப்பர் பாஸ் வயது முதிர்ந்திருந்தாலும் தனிப்பட்ட கம்பீரமும் கவர்ச்சியும் இருந்தால், தீப்தி விடைபெறும் போது லைட்டாகக் கட்டிப்பிடிப்பாள்.

இந்த டின்னர் மீட்டிங்கும் மெல்லிய நட்பணைத்தலும் இதுவரை பாய் ஃபிரண்டே இல்லாத தீப்தியின் நான்காவது பிரேக் அப்புக்கு காரணமாக இருக்கும் என்று இப்போது யாராலும் கற்பனை செய்ய முடியாது.

தீப்தியின் கேங்கில் எல்லாரைப் பற்றியும் ஒரு சிறு குறிப்பு வாசித்து விட்டு, கன்யாவைப் பற்றிய குறிப்பு மிஸ் ஆவதை கவனித்தவர்கள் உஷார் பார்ட்டிகள். கன்யாவை ஒரு ஓலா டிரைவர் முலையை பிடித்ததையும், அப்போது கன்யா என்ன செய்தாள் என்று பகிரும் போது குறிப்பைப் பார்த்துக்கொள்ளலாம்.

தீப்தி கேங்கில் யார் யார் பள்ளித் தோழிகள், யார் கல்லூரித் தோழி, யார் அலுவலக தோழி என்பதெல்லாம் இந்தக் கதைக்குத் தேவையில்லாததால் சொல்லவில்லை. இந்தத் தோழிகள் ரொம்ப நாட்கள் இந்த வீட்டில் இல்லை; விரைவில் பிரிந்து வெவ்வேறு இடங்களுக்குச் சென்று விட்டார்கள்.

அப்படி தீப்தி பெங்களூர் சென்றபோதுதான், முதன் முறையாக ஜெயமோகனைச் சந்தித்தாள்.

# தீப்திகா – ஜெயமோகன்

ஜெயமோகனின் முழுப்பெயர் ஜெயமோகன் இல்லை. முழுப் பெயரோடு அறிமுகப்படுத்தினாலும் கதை நெடுக 'ஜெயமோகன், ஜெயமோகன்' என்றுதான் வரப்போகிறது. அதனால் இந்தப் பெயரே போதும். ஜெயமோகன் ஹாஸ்பிடல் மேனேஜ்மெண்ட்டில் பிஸ்து. நான்கைந்து பேர் கலந்து கொண்ட ஒரு பிஸினஸ் மீட்டிங்கில்தான் ஜெயமோகனை முதன்முதலில் பார்த்தாள் தீப்திகா. மீட்டிங்க் அவன் கட்டுப்பாட்டில் இருந்ததால் 'நறுக் சுருக்'கெனப் பேசி விரைவாக மீட்டிங்கை முடிவுக்குக் கொண்டு வந்தான். என்ன தேவை, என்ன சிக்கல், என்ன சவால், அதை எப்படி சரிசெய்து எப்படி முடிக்க வேண்டும், எவ்வளவு பட்ஜெட் என அனைத்தையும் ''டு தி பாயிண்டாகப் பேசி, அப்புறம் என்பது போல எல்லோரையும் பார்த்தான். அவனே அனைத்தையும் பேசி விட்டதால், அவன் பேசியதிலிருந்தே சில பாயிண்ட்களை எடுத்து மற்றவர்கள் கடமைக்குப் பேசி முடிக்க, மீட்டிங் முடிவுக்கு வந்தது.

மீட்டிங் முடிந்ததும் அனைவருக்கும் லஞ்ச் ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. லஞ்சின்போது அனைவருடனும் பேசிக்கொண்டு இருந்தவன், தீப்தியைக் கொஞ்சம் கவனித்தான். அது ஒரு விருந்தினரை கவனித்தது போல இருந்ததைத் தாண்டி ஒரு 'கேர்', ஒரு மெச்சூரிட்டியான அன்பு, ஒரு அக்கறையான அரவணைப்பு என வெவ்வேறு விதமாகத் தனக்கு தோன்றியதாக ஒருமுறை ஆதிரையிடம் சொல்லி இருக்கிறாள். ஆதிரை, தீப்திகாவின் உயிர்த் தோழி. ஆனால் அறையைப் பகிர்ந்து கொண்டு வாழ்வது ஆதிரைக்குப் பிடிக்காது என்பதால், ஆதிரை தனியாக வசிப்பவள்.

தீப்திகாவும் ஜெயமோகனும் தங்கள் மொபைல் நம்பரை மிஸ்ட்கால் மூலம் சேமித்துக்கொண்டார்கள். தீப்திகாவை ஜெயமோகன் கவனித்தாலும் இரண்டொரு வார்த்தைதான் பேசி இருந்தான்.

இந்த மீட்டிங்கிற்காக தீப்தி சென்னையில் இருந்து பெங்களூர் வந்திருந்தாள். பை சொல்லி விட்டுக் கிளம்பும் போது ஏதாவது பேசுவான் என்று தயங்கி நின்றாள் தீப்திகா. ஆனால் அவன் ஏதும் பேசவில்லை. ஜெயமோகனைச் சடுதியில் மறந்த தீப்திகா ஓலா புக் செய்து விட்டு, மாலை எங்கே ஆட்டம் போடலாம் என்று மெசேஜ்களை பறக்க விட்டாள். தன்னுடைய விடுதியை நோக்கிச் செல்கையில், ஒருத்தி 8 மணி முதல் ஃப்ரீ என்று மெசேஜ் அனுப்பி இருந்தாள்.

தீப்தி : கிரேட், ஆனா நீ தனியாதான வர்றே..?

தோழி : தனியாத்தான், ஏன் கேக்கற..?

தீப்தி : இல்ல, கூட சுத்திட்டு இருப்பானே தாடிக்காரன், அவனை கூட்டிட்டு வந்து தொலையப்போற... அதான்.

தோழி : ஹா ஹா... இல்ல, இப்ப அவன் இல்லை.

தீப்தி : தாடிக்காரன் இல்லன்னா, மொழுக் மொழுக் அமுல் பேபி, எவனா இருந்தாலும் கூட்டிட்டு வராத, என்னா..?

தோழி : சரி, சரி... ஆனா கடைசியா வந்து பிக் அப் பண்ணிக்க சொல்லவா..? கடைசியாத்தான் வருவான்.

தீப்தி : நோ வே...

தோழி : ம்ம்ம்...

தீப்தி : தனியாவே வா... வழிஞ்சானுங்க எவனாவது இங்கயே மாட்டுவானுங்க, அதானடி இண்ட்ரெஸ்ட்..? இந்த ஆம்பளைங்கள பாரு, கேர்ள் ஃபிரண்ட் இருந்தாலும், அவளையா கூட்டிட்டு வரானுங்க..? என்னன்னவோ காரணம் சொல்லி, அவளுங்களை கழட்டி விட்டுட்டு, தனியா வந்து, புதுசு புதுசா தடவறானுங்க.

தோழி : ம்ம்... ம்ம் தடவறதுக்குத்தான் லாயக்கு.

தீப்தி : ஹா ஹா... காலம் போற போக்கைப் பாத்தா, இனிமே தடவுனாலே புள்ளை பொறந்துடும்னு ஆவபோவுது பாரு, இவனுங்களாலஞ் இயற்கையே மாறிப்போகப் போகுது.

தோழி : ஹா ஹா... சரிசரி, மீட்டிங் எங்க..?

தீப்தி : வெயிட், ஐ வில் அப்டேட் யூ..!

ஜெயமோகன் ஃபேஸ்புக்கில் ஃபிரண்ட் ரெக்வெஸ்ட் கொடுத்து இருந்தான்; அக்செப்ட் செய்தாள். விடுதி வந்ததால் தோழியுடனான சாட்டை முடித்துக்கொண்டு, ஹோட்டலுக்குள் நுழைந்து கைப்பை, செருப்பு என மூலைக்கு ஒன்றாக விசிறி எறிந்து விட்டு, ஃப்ரிட்ஜில் இருந்து மினிட்மெய்ட் ஆரஞ்ச் டிரிங்கை எடுத்துக் கொண்டு, ஒவ்வொரு உடைகளாகக் கழட்டிக் கீழே போட்டபடி பாத்ரூமை நோக்கிச் சென்றாள். பாத்ரூம் கதவைத் திறந்து உள்ளே செல்லும்போது, அவளை நிர்வாணமாகக் காட்டியது படுக்கை அறையில் இருந்த கண்ணாடி. அவளுடைய பிருஷ்டத்தில் அருகருகே இரண்டு கருப்பு மச்சங்கள் இருந்தன. அந்த மச்சங்கள் மட்டுமே கருப்பாக இருந்தன; இல்லையில்லை, ஒளிர்ந்தன. சரி சரி , இடது பக்கத்தில் இருக்கும் பிருஷ்டம்தான்.

பாத் டப்பில் தண்ணீர் போட்டுக்கொண்டு விழுந்து கண்ணை மூடிக்கொண்டாள். ஆரஞ்ச் ஜூஸை இரண்டு மடக்கு குடித்தாள். கிட்டத்தட்ட ஒரு மணி நேரம் தண்ணீருக்குள் தூங்கி இருப்பாள். வெளியே வந்து துண்டால் உடலைச் சுருட்டிக்கொண்டு, கெட்டில் மூலம் சூடாக ஒரு காஃபி குடித்தாள். துவட்டிக்கொள்ளாமலேயே படுத்து மீண்டும் கொஞ்ச நேரம் தூங்கினாள்.

போன் ஒலித்ததும், துள்ளி எழுந்துதான் போனை எடுத்திருக்க வேண்டும். எத்தனை கதை படிக்கிறாள், எத்தனை சினிமா பார்த்தி ருக்கிறாள். ஆனால், தூக்கத்தில் இருந்ததால் துள்ள முடியவில்லை. போனை எடுத்தாள், ‘‘ஃப்யூ மினிட்ஸ்ல கூப்பிடறேன்’’ என்று சொல்லி துண்டித்தாள். அவள் போன் லைனை கட் தான் செய்தாள். தமிழில் சொல்ல வேண்டும் என்பதால் துண்டித்தாள் என்று சொல்ல வேண்டியுள்ளது. துண்டித்தாள் என்றால், ஆண்குறியை அறுத்து துண்டித்து எடுப்பது போலத்தான் இருக்கிறது, என்ன செய்வது..? ‘துண்டித்துவை’ ஆராய்ந்ததில் ‘துள்ளித்’ துண்டிக்கப்பட்டு விட்டது. தூக்கத்தில் இல்லாமல் இருந்தால் மட்டும் எவளாலாவது போனைத் துள்ளிக் குதித்து எடுக்க முடியுமா..? குதித்து வேண்டுமானால் எடுக்கலாம். அது என்ன துள்ளி..?

‘துள்ளித் துள்ளி நீ பாடம்மா, சீதையம்மா...’ என்ற பாடலில்கூட கமல்ஹாசன், துள்ளி என்றால் என்ன என்று பலவிதமாக முயன்று பார்த்திருப்பார். ஆனால் தீப்தி இன்னும் சில பத்திகளில் நிஜமாகவே துள்ளுவாள். துண்டித்து மற்றும் துள்ளியை ஆராய்ந்து முடிப்பதற்குள் தீப்தி, டிஷ்யூ பேப்பரை எடுத்து யோனியில் ஒத்தி எடுத்து இருந்தாள்.

மெல்லிசாக, பேண்ட்டி தெரியும் அளவுக்கு ஒரு டிரவுசரை எடுத்துப் போட்டுக்கொண்டு, (ஆனால் பேண்ட்டி தெரியவில்லை) மார்பில் போர்வையை இழுத்து விட்டுக்கொண்டு, அழைத்தவளை அழைத்து, எந்த ஹோட்டல், எந்த பப், எத்தனை மணி எனச் சொல்லிவிட்டுக் கொஞ்ச நேரம் மொக்கை போட்டுக்கொண்டு இருந்தாள்.

தீப்தி மொக்கை போட்டு முடிப்பதற்குள், விடுபட்டுப்போன கன்யாவின் சிறு குறிப்பு :— விமான நிலையத்தில் இருந்து, இரவு 11.30மணிக்கு அடுத்த பத்து நிமிடங்களில் ஒரு ஆப் மூலம் ஒரு காரை எடுத்தாள். வீடு வரும் வரை பாய் ஃபிரண்டிடம் கதைத்துக்கொண்டு வந்தாள். இதற்கே ஆங்கிலத்தில்தான். வீடு வந்ததும் டிக்கியில் இருந்து லக்கேஜை எடுக்க முயல்கையில், டிரைவர் உதவி செய்வதுபோல வந்து..., அப்போது தெரு விளக்கு நன்றாக எரிந்து கொண்டிருந்தது. ஒரு பழக்கப்பட்ட தெருநாய், அருகில் வந்து வாலாட்டிக்கொண்டு இருந்தது. மற்றபடி தெருவில் யாருமில்லை.

உதவி செய்வதுபோல வந்து.

லக்கேஜை எடுப்பது போல எடுத்து...

எடுத்து...

முதலில் இடது முட்டிக்கையால், கன்யாவின் வலது முலையை இடித்தான்.

கன்யா ஏதும் காட்டிக்கொள்ளவில்லை, பிச்சை போட்டாள்.

அடுத்த லக்கேஜை எடுக்க போவது போலப் போய்,

போய்...

கன்யாவை பின்புறமாகக் கட்டிப்பிடித்தான்.

கன்யா அப்போதும் சும்மாவே நின்றுகொண்டிருக்க,

தன் இடுப்பைப் பின்னால் இழுத்து ஒரு குத்து குத்தினான்.

நாய், ‘‘வாவ்வ், வாள்வ், வள்வ்வ்வ்’’ என்றது.

கன்யா அமைதியாகத் திரும்பினாள்.

இப்போது, அவள் முலைகளைப் பற்றிக் கசக்கினான்.

முதல்ல லக்கேஜ் என்றாள்.

அதிர்ச்சியான ஆச்சர்யத்துடன் லக்கேஜை எடுத்து வைத்தான்.

‘‘உள்ள போலாம்’’ என்றாள்.

பெல் அடித்து உள்ளேபோய், தீப்தி உட்பட அனைவரையும் எழுப்பி, அவன் உடைகளை முழுக்க உருவி, வீடு முழுக்க ஓட விட்டு, அடித்து உதைத்து, நகைச்சுவைகள் செய்து, தலைகீழாக நிற்க வைத்து, ஆண்குறியில் ஐஸ் கட்டி வைத்து, விடிய விடியக் கொண்டாடினார்கள்.

அதிர்ஷ்டவசமாக அன்று ஐந்து பேரும் வீட்டில் இருந்தார்கள். இரவு ஒரு மணிக்கு மேல்தான் பார்ட்டி ஆரம்பமானது அவர்களுக்கு.

அன்று மீன் குழம்பு வைத்திருந்தார்கள். மீன் தலை மீதமிருந்தது. கன்யாதான் அந்த மீன் தலையை எடுத்து வந்து அவன் ஆண் குறிக்குள் நுழைத்து ‘ப்ளோ ஜாப்’ என்று ஆர்ப்பரித்து போட்டோவும் வீடியோவும் எடுத்துத் தங்கள் பர்ஸனல் குரூப்பில் ஷேர் செய்து கொண்டார்கள்.

சாந்தி, ‘‘வெல்டன் கேர்ள்ஸ்’’ என்று ஒரு மெசேஜ் மட்டும் அனுப்பி இருந்தாள்.

மறுநாள் அதிகாலை அந்த கேப் நிறுவனத்திடம் புகார் செய்யாமல், போலீசில் ஒப்படைக்காமல், ‘‘உன் பொண்டாட்டியை வந்து கூட்டிட்டு போகச்சொல்லுடா’’ என்று சொல்லி விட்டு அவனை பாத்ரூமில் போட்டு அடைத்தார்கள்.

மாலைதான் ரிலீஸ் செய்தார்கள். கன்யா அவன் பின்னாலிருந்து கட்டிப்பிடிப்பதுபோல ஒரு போட்டோ எடுத்து, தன் பாய்ஃபிரண்டுக்கு அனுப்பி, இவனை ‘‘பனிஷ் பண்ணனும் பேபி’’ என்று மெசேஜ் அனுப்பினாள். அவன் அதைப் படித்துப் பார்த்து ரிப்ளை அனுப்ப ஆரம்பித்தான். அதற்குள்...

தீப்திகா ஒரு டாப்ஸும், ஒரு ஸ்கர்ட்டும் அணிந்து கொண்டு, அனைத்து அழகு வேலைகளையும் முடித்துக்கொண்டு, சிகரெட் பிடிப்பதற்காக அறையின்

ஜன்னலை திறக்க முயற்சித்தாள். அதை திறக்க முடியவில்லை. உடைத்து விடலாமா என்று ஒருகணம் யோசித்தாள். ரூம் சர்வீஸுக்கு கால் அடித்தாள்.

தீப்திகா டாப்ஸ் என்றால் என்ன..? 150 ரூபாய்க்கு வாங்கிய 'பஃப்' கை வைத்த முண்டா பனியன் என்றா இருக்க முடியும்..? பின்னால் ஐந்து விரக்கடை இடைவெளி, ஸ்கர்டுக்கும் டாப்ஸுக்கும். முன்னால், பிரேசியர் மேல் படர்ந்து கீழே இறங்காமல் மேலேயே தூக்கிக்கொண்டு இருக்கும் வகையிலான டாப்ஸ் அது.

ரூம் சர்வீஸ் ஆள் வந்து, கொட்டை மேலேற ஜன்னலைத் திறந்து கொடுத்தான். அவன் வேலை மும்முரத்தில் இருந்ததால், மேலேறிய டாப்ஸையோ, அதனால் அழகாகக் கொஞ்சூண்டு தெரிகிற பிரேசியரையோ, கீழே சுழற்றி அடிக்கும் தொப்புளைக் கொண்ட வயிறையோ அவன் கவனிக்கவில்லை. தீப்தி புகைத்த சிகரெட் கூட தன் புகையை அவளின் தொப்புளைச் சுற்றிச் சுழல விட்டுக்கொண்டு இருந்தது.

# தீப்திகா – தோழிகள் – ஜெயமோகன்

தோழியொருத்தி தீப்தியை ஹோட்டலில் பிக்அப் செய்துகொள்ள, மற்ற இரண்டு தோழிகள் பப்புக்கு நேரடியாக வந்து விடுவதாக ஏற்பாடு.

தோழி வந்தவுடன் தீப்தி, ஆப் மூலம் டாக்ஸி எடுத்தாள். யூபி சிட்டியில் இருக்கும் ஒரு பப்புக்கு கார் விரைய முயன்றது. என்னதான் முயன்றாலும் பெங்களூரில் விரைய முடியாது என்பதால், நகர ஆரம்பித்தது.

‘‘என்னடீ, டம்மி தள்ளுது, சரக்கா, தீனியா, இல்ல கர்ப்பமா’’ எனத் தோழியின் வயிறைத் தட்டினாள் தீப்தி. ஓட்டிக்கொண்டிருந்தவர் தமிழ் அறிந்த வயதான டிரைவர் என்பதால், அவர் முகத்தில் கோபம் கொப்பளிக்க முயற்சி செய்தது. முகத்தில் கோபத்தால் கொப்பளிக்க முடியாது என்பதால், கோபம் டிரைவரின் பல்லைக் கடிக்கச் செய்தது.

டிரைவரைப் பற்றிய கவலையின்றிக் கண்டுகொள்ளாமல் இருவரும் ஜாலியாகப் பேச ஆரம்பித்தனர்.

‘‘கர்ப்பமா..? சான்ஸே இல்லை, ஆல்வேய்ஸ் காண்டம். ஜாக்கிங்க் போகலடீ கொஞ்ச நாளா, அதான்’’ என்றாள் தோழி.

‘‘குட் , பயலுங்க தெளிவா காண்டம் வாங்கிட்டு வரானுங்களா..?’’ என்று ஆச்சர்யமாகக் கேட்டாள் தீப்தி.

‘‘ஃபக் ஆஃப், (கிசுகிசுப்பான குரலில்) மட்டி முண்டங்க, மொபைலை மட்டும்தாண்டி எடுத்துட்டு வருவானுங்க. ஒரு பிளானும் பண்ண மாட்டானுங்க. காண்டம் இல்லன்னா பர்மிஷன் கிடையாதுன்னு சொன்னாகூட, மெடிக்கல் ஷாப் போகமாட்டானுங்க. தூக்கி கைல குடுப்பானுங்க, ரெண்டு ஆட்டு ஆட்டிவிட்டா, குப்புற அடிச்சி தூங்கிடுவானுங்க, பாஸ்டர்ட்ஸ். அதனால, நானே வாங்கி வச்சிப்பேன்’’ என்றவள், கைப்பையைத் திறந்து காட்டினாள். காண்டம் பாக்கட்டுக்களும் மென்ந்த்தால் லூப்ரிகண்ட்டும் இருந்தது.

‘‘ஏண்டி மென்ந்த்தால் லூப்ரிகண்ட்..?’’ என்று கேட்டாள் தீப்தி.

“இவனுங்களைப் பாத்து மூடு வந்து ரொமான்ஸ் பண்ணியா செய்யப்போறோம். டிரையா இருக்கும். அதும், குடிச்சிட்டு போதைல செய்யறதால பெருசா ஒண்ணும் இருக்காது. என்ன நடக்குதுன்னே தெரியாது. மென்ந்த்தால் போட்டாலாச்சும் நம நமன்னு கொஞ்சம் கட்டெறும்பு கடிச்ச மாதிரி இருக்கும்” என்று தோழி சொன்னதும் இருவரும் சத்தம் வெளியே கேட்காமல் குலுங்கிச் சிரித்தனர்.

பப்புக்குள் நுழைந்து, அங்கே காத்திருந்த தோழிகளுடன் சேர்ந்து கொண்டு ஒன்றும் பேசாமலேயே சிரிக்க ஆரம்பித்தார்கள் நால்வரும். பப் கல்ச்சருக்கு உடனடியாக மாறி நால்வர் சிரித்துக்கொண்டிருக்க, தீப்தியையும் தோழியையும் இறக்கி விட்டுவிட்டு, கொடுத்த டிப்ஸை வேண்டாம் என ஒதுக்கிவிட்டு காரை உருட்டிக்கொண்டுபோய் சாலையில் இரும்புப் பெட்டிக்கடை இருந்த இடத்தில் நிறுத்தி விட்டு, ஒரு சிகரெட் வாங்கி டென்ஷனாகப் பற்ற வைத்த டிரைவர், தலைக்கேறி இருந்த கோபத்தில் 'புஸ் புஸ்' என புகை விட்டுக்கொண்டு இருந்தார்.

அப்போது அவர் மனைவி போன் அடித்தார். எடுத்து என்ன என்று கூட கேட்காமல், “டூட்டில இருக்கும் போது என்னாடி எப்பப் பாத்தாலும் போனு..? போனை வைடி கூதி முண்டை..!” என்று பொரிந்து தள்ளினார்.

விளிம்பு நிலை மக்கள் என்பதால், டிரைவருக்கும் அவர் மனைவிக்கும் பெயர் வைக்கவில்லை என்ற விமர்சனம், ஜனவரி 4ம் தேதி 2019 அன்று வந்து விடும் அபாயம் உள்ளதால்,

டிரைவர் = வேலு

மனைவி = செல்லம்மா

அதே இடத்திற்கு எதிர் சாரியில் இருந்த சாலையில் காரை நிறுத்தி விட்டு, ஒரு சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்தான் ஜெயமோகன். ஏசி ஓடிக்கொண்டு இருக்க, தன் பக்க ஜன்னல் கண்ணாடியை மட்டும் பாதி இறக்கி இருந்தான்.

தீப்தியும் தோழிகளும் முதலில் அமர்ந்து கொள்ளலாம் என முடிவெடுத்து, வசதியான சோஃபாவில் சாய்ந்தமர்ந்து அபாயகரமான முறையில் கால் மேல்

கால் போட்டுக்கொண்டு, பக்கெட் காக்டெயிலை பதம் பார்க்க ஆரம்பித்து இருந்தனர்.

ஜெயமோகன் சிகரெட் அடித்துக்கொண்டே தன் மொபைலில் நியர்பை ஃபிரண்ட் ஆப்ஷன் மூலம் தீப்தியைப் பார்த்தான். மாலையில் இருந்து பார்த்துக்கொண்டுதான் இருக்கிறான்; ஒரு மாதிரி யூகித்து இருந்தான். கண்டிப்பாக பப்புக்குத்தான் போவாள் என யூகித்து எவ்வளவு தூரம், எந்த ஏரியா காட்டுகிறது என்பதைப் பார்த்து மோப்பம் பிடித்து இவ்வளவு தூரம் வந்து விட்டான்.

சிகரெட்டை முடித்து, காரை நகர்த்தி பார்க்கிங் போட்டு, தீப்தி இருக்கும் பப்புக்குள் சரியாக நுழைந்தான். அலட்டிக்கொள்ளாமல் மெதுவாக அலட்சியமாக நுழைந்த ஜெயமோகன், பார்வையை நோட்டம் விட்டு அலைய விடாமல், ஓரமாக இருந்த நாற்காலியில் அமர்ந்து கொண்டு, பியர் மட்டும் ஆர்டர் செய்தான். பியர் குடித்துக்கொண்டே பார்வையைக் கூரை மேலெல்லாம் சுற்றிச் சுழல விட்டவன், தீப்தியை கண்டு கொண்டான். குபீரென்று இருந்தது ஜெயமோகனுக்கு. டேன்ஸ் ஃப்ளோர் இன்னும் களை கட்டவில்லை. தனித்தனியாக அமர்ந்து குடித்துக்கொண்டுதான் இருந்தனர். இசை மட்டும் ஏற்றம் அடைந்து கொண்டேஇருந்தது. ஒரு பியர் முடித்து, ஸ்மோக்கிங்க் ஜோன் போய் இழுத்துக் கடாசி விட்டு, மீண்டும் உள்ளே வந்தபோது, கூட்டம் பப்பில் ஏறி இருந்தது.

இப்போது டேன்ஸ் ஃப்ளோரில் ஒன்றிரண்டு நபர்கள் மட்டும் சில நிமிடங்கள் ஆடி விட்டுத் தங்கள் குழு இருக்கும் மேசையைப் பார்த்து ஒரு மாதிரி இளித்துக்கொண்டே ஓடி அமர்ந்தபடி இருந்தனர்.

ஜெயமோகன் இன்னொரு பியர் ஆர்டர் செய்து விட்டு ரெஸ்ட் ரூம் சென்றான். தீப்தி மற்றும் தோழிகள் இரண்டரை ரவுண்டுகள் முடித்து இருந்தனர். இப்போது எல்லோரும் உட்கார்ந்த இடத்திலேயே காலை ஆட்டத் தொடங்கி இருந்தனர்.

ரெஸ்ட் ரூமில் இருந்து வெளியே வரும்போது, தீப்தி டேபிள் வழியாகச் சென்று, யதேச்சையாக சந்திப்பது போல சந்திக்க வேண்டும் என்பதுதான் ஜெயமோகனின் திட்டம். சந்தர்ப்பம் சரியாக அமையாததால் மீண்டும் பாதி

பியரை முடித்தான். இவ்வளவு நேரம் மெதுவாகப் போய்க்கொண்டிருந்த அனைத்தும் இதற்கு பிறகு வேகம் எடுத்தன.

ஒரு பியரை ஒரு மணி நேரம் குடித்துக்கொண்டிருந்தவர்கள், அடுத்த பியரை அரை மணி நேரத்தில் முடித்தனர். 5 நிமிடங்களில் காக்டெயில் காலியானது. ஒன்றிரண்டு பேராக பப்புக்கு வந்துகொண்டிருந்தது போய், கும்பல் கும்பலாக வந்து உட்கார இடமில்லாமல் நிற்க ஆரம்பித்தனர். நிற்கவும் இடமில்லாமல் போக, ஆட ஆரம்பித்தனர்.

தீப்தி தன் தோழிகளுடன் எழுந்து வந்து சிரித்துக்கொண்டே ஸ்டெப் போடத் தொடங்கும்போது, ஜெயமோகனின் முகத்தை இரண்டடி தூரத்தில் பார்த்தாள். ஜெயமோகன் கையில் ஒரு டிரிங்க் இருந்தது. அவன் இவர்களை கடந்து செல்லும் பாவனையில் இருந்தான்.

‘‘ஹாய்."

‘‘ஹாய்."

இருவருமே ஒரே நேரத்தில் சொல்லிக்கொண்டு, கூட்டத்தை விட்டு சற்று விலகி, தீப்தி தன் தோழிகளை அறிமுகப்படுத்த, ஜெயமோகன் சில செகண்ட்களில் தன்னைப்பற்றி சொல்லி முடித்து, "ஆடிக்கொண்டிருங்கள் வருகிறேன்" என்று சொல்லி நகர்ந்து சென்றான்.

நான்கு டிரிங்குகளை லாவகமாக எடுத்துக்கொண்டு ஆடிக்கொண்டி ருந்தவர்களிடம் வந்தான் ஜெயமோகன். அதற்குள்ளாக நான்கைந்து தனிக்கட்டைகள் தீப்தி குழுவினரைச் சுற்றி ஆடிக்கொண்டிருந்தனர். ஜெயமோகன் வந்ததும் ஸ்டெப் போட்டுக்கொண்டே மில்லி மீட்டர் மில்லி மீட்டராக நகர்ந்து சென்றனர்.

ஆளுக்கொரு டிரிங்க்ஸைக் கொடுத்தான் ஜெயமோகன். உங்களுக்கு என்று சைகையால் கேட்டதற்கு, கையைப் பின்னால் காட்ட, ஒருவன் பியர் கொண்டு வந்து கொடுத்தான். 'சியர்ஸ்' சொல்லி விட்டு ஆடிக்கொண்டே குடிக்க ஆரம்பித்தனர். ஜெயமோகன் கால்களை ஆட்டாமல் இடுப்புக்கு மேலே மட்டும் ஆட்டிக்கொண்டு நின்று கொண்டிருந்தான். அவர்களின் ஆட்டத்தைக் குலைக்காமல் நடுவில் ஒரு சீ ஃபுட் ப்ளேட்டர் வாங்கி வந்து கொடுத்தான்.

ஆடிய களைப்புக்கு அது தேவையாக இருந்தது அவர்களுக்கு. இரைந்து கொண்டிருக்கும் 'பீட்'டில் எதையும் பேசிக்கொள்ள முடியவில்லை. சைகை காட்டிக்கொண்டு, ஏதோ புரிந்தது போலச் சிரித்துக்கொண்டு இருந்தார்கள்.

இன்னும் இரண்டு ரவுண்ட் உள்ளே ஏறிக் காரணமில்லாமல் சிரிப்பும் தன்னம்பிக்கையும் உயரும் அந்தத் தருணத்தில், 30 மினிட்ஸ் மோர் என்று அறிவித்தனர். இன்னொரு ரவுண்ட் ஓடியது. ஏற்கனவே சொல்லி வைத்து இருந்ததால் இவர்கள் முன்பே அருந்திய டிரிங்குக்கான பில்லும் இவனிடமே வந்து சேர்ந்தது. கட்டி முடித்து வெளியே வந்தார்கள். ஜெயமோகன் நிதானமாக இருந்தான்; தீப்தி பாதி நிதானம்; மற்ற தோழிகளும் நிதானமாக இருந்ததாகத்தான் நினைத்தார்கள்; அதிலொருத்தி ஜெயமோகனைத் தொட்டுப் பேச ஆரம்பித்து இருந்தாள்.

காரை எடுத்துக்கொண்டு அவர்களை ஏற்றிக்கொண்டான். "டிராப் பண்ணவா" என்ற வெட்டிக் கேள்விகளைக் கேட்கவேயில்லை. தீப்தி முன் சீட்டில் ஏறுவது போலப் பார்த்துக்கொண்டான். எம் யூ 7 மெதுவாக ஊர்ந்து செல்ல ஆரம்பித்தது.

ஒரு இடத்தில் போலீஸ் அனைத்து வாகனங்களையும் நிறுத்தி டிரங்கன் டிரைவ் சோதித்துக்கொண்டு இருந்தார்கள். தீப்தி கொஞ்சம் சங்கடமாக உணர்ந்தாள். ஜெயமோகனின் முறை வந்ததும், கார் கண்ணாடியை பாதி இறக்கி நான்கு 500 ரூபாய் தாள்களை விரித்துக் கீழே காட்ட, அதைச் சடுதியில் பறித்துக்கொண்ட காவலர், வண்டிக்கு வழி ஏற்படுத்திக் கொடுத்தார்.

தீப்தி ரிலாக்ஸ் ஆனதும், "உன்னை ஹோட்டலில் டிராப் பண்ணிடுவேன், இவங்களுக்கு கேப் புக் பண்ணிடலாமா..?" என்றான்.

பின்னால் இருந்த ஒருத்தி, "ஏன்..? எங்களையும் டிராப் செய்யுங்களேன். நான்கு அழகான பெண்களுடன் பப்பில் நடனம் ஆடும் பாக்கியம் யாருக்குக் கிடைக்கும்..?" என்றாள்.

சிரித்துக்கொண்டே ‘‘ஷ்யூர் ஷ்யூர்" என்ற ஜெயமோகன், தீப்தியைப் பார்த்து ‘‘டிரிங்க்ஸ் போதுமா..?" என்றான்.

தீப்தி யோசித்துக்கொண்டு இருக்கையிலேயே பின்னாலிருந்த ஒருத்தி, ‘‘வீ வாண்ட் மோர் டிரிங்க், வீ வாண்ட் டூ செலிபிரேட்" என்று கத்தினாள். மற்ற பெண்களும், ‘‘யெஸ் யெஸ்" எனச் சொல்ல

தீப்தி, "டிரிங்க்ஸ் வேணும்னா இப்ப எங்க கிடைக்கும்..? உங்க கிட்ட இருக்கா..?" என்றாள்.

‘‘வாங்கிக்கலாம்" என்று அலட்சியமாகச் சொன்ன ஜெயமோகன், மெயின் ரோட்டில் இருந்து விலகி, ஒரு சாலையில் சென்று பூட்டிக்கிடந்த கடை முன் நிறுத்திக் கதவைத் தட்டி வோட்கா, டக்கீலா வாங்கி வந்தான். பெண்களுக்கு உற்சாகம் ஏற ஏற, கார் ஹோட்டல் காம்பவுண்டில் நுழைந்தது.

காரில் வரும்போதே, இதே ஹோட்டலில் இன்னும் இரண்டு அறைகள் எடுத்துக்கொள்ளலாம் என முடிவு எடுக்கப்பட்டு இருந்தது.

ரிஸப்ஷனில் கடுகடுவென இருந்த ஆள், ‘‘இரவில் அறை கொடுப்பதில்லை, குடித்து வந்தால் அறை கொடுப்பதில்லை, பெண்கள் ஆண்கள் சேர்ந்து வந்தால் அறை கொடுப்பதில்லை’’ எனக் காரணங்களை அடுக்கிக்கொண்டே போனான்.

‘‘சரி, அறை கொடுக்க வேண்டாம். ஏற்கனவே இருக்கும் தீப்தியின் அறையில் நாங்கள் கொஞ்ச நேரம் இருந்துவிட்டுச் சென்று விடுகிறோம்’’ என்று ஜெயமோகன் சொன்னான்.

‘‘இரவில் கெஸ்ட் அலோவ்ட் இல்லை, பெண் அறைக்கு ஆண் அலோவ்ட் இல்லை, குடித்து விட்டு வந்தால் கெஸ்ட் அலோவ்ட் இல்லை, கும்பலாக வந்தால் கெஸ்ட் அலோவ்ட் இல்லை’’ என்றான்.

மேனேஜரை அழைத்தும், இவன் சொன்னதையே அவரும் வரி மாறாமல் ஒப்புவித்தார்.

ஜெயமோகன் ஏதோ பேச முயன்றதும், "ஆம் ஆல்ஸோ எம்பிஎ" என்றார்.

தீப்தி, ‘‘லுக் ஹியர்’’ என்று கடுமையான குரலில் ஆரம்பித்து, "நாங்க பெண்கள் நள்ளிரவில் வந்திருக்கிறோம். எங்களை வெளியில் நிக்க வச்சி கலாட்டா பண்ணிட்டு இருக்கீங்களா..? இதான் கெஸ்டை நடத்தும் விதமா..?

எங்க கம்பனில சொல்லி, ஐ வில் கேன்ஸல் தி காண்டிராக்ட்" எனக் கத்த ஆரம்பித்ததும், இன்னொரு பெண், ‘‘ஆஸ் ஹோல்’’ என்றாள்.

மற்றொருத்தி, ‘‘ஃபக் யூ’’ என விரல் காட்டினாள்.

நல்ல போதையில், நலமாக இருந்த ஒருத்தி ‘‘பாஸ்டர்ட்’’ என்றதும் அவர்களுக்கு சுர்ரென ஏறி விட்டது.

நிலைமை சரியில்லாமல் போவதை உணர்ந்த ஜெயமோகன், "வாருங்கள் என் காருக்கு" என்று அழைக்க,

சண்டை வலுக்க,

தீப்தியின் கையைப் பிடித்து ஜெயமோகன் இழுத்துக்கொண்டு செல்ல, தீப்தி பிடிவாதமாய் மறுத்துச் சண்டைபோட மும்முரமாக, அவளை வலுக்கட்டாயமாக பக்கவாட்டில் அணைத்துக்கொண்டு, இழுத்துக்கொண்டு போய் காரின் உள்ளே ஏற்றினான். அதே நேரத்தில் ஒருத்தி, " யூ ப்ளடி ஃபக்கர்ஸ்" என சொல்லிவிட்டு, "ஐ கால் போலீஸ்" என 100 அழைக்க, அவள் தலையில் தட்டிய இன்னொருத்தி காலை கட் செய்தாள்.

எல்லோரும் காரில் ஏறிக்கொண்டதும் சரேலென ரிவர்ஸ் அடித்து, பார்க்கிங்கில் இருந்து வெளியேறி, பாட்டைப் போட்டான் ஜெயமோகன்.

கார் எங்கே போகிறது என தீப்தி உட்பட யாரும் கேட்கவில்லை.

தீப்தி சிகரெட் எடுத்து, "இஃப் யூ டோண்ட் மைண்ட்" எனச் சொல்ல, ஜெயமோகன் இடது கையால் லைட்டரை கொளுத்தினான்.

# தீப்தி – ஜெயமோகன்

தீ ப்தி சிகரெட் அடித்துக்கொண்டு இருக்கையிலேயே இடது கையை நீட்டினான் ஜெயமோகன். தீப்தி கொடுக்க, தன் ஜன்னல் கண்ணாடியைப் பாதி இறக்கினான். இரண்டு இழுப்பு இழுத்து விட்டு, தீப்தியின் பக்கம் சாய்வாகக் காட்ட அவள் அதை வாங்கிக்கொண்டு, இப்போது அவளும் கண்ணாடியை பாதி இறக்கினாள்.

“எனக்கு இங்க வீடு இருக்கு, வீட்டுக்கு போயிடலாமா..?” என்று ஜெயமோகன் கேட்டான்.

“ஓஹ், அப்படியா..? போலாமே, உங்களுக்கு ஒண்ணும் சிக்கல் இல்லையே” எனக்கேட்டு, அதற்கு ஜெயமோகன், “ச்சே சே..! அதெல்லாம் ஒண்ணும் இல்லை” என்று சொல்லி, ஜெயமோகன் வீட்டுக்குள் நுழைந்து பெண்கள் சிரமப் பரிகாரம் செய்து கொள்ள ரெஸ்ட் ரூம் உள்ளே நுழைந்தனர்.

கீழே ஹாலில் ஜெயமோகன் தண்ணி அடிப்பதற்கான ஏற்பாடுகளை செய்து கொண்டிருக்கையில் பெண்கள் கீழ் தளத்திலும் முதல் தளத்திலும் ஆளுக்கொரு ரெஸ்ட் ரூமிற்குள் நுழைந்தனர். பெங்களூர் இந்திரா நகரில் டிஃபன்ஸ் காலனியில் இருக்கும் ஜெயமோகனின் பங்களாவுக்குள் வந்தால், நகரத்தில் இருப்பது போலவே இருக்காது. பெரிய காம்பவுண்ட், புல் தரைகள், தோட்டம், செயற்கை நீர்வீழ்ச்சி, சின்ன கைப்பந்து மைதானம், கொஞ்ச தூரத்தில் இல்லத்தைப் பராமரிப்பவர்களுக்கான வீடு எனச் சின்ன எஸ்டேட் ஃபீல் கொடுக்கும்.

ஜெயமோகன் தயார் செய்து கொண்டிருக்கையில் ஆனந்தன் வந்து, “சார், சூடா ஏதாச்சும் செஞ்சி தரவா..?” என்றான்.

“தூங்கலையா ஆனந்த்..?” என்று ஜெயமோகன் கேட்க,

“கார் சத்தம் கேட்டு முழிசிட்டேன் சார்” என்றான்.

“சரி, ஆம்லெட் போடு, சிக்கன் இருக்கா..?” என்றான் ஜெயமோகன்.

‘‘எல்லாமே இருக்கு சார்’’ என்றபடிக்கு சமையலறைக்குள் ஆனந்தன் நுழைந்து சாலட் போட ஆரம்பித்தான்.

பெண்கள் ஒவ்வொருவராக வந்து அமர்ந்துகொள்ள, ஆனந்தன் ஐஸ் கட்டிகளையும் சாலட்களையும் கொண்டு வந்து வைத்தான்.

ஏற்கனெவே குடித்திருந்த போதை இருந்தும் ஆட்டம் ஆடி இருந்தும் ஒரு சின்ன இடைவெளியால் விட்ட இடத்தில் இருந்து அதே உற்சாகத்துடன் தொடர முடியவில்லை. மீண்டும் சில கிக் ஆஃப் ஷாட்ஸ் தேவைப்பட்டது.

ஜெயமோகன் அலெக்ஸாவை அழைத்து பாட்டு போடச் சொன்னதும் மென்மையாக வீட்டுத் திரையரங்கை அலற விட்டது.

வேதியியல் கூடத்தில் வேலை பார்ப்பதுபோல, நேர்த்தியாக அனைவருக்கும் டிரிங்க்ஸ் கலக்கத் தொடங்கினான்.

தீப்தியைத் தவிர மற்ற பெண்கள் பப் ஆட்டம் முடிந்து கிளம்பி விடுவார்கள் என்று எதிர்பார்த்ததால், பெயர்களைக்கூட சொல்லாமல் விடும்படி ஆகிவிட்டது. அவர்கள் எப்படி இருப்பார்கள், எந்த உடை அணிந்திருப்பார்கள் போன்ற எந்த விவரமும் இல்லாமல் கதை கேட்பது விசித்திரமான அனுபவம்தான் என்றாலும், அது ஒரு அவஸ்தைதான்.

தீப்தியின் பக்கத்தில் அமர்ந்து கொண்டு, தான்தான் தீப்திக்கு முக்கியத் தோழி என்ற தகவலை ஜெயமோகனுக்கு கொடுத்துக் கொண்டு இருப்பவள் நிரஞ்சனா.

ஜெயமோகனின் அருகில் அமர்ந்து கொண்டு, அவனுக்கு உதவி ஏதும் செய்யாமல் ஆனால் உதவி செய்வது போன்ற உடல் மொழியை வெளிப்படுத்திக்கொண்டு இருப்பவள் ஷரியா, வட இந்தியப் பெண்.

இருப்பதிலேயே போதை அதிகமாக ஏறி எஞ்சாய் செய்து கொண்டு, உடைகள் கலைவதைப் பற்றி கவலைப்படாமல், உட்கார்ந்த மேனிக்கு ஆடிக்கொண்டு இருப்பவள் தாரிணி.

மீண்டும் சியர்ஸ் அடித்து ஒரு ரவுண்ட் குடித்ததும், விட்ட இடத்தை பிடிப்பதுபோல இருந்தது.வேதியியல் கூடத்தில் வேலை பார்ப்பவன் போல என்ற ஒரு வர்ணனையைப் படித்து ஏதோ நகைச்சுவை என்று கடந்து

வந்திருக்கக்கூடும். ஆனால் நகைச்சுவை அல்ல, ஏனென்றால், ஜெயமோகன் கலந்த காக்டெயில் அப்படி,

- 1.5 அவுன்ஸ் — வோட்கா
- 1 அவுன்ஸ் ஃபிரஷ் சேஜ் சிரப்
- 1 அவுன்ஸ் மாதுளை ஜூஸ், (கோல்ட் பிரஸ் ஜூஸ் மெஷின் ஜெயமோகன் வீட்டில் இருக்கிறது, விலை ரூ 48,000/——)
- 0.25 அவுன்ஸ் Cointreau (வீட்டு பார் கலக்ஷனில் உள்ளது)
- 1 அவுன்ஸ் எலுமிச்சை பழ ஜூஸ் ( ஓவராக பிழியக் கூடாது, கசக்கும்)
- 2 தேக்கரண்டி அங்கோஸ்டுரா பிட்டர்ஸ் (Angostura Bitters சூப்பர் மார்கெட்டில் கிடைக்கும் அல்லது அமேசானிலேயே ஆன்லைனில் கிடைக்கிறது. இது டிரினிடாட் — டுபாக்கோ மாகாணத்தில் தயாரிக்கப்படுகிறது, வெவ்வேறு வகையான மூலிகைகளைக்கொண்டு)
- அழகுக்கு அழகூட்டுவதுபோல, புதினா / பார்ஸ்லே போன்ற இலைகளை மேலே மிதக்க விடலாம்.

இந்த காக்டெயிலின் சிறப்பு என்னவென்றால், குடிக்க ரம்யமாக இருக்கும், கெட்ட எண்ணங்கள் அண்டவே அண்டாது. ஏழ்மை, பிணி, சமூக அவலங்கள், தாழ்வு மனப்பான்மை, பொறாமை, காரணமற்ற பயம், அவநம்பிக்கை, பொருளாதார ஏற்றத் தாழ்வுகள், கலாச்சார பிற்போக்குத்தனம் போன்று எதுவும் கிட்டவே வராது. ஆனால், போதை ஏறுவதும் தெரியாது.

இதைக் குடிக்கையில், தமிழர்களின் பாரம்பரிய பழக்கமான சைட் டிஷ் என்ற பெயரில் வெளுத்து வாங்கும் சில்லி சிக்கன், பீஃப் ஃபிரை, சில்லி எக், வாழைக்காய் பஜ்ஜி, பன்னிக்கொட்டையை ஒத்த பளபளக்கும் போண்டா போன்றவற்றைத் தின்னக்கூடாது. தின்னாலும் பிடிக்காது என்பது வேறு விஷயம். இதற்கு சைட் டிஷ் என்ற ஒரு மாயமானே தேவைப்படாது. வேண்டுமானால் ஆரஞ்சு சுளைகள், செர்ரிப்பழம், பெரிபெரி மிளகாய், கிவி பழம், ஆஸ்திரேலிய திராட்சை போன்றவற்றை ஒன்றிரண்டு நக்கிக் கொள்ளலாம்.

இப்போது அனைவரின் நடத்தையும் சொர்க்க பூமியில் மிதப்பது போலவும், உடனிருப்பவர்கள் அனைவரும் அநியாயத்துக்கு உத்தமர்கள் போலவும் உலகமே திருவிழாக் கோலமாக மாறி விட்டது போலவும் இருந்தது.

இடையில், ஆனந்த் தயாரித்துக் கொண்டு வைத்த க்ரில்ட் சிக்கனை யாரும் தொடவில்லை. ஆனால் அதன் வாசனை, இந்த காக்டெயில் குடிப்பதற்கு ஏகாந்தமாக உதவியது.

பப்பில் இருந்து வெளியே வந்தபோது ஒருத்தி ஜெயமோகனைத் தொட்டுப் பேச ஆரம்பித்து இருந்ததை மறந்திருக்கலாகாது. அவள்தான் ஷரியா. ஷரியா ஜெயமோகனின் தொடைகளைத் தட்டி, ‘‘ஷல் வீ கோ டு லான்’’ என்று கேட்டாள்.

ஜெயமோகன் தொடையில் உடை இல்லை. அவன் ஷார்ட்ஸ் மாற்றிக்கொண்டு வந்து அமர்ந்ததை கதையின் வேகம் மட்டுப்படும் என்பதால் அப்போது சொல்லவில்லை. ஷரியாவின் கை ஜெயமோகனின் தொடையில் பட்டதும் ஜெயமோகனுக்கு ஒருவித கிளர்ச்சி உண்டானது. ஷரியாவின் கை குளிர்ந்து இருந்தது. கையை அவள் நன்கு பராமரித்து இருந்ததால் அது அநியாயத்துக்கு மென்மையாக இருந்தது.

ஜெயமோகன், தீப்தியைப் பார்த்தான். தலையை மென்மையாக ஆட்டிப் போலாமா என்பது போலக் கேட்டான். தீப்தி எழுந்து கொண்டாள்.

‘‘ஓக்கே, லெட்ஸ் கோ’’ என்று ஜெயமோகன் சொன்னதும்,

‘‘வாவ், மை ஹேண்ட்ஸம்’’ என்ற ஷரியா, ஜெயமோகனின் தலையை மட்டும் அணைத்து அவன் கன்னத்தில் அழுத்தி ஒரு முத்தம் கொடுத்தாள். அப்போது ஷரியாவின் மார்பகங்கள் ஜெயமோகனின் தோள்களில் அழுந்தின. அவளை அப்படியே திருப்பிப்போட்டு, அவள் மீதேறிப் படுத்து... இப்படிப் படிப்பவர்களுக்கு தோன்றும் எண்ணங்களைச் செயல்படுத்தாமல் ஜெயமோகன் அவளின் முதுகில் தட்டிக்கொடுத்தபடி எழுந்து கொண்டான்.

‘‘ஆனந்த், எல்லாத்தையும் வெளியே மாத்து, வெளியே லைட் செட் பண்ணு, வெளிய இருக்கும் சவுண்ட் சிஸ்டம் ஆன் பண்ணு’’ என்று கட்டளைகளை அளித்தபடியே வெளியே செல்ல ஆரம்பித்தான்.

ஷரியா, நிரஞ்சனா, தாரிணி மூவரும் முன்னால் செல்ல, தீப்தி ஏனோ தயக்கமாக நின்று கொண்டிருந்தாள் .ஜெயமோகன் அவள் அருகில் சென்று ‘‘எனி இஷ்யூஸ்..?’’ என்றான்.

‘‘நோ நோ…’’ என தீப்தி மறுக்க,

‘‘ப்ளீஸ் டெல்…’’ என்றான் ஜெயமோகன்.

‘‘சாரி டு சே, லைட்டா வாமிட் வர்ற மாதிரி இருக்கு’’ என்று தீப்தி சொல்ல, ‘‘இவ்ளோதானா..? வெயிட்’’ என்ற ஜெயமோகன் ஆனந்தை அழைத்து, ‘‘வெளில அவங்களைப் பாத்துக்கோ, அரேஞ்ச்மெண்ட் எல்லாம் பண்ணிடு’’ என்று சொல்லிவிட்டு தீப்தியை அழைத்துக்கொண்டு முதல் மாடியில் இருக்கும் தன் அறைக்குச் சென்றான்.

தீப்தி போதையில் தள்ளாடவில்லை. ஆனால், ரெஸ்ட் ரூம் போவதற்கு முன்னாலேயே வாந்தி எடுத்தாள். அதில் பாதி ஜெயமோகன் மேல் வழிந்தது.

அந்த வாந்தி ஜெயமோகனுக்கு துளி நாற்றமும் அடிக்கவில்லை.

# ஷரியா – நிரஞ்சனா – தாரிணி

ஷரியா வெளியே வந்ததும், நல்ல மூடில் இருந்ததால் இசை ஒலிப்பதற்கு முன்பாகவே ஆட ஆரம்பித்தாள். ஆடுதல் என்றால் ஒரே இடத்தில் நின்று ஆடுதல் அல்ல, புல் தரையில் நகர்ந்து கொண்டே ஆட ஆரம்பித்தாள்.

நின்று கொண்டே ஆடிக்கொண்டிருந்த நிரஞ்சனாவை “வாடி இங்கே” என்று இரு கைகளையும் தூக்கி ஆள்காட்டி விரல் மற்றும் நடுவிரலால் அழைத்தாள்.

நிரஞ்சனாவும் ஆர்வத்தில் வேகமாக ஓடி ஷரியாவுடன் சேர்ந்து ஆட ஆரம்பித்ததும் ஷரியா அவள் கைகளைப் பற்றிக்கொண்டு சுற்றிச்சுற்றி ஆட ஆரம்பித்து, கால் தடுக்கி இருவரும் புல்வெளியில் விழுந்தனர்.

நீண்ட நாட்கள் சரியான பராமரிப்பு இல்லாத புல்வெளியில் நெருஞ்சி முட்கள் இருந்தன. விழுந்ததோடு எழுந்திருந்தால் பிரச்னை இல்லை. எழுந்திருக்கத்தான் முயன்றார்கள், எனினும் உருண்டார்கள்.

நிரஞ்சனா, திருமணமாகிக் கணவனைப் பிரிந்து வாழ்ந்து கொண்டிருப்பவள். கணவன் கட்டுமஸ்தான நன்கு சம்பாதிக்கும் ஆள்தான். எனினும், இவர்கள் பிரிவுக்கு முழுமுதற்காரணம் குட்காதான் என்றால் யாராலும் நம்ப முடியாது. குடியும் குட்காவும் சேர்ந்து அவர்கள் தாம்பத்திய வாழ்க்கைக்கு இடுப்புக்கு கீழே ஸ்பீட் பிரேக்கர் போட, நிரஞ்சனாவின் மார்பகம்தான் மாட்டியது. மொத்த தாம்பத்திய வாழ்க்கையையும் அவன் மார்பகத்திலேயே வாழ்ந்துவிட அனைத்து சுமைகளையும் நிரஞ்சனாவின் மார்பகமே தாங்கித் தாங்கி நன்கு பண்பட்டு, முதிர்ந்து, சங்ககாலத்து டெல்டாப்பகுதி நெற்கதிர் போல ஆனது.

வாழ்வின் பாரங்கள் போதாது என்று, இப்போது நிரஞ்சனா விழுந்த பாரத்தையும் உருண்ட பாரத்தையும் அதுவே தாங்கியதால், பல நெருஞ்சி முட்கள் அவளின் மார்பகங்களில் ஒட்டிக்கொண்டன. லோ கட் ஷாஃப்டான டிஷர்ட்டும் இதற்கு இரு காரணம்.

ஷரியாவுக்கு பிருஷ்டங்களில் நெருஞ்சி முட்கள் பதம் பார்த்தன. ஷரியாவுக்கு பாய் ஃபிரண்டு இருக்கிறான். எனினும், ஷரியாவின் பிருஷ்டங்களுக்கு பின்கதைகள் ஏதும் இல்லை. அது சுயம்பு; தானாகவே வளர்ந்து திரண்டு வாழ்க்கையில் பின்னேறி இருந்தது. இவர்கள் உருண்டு புரண்டு எழுந்திருக்க முயற்சிக்கச் செய்யும் சமயத்தில் ஆனந்த் சரியாகப் பாடலைப் போட்டான். ஆனந்த்துக்கு ஆங்கிலம் தெரியாது. எனினும், அவ்வப்போது ஜெயமோகன் போடும் பாடல்களைக் கேட்டுக் கேட்டு ஆனந்தே ஒரு டிஸ்க் ஜாக்கியாக மாறிருந்தான்.

தாரிணி கையிலிருந்த கோப்பையை கீழே வைத்து விட்டு ஓடி, எழ முயற்சித்துக் கொண்டிருந்தவர்களின் அருகில் அமர்ந்து கொண்டாள். நிரஞ்சனா தன் மார்பகங்களில் இருந்து நெருஞ்சி முற்களை எடுக்க முயற்சித்துக்கொண்டிருக்க, தாரிணி அவளுக்கு உதவினாள்.

தீப்தியும் ஜெயமோகனும் அப்போது வெளிவந்தனர். தாரிணி நிரஞ்சனாவுக்கு மார்முள் எடுக்க உதவும் காட்சி, ஒரு குரங்கு இன்னொரு குரங்குக்கு பேன் பார்க்கும் காட்சியை ஒத்திருந்ததாக ஜெயமோகனுக்கும் தீப்திக்கும் தெரிந்தது. முட்களை எடுத்துவிட்டு அனைவரும் ஒருசேர அமர்ந்ததும் ஜெயமோகன் மீண்டும் ஒரு ரவுண்ட் கலந்து அனைவருக்கும் கொடுத்தான். தீப்திக்கு மட்டும் மிகமிக மைல்டாகக் கலந்து கொடுத்தான். அதில் நிறைய புதினா இலைகளையும் எலுமிச்சை சாறையும் கலந்து இருந்தான்.

அந்த ரவுண்டில் பாதி முடிந்ததும் ஷரியாவுக்கு போதை ‘சரக்’கெனத் தூக்கி அவளின் அதிகபட்ச அளவைத் தாண்டியது. இசையும் அதை இன்னும் தூக்கிக்கொடுக்க, தான் பூக்கள் பூத்துக்குலுங்கும் விண்வெளியில் இருப்பது போலவும் உணர்ந்தாள். இதை அவள் மறுநாள் லஜ்ஜையுடன் தீப்தியிடம் கூறினாள் – “ சாரி டீ, போதை ஏர்னதே தெரியலை. எதோ ஃப்ளவர்ஸுக்கு நடுவில், ஸ்பேஸ்ல இருக்குற மாதிரி இருந்துச்சி டீ, எனக்கே தெரியாம என்னன்னமோ பண்ணிட்டேன்”.

ஆட ஆசைப்பட்ட ஷரியா எழுந்தாள்; ஆனால், கால்கள் நினைத்தது போல ஒத்துழைக்கவில்லை. அவை ஒத்துழைக்க மறுத்ததும் தெரியவில்லை. மூளை, ஆட முடியாத அசைவுகளை எல்லாம் கட்டளையிட, கால்கள் அந்த

கட்டளைகளைத் தனக்கு வருவது போல நிறைவேற்ற, மூளை நினைத்த அசைவுகளையே கால்கள் ஆடுவதாக மூளை நினைத்துக்கொள்ள, தான் ஒரு அற்புதமான நடனம் ஆடிக்கொண்டிருப்பதாக ஷரியா நினைத்திருக்கலாம். ஏனெனில், உண்மையில் ஷரியா சாணியைப் பிசைந்து சுவற்றில் ராட்டி தட்டுவது போல ஏதோ செய்து கொண்டிருந்தாள். அதைத் தீவிரமான முகபாவத்துடன் கண்களை உருட்டிப், புருவத்தை ஏற்றி இறக்கி செய்து கொண்டிருந்தாள். அனைவரும் போதையில் இருந்ததால் அது பெரிய விநோதமாக யாருக்கும் தெரியவில்லை.

நிரஞ்சனாவும் எழுந்தாள். ஷரியாவின் புதிய நடன அசைவால் பாதிக்கப்பட்டு மனவெழுச்சி அடைந்த நிரஞ்சனா, ஷரியாவை விட பிரமாதமாக அந்த நடனத்தை முன்னெடுக்கத் தலைப்பட்டாள். இந்தப் போட்டியால் நிலைகுலைந்த ஷரியா, ஜெயமோகனை ஆட அழைத்தாள்.

“இட்ஸ் ஓக்கே, ஐ வில் ஜாயின் சூன்” என்ற ஜெயமோகனின் வார்த்தைகள் ஏதும் ஷரியாவின் மண்டையில் ஏறவில்லை. ஜெயமோகன் மறுக்கிறான் என்பது மட்டும் ஷரியாவுக்குத் தெரிந்தது. ஜெயமோகனின் அருகில் வந்த ஷரியா, குனிந்து ஜெயமோகனின் கையைப் பிடித்து இழுத்து, இழுப்பதற்கு முன் பிடிமானத்தில் அழுத்தம் இல்லாமல் பிடித்ததால், அது வழுக்கிக்கொண்டுபோக, பேலன்ஸைப் பறிகொடுத்து ஜெயமோகன் மீது விழுந்தாள்.

விழுந்து கிடப்பவர்கள் உடனே எழுந்த கொள்ள முயற்சித்தார்கள். அது அவ்வளவு சுவாரசியமாக இல்லாததால் எப்படி விழுந்தார்கள் என்பதைப் பார்த்து விடலாம்.

நிலை தடுமாறிய ஷரியா, இரண்டு கண்களும் ஒரே நேரத்தில் இமைக்கும் மாத்திரையில் ஒரு கால் வேரோடு பிடுங்கப்பட்டு, அதை எதிர்பாராத இன்னொரு கால், ஒரு கண் மூடி இன்னொரு கண் மட்டும் இமைக்கும் நேரத்தில், பூமியுடனான உறவை முறித்துக்கொள்ள, மிடில் க்ளாஸ் வீட்டிலிருக்கும் ஸ்டீல் பீரோவின் மீது தவமிருக்கும் பெரிய அழுக்கு மூட்டை தவம் கலைந்துத் தானாக விழுவதுபோல விழுந்தாள்.

யாராவது மேலே விழுவார்கள் என்று யாராவது எதிர்பார்ப்பார்களா..? இதை எதிர்பாராத (!) ஜெயமோகன், அவளுடைய டெட் வெயிட்டைத் (மரண எடை என்று சொல்லலாமா) தாங்க முடியாமல் அவனும் மல்லாந்தான்.

இப்போது, ஜெயமோகனின் முகத்தில் ஷரியாவின் வயிறு இருந்தது. மாலை வேளையில் பரோட்டா கடையில் பிசைந்து வைத்திருக்கும் மொத்த மாவை எடுத்து ஜெயமோகனின் முகத்தில் அடித்ததுபோல இருந்தது. இத்தனைக்கும், ஷரியா குண்டான பெண் அல்ல; பூசினாற் போன்ற உடல்வாகுதான்.

ஜெயமோகன் மூச்சுமுட்ட முகத்தால் நெம்பினான். வாழ்விலேயே முதல் முறையாக முகத்தால் நெம்புவதால், அதை அவனால் சரிவர செய்ய முடியவில்லை. அந்த போதையிலும் இந்த சைகை ஷரியாவுக்குக் கிச்சுகிச்சு மூட்ட, சிரித்து புல்தரையில் இருந்த புழுதியைப் பறக்க விட்டாள். இரண்டு கைகளையும் தரையில் அமுக்கித் தண்டால் எடுப்பதுபோல எழுந்து, மீண்டும் விழுந்து வயிறை அவன் முகத்திலேயே பார்க் செய்தாள்.

தீப்திதான் இந்த கர்ண கடூரத்தை காணச் சகியாமல் ஷரியாவைப் பக்கவாட்டில் தள்ளிவிட்டாள். பக்கத்தில் உருண்ட ஷரியா, ஏகாந்த நிலைக்குப் போனாள். ஜெயமோகன் மீது ஒரு கையைப் போட்டுக்கொண்டு, ஒரு காலைப் போட்டுக்கொண்டு, ஜெயமோகனின் மீசையைப் பிடித்து இழுத்துக்கொண்டே பேச ஆரம்பித்தாள்.

‘‘சாரிடா, எனக்கு இப்பிடி குடிக்கணும், கூத்தடிக்கணும்னு எல்லாம் ஆசை இல்லைடா. புடிக்காமதான் குடிக்கறேன். எப்பவாச்சும் ஜாலியா குடிப்பது ஓக்கே... ஆனா, இப்பல்லாம் ஓவரா குடிக்கிறேன். எனக்கு நிறைய பாய் ஃபிரண்ட்ஸ் எல்லாம் இல்லை. எனக்கு ஒரே ஒரு ஆள் போதும். எனக்கே எனக்குன்னு ஒரு ஆள். என்னை மட்டும் பாத்துக்கிறதுக்கு, என்னை மட்டும் லவ் பண்றதுக்கு, என் கூட மட்டும் சண்டை போடறதுக்கு, என் கூட மட்டும் ஊர் சுத்தறதுக்கு, எனக்குன்னு ஒரு ஆள் போதும். அதை ஏண்டா புரிஞ்சிக்க மாட்டேங்கிற..?’’

‘‘இதுக்கு மேல எதுவும் எனக்கு செய்ய வேண்டாம். இவ்ளோ சிம்பிளா தான கேக்கறேன். இதை செய்ய முடியாதா உன்னால..? உன்னால என்ன உன்னால..? இந்த உலகத்துல இப்டி இருக்குறதுக்கு ஒரு ஆள் கூட

இல்லையா..? இதுல என்னடா கஷ்டம் உங்களுக்கு..? எனக்கு பல பேர் கூட சுத்தணும், பல பேர் கூட டேட்டிங்க் செய்யணும்னு எல்லாம் எந்த ஆசையும் இல்லைடா..!''

''நாலு பேர் கூட படுத்துருக்கேன்னு நான் சொன்னதையே எப்ப பாத்தாலும் சொல்லி சொல்லி காட்டி சண்டை போடுறியே, அந்த நாலு பேரையும், இவன்தான் என் ஆளுன்னு நெனச்சிதான படுத்தேன். சும்மா செக்ஸுக்காகவா படுத்தேன்..? நீதான் தேவதை, நீ என் அம்மா மாதிரின்னு, என் உசுரே ஒனக்குதான்னு சொல்லிட்டு இருந்தவனுங்க எல்லாம், செக்ஸுக்கு அப்புறம் மாறினா நான் என்னடா செய்வேன்..? செக்ஸுக்கு அப்புறம் நான் இன்னும் இன்னும் நெருங்கி வரேன். இன்னும் பாசத்தை கொட்றேன். ஒரு குழந்தை மாதிரி நெனச்சிகிட்டு, பேபி பேபின்னு கொஞ்சறேன். பேபிக்கு செய்ற எல்லாத்தையும் செய்யறேன். ஆனா, நீ மட்டும் ஏன் செக்ஸுக்கு அப்புறம் கடுப்படிக்கிற..? செக்ஸுக்கு அப்புறம் ஏன் என்னை தூரக்க தொரத்துர.. ? செக்ஸுக்கு அப்புறம் ஏன் மெசேஜ் குறையிது.. ? செக்ஸுக்கு அப்புறம் ஏன் போன் எடுக்க மாட்டேங்கிற..? செக்ஸுக்கு அப்புறம் ஏன் என்னை விட்டுட்டு ஃபிரண்ட்ஸுங்க கூட சுத்துற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் கொஞ்ச மாட்டேங்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் போட்டோ அனுப்புன்னு கேக்க மாட்டேங்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் உன்னைப் பத்தின அப்டேட்ஸ் சொல்ல மாட்டேங்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம், நடக்கும்போது கை புடிச்சிக்க மாட்டேங்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் நான் தூங்கும்போது முத்தம் குடுக்க மாட்டேங்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் என் காலை அமுக்கிவிட மாட்டேங்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் எப்ப பாத்தாலும் மொபைல் நோண்டிட்டு இருக்க..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் தனியா குடிக்கிற..?''

''செக்ஸுக்கு அப்புறம் ஏன் என்னைத் திட்ட ஆரம்பிக்கிற..?''

‘‘செக்ஸுக்கு அப்புறம் ஏன் அம்மா அம்மான்னு அம்மாவைப் பத்தி என்கிட்ட புலம்பற..?’’

‘‘செக்ஸுக்கு அப்புறம் ஏன் என் ஃபிரண்ட்ஸ் பத்தி என்கிட்ட பேசிட்டே இருக்க..?’’

‘‘செக்ஸுக்கு அப்புறம் ஏன் ஃபோர் ப்ளே பண்ணாம நேரடியா என் பேண்டியை கழட்டற..?’’

‘‘ஏண்டா இப்பிடி பண்ற..?’’

‘‘எனக்கும் தேவடியாளுக்கும் என்னடா வித்தியாசம்..?’’

‘‘செக்ஸ் பண்ணனும்னு தேவடியாவுக்கு பணம் குடுக்குற, எனக்கு அன்பு, பாசம், காதல் எல்லாம் குடுக்கறியா..? செக்ஸ் முடிஞ்சதும் நிறுத்திடுவியா..? இதையெல்லாம் செஞ்சி காட்டி நீதான என்னைப் பழக்கப்படுத்தின..? நீ நிறுத்திட்டா நான் என்ன செய்வேன்..? அதைத் தேடித் தேடிப் போய் ஏமாந்துகிட்டு இருக்கேண்டா. எல்லார் கிட்டயும் படுத்து படுத்துதாண்டா தெரிஞ்சிக்க வேண்டியிருக்கு.’’

‘‘... படுத்து படுத்துதாண்டா, தேவடியாப் பசங்களா... படுத்து படுத்துதாண்டா...’’

‘‘எனக்கு ஒரு ஆள் போதும்டா, ஒரு குழந்தை, ஒரு குடும்பம், எல்லாம் ஒண்ணு போதும். ஒண்ணு போதும்டா...’’

‘‘ப்ளீஸ்டா புரிஞ்சிக்கோடா...’’

‘‘மெண்டல் ஆயிட்டு இருக்கேண்டா...’’

‘‘சீக்கிரம் செத்துடுவேண்டா...’’

# தீப்தி – ஜெயமோகன்

இசை நிற்காமல் ஓடிக்கொண்டிருக்க, ஷரியா பேசிக்கொண்டே கொஞ்சம் கொஞ்சமாக கண்கள் சொருகிக்கொண்டிருக்க, நிரஞ்சனாவுக்கும் தாரணிக்கும் கண்கள் கலங்கிக்கொண்டிருக்க, கொண்டாட்டமாக ஆரம்பித்த இந்த இரவு ஒரு அபத்த நாடகமாக முடிவுக்கு வந்து கொண்டிருக்கும் நேரத்தில், தீப்தி எழுந்து கொண்டாள். ஷரியாவைத் தூக்கினாள்; தாரிணி உதவி செய்தாலும் ஷரியாவைத் தூக்க முடியவில்லை. முழுமையான போதையுறக்கத்துக்குச் சென்றிருந்தாள்.

ஜெயமோகன் எழுந்து ஷரியாவைச் சிரமப்பட்டு தோளில் தூக்கிப் போட்டுக்கொண்டு அறைக்குச் சென்றான். தாரிணியும் நிரஞ்சனாவும் தொங்கிக்கொண்டிருக்கும் ஷரியாவின் கால்களை ஏனோ பிடித்துக்கொண்டு பின்னாலேயே சென்றனர். ஜெயமோகன் ஷரியாவை படுக்கையில்போட, நிரஞ்சனாவும் தாரிணியும் அதிலேயே படுத்துக்கொண்டனர்.

ஜெயமோகனும் தீப்தியும் லிவிங் ரூம் சோ.ஃபாவில் வந்து அமர்ந்தனர். ஜெயமோகன் தலையைச் சிலுப்பிக்கொண்டான்.

“நீயும் படுத்துக்கறியா தீப்தி..?” என்றான்.

“ரொம்ப டிஸ்டர்பிங்கா இருக்கு ஜெயமோகன், ஒன் மோர் டிரிங்க்” என்றாள் தீப்தி.

மிகவும் மிதமான இன்னொரு டிரிங்கை இருவரும் சுவைத்துக்கொண்டு இருக்கும்போது, “இவளுங்க ஏன் இப்படி ஓவர் எமோஷனல், ஓவர் அட்டாச்மெண்ட் ஆயிடறாளுங்க..? எவ்ளோ பெயின் பாத்தியா ஜெயமோகன்” என்றாள்.

இருவரும் எப்போது ஒருமைக்கு மாறினார்கள் என்பது இருவருக்கும் தெரியவில்லை.

“யெஸ், ரொம்ப பாவமா இருந்திச்சி” என்றான் ஜெயமோகன்.

“எக்கச்சக்க லவ் ஃபெயிலியர்ஸ், பிரேக் அப்ஸ்; ஆனாலும், திரும்பத் திரும்ப எவன் கூடவாவது ரிலேஷன்ஷிப், ச்சீ ஏன் இவ்ளோ எமோஷனல் முட்டாளா இருக்காளுங்க..?” என்றாள் தீப்தி.

ஜெயமோகனுடன் ரிலேஷன்ஷிப்புக்குள் செல்லப்போவதோ அவனைப் பிரிந்து அடுத்தடுத்து, நான்கு பிரேக் அப்களை சந்திக்கப் போவதோ அப்போது தீப்திக்குத் தெரிந்திருக்காது. அவள் கொஞ்சம்கூட கற்பனையும் செய்தாளில்லை.

ஜெயமோகன் அமைதியாய் இருக்க...

“இதுக்குத்தான், நான் யார் கூடவும் ரிலேஷன்ஷிப்பே வச்சிக்கறது இல்லை” என்றவள் தொடர்ந்தாள்...

வழக்கமாக, தன்னைப்பற்றி தானாகவே புதிய ஆட்களிடம் பேசுபவள் இல்லை தீப்தி. போதை கொஞ்சம் அதிகம் ஆனதால், ஜெயமோகன் பலநாள் பழகிய நண்பன் போலத் தோன்றியது தீப்திக்கு. இதை அவள் மறுநாள் ஜெயமோகனிடம் சொல்லவும் செய்தாள்.

“ஜஸ்ட் ஒன் நைட் பழகியது, ஒரு மாசம் கூட இருந்தது போல இருக்கு ஜெயமோகன். அவ்ளோ இன்ஸிடன்ட்ஸ். திஸ் நைட் வாஸ் சோ டென்ஸ்” — இதை சொல்லி விட்டு, ஜெயமோகனைக் கட்டிப்பிடித்து மீண்டு கையை ஆட்டி விட்டுத் தன் ஹோட்டலுக்குள் சென்றாள்.

அந்த பலநாள் பழகிய ஃபேக் ஃபீலிங்கை மது கொடுத்ததால், "எனக்கு பாய் ஃபிரண்டே கிடையாது தெரியுமா..?" என்றாள் ஜெயமோகனைப் பார்த்து.

"நிஜமாவே எதிர்பாக்கலை, உன்னைப்போல அழகான பொண்ணுக்கு லாரி லாரியா வந்து குவிய்வானுங்களே" என்றான் ஜெயமோகன் . மேலும் "எனக்கு உன்னை ரொம்ப பிடிச்சிருக்கு தீப்தி" என்றவன், தன் கைகளை அவள் தலை மீது கேஷுவலாக வைத்தான்.

வழக்கமாக இந்தச் செய்கையை எல்லாம் எள்ளி நகையாடும் தீப்திக்கு இன்று இது மிகவும் இயல்பானதாகவும், தனக்கு உவப்பானதாகவும் இருப்பதாகப் பட்டது.

"இந்த காலத்துல பாய் ஃபிரண்டோ, ரிலேஷன்ஷிப்போ இல்லாம இருக்குறது கஷ்டம் இல்லையா?" என்றான்.

"அதெல்லாம் ஒரு கஷ்டமும் இல்லை. இ ஹேவ் ஃபிரெண்ட்ஸ். மேல் ஃபிரண்ட்ஸ், ஃபீமேல் ஃபிரண்ட்ஸ், க்ளாஸ் மேட்ஸ், காலேஜ் மேட்ஸ், கலீக்ஸ்... ஐ ஆம் ஹேப்பி. ஐ டோண்ட் ஹேவ் எனி இஷ்யூஸ்" என்றாள் தீப்தி.

‘‘சோ, யூ டோண்ட் ஹேவ் ப்ளான் ஃபார் ரிலேஷன்ஷிப்.’’ — ஜெயமோகன்.

‘‘நோ நோ, அப்படி இல்லை. ஓவர் எமோஷனலா யார் கிட்டயும் மாட்டிக்கக் கூடாது. என்னை இதுவரைக்கும் யாரும் இம்ப்ரெஸ் பண்ணலை. என்னோட ஆளை நான் இன்னும் மீட் பண்ணலை. எனக்கு பெரிசா எக்ஸ்பெக்டேஷன் கிடையாது. சிம்பிள் லைஃப், சிம்பிள் லவ், சிம்பிள் ரிலேஷன்ஷிப்.’’ — தீப்தி.

‘‘தெளிவா இப்படி ஒரு டிஃபனிஷனோட எப்படி ஒரு ரிலேஷன் ஷிப்பை ஆரம்பிக்க முடியும்..? அப்புறம் எல்லாமே சிம்பிள் சிம்பிள் சிம்பிள்னா, இப்போ தியரட்டிக்கலா அப்படி தோணலாம். ஆனா ப்ராக்டிக்கலா அப்படி இருக்க முடியாது. சிம்பிள் ஆட்டோமேட்டிக்கா காம்ப்ளெக்ஸ் ஆகும்.’’ — ஜெயமோகன்.

‘‘அந்த காம்ப்ளெக்ஸ்தான் எனக்கு எரிச்சலே. என் எல்லா ஃபிரண்ட்ஸையும் பாக்கறேன். எல்லாருக்கும் காம்ப்ளெக்ஸ் ரிலேஷ்ன்ஷிப். எல்லாருக்கும் பெயின். ச்சீ இது என்னா லவ்வா இல்லை டார்ச்சரா..?’’ —தீப்தி.

‘‘இல்ல தீப்தி, சிம்பிளா இருந்தா அது லவ் இல்லை. லவ்வுன்னா காம்ப்ளெக்ஸ் ஆகணும். சண்டை போடணும். அந்த சண்டை எதுக்கு தெரியுமா, ரெண்டு பேருக்குள்ள உறவை பலப்படுத்துறதுக்கு. நான் உனக்கு எவ்ளோ முக்கியம், நீ எனக்கு எவ்ளோ முக்கியம், நான் உன்னை எந்த இடத்துல வச்சிருக்கேன், நீ என்னை எந்த இடத்துல வச்சிருக்க, நம்ம லவ்வோட வேல்யூ என்ன, நம்ம காதலுக்கு நாம எவ்ளோ முக்கியத்துவம் குடுக்கறோம், லைஃப்ல நம்ம லவ்வோட ஈக்குவேஷன் என்னனு முடிவு பண்றதுக்குத்தான் இவ்ளோ சண்டை, இவ்ளோ பெயின்.’’ — ஜெயமோகன்.

“எங்க..? இந்த சண்டை போட்டு போட்டுதான் பிரேக் அப் ஆயிடுதே. மெண்டல் ஆயிடறாளுங்களே...” — தீப்தி.

“அது தப்புதான். சண்டையை தாங்குற அளவுக்கு மெண்டல் ஸ்டிரென்த் இருக்குறவங்கதான் சண்டையை ஆரம்பிக்கணும். எப்ப சண்டையை முடிச்சி கட்டிப்பிடிச்சிக்கணும்னு தெரியணும். இந்த சண்டையே உன்னை இன்னும் இறுக்கி பக்கத்துல வச்சிக்கணுங்கறதுக்காகத்தான்னு சொல்லத் தெரியணும்.” — ஜெயமோகன்.

“சண்டை சச்சரவு இல்லாம லவ்வே பண்ண முடியாதா..?” —தீப்தி.

“முடியாது. லவ்ல ஒரு மேட்நெஸ் இருக்கணும். ஃப்ளோ சாட் போட்டு, அல்காரித்தம் எழுதி, ரோல் டிஃபைன் பண்ணி, ரெஸ்பான்ஸிபிளிட்டீஸ் தெளிவு படுத்தி, பவுண்டரி செட் பண்ணி எல்லாம் லவ் பண்ண முடியாது தீப்தி. ஒவ்வொரு லவ்வும், ஒவ்வொரு ரிலேஷன்ஷிப்பும் ரொம்ப யூனிக்கானது. அதுக்கான கேரக்டரை சண்டை போட்டு, அழுது உருண்டு பொரண்டு, பெயின் அனுபவச்சிதான் செட் பண்ணனும். அடுத்தவங்க ரிலேஷன்ஷிப்பை பாத்து கம்பேர் பண்ணக்கூடாது.” —ஜெயமோகன்.

“எதோ புதருக்குள்ள ஆடும் மேஸ் கேம் மாதிரி இருக்கு. எனக்கு டீஸண்டா ஒரு லைஃப். எனக்கு பிடிச்ச மாதிரி ஒரு ஹேண்ட்ஸமான பையன், ஒரு குழந்தை, பெரிய வீடு, சின்ன பிஸினஸ், ஊர் ஊரா சுத்தறது. எனக்கான இண்டிபெண்டன்ஸி, அவ்ளோதான் எனக்கான லைஃப்.” —தீப்தி.

படிப்பவர்களுக்குத் தெளிவாகப் புரியவேண்டும் மற்றும் அலுப்புத் தட்டக்கூடாது என்று அவர்கள் போதையில் உளறியவற்றை கவனமாகத் தொகுத்ததுதான் மேலே படித்தது. உண்மையில் தீப்தி, தான் சொன்னதை பிட் பிட்டாகப் பேசினாள். சொன்னதையே நான்கு முறை சொல்லிக்கொண்டிருந்தாள்.

ஜெயமோகன் ஒவ்வொரு வாக்கியத்தையும் ஜென் துறவி ரேஞ்சுக்கு இழுத்து இழுத்துச் சொல்ல வந்ததை மறந்து, ஆரம்பித்த வாக்கியத்தை மறந்து, எதிலேயோ மீண்டும் கோர்த்துச் சொன்னதையே ஏழெட்டு முறை சொல்லி, ஒவ்வொரு முறையும் “புரியிதா... புரியிதா...” என்று வேறு கேட்டுக்கொண்டிருந்தான்.

ரவுண்ட் முடிந்து இருந்தது.

‘‘படுத்துக்கறியா தீப்தி’’ என்றான் ஜெயமோகன். அவனுக்கும் தூக்கம் கண்ணைச் சுற்றிச் சுற்றி நர்த்தனம் ஆடியது. இரண்டு இமைகளிலும் ஒரு கோலிக் குண்டை கட்டிப் போட்டது.

‘‘யெஸ், தூங்கலாம்" என்று எழுந்த தீப்தி, நிற்க முடியாததை உணர்ந்தாள். தள்ளாடியது கால்கள்; சோஃபாவைப் பிடித்துக் கொண்டாள்.

தீப்தி தள்ளாடுவதை கவனித்துவிட்ட ஜெயமோகன், அவளருகில் சென்று, அவள் கையைப் பிடித்துத் தானும் தள்ளாடினான்.

தீப்தி சிரித்தாள். ‘‘ரெண்டு பேருக்கும் போதை அதிகமாயிடுத்து" என்றாள்.

‘‘ஆமாம்" என்று ஜெயமோகனும் சிரித்தான்.

தலையைச் சிலுப்பிக்கொண்டு கொஞ்சம் போதையை வெளியேற்றிய ஜெயமோகன், தீப்தியை நன்கு பிடித்துக்கொண்டு மாடி ஏறினான். மாடி ஏறும்போதே தீப்திக்கு தலை தொங்க ஆரம்பித்தது. ஜெயமோகனின் தோளில் தீப்தியின் தலை சாய்ந்து, தீப்தி மயக்கத்துக்குப் போக, அதையுணர்ந்து ஜெயமோகன் அவளைத் தூக்கினான். ஜெயமோகனும் நல்ல போதையில் இருந்ததால் நிலை தடுமாறி கீழே விழுந்தான்.

ஏறியது நான்கு படிகள்தான் என்பதால், பெரிதாக அடி படவில்லை. போதையில் இருந்ததால் வலியும் தெரியவில்லை. தீப்தி கீழே விழுந்ததே தெரியாமல் தூங்கிக்கொண்டு இருந்தாள். காக்டெயில் என்பதாலும் வழக்கமாகக் குடிப்பதைவிட இரண்டு மடங்கு அதிகம் குடித்ததாலும் நீண்ட நேரம் பேசிக்கொண்டும் ஆடிக்கொண்டும் இருந்துகொண்டு குடித்ததாலும் எல்லோரும் மட்டையானார்கள்.

ஜெயமோகன் எழுந்து வாஷ் பேசின் அருகே சென்று, முகம் கழுவிக்கொண்டு, இயந்திர மனிதன் போல நடந்து வந்து மீண்டும் தீப்தியை ஒருவழியாகத் தூக்கித் தரைத்தளத்தில் இருக்கும் ஒரு அறைக்கே கொண்டு சென்று படுக்கையில் கிடத்தினான். அரை போதையில் தீப்தி ஜெயமோகனின் கழுத்தை வளைத்துக் கட்டிக்கொண்டாள். விடுவித்துக்கொண்டால், மீண்டும் வளைத்து இழுத்தாள். ஒரு கால்ச்சிரிப்பு அவள் உதட்டில் தொக்கிக்

கிடந்தது. ஜெயமோகன் தன் மொபைலை எடுத்து மணி பார்த்தான்; தீப்தி அவன் சட்டைக்காலரை பிடித்திழுத்து அவன் கழுத்தைத் தன் பக்கம் இழுத்தாள். ஒரு திருட்டு முத்தத்தை அவளின் உதடுகளில் விதைத்து விட்டு அவளிடமிருந்து விடுவித்துக்கொண்டு, அந்த அறையில் கிடந்த சோ.ஃபாவில் படுத்ததுதான் தெரியும்; மலையேறினான் ஜெயமோகன்.

# ஜெயமோகன்— தீப்தி

கா லையில் ஒவ்வொரு உடலாக எழுந்து சுதாரித்துக் கண்ணைக் கசக்கிக்கொண்டன. அவசர அவசரமாக ரெஸ்ட் ரூம் ஓடி, வெளியே வந்து டாக்ஸி புக் செய்து பறந்தன. கடந்த இரவின் குற்றவுணர்வு மனம் முழுவதும் உடல் முழுவதும் புரட்டியெடுத்தன.

தீப்தி எழுந்து ஜெயமோகன் சோ.ஃபாவில் தாறுமாறாகக் கிடப்பதைப் பார்த்தாள். அவளைத் தூக்கிக்கொண்டு வந்துதான் போட்டிருப்பான் என்பது ஒருமாதிரியாக உணர்ந்து வெட்கச் சிரிப்பு எட்டிப்பார்த்தது. அறையை விட்டு வெளியே வந்ததும் ஆனந்தின் மனைவி துடைத்துக் கொண்டு இருந்தாள்.

‘‘டீ சாப்படறீங்களாம்மா..?" என்றாள்.

டீ குடித்து முடித்து ரெஸ்ட் ரூம் சென்று குளித்து முடித்து வரும்வரை ஜெயமோகன் சோ.ஃபாவில் கிடந்தான்.

‘‘என்ன சாப்படறீங்க..? இட்லி, பூரி, தோசை..." என்றாள் ஆனந்தின் மனைவி.

‘‘இட்லி போதும்மா" என்று தீப்தி சொன்னதும், ‘‘வடை வேணுமா..?" என்றாள்.

தனக்கு வடை வேண்டுமா, வேண்டாமா என்று குழம்பிய தீப்தி, "கொஞ்சமா வடை போதும்" என்றாள்.

'கொஞ்சமா வடை' என்றால் என்ன என்று குழம்பியபடியே சென்றாள் ஆனந்தின் மனைவி.

இந்தப் பேச்சுச் சத்தங்களைக் கேட்டு எழுந்த ஜெயமோகன், நொடியில் அனைத்தையும் உணர்ந்துகொண்டு, வெளியே வந்து, "நல்ல உறக்கமா தீப்தி..? குட் மார்னிங்க்..!" என்றான்.

"குட்மார்னிங்க் ஜெயமோகன்" என்ற தீப்தி, "தூக்கம் போதுமா..?" என்றாள்.

"போதும்... போதும், குளிச்சிட்டு வந்துடறேன்" என்று மாடிக்கு ஓடினான். மீண்டும் கீழே வரும்போது உடை உடுத்திக்கொண்டு, தீப்திக்கு ஒரு செட்

உடை எடுத்து வந்தான்.

"இது செட் ஆனா மாத்திக்கோங்க, செட் ஆகும்னு நினைக்கிறேன்" என்றான்.

“யார் டிரஸ் இது..?" —தீப்தி.

“ஹலோ, புதுசு... Tag கூட இருக்கு பாருங்க." —ஜெயமோகன்.

"ஓ புதுசா..? யாருக்குங்க வாங்கி வச்சி இருந்தீங்க..?" —தீப்தி.

இரவு ஒருமையில் பேசிய இருவரும் மீண்டும் மரியாதையாக 'ங்க ங்க' போட்டு பேச ஆரம்பித்தனர்.

“யாருக்குன்னு தெரியாமலேயே வாங்கி வச்சி இருந்தேன். உங்களுக்குன்னு தெரிஞ்சி இருந்தா, இன்னும் பெட்டரா இன்னும் நல்லதா வாங்கி இருப்பேன்."

“சைஸ் சரியாதான் இருக்கும் போலருக்கு. எப்படி சரியா வாங்கி வச்சிருக்கீங்க..? நிறைய பொண்ணுங்க இங்க வந்து தங்குவாங்களா..?”

“இல்ல இல்ல, எப்பவாவதுதான். இது ஒண்ணு மட்டும் இல்லை, வேற வேற சைஸ்ல பத்துப்பதினைஞ்சி வாங்கி போட்டு இருக்கேன்.”

“ஓ, சைஸ் வாரியா பொண்ணுங்களை இங்க கூட்டிட்டு வருவீங்களா..?”

“ஹலோ மேடம், ரொம்ப கற்பனை பண்ணாதீங்க. நேத்து கூடத்தான் நாலு பேர் வந்தீங்க. இதே மாதிரி தெரிஞ்சவங்க எப்பவாவது வருவாங்க. ஏன், என் ஃபிரண்டு, அவன் வைஃப் கூட வருவான். வயசான ஆள் அவரோட பொண்ணுகூட வருவாரு."

“ஓ... உயர்ந்த உள்ளம்தான். இப்படி டிரஸ் வாங்கி வச்சிருக்குற மாதிரி இதுவரைக்கும் நான் யாரையும் பாத்ததே இல்லீங்க. ஓப்பனா சொல்லுங்க, வரும் பொண்ணுங்களை ஒண்ணுமே செய்ய மாட்டீங்களா..? ஜஸ்ட் சேவைதானா..?”

“நிஜமா ஒண்ணும் செய்ய மாட்டேன். ஆனா...”

“என்ன ஆனா..?”

“உங்களை மட்டும் கிஸ் பண்ணேன்.”

ஒரு செகண்ட் அவனையே உற்றுப் பார்த்த தீப்தி, “பொய்தானே..?" என்றாள்.

‘‘இல்ல, நிஜம்தான்; சாரி."

‘‘நான் தூங்கிட்டு இருக்கும்போதா..?"

‘‘இல்ல முழிச்சிட்டு இருக்கும்போதுதான்; ஆனா, போதைல இருந்த."

‘‘நான் போதைல இருக்கும்போது கிஸ் பண்ணது தப்புதானே..?"

‘‘தப்புதான், சாரி."

‘‘சாரி சொன்னா ஆச்சா..?"

‘‘ஆவாதுதான், ஆனா நீதான் என்னை முதல்ல கட்டிப்பிடிச்ச."

‘‘பொய்’’

‘‘இல்ல, என் கழுத்தை வளைச்சி இழுத்த."

‘‘நான் அப்டில்லாம் செய்யவே மாட்டேன்."

அவள் கழுத்தை வளைத்து இழுத்தபோது, ஜெயமோகன் முழுபோதையில் இருந்தாலும் அவனுக்கு அது மிகவும் பிடித்திருந்ததால் மூளை கொஞ்ச நேரம் விழித்துக்கொண்டது. மிகவும் சந்தோஷமாக உணர்ந்தான். இந்தக் கணம் மீண்டும் வராமலேயே போகலாம், அவள் இதை மொத்தமாக மறந்தும் போகலாம் என்று உணர்ந்த ஜெயமோகன், சடுதியில் மொபைலை எடுத்து சில போட்டோக்கள், ஒரு வீடியோ எடுத்துக்கொண்டான். எடுத்து முடித்து அவள் உதட்டில் ஒரு திருட்டு முத்தம் கொடுத்துவிட்டு சோஃபாவில் படுத்து மல்லாந்தான்.

‘‘நீ அப்படில்லாம் செய்ய மாட்டதான், நானும் அப்படில்லாம் செய்ய மாட்டேன்தான். எதோ க்ரேஸியா செஞ்சிட்டோம். இது ஒரு பெரிய விஷயமா..? நம்ம கற்பு பறிபோயிடிச்சா என்ன..?’’— — ஜெயமோகன்.

‘‘பெரிய விஷயம் இல்லதான். ஆனா, போதைல ஒருத்தி இருக்கும் போது கிஸ் பண்றது தப்புதானே..?" —தீப்தி.

‘‘தப்புதான்... இந்த போட்டோவைப் பாரு. நீ என்னை கட்டி இழுத்தது தெரியும்.’’

போட்டோவையும் வீடியோவையும் பார்த்த தீப்தி, நம்ப முடியாமல் சிரித்தாள்.

‘‘இதையெல்லாம் என் பர்மிஷன் இல்லாம வீடியோ எடுத்தது தப்பு. முதல்ல அதுக்கு ஒரு சாரி கேளு. ஆமா நீ கிஸ் பண்ண போட்டோ எங்க..?’’

‘‘சும்மா சொன்னேன், நான் கிஸ் பண்ணலை.’’

‘‘எனக்கு நீ கிஸ் பண்ணது தெரியும்.’’

‘‘ஓ... எந்த இண்டென்ஷனும் ப்ளானும் இல்லை. சட்டுன்னு தோணிச்சி, பண்ணிட்டேன்.’’

‘‘எனக்கு நீ கிஸ் பண்ணதே தெரியாது, சும்மா போட்டு வாங்கினேன்.’’

‘‘ஓ... செம... எங்க கிஸ் பண்ணேன்னு தெரியுமா, அதையும் போட்டு வாங்குவியா..?’’

‘‘டேய்..." எனக் கத்திக்கொண்டே, அந்த டிரஸ் இருக்கும் கேரி பேக்கை ஜெயமோகனை நோக்கித் தூக்கி அடிக்க, அதில் இருந்து பிரேசியரும் பேண்டியும் கீழே விழுந்தன.

‘‘ஏய் என்ன... பிரேசியர், பேண்டில்லாம் வாங்கி வச்சிருக்க..? என் சைஸ் தெரியுமா..?’’

‘‘அப்ராக்ஸிமேட்தான், 32 பீ, அதான் மூணு ஹூக் ஜாயிண்ட்ஸ் இருக்கே, அட்ஜஸ்ட்மெண்ட் பண்ணிக்க வேண்டியதுதான்."

‘‘இதையெல்லாம் எப்படி வாங்கி வச்சிருக்க..?’’

‘‘ஏய், வீட்டுக்கு வர்ற கெஸ்டுக்கு பேஸ்ட், சோப் வாங்கி வக்கிற மாதிரி ரொம்ப சாதாரணமான விஷயம் இது. நான் என்ன ‘96’ ஹீரோவா..? பத்தாவது படிக்கிறப்ப போட்ட பழைய ஜட்டி பிராவ எல்லாம் டிரங்க் பொட்டில வச்சி சாம்ப்ராணி போடறதுக்கு..?"

தீப்தி சிரிக்க, உணவு வந்தது.

சாப்பிட்டு விட்டு, ஜெயமோகன் கொடுத்த உடையை அணிந்து கொண்டு, தன் உடையை ஒரு கேரி பேக்கில் போட்டுக்கொண்டு ஜெயமோகனுடன் கிளம்பினாள்.

ஜெயமோகன் காரை ஓட்டிக்கொண்டே ஒரு பார்சலை எடுத்து தீப்தியிடம் கொடுத்தான். அதில் ஒரு ஐஸ் வைனும், ரஷ்யாவில் தயாரிக்கப்பட்ட

வோட்காவும் இருந்தது.

‘‘எதுக்கு இதெல்லாம்..?"

‘‘நீ வைன் ஷாப்ல போய் வாங்க முடியாது. பார், பப்—க்குதான் போக முடியும். எப்பவாவது வீட்ல தனியா குடிக்கணும்னு தோணிச்சின்னா என்னா பண்ணுவ..? அதுக்குத்தான். அப்புறம், இனிமே லோக்கல் டிரிங்க் குடிக்கவே குடிக்காதே. நான் ஒரு நம்பர் தரேன், அதுக்கு போன் பண்ணா, இம்போர்டட் டிரிங்க் வீட்டுக்கே வந்து டெலிவரி செய்வான்.’’

‘‘ஷ்யூர், தேங்க்யூ..!"

ஹோட்டல் வாசலில் இறக்கி விட்டான் ஜெயமோகன்.

‘‘ஜஸ்ட் ஒன் நைட் பழகியது, ஒரு மாசம் கூட இருந்தது போல இருக்கு ஜெயமோகன். அவ்ளோ இன்ஸிடன்ட்ஸ். திஸ் நைட் வாஸ் சோ டென்ஸ்’’ இதைச் சொல்லி விட்டு ஜெயமோகனைக் கட்டிப்பிடித்து மீண்டு கையை ஆட்டிவிட்டு, ஹோட்டலுக்குள் சென்றாள்.

# தீப்தி

த ன் அறைக்குள் நுழைந்த தீப்தி கட்டிலில் விழுந்து ஷரியாவுக்கு போன் அடித்தாள்.

போனை எடுத்த உடனேயே, ‘‘சாரி சாரி சாரி...'' எனப் புலம்பித்தள்ளினாள் ஷரியா.

‘‘ஏண்டி அவ்ளோ ஸ்டிரெஸ்ஸா..? எவன் பக்கத்துல படுத்து இருக்கான்னு கூடத் தெரியாம ஃபீலிங்க்ஸை அள்ளி கொட்டிட்ட..?’’ – தீப்தி.

‘‘இவ்ளோ குடிச்சது இல்ல தீபு, இப்ப என் பாய் ஃபிரண்டுகூட செம சண்டைல இருக்கேன். ஒரே டார்ச்சர். போதைல அவன்னு நினைச்சிட்டு என்னென்னவோ பேசிட்டேன் போல, சாரி டீ.’’ – ஷரியா.

‘‘இட்ஸ் ஓக்கே, அது புரிஞ்சிது.’’

‘‘நீ எப்ப கிளம்பற..?’’

‘‘டபுள் டெக்கர். சின்ன சீட், எரிச்சலா இருக்கும். ஆனா அதுலதான் டிக்கட் இருக்கு. குட்டித் தூக்கம் போட்டுட்டு , லன்ச் முடிச்சிட்டு கிளம்பறேன்.’’

‘‘சரி டீ, டேக் கேர், சென்னை வந்தா சொல்றேன்.’’

ஃபோனை அணைத்த தீப்தி, தாரிணிக்கும் நிரஞ்சனாவுக்கும் மரியாதை நிமித்தமான போன் கால்கள் செய்து ஒரு மணி நேரம் கழித்து அடிப்பதுபோல அலாரம் செட் செய்து தூங்கி எழுந்தாள்.

அறையிலேயே உணவை வரவழைத்து சாப்பிட்டு முடித்த தீப்தி, தன் பைகளை அடுக்கி எடுத்துக்கொண்டு கீழே ரிசப்ஷனுக்கு வந்து செக் அவுட் செய்து பில் செட்டில் செய்து விட்டு கிளம்புகையில் கவனித்தாள், ஜெயமோகன் ரிசப்ஷனில் அமர்ந்து இருந்தான்.

‘‘ஹேய், இங்க என்ன பண்ணிட்டு இருக்கீங்க..?’’

‘‘சும்மா, உங்களை டிராப் பண்ணலாம்னுதான்.''

ஜெயமோகன் அவளது பைகளில் ஒன்றை வாங்கிக்கொண்டு, காரை நோக்கி நடக்க ஆரம்பித்ததும்,‘‘நிஜமா டிராப் பண்ணவா வெயிட் பண்ணிட்டு இருந்தீங்க..?’’

‘‘அது மட்டும் இல்ல..."

‘‘வேற..?"

காரை எடுத்து ஓட்ட ஆரம்பித்து,

‘‘நீ பாட்டுக்கு கையை ஆட்டிட்டு உள்ள போயிட்ட, உள்ள கூப்பிடுவேன்னு பாத்தேன். எனக்கு டக்குன்னு திரும்பி போக முடியலை. ஏதோ மிஸ் ஆச்சி, அதான் உக்காந்துட்டேன்.’’

‘‘ஏய் சாரி, உனக்கு வேலை இருக்கும்னு நினைச்சேன். இது என்ன ஓல்ட் ஸ்கூல் டைப் மாதிரி, இவ்ளோ நேரம் வெயிட் பண்ணிகிட்டு..?"

‘‘ஓல்ட் ஸ்கூல்தான். நாம எவ்ளோதான் மாடர்னா மாறினாலும், சில விஷயங்களுக்கு ஓல்ட் ஸ்கூல்தான் கை குடுக்கும்.’’

‘‘அய்யய்யா கிழவன் மாதிரியே பேச ஆரம்பிச்சிட்ட.’’

‘‘சரி, எங்க டிராப் பண்ணனும்னு சொல்லவே இல்லையே..?’’

‘‘நீ கேக்காம ஓட்டிட்டே இருக்கியே..? மெஜஸ்டிக் ரயில்வே ஸ்டேஷன்.’’ கார் மெஜஸ்டிக் ரயில் நிலையத்திற்குள் நுழைந்து பார்க் செய்யப்பட்டது. உள்ளே நுழைந்து நடை மேடை கண்டுபிடித்து, அவளை ரயிலில் ஏற்றி அமர வைத்து விட்டு இறங்கினான்.

ஜன்னல் அருகே வந்து கை ஆட்டி விட்டு வெளியேறினான்.

காரில் வந்தமர்ந்து வாட்ஸ் அப்பில் மெசேஜ் தட்டினான்.

—[இன்னும் ஏதோ மிஸ் ஆவது போலவே இருக்கு]—

[உண்மையா சொல்லணும்னா, எனக்கு மிஸ் ஆவது போல இல்ல, ஆனா ஃபினிஷிங்க் இல்லாத மாதிரி இருக்கு] — என்று ரிப்ளை வந்தது.

காரை எடுத்து ஓட்ட ஆரம்பித்தான்.

அவள் கழுத்தை இழுத்து அணைக்கும் போட்டோவை அவளுக்கு அனுப்பினான்.

—[ப்ளீஸ் டிலீட் பண்ணிடு] —

[நோ வே, ஸ்வீட் மெமரி. இதை ஏன் டிலீட் பண்ணனும்..?] —

[எங்காச்சும் லீக் ஆயிடிச்சின்னா..?] —

—[ஏய், நீ என்ன செலிபிரிட்டியா..? இது என்ன ஸ்கேண்டலா..? நீ டிரஸ் இல்லாம கவர்ச்சியாவா இருக்க..?] —

[என் குரூப்ல நான் செலிபிரிட்டிதான், டிரஸ் போட்டுட்டு இருந்தாலும் கவர்ச்சிதான்] —

[ரெண்டுத்தையும் கம்பேர் பண்ணி பாத்துட்டுதான் சொல்ல முடியும்]—

அடித்து அனுப்பி விட்டு ஓவராகப் போகிறோமோ என்பது போல முகத்தை வைத்துக்கொண்டு,கொஞ்ச நேரம் சும்மா இருந்தான். ரிப்ளையும் வரவில்லை.

கார் சிக்னலில் நின்றதும்

—[டிரெயின் கிளம்பிடிச்சா..?]—

—[ம்ம்..]—

—[உனக்கு டிராவல் பிடிக்குமா..?]—

—[ரொம்ப...]—

—[கோவா போய் இருக்கியா..?] —

[போய் இருக்கேன், ஆனா ரொம்ப நாள் ஆச்சி]—

—[கோவா பிடிக்குமா..?] —

—[ரொம்ப...] —

—[போலாமா..?] —

—[எப்ப..?]—

—[இப்ப..?] —

—[இப்பவா..? நான் டிரெயின்ல சென்னை போயிட்டு இருக்கேனே] —

—[சென்னை போய் என்ன செய்யப்போற..? கே ஆர் புரம் ஸ்டேஷன் வந்ததும் இறங்கிடு, நான் அங்க நிக்கிறேன்]—

—[ஆர் யூ சீரியஸ்..?] —

—[வெரி சீரியஸ்] —

கே ஆர் புரம் ஸ்டேஷன் எதிரில் இருக்கும் பாலத்தின் அடியில் யூ டர்ன் போட்டு, சாலையோரம் வண்டியை பார்க் செய்துவிட்டு, நடைமேடைக்கு ஓடினான்.

ரயில் வந்து நின்றதும் அவள் பெட்டியில் "ஏறி, வா போலாம்" என்றான்.

அவள் முகம் முழுக்க குழப்பம் கலந்த ஆச்சர்யத்துடன் பார்த்துக்கொண்டு இருக்க, லக்கேஜைத் தூக்கிக்கொண்டு கீழே இறங்கிவிட்டான். அவளும் இறங்கி நிற்க, ரயில் கிளம்பியது. அந்த ரயிலில் இருந்து இறங்கியதுதான் தீப்தியின் வாழ்வில் மாபெரும் மாற்றத்தை உருவாக்கப்போவது என்பது அந்த ரயில் டிரைவருக்குத் தெரியாது. அவர், வேலூரில் இறங்கி வீட்டுக்குப் போய் விடுவார். அவர் மனைவியின் பெயர் பரிமளா.

தீப்தியை தன் பங்களாவுக்கு அழைத்து வந்தான். அதிர்ச்சியும் ஆச்சர்யமும் மாறாத நிலையில் இருந்த தீப்தி, ஒருவாறாக இயல்பு நிலைக்குத் திரும்பி, "எப்ப போலாம்..?" என்றாள். "இப்பவே கிளம்பலாம்" என்றதும்,

"நாம ரெண்டு பேர் மட்டும் போனா போர் அடிக்கும். தாரிணி, நிரஞ்சனா, ஷரியாவை கூட்டிக்கலாமா..?" என்று கேட்டாள்.

"அவ போதையானா என்னை பிடிச்சி திட்டுவாளே" என்றான்.

"அதான் கை காலெல்லாம் உன் மேல போட்டுகிட்டுதானே திட்றா..? கிளுகிளுப்பாதானே இருக்கும்" என்றாள்.

தன்னுடைய எம் யூ 7 ஐ விட்டுவிட்டு, லேண்ட் க்ரூஸரை எடுத்தான். அதிரடியாக போன்கள் பேசப்பட்டு, தாரிணி மட்டும் வரவில்லை என்ற தகவலை ஏற்றுக்கொண்டு, ஜெயமோகன் கார் ஓட்ட, தீப்தி பக்கத்தில் அமர்ந்து இருக்க, நிரஞ்சனாவும் ஷரியாவும் பின்னால் அமர்ந்திருக்க, கார் கோவாவை நோக்கி ஓட ஆரம்பித்தது.

## தீப்தி — ஜெயமோகன்,

## ஷரியா — நிரஞ்சனா

பெ ங்களூரை விட்டு வெளியேறவே ஒரு மணி நேரம் பிடித்தது. ஏழு மணிக்கு இருட்ட ஆரம்பித்துக் கொஞ்ச நேரத்தில் ரோட்டோர மோட்டலில் தேநீருக்கு நிறுத்தினான். பக்கத்தில் ரெஸ்ட் ரூம் இருந்ததை கவனித்துதான் நிறுத்தினான். இறங்கியவுடன் பெண்கள் ரெஸ்ட் ரூமை நோக்கிச் சிட்டாகப் பறந்தனர்.

தேநீர் குடித்துக்கொண்டு இருக்கும்போது,"இப்பவே மணி ஏழு ஆச்சே, எப்ப போய் சேருவோம்..?" — தீப்தி.

"தொடர்ந்து ஓட்டிட்டே இருந்தா காலைல அஞ்சி இல்ல ஆறு மணிக்குப் போய்ச் சேரலாம். நைட் எங்கயாச்சும் பிரேக் விட்டுத் தங்கிட்டு காலைல ஆறு மணிக்கு எடுத்தா லஞ்சுக்கு போய்ச் சேரலாம்." — ஜெயமோகன்.

"பிரேக் விட்டுடலாம், நைட் ஃபுல்லா ஓட்டினா, டயர்ட் ஆகிடும்." — நிரஞ்சனா.

"மாறி மாறி ஓட்டிட்டு போய்டலாம், அங்க போய் அஞ்சி மணி நேரம் தூங்கிக்கலாம், நைட் டிராவலிங்க் நல்லா இருக்கும்" —தீப்தி.

"நானும் ஓட்டறேன்" — ஷரியா.

"ஆளுக்கு ஒன்றரை மணி நேரம் ஓட்டலாம், அதான் சரியா இருக்கும்"— — ஜெயமோகன்.

"எனக்கு ஓட்டத் தெரியாதே" — நிரஞ்சனா.

"ஓட்டத் தெரியலைன்னா டிக்கில படுத்து தூங்கு" — தீப்தி.

தீப்தி வண்டியை எடுத்தாள். வண்டி பழக பத்துப்பதினைந்து நிமிடம் எடுத்துக்கொண்டாள். அதற்குப்பிறகு வண்டியை நாய்க்குட்டி போல கையாள ஆரம்பித்தாள்.

முன் சீட்டில் அமர்ந்து கொண்டு, ஜூல் எடுத்து இழுக்க ஆரம்பித்தான் ஜெயமோகன்.

“இது என்ன ஈ சிகரெட்டா..?" — ஷரியா.

“ஈ சிகரெட் வேற, வேப்பரைஸர் வேற, இது வேற, இது புதுசா வந்திருக்கு. இது பேர் ஜூல். ஈ சிகரெட், வேப்பரைஸரோட சிம்ப்ளிஃபைட் வெர்ஷன். முக்கியமா இதுல பேட்டரி வெடிக்காது. வாய் பொளக்காது. பென் டிரைவ் போல எடுத்துட்டு போறது ஈஸி" — ஜெயமோகன்.

“இது குடிக்கிற, அப்புறம் ஏன் சிகரெட்டும் குடிக்கிற?” ——தீப்தி.

“அந்தப் புகையிலை பொசுங்கற சுவை அப்பப்ப தேவைப்படுது, அந்த கசப்பும்" — ஜெயமோகன்.

“சரி, ஜெயமோகன் நீங்க முன்னாலயே ஒக்காந்து இருக்கீங்களே, தீப்தியை பிரிய மாட்டீங்களா... தீப்தியை லவ் பண்றீங்களா..?” — ஷரியா.

“ஏண்டி, சும்மா இருக்க மாட்டியா..?" — தீப்தி.

“இல்ல ஷரியா, உங்க பக்கத்துல ஒக்காந்தா உங்களை லவ் பண்ணிட போறேன்னு பயம், அதான்" — ஜெயமோகன்.

எல்லோரும் சிரிக்க, அடுத்து ஷரியா ஓட்டப்போகும் நேரத்தில், ஜெயமோகனும் தீப்தியும் பின் சீட்டுக்கு போக, நிரஞ்சனா முன் சீட்டுக்குப் போக,

“கன்ஃபர்ம், கன்ஃபர்ம்" எனச் சொல்லியபடியே வண்டியை எடுத்தாள் ஷரியா.

கொஞ்ச நேரம் யாரும் பேசிக்கொள்ளாமல் பயணம் தொடர்ந்தது.

தீப்திக்குத் தூக்கம் வருவது போலத் தெரிய, பின்னால் இருந்து ஒரு சின்ன வெல்வெட் தலையணையை எடுத்துத் தன் மடியில் வைத்துக்கொண்ட ஜெயமோகன், சைகையால் தீப்தியைப் படுத்துக்கொள் என்றான்.

புன்முறுவலோடு, தலையை ஆட்டி மறுத்துப் பின்பக்கமாக சீட்டில் சாய்ந்து கொண்ட தீப்தியை, அவள் தலையைப் பற்றி லேசாக இழுக்க, அதுவும் வந்தது; வந்ததை இன்னும் கொஞ்சம் இழுத்து, அவள் தோள் பற்றித் தன்மடியில் சாய்த்துக்கொள்ளும் முன் சற்று தன்னுடைய மார்பினில் நிறுத்தி மடியில் சாய்த்தான்.

காலைக் குறுக்கிக்கொண்டு தீப்தி தூங்க, அவள் தலையை வருடியபடியே அவ்வப்போது லேசாக மசாஜ் செய்வதுபோல அமுக்கி விட்டான். காது மடல்களை நீவி விட்டான். பயணம் தொடர்ந்து இரவு உணவுக்காக நிற்கும் நேரத்தில் தீப்தி எழுந்து கொண்டாள்.

பட்டர் ரொட்டி + சிக்கன் கிரேவி சிம்பிளாக சாப்பிட்டு முடித்து, ஆளுக்கொரு தம் அடித்து விட்டு, ஜெயமோகன் காரை எடுக்க,

‘‘யம்மா ஷரியா, நீயே முன்னால ஒக்காந்துக்கோ" என்று தீப்தி பின்னுக்குச் சென்றாள்.

ஜெயமோகன் காரை ஓட்ட, கியர் மேல் இருந்த ஜெயமோகனின் கையில் ஷரியா கையை வைத்தாள்.

‘‘தீப்தி, ஷரியா என்னைத் தடவுறா’’ என்றான் ஜெயமோகன்.

எல்லோரும் சிரித்தனர். தீப்தி ஷரியாவின் தலையைத் தட்டி, ‘‘என்னமோ லவ்வு, பெயினுன்னு குடிச்சிட்டு சீன் ஓட்டிட்டு இப்ப என்னாடி தடவுற..?" என்றாள்.

‘‘லவ் வேற, அது வேற ஃபீல். தடவுறது வேற ஃபீல் டீ. ஆம்பிளைங்க, சீரியஸா லவ் பண்ணிகிட்டே இன்னொருத்தியை தடவறது இல்லியா..?’’ — ஷரியா.

‘‘ஐயய்யோ, அப்ப நீங்க நிஜமாத்தான் என்னை தடவுனீங்களா..? கையோட நிறுத்திக்கோங்க, கார் ஓட்டணும்" —ஜெயமோகன்.

இன்னும் மோசமாக டர்ட்டியாக பேசிக்கொண்டு கார் ஓடிக்கொண்டு இருந்தது.

ஷரியா ஓட்டி, மீண்டும் தீப்தி ஓட்டி, அதிகாலையில் ஜெயமோகன் ஓட்ட தீப்தி முன் சீட்டில் அமர்ந்து உள்ளே இழுக்கும் தூக்கத்தைக் கட்டுப்படுத்தியபடி இருந்தாள்.

பின்னால் ஷரியாவும் நிரஞ்சனாவும் தூங்கிக்கொண்டு இருக்க, ஜெயமோகன் காரைச் சாலையின் ஓரமாக நிறுத்தினான். தீப்தி கண்களாலேயே ‘என்னÕ என்று கேட்க, ஜெயமோகன் சுண்டு விரலைக் காட்டியபடி இறங்கிப்போனான்.

சாலையில் போக்குவரத்து மிகவும் குறைந்து இருந்தது. அதிகாலைச் சூரியன் ‘என்ன பெரிய எழவு இன்று நடந்து விடப்போகிறது, அதையும் பார்த்துவிடலாமேÕ என்று அசுவாரசியமாக எழுந்து வந்து கொண்டிருந்தது.

ஜெயமோகன் சிறுநீர் கழித்துவிட்டு, காரில் இருந்து தண்ணீர் பாட்டிலை எடுத்து முகம் கழுவினான். தீப்தி ஒரு டிஷ்யூ பேப்பரை எடுத்துக்கொண்டு கீழே இறங்கினாள். முகம் துடைத்துக்கொண்டு, உடலை வளைத்து சின்னச் சின்ன உடற்பயிற்சி செய்தான் ஜெயமோகன். சாலையோரம் ஒரு சிறுபாறை இருந்தது. அந்தப் பாறை பக்கத்தில் வெல்வெட்டும் பிங்க் கலரும் கலந்த கலவையாக ஏதோ ஒரு பூக்கூட்டம் ஏதோ ஒரு சமநிலைக்காகப் பூத்திருந்தன. காற்று சில்லென்று அடித்தது. அந்த பாறைக்கு பின்னால் இருந்து பார்க்க, பின்னணியில் கீழே ஒரு கிராமம் தெரிந்தது.

“என்ன பாத்துட்டு இருக்க..?” என்று தீப்தியும் பாறைக்கு பின்னால் வந்தாள்.

“இந்தப் பூவைப் பாத்தா, உன்னை பாக்கற மாதிரியே இருக்கு.”

“என்னா காலையிலேயே ரொமாண்டிக் மூடா..? என்ன, லவ் யூ சொல்லப் போறியா..?”

“பீச்ல சொல்லலாம்னு நினைச்சேன், இங்கயே சொல்லவா..?”

“யேய், விளையாடாத..!”

தீப்தியின் கைகளைப் பற்றினான்; அருகில் இழுத்தான்; தீப்தியும் வந்தாள்; அருகில் வந்து என்ன என்பதுபோல புருவத்தைத் தூக்கினாள்.

அந்தப் பாறையில் சாய்ந்து கொண்டு, அவளையும் இழுத்து அணைத்துக்கொண்டான். தீப்தி எதிர்ப்பு தெரிவிக்கவில்லை. அவளுக்குத் தேவையாகவும் இருந்தது போல இருந்தது அவளின் உடல்மொழி.

அணைப்பில் இருந்தபடியே, “டேய் ப்ளீஸ், ஐ லவ் யூ மட்டும் சொல்லிடாத" என்றாள்.

காதில் ஒரு முத்தம் கொடுத்து, “ஐ லவ் யூ தீப்தி" என்றான்.

“உண்மையைச் சொல்லு, இவ்ளோ அழகா இம்ப்ரெஸ் பண்றியே, எத்தனை கேர்ள் ஃபிரண்ட்ஸ்..?”

‘‘கேர்ள் ஃபிரண்ட் யாருமே இல்லை, பட் ஆம் மேரீட்" என்றான்.

# ப்ரியாந்தினி

அ ணைப்பில் இருந்து விடுபட்ட தீப்தி, கீழே இருந்த சின்னப் பாறையில் அமர்ந்தாள். அந்தப் பூக்களைக் கொத்தாகப் பறித்து வைத்துக்கொண்டு, ‘‘அதுதான் தெரியுமே, உன் ஃபேஸ்புக்ல பாத்தேன். குழந்தை போட்டோ கூட பாத்தேன்.’’

‘‘ம்ம்.’’

இருவரும் நடக்க ஆரம்பித்தனர் காரை நோக்கி. அப்போது ஜெயமோகன், தீப்தியின் கைகளைப் பற்றிக்கொண்டான். காரின் அருகே சென்று ‘‘ஆனா இப்ப நாங்க சேர்ந்து வாழலை என்றான்.’’

‘‘ஓ... டிவோர்ஸா..?’’

இருவரும் காரில் ஏறிக்கொண்டனர்.

‘‘இல்ல, லீகலா இல்லை... மனசளவுல தான்.’’

கார் கிளம்பி ஓட ஆரம்பித்தது; கொஞ்ச நேரம் அமைதியாக இருந்தது.

கோவா எல்லைக்குள் நுழைந்ததும், கேரளாவுக்குள் நுழைந்தது போலத்தான் இருந்தது நிலப்பரப்பு. ஆங்காங்கே பின்னோக்கிச் செல்லும் போர்த்துகீசிய கட்டடங்கள்தான் கோவா என வித்தியாசம் காட்டியது.

அதிகாலையில் அந்த கார், புதிதாக உருவான ஒரு காதலையும் உறவையும் உடன் அழைத்துக்கொண்டு கோவாவிற்குள் நுழைந்தது.

தீப்திக்கு ஜெயமோகனை மெதுவாகப் பிடிக்க ஆரம்பித்து இருந்தது. தெய்வீகக் காதல் இல்லையென்றாலும் மற்ற ஆண்களைவிட இவன் பக்கம் மனச்சாய்வு இருந்தது. ஆபத்து ஏதும் அருகில் இல்லையெனினும் அவனுடன் இருக்கும்போது கிடைத்த பாதுகாப்புணர்வு தீப்திக்குப் பிடித்து இருந்தது. அவனுடைய நிறம், ஸ்டைல், பேசும், பழகும் விதம் எனக் காரணிகள் அனைத்தும் பாஸிடிவாக இருந்தாலும், அவனுடைய செல்வச் செழிப்பும் ஒரு

காரணம் என்பது தீப்திக்கும் தெரியாது, ஜெயமோகனுக்கும் தெரியாது. அந்தக் காரணம்தான் அடிப்படை மற்றும் காரணிகளைப் பற்றி சிந்திக்கவே வைத்தது என்பதும் எப்போதும் வெளிப்படப்போவதில்லை.

தீப்திக்குப் புயல் போல காதல் இதயத்திற்குள் புகுந்து உப்பிப் பெருத்து நெம்பவில்லை எனினும், ஒரு ஐஸ் கட்டியை இரண்டு மார்பகங்களுக்கு இடையே வைத்தது போல இருந்தது.

காரை ஓட்டிக்கொண்டே தீப்தியின் கைகளை எடுத்து முத்தமிட்டுத் தன் முகத்திலேயே அவள் கைகளை வைத்துக்கொண்டான். பிறகு அருகில் இழுத்து அவளைத் தன்மேல் சாய்த்துக்கொண்டான். தீப்திக்கு இது தேவையாக இருந்தாலும் முதன்முதல் காதலில் ஏற்படும் இதயத் துடிப்பும் யோனியுதட்டுத் துள்ளலும் ஏற்படவில்லை. அசந்தர்ப்பமான கால நேரத்தில் அவசர கதியில் காதல் ஏற்பட்டதால்கூட இப்படி இருக்கலாம்.

கார் லிட்டில் வகதூர் என்ற கிராமத்துக்குள் புகுந்தது; அங்கே நன்கு தெரிந்த கடற்கரை பங்களாவுக்குள் நுழைந்தது. பங்களா கடலை ஒட்டி அமைந்திருந்த மலையின் மேல் இருந்தது. ஏற்கனவே சொல்லி இருந்ததால், காப்பாளர் வரவேற்றார்.

பங்களாவில் பெரிய ஹால், அதை ஒட்டி சமையலறை, டைனிங் டேபிள் மற்றும் இரண்டு படுக்கையறைகள் இருந்தன. மாடியில் பெரிய சூட் ரூம் மற்றும் விசாலமான பால்கனி. தரைத்தளத்தில் கடலை நோக்கிச் சென்றால், சின்னதாகப் பூங்கா மற்றும் புல்தரை. ஒரு பெரிய பாறை நீட்டிக்கொண்டு இருக்க அதைச்சுற்றி கம்பி அமைத்து மேலே ஒரு கொட்டகை போடப்பட்டு இருந்தது. அங்கே அமர்ந்து அல்லது நின்றுகொண்டு, ஏன் படுத்துக்கொண்டுகூட கடலை வேடிக்கைப் பார்க்கலாம். கடலிலிருந்து இரண்டு பனைமர உயரத்தில் இருந்தது இந்தப்பாறை.

தரைத்தள அறையில் நிரஞ்சனாவும் ஷரியாவும் படுத்துக்கொள்ள, சூட் ரூமுக்கு தீப்தியை அழைத்துச் சென்றான்.

“என்னாடி, தீப்தி கையை எடுத்து கிஸ் அடிச்சிட்டே வரான்..? இவளும் அவன் மேல சாஞ்சிக்கிறா..? சீரியஸ் லவ்வா, இல்ல சும்மா டச் அப் பண்ணிக்கிறாங்களா..?" என்று ஷரியா கேட்க, “நானும் பார்த்தேன். இவ

என்னவோ பெரிய மயிராட்டம் பேசுவா..? நம்பளை கிண்டல் பண்ணுவா... இப்ப என்னான்னா, ஒரு மேரீட் மேன் தோள்ள சாஞ்சி ரொமான்ஸ் பண்றா..?" என நிரஞ்சனா பதிலளித்தாள்.

‘‘இப்ப மேட்டர் பண்ணுவாங்களோ..?" — ஷரியா.

‘‘போய் பாப்பமா..?’’ — நிரஞ்சனா.

‘‘ச்சீ, ஏய் உனக்கு அவன் கூட ஒரு நைட்னா ஓக்கேவா..?" —ஷரியா.

‘‘சும்மா, டேன்ஸ், ஹக்கிங்க், கிஸ்ஸிங்க் ஓக்கே, அதுக்கு மேல இண்ட்ரெஸ்ட் இல்ல; உனக்கு..?"

‘‘அந்த நேரத்து மூடை பொறுத்ததுடீ, போதை ஏகத்துக்கு போச்சின்னா என்னா செய்வேன்னு தெரியாது. ஆனா, போதை இல்லன்னா சான்ஸ் இல்ல."

இவர்கள் இப்படி பேசிக்கொண்டே போர்வையை இழுத்துப் போர்த்திக்கொள்ள,

தீப்தி கட்டிலில்விழ, ஜெயமோகன் குடிநீர் எடுத்து வைத்துக்கொண்டு, பக்கத்தில் படுத்தான். தீப்தி மேல் கையைப் போட்டான்; தீப்தியைக் கன்னத்தில் முத்தமிட்டான்.

லேசாக எழுந்து அவள்மேல் பக்கவாட்டில் படர்ந்து, உதட்டில் மேம்போக்காக ஒரு முத்தமிட்டான்.

தீப்தியின் உதட்டுக்குள் சின்னப் பிளவை உண்டாக்கி, மேலுதட்டைக் கவ்வ ஆரம்பித்தபோது, தீப்தி மறுத்தாள்.

தீப்தியின் டாப்ஸைத் தூக்கி விட்டு, அவளின் வயிற்றில் கை வைத்துக்கொண்டான்.

தீப்தியின் இடையைப் பிடித்து தன் பக்கமாக இழுத்து அணைத்துக்கொண்டான்.

தீப்தியின் மேல் தன் காலைத் தூக்கிப் போட்டு இறுக்கிக்கொண்டான்.

கழுத்துக்குக் கீழே மேடிட்டிருக்கும் தீப்தியின் மார்பகத்தில் முத்தமிட்டு, பிரேசியரை வாயால் தள்ளி முன்னேறும்போது அவனை விலக்கிப் படுத்துக்கொண்ட தீப்தி,

‘‘உன் வைஃப் பேரு என்ன..?" என்றாள்.

‘‘ப்ரியாந்தினி, டாக்டர் ப்ரியாந்தினி" என்றான்.

‘‘சரி, கொஞ்ச நேரம் தூங்கலாம்" என்றாள் தீப்தி. அவளைக் கட்டிக்கொண்டு தூங்க முயற்சித்தான் ஜெயமோகன்.

# ப்ரியாந்தினி

ப் ரியாந்தினி, பெங்களூரில் பிரசித்தி பெற்ற மகளிர் நல மருத்துவர். அப்பா, அம்மா, தாத்தா, பாட்டி எல்லோரும் மருத்துவர்கள். அவர்களின் குடும்ப மருத்துவமனைக்கு இப்போது ப்ரியாந்தினிதான் தலைவர். ப்ரியாந்தினி தலையெடுத்து, மருத்துவமனையைப் பெரிதாக்கினாள். விரிவு படுத்தினாள், பல புதிய முயற்சிகளை மேற்கொண்டாள். தலை சிறந்த பெண்கள் நல மருத்துவராகவும் திகழ்கிறாள்.

ஜெயமோகனை வெறித்தனமாகக் காதலித்து, ஒன்றரை வருடம் கிட்டத்தட்ட குடித்தனமே நடத்தி, ஊர்கூட்டித் திருமணம் செய்து கொண்டவள்; திருமணத்திற்குப் பல அரசியல்வாதிகள், சினிமா பிரபலங்கள் வந்திருந்தனர்.

ஜெயமோகனின் குடும்பமும் பெரிய குடும்பம்தான். நல்ல வசதியுள்ள குடும்பம்தான். ஆனால், ப்ரியாந்தினி குடும்பம் அளவுக்கு இல்லை. ஜெயமோகனின் குடும்பம், மருந்துகள் தயாரிக்கும் கம்பனி மற்றும் மருத்துவமனை உபகரணங்கள் தயாரிக்கும் கம்பனி நடத்திக்கொண்டு இருந்தது. அது மட்டுமல்லாமல் மருத்துவமனைகளுக்கு ஆலோசனைகள் வழங்கி மேம்படுத்தும் தொழிலையும் நடத்தி வந்தது. ஜெயமோகன் இந்த நிறுவனத்தைதான் தலைமை தாங்கி நடத்தி வந்தான்.

ஜெயமோகனும் ப்ரியாந்தினியும் காதலிக்கும் காலத்தில் பெரும்பாலான நேரங்கள் பயணித்துக்கொண்டே இருந்தார்கள். விடுமுறை எடுப்பது சிரமம்தான். எனினும், கிடைத்த சின்னச் சின்ன இடைவெளிகளையும் பயணத்தால் ரொப்பினார்கள். பயணங்களின் போதுதான் ஜோடிகளுக்குள் நிறைய சண்டை வரும். ஆனால், ஜெயமோகனுக்கும் ப்ரியாந்தினிக்கும் பயணத்தின்போது சண்டையே வந்தது இல்லை.

திருமணம் செய்து கொள்ளலாம் என இருவரும் முடிவெடுத்த சில நாட்களில் தன் உயிர்த்தோழி ரூபாவதியிடம் ப்ரியாந்தினி சொன்னது இது:—

‘‘என்னோட மேல் வெர்ஷன் ஜெயமோகன்.’’

‘‘நான் ஜெயமோகனோட ஃபீமேல் வெர்ஷன்.’’

‘‘மனசாலயும் உடம்பாலயும் அப்படி ஒண்ணா சேர முடியிது, பர்ஃபெக்ட் மேட்ச்.’’

‘‘ஒரே ஒரு புத்தர், ஒரே ஒரு காந்தி, ஒரே ஒரு சச்சின், ஒரே ஒரு அராத்து மாதிரி, இவன் ஒரே ஒரு ஜெயமோகன்டி.’’

ப்ரியாந்தினி சொல்லச் சொல்ல 'ம்ம், ம்ம்' கொட்டி வந்த ரூபாவதி, ‘‘யேய், ஒருத்தனை அழகா காதலிச்சி, நல்லா புரிஞ்சிகிட்டு, கல்யாணம் பண்ணிகிட்டு, அவனை மட்டும்தான் தொட விடுவேன். அதுதான் எனக்கு கிக். அவனுக்காக என்ன வேண்டுமானும் பண்ணுவேன்னு எல்லாம் சொல்லிட்டு இருந்தியே, இப்ப என்னாடி கல்யாணத்துக்கு முன்னாடியே செக்ஸ் வச்சிகிட்ட..?’’

‘‘அப்படித்தான் நினைச்சிட்டு இருந்தேன். ஆனா, வாழ்க்கைக்கு செக்ஸும் ரொம்ப முக்கியம் இல்லையா..?அது செட் ஆகலைன்னா, கஷ்டம்தானே..? அதனால அதையும் முயற்சி செஞ்சி பாத்தோம், பர்ஃபெக்டா ஃபிட் ஆச்சி. முழுமையா ஃபீல் பண்ணோம். ஒருத்தருக்கு ஒருத்தரை உருவாக்கிய மாதிரி இருந்திச்சி. ஒரே உடலோட இரண்டு பகுதிகள் பிரிஞ்சிகிடந்து, மீண்டும் சேர்ந்த மாதிரி ஃபீல் பண்ணோம்.’’

‘‘நீ இப்படில்லாம் பேசற ஆள் கிடையாதே, இந்த அராத்து புக், அராத்து போஸ்டையெல்லாம் படிச்சிட்டுதான் இப்பிடி பேசறயாடீ..?’’

‘‘யேய், நீங்க எல்லாம் ரொம்ப யோக்கியமா..? எத்தனை பேர் கூட இருந்துட்டு கமுக்கமா இருக்கறவளுங்க எத்தனை பேரு..? இதுல எதுக்கு அராத்தை இழுக்குற..?’’

‘‘அவனை சொன்னா உனக்கு ஏண்டி கோவம் வருது..?அவனை லவ் பண்றியா, இல்லை ஜெயமோகனை லவ் பண்றியா..?’’

‘‘அராத்துக்குத்தான் கல்யாணம் ஆயிடிச்சே. அவனை முன்னமே பாத்திருந்தா அவனைத்தான் லவ் பண்ணி கல்யாணம் பண்ணி இருப்பேன். ஆனா அதுவும் கஷ்டம்தான். கல்யாணம் ஆன மறுநாளே அவன் பொய் சொல்லிட்டு எவ

கூடவாவது ஊர் சுத்தப் போயிடுவான். எனக்கு என் ஆள்தான் பெஸ்ட்; ஜெயமோகன் தான் பெஸ்ட்.''

‘‘அராத்து கூட பேசுவியா..? உன் லவ் மேட்டர்லாம் தெரியுமா அவனுக்கு..?''

‘‘பேசுவேனே... என் காதல் கதையைச் சொன்னேன். இதெல்லாம் சப்பை மேட்டர், போரடிக்கிது, உங்களுக்குள்ள புட்டுகிச்சின்னா, அதுவும் இண்டிரெஸ்டிங்கா புட்டுகிச்சின்னா சொல்லு, கதைல சேத்துக்கறேன்னு சொல்லி இருக்கான்."

‘‘அடிப்பாவி, அப்படி ஆச்சின்னா, நான் எல்லாம் ஒரு கேரக்டரா வருவனா..?''

‘‘யேய் லூஸு, அவன் எழுதுறதைத்தான் நீ இப்ப பேசிட்டு இருக்க."

‘‘அவனைப் படிச்சிட்டு இப்படியே உளறிட்டு இரு லூசு மாதிரி."

திருமணமான பின்பும் மணவாழ்க்கை மகிழ்ச்சியாகப் போனது. எந்தக்குறையும் இல்லை. அதேபோல பயணங்கள், வாழ்வின் முன்னேற்றங்கள், பரிசுகள், சர்ப்ரைஸ்கள், ஷாப்பிங், சினிமா, நள்ளிரவு உலா, நீண்ட இரவு டிரைவிங், சாகசங்கள், புது வீடு வாங்கியது, புது கார்கள் வாங்கியது, குழந்தை பிறந்தது என வாழ்வு எங்கும் பிசிறு தட்டவில்லை.

ப்ரியாந்தினிக்குப் பொறுப்பு கூடக்கூட வேலை நேரம் அதிகரித்தது. நிர்வாகத்தில் சிக்கல், பேங்க் லோன் பிரச்னைகள், வெளி வட்டாரக் கடன்கள், வெளிநாட்டு நோயாளி உயிரிழப்பு என வந்த தொடர் சிக்கல்களால் இருவரும் சேர்ந்து இருக்கும் நேரம் குறைந்தது.

ஒன்றாக இரவு உணவு சாப்பிடுவதும் முடிவுக்கு வந்தது.

வாரம் ஒன்று, இரு வாரங்களுக்கு ஒன்று என்று குறைந்து மாதம் ஒன்று என்று ஆனது. சமையல்காரி சமைத்து, ப்ரியாந்தினி பாரிமாறிக்கொண்டு இருந்தவள், வேலைப் பளுவால் அதையும் நிறுத்த வேண்டிவந்தது.

இருவருக்குள்ளும் இருந்த இணக்கம், கவர்ச்சி குறைவதை ப்ரியாந்தினி கவனிக்கவில்லை. ப்ரியாந்தினி சமைப்பதை நிறுத்திவிட்டு சமையல்காரி போட்டதுமே ஜெயமோகன் நெருக்கம் குறைந்தது போல உணர்ந்தான்.

என்னதான் முற்போக்கு பேசினாலும், எவ்வளவுதான் மாடர்ன் ஆனாலும் பொண்டாட்டி கையால் சாப்பிடுவது என்பது இந்திய ஆண்களின் டீஎன்ஏ—வில் இருப்பது. அது ஒரு அணுக்கத்தையும் பாசத்தையும் பந்தத்தையும் உருவாக்கவல்லது.

வீட்டில் வேலையாட்கள் அதிகமானார்கள். குழந்தையைப் பார்த்துக்கொள்ளவே இரண்டு பேர் இருந்தார்கள். வீடு வேலைக் காரர்களால் நிரம்பி வழிந்தது.

வருடங்கள் ஆவதாலும் நேரமின்மையாலும் ப்ரியாந்தனியும் ஜெயமோகனும் ரொமாண்டிக்காக நெருக்கமாக இல்லை எனினும் மனக்கசப்போ, சண்டையோ, வெறுப்போ இல்லை. இப்போதும் ப்ரியாந்தினிக்கு ஜெயமோகன்தான் அதீத காதலன்; அன்பான கணவன்; ஜெயமோகன் எவ்வளவோ ஜாக்கிரதையாக தீப்தியைத் தனி அபார்ட்மெண்டில் குடியமர்த்தி, வெளியில் எங்கும் பொதுவெளியில் சேர்ந்து சுற்றாமல் இருந்தாலும், தீப்தி விஷயம் ப்ரியாந்தினிக்குத் தெரிய வந்தது.

நீண்ட நாட்கள் கழித்து நட்சத்திர விடுதியில் அறையெடுத்துத் தனியாக முட்டமுட்ட குடித்தாள்.

# தீப்தி – ஜெயமோகன் –

# ஷரியா – நிரஞ்சனா

தூங்கி எழுந்ததும் கொஞ்சமாக சாப்பிட்டு விட்டு எல்லோரையும் மசாஜ் அழைத்துப்போனான் ஜெயமோகன். மசாஜ் முடிந்து மீண்டும் சிறு தூக்கம். இப்போது தீப்தியைத் தொடக்கூட இல்லை. மாலை அனைவரும் கடற்கரையில் ஒரு குளியல். கடலில் குளிக்கும்போது இப்போது பட்டவர்த்தனமாகவே ஜெயமோகனும் தீப்தியும் கட்டிக்கொண்டார்கள். தீப்தி பிகினியோடு ஜெயமோகனின் இடுப்பில் ஏறி அமர்ந்து கொண்டாள். இதை எப்படிச் சரியாகச் சொல்வது எனத் தெரியவில்லை.

இருவரும் மார்புக்குக் கீழே வரையிலான ஆழத்தில் நின்று கொண்டிருக்கும்போது, ஜெயமோகன் தீப்தியின் இடைக்கு சற்று மேலே தன் கைகளைக் கொடுத்துத் தூக்கினான். இப்படி தூக்கினால் தீப்தி மேலேதானே எழும்ப வேண்டும். ஆனால் அவள் சரியாக ஜெயமோகன் இடையில் வந்து அமர்ந்து கொண்டு தன் கால்களை அவன் பின்னுக்கு கொடுத்து கட்டிக்கொண்டாள். ஜெயமோகன் அமர வைத்தானா அல்லது தீப்தி அமர்ந்து கொண்டாளா என விஞ்ஞானப்பூர்வமாகவும் 'அரசியல் சரி' யாகவும் சொல்ல இயலவில்லை.

இருவரும் 'குசுகுசு'வென ஏதோ பேசிக்கொண்டார்கள். அவ்வப்போது தீப்தி ஜெயமோகனை முத்தமிட்டாள். ஜெயமோகன் இன்னும் தீப்தியை முத்தமிட ஆரம்பிக்கவில்லை.

தீப்திக்குச் சிறு வயதில் பாலியல் அத்துமீறல் ஏதும் நடந்தது இல்லை. பள்ளி கல்லூரிக் காலங்களில் பாய் ஃபிரண்ட் யாருமில்லை. வேலை செய்ய ஆரம்பித்தும் வந்த ஆஃபர்கள் எதையும் ஏற்றுக்கொள்ளவில்லை. தனக்கென ஜாலியான வாழ்க்கையை வாழ்ந்து வரும் தீப்தி அவ்வப்போது பார்ட்டியின் போது லேசான போதையில் ஹேண்ட்ஸம்மான ஆண்களை உரசுவதோடு சரி.

புல்லட் வைத்திருக்கிறாள். நேரம் கிடைக்கும் போதெல்லாம் ரைட் தான். அந்தக் குழுவிலும் பல பேருக்கு தீப்திகா மேல் கண்; ஆனால் தெரிந்தும் தெரியாமல் ஒட்டல் உரசலோடு சரி. சும்மா கையைப் பிடிப்பது, தோளோடு சேர்த்து அணைத்துக்கொள்வது, வறட்டு காமெடி செய்து ஹை ஃபை அடித்துக்கொள்வது, ஜீன்ஸ் மறைத்த தொடையை தட்டுவது என அவர்கள் ஸ்கலிதப்பட்டுக்கொண்டு இருந்தார்கள்.

தீப்தி இன்னும் வர்ஜின் என்று தோழிகளுக்குத் தெரியும். எல்லா கூத்தும் அடிக்கும் பெண் இன்னும் வர்ஜினாக இருப்பது மட்டும் தோழிகளுக்கே ஆச்சர்யம்தான். நல்ல வெளுப்பான டாய்லெட் துண்டு மூலம், தேவையானபோது ஆர்கஸத்தை வரவழைத்துக்கொள்ள தீப்திக்குத் தெரியும். அப்போதெல்லாம் அவள் எந்த ஆடவனையும் செலிபிரிட்டியையும் நினைத்துக்கொள்ள மாட்டாள். கற்பனையான தன் எதிர்காலக் கணவனை நினைத்துக்கொண்டு, இருவரும் புல்லட்டில் போவது போலவும், அதை ஒரு ஏரியருகே இருக்கும் மரத்தடியில் நிறுத்திவிட்டுப் புணர்வது போலவும், இருவரும் படகில் செல்லும்போது நடு ஏரியில் நிறுத்திவிட்டு, தீப்தியின் தலை படகுக்கு வெளியில் தொங்க, கற்பனைக் கணவன் பாதம் முதல் தலை வரை முத்தமிட்டுக் கடைசியில் புணர்வது போலவும், அப்போது தீப்தியின் தலை இன்னும் கீழிறங்கித் தண்ணீருக்குள் போவது போலவெல்லாம் கற்பனை செய்து கொள்வாள்.

இப்படி இருந்தவள் ஏன் ஜெயமோகனிடம் மாட்டிக்கொண்டாள் என்ற விஷயத்தையே கடலில் குளித்துக்கொண்டிருந்த ஷரியாவும் நிரஞ்சனாவும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

தீப்தி இதுவரை யாரையும் முத்தமிடாததால் ஜெயமோகனை முத்தமிட வரவில்லை அல்லது தீப்திக்கு இன்னும் ஜெயமோகன் மேல் அடர்த்தியான தீப்பற்றியெரியும் காதல் வரவில்லை. ஆனால் ஏதோ ஒன்றை ஆரம்பித்து விட்டாள். ஏன் என்று அவளுக்கும் தெரியாது, அதைப்பற்றி அவள் பெரிதாக மனதிற்குள் பேசிக்கொள்ளவும் இல்லை. ஒரு சின்ன வட்டத்தை விட்டு வெளியேறி, அதை விட சற்றே பெரிய வட்டத்திற்குள் நுழைந்து அதில் திளைத்துக் கொண்டிருக்கிறாள். இதுவரை பார்த்த யாரையும்விட

ஜெயமோகனை ஏனோ பிடித்துப்போனது. இவனுடன் வாழலாம், இது வசதியாக இருக்கும் என நினைத்திருக்கலாம்.

கடல் குளியல் முடித்து, பங்களாவுக்கு ஏறினார்கள். அப்போது ஜெயமோகன் தீப்தியை விளையாட்டாகத் தூக்க மற்ற இருவரும் ஹோய் என அலறினார்கள்.

ஷரியா "என்னையும் தூக்கிட்டு போ ஜெயமோகன்" என்றுகூற, ஜெயமோகன் தீப்தியைப் பார்க்க, "ஹேய், தீப்தி என்ன உன் பொண்டாட்டியா, அவளைப் பாக்கற..?" என ஷரியா கலாய்க்க, தீப்தி பார்வையாலேயே சம்மதம் தர, ஜெயமோகன் ஷரியாவைத் தூக்க, ஷரியா ஜெயமோகனை இறுக்கிப் பிடித்து முத்தமிட்டாள்.

ஜெயமோகன் பதறி இறக்கிவிட,

தீப்தி முன்னுக்கு நடக்க ஆரம்பித்தாள்.

ஜெயமோகன் பின்தொடர, ஜெயமோகனின் பிருஷ்டத்தில் விளையாட்டாக ஒரு அடி கொடுத்தாள் ஷரியா.

பங்களா சென்று, சூட் ரூம் சென்று, தீப்தி குளியலறைக்குள் நுழைய, ஜெயமோகனும் அவளுடன் சேர்ந்து நுழைய முயல, கண்டிப்புடன் கையை வெளியே காட்டினாள் தீப்தி.

குளித்து முடித்து, இரவு வெவ்வேறு பார்களுக்கு சுற்றினார்கள். நடனமாடினார்கள். தீப்தி கொஞ்சம் மனம் லேசாகி, இரவு ஒரு மணிக்கு ஒரு பப்பில் ஆடிக்கொண்டு இருக்கும்போது, தன் டிரிங்கை ஜெயமோகன் கையில் கொடுத்து விட்டு, அவனை இழுத்து ஆழமாக ஒரு உதட்டு முத்தம் கொடுத்தாள்.

கார் பெங்களூரை நோக்கி ஓடிக்கொண்டிருந்தது.

கடந்த நான்கு நாட்களாக அடித்த கூத்தையும் ஆடிய ஆட்டத்தையும் பேசிக்கொண்டே திரும்பிக்கொண்டு இருந்தார்கள். ஒரு பயணம் முடித்து கூட்டுக்கு திரும்பும்போது ஏற்படும் அலுப்போ சோகமோ அந்தக் காருக்குள் இல்லை. அந்த நான்கு நாட்கள் அடித்த கூத்துக்கள், ஷரியா தொடர்ந்து சீண்டிக்கொண்டே இருந்தது, கடலில் குளிக்கும்போது ஷரியாவின் பிகினி

பிரேசியர் கடலில் அடித்துக்கொண்டு போனது, கேம்ப் ஃபயரின்போது நிரஞ்சனா ஜெயமோகனின் மடியில் படுத்துச் சின்ன சண்டையானது, ஷரியா ஒரு வெள்ளைக்காரனுடன் நடனம் ஆடி தெய்வீகக் காதலன் போல உதடுகளை கடித்துத் தின்று துப்பியது, நிரஞ்சனா ஒரு பஞ்சாபி இளைஞனுடன் இரண்டு மணி நேர காதலில் விழுந்து பின் தந்தூரி சிக்கன் தின்று தெளிவானது, ஷரியாவை போதையில் ஒருவன் மார்பில் முழங்கையால் தடவ, ஷரியா அவனை அடித்து பௌன்ஸரிடம் பிடித்துக் கொடுத்து போலீசில் ஒப்படைக்கச் சொல்லி சண்டையிட்டது, இதையெல்லாம் பெரிதாக பார்க்காமல் மூன்றாம் நாள் இரவு கடற்கரை ஓரம் இருந்த பப்பில் நிரஞ்சனாவும் ஷரியாவும் ஆடிக்கொண்டிருக்க, ஜெயமோகனும் தீப்தியும் நள்ளிரவுக்கு மேல் பீச் பக்கம் ஒதுங்கி ஒரு பள்ளம் தோண்டி, மெழுகுவர்த்தியைக் கொளுத்தி வைத்துக்கொண்டு பேசியவற்றை மட்டும் குட்டியாகப் பார்த்தால் போதும். அப்படியே ஜெயமோகனும் ப்ரியாந்தினியும் பேசியவற்றில் கொஞ்சமும்.

# தீப்தி – ப்ரியாந்தினி – ஜெயமோகன்

ஜெயமோகன் பட்வைஸர் பியருடனும் தீப்தி பிரா பியருடனும் கடலை ஒட்டி, கடலலை காலைத் தொட வாய்ப்பளிக்கும் இடத்தில் அமர்ந்தனர். ஜெயமோகன்தான் குழி தோண்டி ஒரு மெழுகுவர்த்தியை நட்டு வைத்தான். அது பச்சைக்கலரில் ஒரு அடி உயரத்துக்கு இருந்தது.

ப்ரியாந்தினி, தூங்கப்பார்த்த ஜெயமோகனை இழுத்துக்கொண்டு வர்க்கலா கடற்கரையில் இறங்கி, கடலுக்கு அருகில் அமரவைத்து சின்னச் சின்னதாக நான்கு குழிகள் தோண்டி, அந்தக்குழியில் சின்னச் சின்னதாக மெழுகுவர்த்திகளை ஏற்றி வைத்து, கையில் உப்பு தடவி எலுமிச்சை கொடுத்து டக்கீலா ஷாட் கொடுத்தாள்.

தீப்திகா: மெழுகுவர்த்தி வச்ச உடனே இந்த இடமே மாறி போச்சி, அவ்ளோ அழகா இருக்கு. எப்ப மெழுகுவர்த்தி வாங்கின..? கவனிக்கவே இல்லை, லவ் யூ டா.

ஜெயமோகன்: எப்படீ இந்த மெழுகுவத்தியெல்லாம் வாங்கின..?

‘‘எப்பவோ வாங்கினேன், அதை விடு, எப்பிடி இருக்கு..? ரொமாண்டிக்கா இருக்கா..? நம்ம லவ் எப்பவும் இது போல ரொமாண்டிக்கா இருக்கணும்."

‘‘இந்தக் கடல் காத்து மெழுகுவத்தியை அணைக்க மாட்டேங்குது பாத்தியா, கடலுக்கு நம்ம லவ் அவ்ளோ பிடிச்சிருக்குன்னுதானே அர்த்தம்..?"

"எனக்கென்னமோ இந்த கடலே இப்ப உன்னைப் பாத்து ஹோன்னு கத்தி ஐ லவ் யூ சொல்ற மாதிரி இருக்கு."

"யேய் போடா...’’

"இருக்கும்டா இருக்கும்...’’

"ஆண் அலையும் பெண் அலையும் தொட்டுக்காதாமே..? அதனால தான் அலை தொடர்ந்து வந்துட்டே இருக்குன்னு சொல்வாங்க."

நாம ரெண்டு பேரும் தொட்டுகிட்டு ஒண்ணாயிடுவோம். நம்ம வாழ்க்கை கடல்ல அலையே இல்லாம ஏரி மாதிரி ஆயிடலாம். அமைதியா, ரம்யமா இருக்கலாம்.''

''அலை இருந்தாதானே கடலுக்கு அழகு..?''

''அது கடலைப் பாக்குறவங்களுக்குத்தான் அழகு, கடலுக்கு டார்ச்சர்தானே..?''

''நான் எல்லாம் உன்னை முதல்ல பாக்கும்போது லவ் பண்ணுவேன்னு நினைக்கலடா, ஆனா இப்பவும் பயமா இருக்குடா.''

''உன்னை பாத்ததுமே நீதான் என் ஏஞ்சல் முடிவு பண்ணிட்டேன் தெரியுமா, இந்த நாலு மெழுகுவத்தி வெளிச்சத்தையும் நான் எப்படி சொல்வேன் தெரியுமா..? உன் மேல இருக்கும் அன்பு, பாசம், காதல், மரியாதை.''

''அப்ப காமம்..?''

''இது நாலும் சேந்தாதான் காமமே வரும்.''

''எனக்கும் பயமாத்தான் இருக்கு, உன்னை கேர்ஃபுல்லா பாத்துக்கணும், லைஃப் லாங்க் உன்னை கூடவே வச்சிக்கணும்னு.''

''என்னை சீரியஸா கல்யாணம் பண்ணிக்கலாம்னு இருக்கியா..?''

''எப்படா கல்யாணம் பண்ணிக்கலாம்..?''

''அப்பா, இவ்ளோ ரொமாண்டிக் டயலாக் விட்டதுக்கு அப்புறம்தான் மேடத்துக்கு கல்யாண மூட் வந்துச்சா..?''

''உனக்கு எப்ப என் மேல நம்பிக்கை வருதோ, அப்ப கல்யாணம் பண்ணிக்கலாம்.''

அவன்மேல் சாய்ந்து கொண்டாள். மெழுகுவர்த்தியை எடுத்து அவள் முகத்தருகில் கொண்டு சென்ற அவன், தலையைச் சாய்த்து அவள் முகத்தையே நோக்கினான்.

பெரும் நிம்மதி குடிகொண்டு இருந்தது.

பெரும் குழப்பம் குடிகொண்டு இருந்தது.

அவ்வளவு அழகாக மின்னினாள்.

அவளது மூக்கில் ஒரு சின்ன முத்தமிட்டு, “இதுதான் உனக்கு மூக்குத்தி” என்றான்.

“உனக்கு மூக்குத்தி பிடிக்குமாடா..?”

“உனக்கு போட்டா பிடிக்கும், சின்னதா குட்டியா.”

“குத்திக்கட்டுமா..?”

“வேண்டாம்.”

“ஏண்டா..?”

“நான் அப்பப்ப இதே மாதிரி மூக்குத்தி வச்சி விடறேன், போதும்.”

ஒரு வாய் பியர் குடித்தான்.

ஒரு ஷாட் டக்கீலா குடித்தான்.

“டக்கீலா ஷாட்டோட ஒரு கிஸ் பண்ணேன், ஃபையர் மாதிரி இருக்கணும்.”

“பியர் குடிச்சிட்டு, அதை அப்படியே எனக்கு குடேன்.”

“எனக்கு ஒரு மாதிரியா இருக்கு.”

“சரி என் மடியில ஒக்காந்துக்கோ.”

“யேய், என்னாடி குழந்தை மாதிரி மெத்துன்னு இருக்க..?”

“இப்ப மழை பெஞ்சா எப்படி இருக்கும்..?”

“மெழுகுவத்தி அணைஞ்சிடுமே..!”

“மழையும் நம்ம காதலை அணைக்காது.”

“இப்ப கேட்டா கோச்சிக்கக் கூடாது, என்னா..?”

“நீ என்ன கேட்டாலும் கோச்சிக்க மாட்டேன்.”

“ஏன் உன் ஃபர்ஸ்ட் வைஃபை பிரிஞ்சி இருக்க..? லவ் மேரேஜ்தானே..?”

“எனக்கு முன்னால, உனக்கு யாராவது கேர்ள் ஃபிரண்ட் இருந்திருக்காங்களா..? யாரையாச்சும் லவ் பண்ணி இருக்கியா..?”

“எனக்கு ஃபர்ஸ்ட் வைஃபே நீதாண்டி செல்லம். அது ஒரு ஆக்ஸிடெண்ட்.”

“எனக்கு முதல் காதலி, கேர்ள் ஃபிரண்ட், பொண்டாட்டி, அம்மா எல்லாம் நீதாண்டி செல்லம்.”

“இதே லவ் கல்யாணத்துக்கு அப்புறம் இருக்குமாடா..?”

“நீ செத்தாலும் உன் ஆவியைத்தாண்டி லவ் பண்ணிட்டு இருப்பேன்.”

“பிரிஞ்சி இருந்தாலும், முதல் வைஃப் இருக்காங்க; என்ன முழுசா உன்னால லவ் பண்ண முடியுமாடா..?”

“நான் உன்னைப் பாக்காததுல இருந்தே உன்னைத்தாண்டி லவ் பண்ணிட்டு இருந்திருக்கேன். எனக்கே அது உன்னைப் பாத்ததுக்கு அப்புறம்தான் தெரிஞ்சிது. என் முதல் வைஃப்கிட்டயே உன்னைத்தான் தேடிட்டு இருந்திருக்கேன்னு இப்பதான் புரியிது.”

அவள் இவனை அணைத்துக்கொள்ள, அவளைக் கடற்கரையில் சாய்த்து, மேலே படர்ந்து மெல்ல முத்தமிட ஆரம்பித்தான். கடல் மணற்துகள்கள் முதுகில் குத்த, கால்களில் ஒட்டிக்கொண்ட மணல் நறநறக்க ஜெயமோகனின் மது வாசனை கலந்த முத்தம் அவளின் கண்களை மூட வைத்தது.

அப்படியே கீழிறங்கி, அவளின் கணுக்கால்களில் ஒட்டிக்கொண்டிருந்த கடல் மணற்துகள்களைத் தன் நாவால் ஒற்றியெடுத்தான் ஜெயமோகன். அவள் “யேய்” என பதற, அவளின் பாதங்களில் முத்தமிட்டு, அவளின் பாதங்களைத் தூக்கி தன் மார்பில் வைத்துக்கொண்டான். அவள் எழுந்திருக்க முயல,

அவளைப் படுக்க வைத்த ஜெயமோகன், அவளின் மேலாடையை விலக்கி, முகத்தை மார்புக்குக் கொண்டு செல்லும் வேளையில் அடித்த காற்றால் திரும்பிய தீப ஒளி, அவளின் மார்பகத்தைத் தழுவி நகர, அங்கே சடுதியில் ஒரு நிலாவெழுச்சி தோன்றி மறைந்தது.

அவளின் கீழாடையையும் ஜெயமோகன் விலக்க முயல, “டேய்... இதெல்லாம் பப்ளிக்ல, அநியாயம்” என்றவாறே அவனைத் தள்ளி விட்டு எழுந்தாள் அவள். மேலாடையைச் சரி செய்து கொண்டாள்.

“ஒரே ஒரு கிஸ் மட்டும்” என்று சொல்லியபடி தன்னுடைய ஷார்ட்ஸ் ஜிப்பில் ஜெயமோகன் கை வைக்க,

“ஒதை... மெழுகுவத்தி எடுத்து சுட்டுடுவேன்” என்றாள் சிரித்தபடி.

“ஓ… நான் வேற என்னமோ வித்தியாசமா நினைச்சிகிட்டேன்” என்றான் ஜெயமோகன் சிரித்தபடி.

# தீப்தி – ஜெயமோகன் – ப்ரியாந்தினி

ப கலிலேயே கிளம்பிய கார், கடந்த நான்கு நாட்களாக நடந்ததை அசைபோட்டுக்கொண்டே முன்னிரவில் பெங்களூரை வந்தடைந்தது. ஷரியாவையும் நிரஞ்சனாவையும் எம் ஜீ ரோட்டில் இறக்கி விட்டுக் கிளம்பினார்கள். டின்னர் ஒண்ணா சாப்பிட்டு போகலாம் என ஷரியா கேட்டதற்கு, "செம டயர்ட்மா" என்று ஜெயமோகன் மறுத்ததை தீப்தி ரசித்தாள்.

இரவு குடிக்க வேண்டாம் என்று முடிவு செய்த தீப்தி, "நல்லா தூங்கலாம்" என்று சொன்னாள். 'என்னைத் தொடாதே' என்பதை நன்கு புரிந்துகொண்ட ஜெயமோகன், "ஒரே ஒரு கிஸ்" என்றான்.

வறட்டுத்தனமான ஒரு முத்தத்தைப் பரிமாறிக்கொண்டு இருவரும் பிரிந்தனர். தீப்தி குளித்து விட்டுத் தூங்க ஆரம்பித்தாள். தீப்தி தூங்க ஆரம்பிப்பதற்காக காத்திருந்த ஜெயமோகன், இரண்டு ரவுண்ட் ஸ்காட்ச் அடித்து விட்டு தூங்கலாம் என்று முடிவு செய்தான்.

ஆனந்திடம், எட்டு இட்லி மற்றும் மீன் குழம்பு வேண்டும் என்று வரும்போதே சொல்லி இருந்தான். தீப்தி உறங்கி விட்டாள்.

அம்ருத் ஸ்காட்ச் எடுத்து ஆறு ஐஸ் கட்டிகளைப் போட்டுக்கொண்டு கண்ணை மூடிக்கொண்டு ரசித்து குடித்தான்.

அவ்வப்போது ப்ரியாந்தினியின் மெசேஜ்களுக்கு பதில் அளித்து இருந்தாலும் ஏதேனும் தப்பு செய்திருக்கிறோமா என்று மொத்த உரையாடலையும் படித்துப் பார்த்தான். அலுவல் சம்மந்தமாக சில மெசேஜ்கள் அனுப்பினான். நாளை என்னவெல்லாம் செய்ய வேண்டும், என்னவெல்லாம் அலுவல் சம்மந்தமாகத் தேவை எனத் தன்னுடைய உதவியாளினிக்கு மெசேஜ் தட்டினான். மெயில்கள் பார்த்தான். இரண்டு ரவுண்டோடு முடித்துக்கொண்டு, ஹாட் பேக்கில் இருந்து இட்லி சாபிட்டான். தூக்கம் வருவது போலத்தான் இருந்தது.

நான்கு இட்லிகளை தட்டில் போட்டுக்கொண்டு, மீன் குழம்பும் பூண்டு மிளகாய்ப் பொடியும் போட்டுக்கொண்டு, தீப்தி பக்கத்தில் அமர்ந்தான். அவளை லேசாக தட்டி எழுப்பினான்.

"இட்லி சாப்பிட்டுத் தூங்கும்மா" என்றான்.

வேண்டாமென முறுவலித்தாள்.

அவளை தூக்கித் தன் மேல் போட்டுக்கொண்டு, இட்லியை ஊட்ட ஆரம்பித்தான். இரண்டு இட்லி வரை கண்ணை மூடிக்கொண்டே சாப்பிட்டாள் தீப்தி.

"போதும் பேபி, தேங்க்ஸ் பேபி, நான் தூங்கிக்கறேன் ப்ளீஸ்" என்றாள். அவளைப் படுக்க வைத்து போர்த்தி விட்டு வெளியே வந்து புகைபிடித்தான்.

கூர்க் டாட்டா ப்ளாண்டேஷன் பங்களாவில் ஒருமுறை மிகச் சீக்கிரம் குடித்துவிட்டு ப்ரியாந்தினி தூங்கிவிட, இதேபோல நள்ளிரவு எழுப்பி அக்கி ரொட்டியும் பன்றி இறைச்சியும் ஊட்டி விட்டான் ஜெயமோகன். ஆர்வமாக சாப்பிட்ட ப்ரியாந்தினிக்கு போதை கலைந்து தூக்கமும் போய்விட, அப்படியே அவனைப் படுக்கையில் தள்ளி, உடைகளைக் களைந்து, விரைவுப் புணர்ச்சிக்கு வித்திட்ட ப்ரியாந்தினி அவன் மேல் ஏறி அமரவும் சூடாக அக்கி ரொட்டி போட்டு எடுத்துக்கொண்டு சமையல் ஆள் உள்ளே வரவும் சரியாக இருந்தது.

அவர் பெரிய அதிர்ச்சி ஏதும் உருவாக்காமல், டக்கென்று ரொட்டியைக் கீழே வைத்து விட்டுச் சென்று விட்டார். அரவம் கேட்டுச் சரிந்து படுத்து போர்வையைப் போர்த்திக்கொண்ட ப்ரியாந்தினி, சிரித்துக்கொண்டே மீண்டும் எழுந்து நிலைகொண்டாள். இப்போதும் கதவைச் சார்த்தவில்லை.

புகைபிடித்துவிட்டு வந்து தீப்தி பக்கத்தில் படுத்த ஜெயமோகன், தீப்தி மேல் கையைப்போட, "ப்ளீஸ் தூங்குடா" என்ற பதிலைப் பெற்றுக்கொண்டு எழுந்த ஜெயமோகன், மீண்டும் இன்னொரு ரவுண்ட் ஸ்காட்ச் சென்றான். நான்கு ரவுண்ட் நீண்ட மதுநேரம், முடிவுக்கு வந்து தூங்கி எழுந்தால் தீப்தி தயாராக இருந்தாள். விரைவாகத் தயாராகி தீப்தியை பெங்களூர் விமான நிலையத்தில்

கொண்டு விட்டான். கோவாவிலேயே அவளுக்கான டிக்கட்டை முன்பதிவு செய்திருந்தான்.

மெல்லணைப்பின்பின் மென் முத்தத்துடன் கையை ஆட்டிச் சென்ற தீப்தி, போர்டிங்க் பாஸைக்கூட பார்க்காமல், விமானம் ஏறியதும்தான் அவளுக்கு பிஸினஸ் க்ளாஸ் எனத் தெரிந்தது. தீப்தி இப்போதுதான் முதன்முதலாக பிஸினஸ் க்ளாசில் பயணிக்கிறாள்.

சென்னையில் இறங்கி வெளிவந்ததும் தீப்திகா என்று அட்டை வைத்துக்கொண்டு ஒருவன் நின்று கொண்டிருந்தான். அதில் இவள் புகைப்படமும் இருந்தது. இவள் அவனிடம் சென்றதும், "ஜெயமோகன் சார் அனுப்பினார் மேடம்" என்று பவ்யம் காட்டினான். லக்கேஜைப் பெற்றுக்கொண்டு, பென்ஸ் காரில் ஏற்றினான்.

சுகமாக வீடு வந்து இறங்கினாள் தீப்தி.

கன்யா, பிரபா, ஏஞ்சலினுக்கு எல்லாம் மெசேஜ் அனுப்பினாள்.

அலுவலகம் சென்ற ஜெயமோகன், தொடர்ந்து பற்பல வேலைகள், மீட்டிங் எல்லாம் முடித்து விட்டு வீட்டுக்கு வந்தான். ஆச்சர்யமாக ப்ரியாந்தினியும் அன்று சீக்கிரம் வந்திருந்தாள்.

இவனைப் பார்த்ததும் கட்டிக்கொண்டு, "மிஸ் யூ டா" என்றாள்.

"மிஸ் யூ சோ மச்" என்றான் ஜெயமோகன்.

அவளைத் தள்ளிக்கொண்டு படுக்கையறைக்குள் நுழைந்த ஜெயமோகன், தீப்தி கிளப்பி விட்டதை ப்ரியாந்தினியிடம் முடித்து வைத்துச் சரிந்து படுத்து ப்ரியாந்தினியைக் கட்டிக்கொண்டான்.

# ஆதிரை – தீப்தி

ஆதிரைதான் தீப்திக்குப் படுநெருக்கமான தோழி. ஆதிரை தீப்தியுடன் தங்க மாட்டேன் என்றும், நெருக்கமான நட்பும் தொலைந்து விடும் என்றும் பிடிவாதமாகத் தனியாகத் தங்கி இருக்கிறாள். மிக நெருக்கமாகப் பேச வேண்டும் என்றால், தீப்தி ஆதிரையைத்தான் நாடுவாள்.

மதிய நேரத்திலேயே அலுவலகத்தை கட் அடித்து விட்டு, தீப்தி அழைத்ததால் ஆதிரை வந்தாள்.

ஹைபிஸ்கஸ் டீ சாபிட்டுக்கொண்டு இருவரும் பேசிக்கொண்டதில் இருந்து...

''ஐ மெட் சமொன்...''

''என்னாடி, நீ இதுமாதிரில்லாம் பேசற ஆள் கிடையாதே'' –ஆதிரை

''இல்ல, ஹீ ஈஸ் சம்திங்க் ஸ்பெஷல்'' –– தீப்தி

''சரி மேட்டருக்கு வா, என்னா லவ்வா..?''

''ச்செ ச்சே... சும்மா பிடிச்சிருக்கு, பழகி பாக்கலாம்னு''

''இவ்ளோ நாள் பாதுகாத்து வந்த கன்னித்தன்மை பத்திரம்டீ''

''ஏய் அந்த அளவுக்கெல்லாம் போகாது''

''சரி, பாத்துக்கோ, நீயும் எவ்ளோ நாள்தான் பாய் ஃபிரண்டு இல்லாம சுத்திட்டு இருப்ப..?''

தீப்தி, ஜெயமோகனுடன் எடுத்துக்கொண்ட போட்டோக்களை ஆதிரையிடம் காட்ட ஆரம்பித்தாள். பெங்களூர், கோவா கதைகளைச் சொல்லிக்கொண்டு இருந்தாள். ஆனால், ஜெயமோகன் திருமணமானவன் என்பதை ஏனோ சொல்வதைத் தவிர்த்தாள்.

ஆதிரைக்குப் பணக்கார குடும்பத்தைச் சேர்ந்த காதலன் இருக்கிறான். இருவரும் திருமணம் செய்து கொள்ளப்போகிறார்கள். லக்ஷ்மணன் என்று பெயர் வைத்து, அதை ஸ்டைலாக லக்ஷ்மன் என மாற்றிக்கொண்டு,

இப்போது லக்ஸ் என்று அழைக்கப்படும் அவனைச் சுத்தமாக தீப்திக்குப் பிடிக்காது. அவன் செய்யும் டார்ச்சர் எதையும் பெரிதாக ஆதிரை தீப்தியிடம் சொல்லாவிட்டாலும், தீப்தி மோப்பம் பிடித்தபடியேதான் இருப்பாள். இருவரையும் பிரிப்பதுதான் தீப்தியின் தீராத லட்சியமாக இருந்தாலும் நட்பு கெட்டு விடும் என்பதால் அடக்கி வாசித்தாள்.

கன்யா, பிரபா, ஏஞ்சலின், இனியா என அனைவரும் வந்ததும் பெங்களூர் கோவா கதைகள் களைகட்டி , தீப்தியை எல்லோரும் கிண்டல் அடிக்க ஆரம்பித்தனர். மற்றவர்களுக்கு தீப்திக்கு ஒருவனைப் பிடித்தது உண்மையிலேயே மகிழ்ச்சியாக இருந்தது. அந்த மகிழ்ச்சி வீடு முழுக்கப் பரவி இருந்தது. தீப்தி கடைசி வரை முகத்தில் நாணத்தை மட்டும் படர விடவேயில்லை.

"கிஸ் அடிச்சிகிட்டீங்களா..?"

"சாஃப்ட் போர்னா, இல்ல ஹார்டா டீ..?"

"பிரேசியர் பறந்துச்சா டீ..?"

"ஓரல்..?"

"ஒண்ணா குளிச்சீங்களா..?"

"தீப்தில்லாம் வேற லெவல், முதல் மீட்டிங்ல மேட்டரே முடிச்சிருப்பா."

"தீப்தி, முதல் தடவை எவ்ளோ நேரம் போச்சி..?"

இவ்வளவு நாட்கள் தீப்தி இவர்களை வறுத்து எடுத்ததற்கு, இப்போது தோழிகள் போட்டுத் தாக்கினார்கள். தீப்தி முதலில் ஒழுங்காக பதில்களைச் சொன்னாலும், இவர்கள் லந்து செய்வதைப் பார்த்து, இது சரி வராது என்று முடிவு செய்து அராஜகமாக வெளுத்து வாங்கினாள்.

"பிரேசியரைக் கழட்டவே ஒன்றரை மணி நேரம் எடுத்துகிட்டான் தெரியுமா..? பிரேசியர் ஹூக்குக்கே முந்நூறு முத்தம் குடுத்து இருப்பான்."

"சாஃப்ட் போர்ன் ஹார்டா இருந்திச்சி, ஹார்ட் போர்ன் சாஃப்டா இருந்திச்சி."

"முதல் தடவை மூணு மணி நேரம் போச்சி, அலுக்கவே இல்லை; ஒன்பது மணி நேரத்துல ஏழு ரவுண்ட் போச்சி."

தீப்தி இப்படி பேசப்பேச, ஒருவழியாக அடங்கினார்கள். ஆதிரை கட்டிப்பிடித்து விட்டு கிளம்பினாள்.

“இப்ப எப்டி இருக்கான் அந்த லக்ஸு..? மாறல இல்லை..?” என்றாள் தீப்தி

ஒருகணம் ஆதிரை முகத்தில் சோகம் படர்ந்து விலகியது. சிரித்துக் கொண்டே, “இருக்கான்” என்று மட்டும் சொல்லி விட்டுக் கிளம்பினாள்.

அடுத்த இரண்டு வாரங்கள் றெக்கை கட்டி பறந்தன. மெசேஜ், இமெயில், போன் கால், மெசேஞ்சர் என அனைத்து தகவல் தொடர்பையும் பயன்படுத்தி ஜெயமோகன் – தீப்தி உறவு எதிர்காலத்தை நோக்கிப் பயணப்பட ஆரம்பித்தது. வழக்கமான காதலர்கள்போல ஜெயமோகன் முழுக்க முழுக்க ரொமான்ஸ் சாட் செய்யவில்லை. எதிர்காலத் திட்டமிடலைப் பற்றியே அதிகம் பேசினான்.

திடீரென இதை உனக்கு வாங்கட்டுமா என ஒரு பெண்ட் ஹவுஸ் போட்டோவை அனுப்புவான். விலை நான்கு கோடி இருக்கும்.

எந்த புது லக்ஸூரி கார் வந்தாலும் அதை அனுப்பி இதை உனக்குப் பதிவு செய்யவா எனக் கேட்பான்.

பிறக்கப்போகும் குழந்தையை இந்தப் பள்ளியில் சேர்க்கலாமா என ஒரு ஆலோசனையைப் போடுவான்.ஆன்லைனில் டிசைனர் உடைகளை ஆர்டர் போடுவான். வைரம் பதித்த கைக்கடிகாரம் வரும். இரண்டு வாரங்கள் புரட்டிப்போட்டு, தீப்தியை பெங்களூருக்கு இடம்பெயர வைத்தான். பெங்களூர் இந்திரா நகரில் ஒரு பங்களா இருந்தாலும், தீப்திக்காக அட்டகாசமான ஒரு பெண்ட் ஹவுஸ் வாங்கி இருந்தான். அனைத்து நவீன வசதிகளையும் பாதுகாப்பு வசதிகளையும் கொண்ட குடியிருப்பு.

அலுவல் மாற்றம், உத்தியோக உயர்வு என்றெல்லாம் காரணம் சொல்லி தோழிகளைச் சமாதானப் படுத்தி,'தண்ணி அடித்து', வாந்தி எடுத்து, அழுது புரண்டு, கட்டிக்கொண்டு, தோழிகளைப் பிரிந்து பெங்களூர் வந்தாள் தீப்தி.

தோழிகளை அதே வீட்டில் இருக்கும்படியும், தான் தொடர்ந்து வாடகை கொடுப்பதாகவும் சொல்லி விட்டு வந்திருந்தாள். இது பெண்களிடம் காணக்கிடைக்காத அரிய தன்மை, ஆண்களிடம் மட்டும்தான் அரிதாகத்

தென்படும் தன்மை என்று இந்தக் கதையைப் படித்துக்கொண்டு இருக்கும் ஒரு ஆணாதிக்கவாதி நினைத்துக்கொண்டான். தீப்தி அவனைப் பார்த்து புன்முறுவல் பூத்தபடிதான் கிளம்பினாள்.

# பொற்செல்வி

பொற்செல்வி, அப்போதுதான் நகரத்தில் ஆரம்பிக்கப்பட்டிருந்த ஆங்கிலவழிப் பள்ளிக்கூடத்தில் சேர்க்கப்பட்டாள். ஆங்கிலம் பொற்செல்விக்கு நன்றாக வந்தது. அதேநேரம், பொற்செல்வியால் தமிழைப் பிறமொழி கலக்காமலும் பேச முடிந்தது.

பள்ளிச் சீருடை, பொற்செல்விக்குக் கூடுதல் அழகைக் கொடுத்தது. வீட்டில் இருக்கும்போது பட்டுப்பாவாடை சட்டைதான். சில நேரங்களில் மட்டும், போனால் போகிறதென்று சின்னாளப்பட்டுப் பாவாடை அணிவித்தார்கள். இரவு தூங்குவதற்குப் பொற்செல்வியின் அம்மா வேம்புவே தன் கையால் தைத்த மெத்து மெத்தென்ற பாவாடையும் கை வைக்காத சட்டையும் அணிவித்துத் தூங்க வைப்பாள்.

வேம்பு நன்றாகவெல்லாம் பாட மாட்டாள். ஆனால் பொற்செல்விக் காகப் பாடும்போது குரலில் இனிமை சேர்ந்து விடும். இனிமை சேர்ந்தால் போதுமே, ராகமாவது மண்ணாங்கட்டியாவது. பொற்செல்வியை இந்த வயதிலேயே சங்கீதம் கற்றுக்கொள்ள ஏற்பாடு செய்து விட்டார்கள். வாரத்தில் மூன்று நாள் சங்கீத பூஷ்ணம் மகர பூஷ்ணம் வீட்டுக்கு வந்து சொல்லிக்கொடுத்துச் சென்றார்.

அவ்வப்போது நீண்ட நாட்கள் விடுமுறையின் போதும் பண்டிகைகளின் போதும் சொந்த கிராமத்துக்குச் செல்வது வழக்கம்.

கிராமத்துத் தெருக்களில் சின்னப் பசங்களோடு சேர்ந்து விளையாடிக்கொண்டே மரத்துக்குக் கீழே இருந்த டீக்கடையும் அதையொட்டி இருந்த பேருந்து நிறுத்தத்தின் அருகே வந்து விட்டாள். டீக்கடைக்குப் பின்னால் குப்பையும் கூளமுமாகக் கண்ட செடி கொடிகளுடன் கூடிய மைதானம் என்று சொல்லத்தக்க ஒரு கலவையான இடத்தில் சின்னப் பையன்கள் விளையாடிக்கொண்டு இருந்தனர்.

பொற்செல்வி ஒரு குச்சியின் இருபுறமும் பனம்பழத்தில் பாதியை வெட்டிச் சொருகப்பட்டதன் மூலம் உருவாக்கப்பட்ட ஒரு வண்டியைக் கவக்கழியின் மூலம் ஓட்டிக்கொண்டு வந்திருந்தாள்.

சின்னப்பொண்ணுவின் தத்துப் பையன் அமிர்தகடேஸ்வரன் அந்த மைதானத்தில் கிட்டிப்புள் ஆடிக்கொண்டு இருந்தான். அவன் அடித்ததும் பறந்து வந்த புள் பொற்செல்வியின் இடது புருவத்துக்கு மேலே பட்டது. சற்றே வேகத்தை இழந்த புள் என்பதால் சின்னக் காயம் உண்டானது. அதற்கே ரத்தம் வந்தது. பொற்செல்வி கத்தவில்லை; பொற்செல்வியுடன் வந்திருந்த பொடிசுகள் கத்தவும் டீ மாஸ்டர் மணி ஓடி வந்தார்.

“தூக்கத்துல பாம்பு பூந்து பொறந்த பயலுவளா, ஒங்களையெல்லாம் கொட்டையை அறுத்து பாக்கு இடுக்கில வச்சு நசுக்கணும்டா” என்று திட்டியபடியே பொற்செல்வியின் புருவத்தைப் பார்த்து காயம் ஆழமாக இல்லாததால் சமாதானம் அடைந்தார்.

பொற்செல்வியைக் கடையில் அமரவைத்து, வெந்நீர் கொடுத்தார்; குழந்தை குடித்தாள்.

சின்ன ஐயாவும் வேம்புவும் வேலை ஆட்களும் துடித்துக்கொண்டு ஓடி வந்தனர். ஆறுமுகமும் தயங்கித் தயங்கி ஓடிவந்தார். மற்றவர்கள் அடிப்பதற்கு முன் தன் பேரனைத் தானே போட்டு அடித்தார். அதுவும் விளையாட்டுக்கு அடிப்பது போல இல்லை; ஆறுமுகத்தின் அறையால், அமிர்துவின் உதடு அவனுடைய பல்லில் பட்டுக் கிழிந்து ரத்தம் ஊற்றியது.

பொற்செல்வியைத் தூக்கிக்கொண்டு சென்றார்கள். அமிர்து அழாமல் பொற்செல்வியைப் பார்த்துக்கொண்டு இருந்தான். பொற்செல்வி அனைத்தையும் அலட்சியமாகப் பார்த்தபடி சென்று கொண்டிருந்தாள். இடது புருவத்தின் மேல் உற்றுப் பார்த்தால் தெரியும்படிக்கு ஒரு கீறல் ஏற்பட்டுப்போனது. அது, அவளுக்கு ஒரு வசீகர அழகைக் கொடுத்தது.

# ஆதிரை

ஆதிரை, பணக்காரக் குழந்தைகள் படிக்கும் மலைவாசஸ்தலப் பள்ளியில் தங்கிப் படித்துக்கொண்டிருந்தாள். ஆதிரைக்கு அப்பாதான் உயிர்; அப்பா மேல் அன்பு, பாசத்தை எல்லாம் தாண்டி, மரியாதை அதிகம். அதை மரியாதை என்று கூட சொல்ல முடியாது, மதிப்பு என்று சொல்லலாம். இரண்டுக்கும் என்ன பெரிய வித்தியாசம்..? பெருமை என்று சொல்லலாம்.

சின்ன வயதில் அப்பா மடியில்தான் உறங்குவாள். அப்பா வருவதற்கு நள்ளிரவு இரண்டு மணி ஆனாலும் தூங்காமல் விழித்து இருப்பாள்.

தன் அப்பாவை ஒரு ஹீரோ மாதிரிப் பார்த்து சந்தோஷமடைவாள்.

அவர் அரசாங்கப் பதவியில் பெரும் பொறுப்பில் இருந்த அதிகாரி; பணத்துக்குப் பஞ்சமில்லை; விடுதியில் இருக்கும்போது மற்ற தோழிகளின் தந்தைகளும் வருவார்கள். அவர்கள் எல்லாம் தொங்கிப் போய் பொத பொதவென இருக்கையில், தன் தந்தை மட்டும் மிடுக்காக இருப்பது ஆதிரைக்குப் பெரும் கர்வம்.

ஆதிரை மட்டுமன்றி மற்ற தோழிகளுக்கும் ஆதிரையின் அப்பாவைப் பிடிக்கும். அவரும் குறுகிய மனம் கொண்ட தந்தையாக இல்லாமல், ஆதிரையின் தோழிகளுக்கும் தின்பண்டங்கள், விளையாட்டுப் பொருட்கள், உடைகள் என வாங்கிக்கொடுப்பார்.

பள்ளி முதல்வரின் அனுமதியோடு தன்னுடைய ஜீப்பில் ஆதிரையையும் அவளின் தோழிகளையும் வெளியே அழைத்துச் செல்வார்; உணவு விடுதிக்கு அழைத்துச் செல்வார்; பூங்காக்களுக்கு அழைத்துச் செல்வார்; 'படி படி' என்று அறுக்காமல் சின்னப் பசங்களுக்குப் பிடித்தது போலப் பேசுவார்.

ஆதிரையின் தோழி தாமரைக்கு ஆதிரையின் வீடு இருக்கும் அதே தெருவில்தான் வீடு. வசதியாக இருக்கும்போது இந்தப்பள்ளியில் சேர்த்து விட்டு, வசதி குறைந்ததும் கல்விக்கட்டணம் கட்டச் சிரமப்படுவது தெரிந்து

இவரே கட்டினார். அது தாமரைக்குத் தெரிந்தால் சங்கடப்படுவாள் என்று அவர்கள் பெற்றோரிடம் அதை மறைக்கச் சொல்லிவிட்டார். இந்த விஷயம் தாமரைக்கும் தெரியாது, ஆதிரைக்கும் தெரியாது.

பன்னிரண்டாம் வகுப்பு முடிந்து கல்லூரிக்கு முயற்சி செய்து கொண்டிருக்கும் நேரத்தில் தாமரை, ஆதிரையை அழைத்து நீண்ட நேரம் பேசினாள்.

'எனக்கும் உங்க அப்பாவுக்கும் ரிலேஷன்ஷிப் இருக்கு' என்பதுதான் பேச்சின் மொத்த சாராம்சம்.

உடலுறவைத் தவிர அனைத்தும் இருந்ததாகவும் உடலுறவை அப்பாதான் தவிர்த்ததாகவும் தாமரை சொன்னாள்.

“அனைத்தும் என்றால் என்ன..?" என்று பதட்டத்துடன் ஆதிரை கேட்டதற்கு, “ஓரல் வரைக்கும் டீ" என்று சொல்லி விட்டாள். இரண்டு விதமான ஓரல்களையும் நினைத்துப்பார்த்தாள் போலிருக்கிறது, வாந்தி வந்து விட்டது ஆதிரைக்கு.

வாந்தி எடுத்து விட்டு, பித்துப்பிடித்துக் கிடந்த ஆதிரை கொஞ்ச நேரம் கழித்து தாமரையை திட்ட ஆரம்பிக்க, “உன் ஃபிரண்ட்ஷிப்பை மதிச்சிதான் ஊரை விட்டு போறேன். இங்கயே இருந்தா, உங்க அப்பா, உங்க குடும்பத்தை எல்லாம் விட்டுட்டு, என் கூட வந்துடுவாரு. என் கால்லயே கெடக்கறாரு, நான் என்னா சொன்னாலும் கேப்பாரு. இவ்ளோ நாள் உன்னைப் பாக்க வந்ததா நினைச்சிட்டு இருக்கியா..? என்னைப் பாக்கதான் வந்தாரு" என்று சொல்லிய தாமரை, "நான் கிளம்பறேன்" என்று சொல்லிக் கிளம்பி விட்டாள்.

தாமரைக்குச் சமீபத்தில் ஒரு பாய் ஃபிரண்டு கிடைத்தது ஆதிரைக்குத் தெரியும். அவன் கல்லூரி படித்துக்கொண்டு இருந்தான். அவன் நல்ல ஆழகாகவும் நேர்த்தியாகவும் வசீகரமாகவும் இருப்பான்.

நான்கைந்து நாட்கள் யாரிடமும் பேசவில்லை ஆதிரை. சாப்பிட வில்லை, தூங்கவில்லை; கிட்டத்தட்ட பைத்திய நிலைக்குத் தள்ளப்பட்டாள்.

அப்பா பாசத்துடன் அருகில் வந்தாலே கத்த ஆரம்பித்தாள். அவர் சட்டையைப் பிடித்து கிழித்துவிட்டாள் ஒருநாள். அவரைப் பிடித்து நெட்டித் தள்ளினாள். குடும்பமே குழம்பித் தவித்தது.

ஆதிரைக்குத் தீப்திதான் நெருங்கிய தோழி என்பது வீட்டுக்குத் தெரியுமென்பதால் ஆதிரையின் அண்ணன் தீப்தியை வீட்டுக்கு அழைத்தான்.

தீப்திக்கும் ஆதிரையின் அப்பாவை ரொம்பப் பிடிக்கும். வீட்டுக்கு வந்தால் பத்தாவது படிக்கும்வரை அவரின் மடியில் அமர்ந்து இருக்கிறாள். முத்தம் கொடுத்து இருக்கிறாள்; சின்ன வயதில் ஒரு முறை சுற்றுலா சென்றபோது, அவரைக்கட்டிக்கொண்டு உறங்கியிருக்கிறாள்.

தீப்தி ஆதிரையை பைக்கில் அழைத்துக்கொண்டு சென்றாள். ஆதிரை வீட்டிலிருந்து சிறிது தொலைவிலேயே பாழடைந்த மலை உண்டு. பாழடைந்த மலை என்றாலே சாராயம் காய்ச்சுவார்கள்தானே..? பயப்படாமல் அங்கே சென்ற இருவரும் ஒரு பாறை மீதமர்ந்தார்கள்.

‘‘என்னாடீ பிரச்னை..? ஏண்டி இப்படி அப்செட்டா இருக்க..?" என்று தீப்திகா எவ்வளவோ நேரம் கேட்டுப் போராடிப்பார்த்தாள். ஆதிரை பித்துப்பிடித்தது போலவே இருந்தாள்.

‘‘ஏய் புள்ளைங்களா, இங்க என்னா பண்ணிட்டு இருக்கீங்க..?" என்று மிதிவண்டியில் கோலம் போட்டுக்கொண்டு சென்ற சமூக ஆர்வலக் கிழவர் ஒருவர் மிரட்டி விட்டுச் சென்றார்.

எவ்வளவு பேசியும் வாய்த்திறக்காத ஆதிரையை அழைத்துக்கொண்டு வீட்டுக்கு வந்து, ‘‘ஆண்ட்டி, நான் இவளை என் வீட்டுக்கு கூட்டிட்டு போறேன்" என்று சொல்லி, ரயில் ஏறித் தன்னுடைய சொந்தக்கார மாமா வீட்டுக்கு அழைத்துச் சென்றாள் தீப்திகா.

அந்த மாமாதான், கோடை விடுமுறைக்கு கொடைக்கானலில் இந்த ராவடி கூட்டத்துக்குச் சரக்கு வாங்கிக்கொடுத்து பொத்திக்கொண்டு போனவன்.

அதேபோல, இப்போதும் அவனுடைய மாடி அறையில் தங்கிக்கொண்டு சரக்கு வாங்கி வரச் சொன்னாள்.

ஆதிரை குடிக்க மறுத்தாள்; தீப்தி குடிக்க ஆரம்பித்து, தொடர் வற்புறுத்தலின் பேரில் ஆதிரையும் 'மடக் மடக்' என்று குடித்தாள். குடித்து விட்டுப் பேய் மாதிரி அழுதாள். தீப்தியைக் கட்டிப்பிடித்துக்கொண்டு கிடந்தாள். அழுது முடித்து ஓய்ந்தபின் விஷயத்தை விசும்பலோடு சொன்னாள் ஆதிரை.

இப்போது தீப்திக்குப் பித்துப்பிடித்ததுபோல ஆனது. ஆதிரையின் அப்பாவோடு கட்டிப்பிடித்து கிடந்தது, மடியில் அமர்ந்தது எல்லாம் நினைவுக்கு வந்து குமட்டல் வந்தது. குளியலறைக்குச் சென்று வாந்தி எடுத்து, முகம் கழுவி வந்தமர்ந்த தீப்தி, மீண்டும் குடித்தாள்.

சில நிமிட அமைதிக்குப் பின் தீப்தி பேசினாள்.

‘‘ரெண்டு விஷயம் டீ; ஒண்ணு, தாமரை பொய் சொல்லி இருக்கலாம். இவ கூட அவரை முயற்சி பண்ணி இருக்கலாம், அவர் வேணாம்னு மறுத்து இருக்கலாம். இல்ல, அவரும் சேந்து செஞ்சி இருந்தாலும், அவ கிட்ட மட்டும்தான் பண்ணி இருப்பாரு. ஏன்னா, எனக்கும் அவரை ரொம்ப பிடிக்கும். அவர் மடியிலகூட ஒக்காந்து இருக்கேன். தப்பா எதுவுமே அவர் பண்ணதில்லை. நீ முதல்ல சொன்னதும் எனக்கே ஒரு மாதிரி ஆயிடிச்சி. ஆனா, பொறுமையா யோசிச்சிப் பாத்தா, அவர் என்கிட்ட அப்பா மாதிரிதான் நடந்துருக்காரு. அவ கிட்ட தப்பா நடந்துட்டு இருந்தாருன்னு சொன்னா, அதுக்கு அவளும் காரணம்."

‘‘இல்ல தீப்தி, அப்ப இவ்ளோ நாள் என்னைப் பாக்க வந்தது, என்னை வெளில கூட்டிட்டுப் போனது, எனக்கு கிஃப்ட் வாங்கி கொடுத்தது எல்லாம், எனக்கு இல்ல டீ... அவளுக்குத்தான். இப்ப யோசிச்சி பாக்கறேன், எப்பவும் அவ எல்லாத்துலயும் கூடவே இருந்து இருக்கா."

நீண்ட நேரம் பேசிக்கொண்டு இருந்தார்கள்.

‘‘நாம டூர் போனப்ப சில நேரங்களில், நடு ராத்திரில அப்பா பக்கத்துல இருக்க மாட்டாரு. சிகரட் பிடிக்க போயிருப்பாருன்னு நினைச்சிப்பேன். இப்பதாண்டி புரியிது.’’

‘‘ரொம்ப போட்டு குழப்பிக்காதே, வீட்லயே முடங்கி கிடக்காதே, என் கூட என் வீட்டுக்கு வந்துடு. காலேஜ் ஹாஸ்டல்ல சேந்துக்கோ, புரியிதா..?’’

‘‘என்னால அப்பா மூஞ்சியே பாக்க முடியல, வாந்தி வருது, அவரை மண்டைல அம்மிக்கல்லைப் போட்டு கொல்லணும்போல இருக்குடீ..!"

தீப்தி ஆதிரையைக் கட்டிக்கொண்டாள். இரவு முழுக்க தேம்பித் தேம்பி அழுது கொண்டே இருந்தாள் ஆதிரை. போதைகூட அவளுக்கு உதவ

முடியவில்லை.

கல்லூரி சேரும்வரை தீப்தி வீட்டிலும் தன் வீட்டிலும் மாறி மாறி இருந்தாள் ஆதிரை.

ஆதிரையின் அம்மா, ‘‘என்னம்மா ஆச்சி..? என்னடா கண்ணு" என்று முடிந்தவரை கேட்டுப்பார்த்தாள். அப்பாவின் மீதான கோபம் அம்மாவின் மீது திரும்பியது. கையில் கிடைத்தவற்றைத் தூக்கி அடிக்க ஆரம்பித்தாள். ‘‘நீயெல்லாம் புடுங்கத்தான் லாயக்கு" என்று அம்மாவைத் திட்டினாள்.

இதில் முக்கியமான விஷயம், வீட்டில் யாரிடமும் இன்னதுதான் பிரச்னை என்று ஆதிரை சொல்லவேயில்லை. ஆரம்பத்தில், 'என்ன... என்ன' என்று கேட்ட அப்பா, ஆதிரை தள்ளி விட்டுச் சட்டையைக் கிழித்ததும் ஒதுங்க ஆரம்பித்தார். எவ்வளவு திட்டினாலும் அமைதியாக ஏற்றுக்கொள்ள ஆரம்பித்தார்.

இருவரும் தனியாக இருக்கும் நேரத்தில், மரியாதைக் குறைவாக 'அவனே... இவனே' என்று திட்ட ஆரம்பித்தாள். அமைதியாக இருந்தார் அப்பா. அவளுக்கு ஏதேனும் வாங்கிக் கொடுப்பதைக்கூட, அம்மா மூலமோ, அண்ணன் மூலமோ வாங்கிக் கொடுத்தார்.

ஆதிரைக்கு மந்திரிக்கலாமா, சைக்கியாட்ரிஸ்டிடம் கூட்டிப் போகலாமா என்று அம்மா கேட்டபோதெல்லாம், "சும்மா இரு, சரியாயிடும்" என்று அமைதியாகச் சொல்ல ஆரம்பித்தார் அப்பா.

ஆதிரை தொடர்ந்து அப்பாவை மட்டும் ஆக்ரோஷமாக திட்டுவது, அவரை வெறுப்பது ஓரளவு அம்மாவுக்குப் புரிந்தது. அதை வெளிப்படையாக இன்றுவரை ஆதிரையிடம் கேட்டதே இல்லை. அவள் என்ன சொன்னாலும் அதை தாங்கும் சக்தியோ, அதை எதிர்கொண்டு முடிவு எடுக்கும் சக்தியோ தனக்கு இல்லை என்பதை அம்மா புரிந்து வைத்திருந்தாள்.

நல்லதோ கெட்டதோ, இப்போதிருக்கும் குடும்ப அமைப்புக்கு நன்கு பழகியாகி விட்டது. இதை குலைத்து ஏடாகூடமாக ஏதேனும் நடந்தாலோ, அல்லது எதையேனும் தெரிந்து கொண்டு மனதளவில் பாதிபப்டைந்தாலோ தன்னால் எதையும் தாங்க முடியாது என்பது அம்மாவுக்கு தெரிந்து இருந்தது. அது

மட்டுமல்லாமல், அவர் வாழ்க்கை எல்லாம் முடிந்து, உண்டு உறங்கி எழுந்திருக்கும் நிலையில் இருந்தது. இந்த நிலையில் அவர் எதையும் தெரிந்து கொள்ளும் நிலையில் இல்லை. ஆதிரையே சொல்லி இருந்தாலும்கூட கேட்காத மாதிரி போயிருப்பார். ஆதிரைக்காக தீப்தியும் அதே கல்லூரியில் சேர்ந்தாள்.

# தீப்தி

அலுவலக மாற்றம் வெகு சுலபமாகக் கிடைத்தது தீப்திக்கு. நல்ல விசாலமான பெண்ட் ஹவுஸ் வாழ்வு, ஆடி க்யூ 3 கார், கைக்கெட்டும் தூரத்தில் அனைத்தும் இருந்தது வீட்டில். ஜெயமோகன் இல்லாதபோது கூட, தீப்திகாவுக்குத் தேவையானதை ஏற்பாடு செய்து கொண்டேயிருந்தான். தீப்தி ஓரளவு பணக்காரிதான் என்றாலும், ஜெயமோகனுடன் சேர்ந்து இரண்டு அடுக்கு மேலேறி உச்சகட்ட பணக்கார வாழ்வை அவளுக்குத் தெரியாமலேயே வாழ்ந்து கொண்டிருந்தாள். சின்னச் சின்ன ரெஸ்டாரண்டுகளில் சாப்பிடுவது குறைந்தது. மளிகைக் கடை, சூப்பர் ஸ்டோர் செல்வது மறந்தே போனது. துணி துவைப்பது, மடித்து வைப்பது என அனைத்து வேலைகளும் மறந்து போயின. தேவையான போது அனைத்தும் தயாராக இருக்கும்.

கிரடிட் கார்ட், டெபிட் கார்ட் இவளிடம் இருந்தாலும் ஜெயமோகனும் சில கார்டுகளைக் கொடுத்து வைத்திருந்தான். ஐந்து நட்சத்திர விடுதி கார்டுகள் சில இருந்தன.

துரதிர்ஷ்டவசமாக தீப்தி பெங்களூர் இல்லத்தில் குடியேறும்போது ஜெயமோகன் இல்லை. அலுவல் நிமித்தமாக ஜார்ஜியா வரை சென்றிருந்தான். தீப்திக்கு பெங்களூர் வந்ததும் ஷரியா, நிரஞ்சனா போன்ற நண்பர்களைத் தொடர்பு கொள்ளத் தோன்றவே இல்லை.

முதல் வாரம் தனியாகத்தான் இருந்தாள். தனியாக வேலைக்குப் போய்வந்து கொண்டிருந்தாள். ஆரம்பகட்ட ஏற்பாடுகளைச் செய்து விட்டுப் போயிருந்தான் ஜெயமோகன்.

ஜார்ஜியாவில் இருந்து வந்ததும் நேராக தீப்தி வீட்டுக்குத்தான் வந்தான். தீப்திக்கு நிறைய ஷாப்பிங் செய்து மூட்டை கட்டி எடுத்து வந்திருந்தான்.

அன்று இரவு பால்கனியில் அமர்ந்து அவனுக்கு தீப்தி எவ்வளவு முக்கியம், எந்த அளவுக்கு காதலிக்கிறான் என, செண்ட்ரிங்க் கம்பியை உடைக்கக் சுத்தியால் அடிப்பதுபோல நேர்த்தியாகவும் வலிமையாகவும் சொல்லிக்கொண்டு இருந்தான். தீப்தி இன்னும் கனியவில்லை என்று புரிந்து அணைத்து முத்தமிட்டு படுத்து தூங்கி விட்டான்.

இதற்குப் பிறகுதான் ஆடி கார், நட்சத்திர விடுதி என தீப்தியின் வாழ்க்கை முறையை உயர்த்தினான். ஆனால் எப்போதும், தற்போது பார்க்கும் வேலையை விடச் சொல்லியோ, தன் நிறுவனத்துக்கு மாறும்படியோ சொல்லவேயில்லை.

தீப்திக்கு ஜெயமோகனை வெகுவாக பிடித்தாலும் அவளாலேயே அதைச் சரியாக புரிந்து கொள்ள முடியாத காரணத்தால், இவர்களின் உறவு ஒரு விசித்திரமான இடத்தில் நீடித்துக்கொண்டு இருந்தது. ஜெயமோகனுக்கு அந்த விசித்திரமான இடத்தில் இருப்பது சங்கடமாக இருந்தாலும், தானாகவே ஏதும் முயற்சி செய்யாமல் அவள் போக்குக்கு ஏற்றபடி இருந்தான்.

தீப்தியின் பிறந்தநாள் வருவதை முன்னிட்டு, எங்கே செல்லலாம் எனத் தீவிரமான பேச்சுவார்த்தையில் இருந்தார்கள். ஐரோப்பா, அண்டார்டிகா, க்ரீன் லேண்டு என ஆரம்பித்து, லட்சத்தீவு வரை வந்து ஒரு யூடர்ன் அடித்து இலங்கையையும் ஆட்டத்தில் சேர்த்து கடைசியில் மாலத்தீவு என முடிவு செய்தார்கள். முடிவு செய்தது தீப்திதான்; மாலத்தீவை முடிவு செய்ய வைக்க மறைமுகக் காரணமாக ஜெயமோகனே இருந்தான். ஐந்தாறு பேருடன் செல்லலாம் எனத் திட்டம் போட்டு, கடைசியில் இருவர் மட்டும் செல்லலாம் என முடிவானது.

மாலத்தீவில் காரா வேன் வந்து பிக் அப் செய்ததில் இருந்து தீப்திக்கு ஜெயமோகன் ஆச்சர்யத்தைக் கொடுக்க ஆரம்பித்தான். மிகப்பெரிய நிறுவனத்தால் நிர்வகிக்கப்படும் ரெஸார்ட் அது. ஆனால் ஜெயமோகன் எடுத்து இருந்தது தனியான ஒரு ரெஸார்ட். இவர்கள் இருவர் மட்டுமே வாழலாம், ஆடலாம், பாடலாம், ஓடலாம், குதிக்கலாம்; தனியான நீச்சல் குளம், தனியான ஸ்கூபா, தனி கடற்கரை, தனிக்கடல், தனி அலை.

"தனி நிலா" என்று அன்று இரவு சொன்னான் ஜெயமோகன்.

இவர்கள் இருவருக்குச் சேவகம் செய்ய மட்டும் முப்பதுக்கும் மேற்பட்ட வேலையாட்கள்.

தங்கியிருக்கும் ரெஸார்ட்டில் இருந்து வெளி வந்தால் நான்கு வழிகள் செல்லும். ஒன்று கடலுக்கு, இன்னொன்று கடற்கரைக்கு, மற்றொன்று பூங்காவிற்கு, கடைசி வழி ரெஸார்டின் பொது இடத்திற்கு.

கடலுக்குச் செல்ல மரப்பாலம் அமைத்து இருந்தார்கள். கடலையும் கடற்கரையையும் பிரிப்பதுபோல ஒரு நீச்சல் குளம். கடல் தண்ணீருக்கும் நீச்சல் குளத் தண்ணீருக்கும் பெரிய வேறுபாடு நிறத்தால் தெரியவில்லை. இரண்டுமே நீல நிறத்தில்தான் நழுவிக்கொண்டு இருந்தன.

ஒவ்வொன்றையும் குழந்தைபோல குதூகலத்துடன் அனுபவித்தாள் தீப்தி. தண்ணீர் விளையாட்டுக்குத் தனியாக ஆட்கள் இருந்தார்கள். பெரிய படகில் ஏறிச் சென்று ஸ்கூபா டைவிங் அடித்து வந்தார்கள். இருவரும் முன்பே ஸ்கூபா டைவிங்க் பயிற்சி எடுத்திருந்ததால் முன்பயிற்சி தேவையில்லாமல் போனது.

பிறந்தநாளுக்கு முன் தினம், மதிய நேர குட்டித்தூக்கம் போட்டு எழுந்து பார்த்தால் ஜெயமோகனைக் காணவில்லை. வெளியே வந்து தேடிப்பார்த்தாள், ஆள் கண்ணில் அகப்படவில்லை. தீப்தி நிற்பதைப் பார்த்த வேலை ஆட்கள் ஓடி வந்தனர். “தேநீர், ஜூஸ் ஏதேனும் வேண்டுமா” எனக் கேட்டனர்.

“ஜெயமோகன் எங்கே..?” என்று கேட்டதற்கு, ஃபிஷ்ஷிங் சென்று இருப்பதாகக் கூறினார்கள்.

தீப்திகாவுக்கு ஏனோ உடனே கோபம் வந்தது. சொல்லாமல் கொள்ளாமல் எப்படி விட்டு விட்டுப் போகலாம் என்று. ஒரு பியர் பாட்டில் காலியாக, கடலுக்குச் செல்லும் மரப்பாலத்தில் இருந்ததுவேறு இன்னும் கோபத்தை அதிகப்படுத்தியது. ஒரு தேநீர் சொல்லி விட்டு பிகினிக்கு மாறினாள் தீப்தி. கண்ணாடியில் தீண்டா உடல் என்பது போலப் பெருமையாகப் பார்த்துக்கொண்டாள் தீப்தி.

வயிறு சற்றே மேடிட்டு இருப்பதைத் தட்டிப்பார்த்தாள். மூச்சை இழுத்து முன்னும் பின்னும் பார்த்துக்கொண்டாள். உட்காரும் இடத்தில் கிரீம் போட வேண்டும் என்று தோன்றியது போல..! அந்த இடத்தை அதிகம்

நோட்டமிட்டாள். மற்றவர்கள் அதிகம் ரசிக்கும் இள நொங்கையொத்த மார்பகத்தையோ வெள்ளை யானையின் துதிக்கை போன்ற தொடைகளையோ கண்டு கொள்ளவில்லை. தேநீர் வந்ததும் குடித்து விட்டுப் பாலத்தின் ஊடாகச் சென்று, அங்கே கடைசியில் இருந்த படிக்கட்டுகளில் ஏறி நின்று கொண்டு கடலை நோட்டம் விட்டாள். அக்கம் பக்கம் யாருமில்லை; மீன் நேராகத் துள்ளி குதிப்பது போல தீப்தி தலைகீழாக எம்பி குதிததாள். கிட்டத்தட்ட ஒரு மணிநேரம் கடலுக்குள் நீச்சல் அடித்து விட்டு, நீச்சல் குளத்தினருகே வந்து தாவி உள்ளே குதித்தாள். இருட்ட ஆரம்பித்ததும்தான் வெளியே வந்தாள்.

ஜெயமோகனைப் பார்த்து ஒன்றும் சொல்லாமல், குளியலறைக்குள் நுழைந்தாள். ஜெயமோகனும் அவளைக் கண்டு கொள்ளாமல் ஏதோ வேலையாக அங்குமிங்கும் ஓடிக்கொண்டு இருந்தான்.

குளித்து விட்டு வெளியே வந்ததும், அவளிடம் ஜெயமோகன் ஏதோ சொல்ல முற்பட, துண்டு மட்டும் கட்டிக்கொண்டிருந்த தீப்தி சைகையால் அவனை வெளியே போகச்சொன்னாள்.

# தீப்தி – ஜெயமோகன்

“இந்த துண்டைக்குடு, எனக்கு வேணும்" என்ற மொக்கை ஜோக்குக்கு காது கொடுக்கவே இல்லை. வேறு வழியின்றி வெளியேறினான். ஷார்ட்ஸ் போட்டுக்கொண்டு ஒரு ஆலூவேரா ஜூஸை எடுத்துக்கொண்டு கடல் பக்கம் போய் அமர்ந்தாள். ஒரு சின்ன போட்டில் ரெஸார்ட் ஆள் வந்து, “இரவு உலா போக விருப்பமா..?" என்றான். வேண்டாம் என்றவளின் பக்கத்தில் வந்து அமர்ந்தான் ஜெயமோகன்.

“என்னமா, எதாச்சும் கோவமா..?” என்றான்.

“இல்லையே, என்னைப் பார்த்தா கோவமா இருக்குற மாதிரியா இருக்கு..?” என்றாள்.

“சரி வா, டிரஸ் மாத்திக்கணும்” என்றான்.

“இப்ப எதுக்கு டிரஸ் மாத்தணும்..?” என்று கேட்டவளை அள்ளித் தூக்கினான்.

அவள் படபடக்க, ராட்சதப் பட்டாம்பூச்சியைத் தூக்கிக்கொண்டு நடப்பதுபோல நடந்தான் ஜெயமோகன்.

“உனக்குத் தேவைன்னா தூக்கி வச்சி கொஞ்சுவ, இல்லன்னா சொல்லாம கொள்ளாம விட்டுட்டு போயிடுவியா..?” என்றாள் தீப்தி.

“ஓ, இதான் மேட்டரா..? நான் எதுக்கு போனேன்னு தெரியுமா..?”

“மீன் புடிக்க போன... எனக்கு மீன் பிடிக்க ஆசை இருக்காதா..?”

“சரி, இந்தக் கதையை அப்புறம் பேசிக்கலாம்” என்று சொன்ன ஜெயமோகன், தயாராக எடுத்து வைத்திருந்த புது உடையை எடுத்துக் கொடுத்து அணிந்து கொள்ளச் சொன்னான்.

“பர்த்டே டிரஸ்ஸா..?” என்றாள்.

‘‘அது அப்புறம், நைட் 12 மணிக்கு பாத்துக்கலாம், இது இப்போ’’ என்றான்.

அதை வாங்கிக்கொண்டாள்.

அதைப்பிரித்துப் பார்த்தாள்.

வெஸ்டர்ன் ஸ்டைலில் ஒரு கவுன், கை வேலைப்பாடுகளுடன் காட்சியளித்தது; இடையில் ஒரு பெல்ட் இருந்தது; அதில் தங்கம் மற்றும் வெள்ளி மணிகள் சின்னச் சின்னதாக கோர்க்கப்பட்டு இருந்தன; கவுனுக்கு பின்னால் மாடர்ன் ஆர்ட் போல நூல்கள் வேலைப்பாடு செய்யப்பட்டிருந்தது; அதை உற்றுப்பார்த்தால், 'தீப்தி தி ஏஞ்சல்' என்பது தெரிய வரும்.

அந்த கவுன் தீப்திக்குப் பிடித்து இருந்தாலும், ஏற்கனவே உண்டான கோபம் இன்னும் போகவில்லை. உண்மையில் கோபம் போய் விட்டது; கோபம் உண்டாக்கிய தாக்கம் இன்னும் போகவில்லை. அந்தத் தாக்கம் போகாததால் கோபமாகவே பேச வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அப்போதுதான், கோபமும் கொஞ்சலும் சேர்ந்து வரும்.

‘‘சரி வெளிய போ, நான் போட்டுக்கறேன்’’ என்றாள்.

‘‘நானும்தான் போட்டுக்கப்போறேன்’’ என்ற ஜெயமோகனை, ‘‘போன்னு சொல்றேன் இல்ல’’ என்று தள்ளினாள்.

‘‘இரும்மா, நீ என்ன அம்மணமா ஆயிட்டா டிரஸ் மாத்திக்க போற..? பிரா பேண்டி போட்டு இருக்க இல்ல..?’’ என்ற ஜெயமோகன், தன்னுடைய பேண்டைக் கழட்டி வீசினான்; டீஷர்ட்டை கழட்டிக் கடாசினான்.

ஜட்டியோடு நின்றுகொண்டு, ‘‘இதைப்போல நீயும் டிரஸ் மாத்திக்க வேண்டியதுதானே’’ என்றபடி தன் புது உடையை எடுக்கப் போனான்.

அவனை அப்படியே தள்ளிக்கொண்டுபோய் ஜட்டியோடு வெளியே விட்டு கதவைச் சாத்தினாள் தீப்திகா.

ஜட்டியோடு வெளியே வந்த ஜெயமோகன், வேறு வழியில்லாமல் ஸ்டைலாக மரப்பாலத்தில் நடக்க ஆரம்பித்தான். இவன் ஜட்டியோடு நிற்பதைப் பார்த்து ஸ்டீமரை எடுத்துக்கொண்டு விரைந்து வந்த பணியாளர், ‘‘எனி ஹெல்ப்..?’’ என்றான்.

“ஐ நீட் ஒன் அண்டர் கார்மெண்ட்” என ஜட்டியைத் தொட்டுக் காட்டினான் ஜெயமோகன். அதை ஜோக் எனப் புரிந்து கொள்ள மூன்று நிமிடங்கள் எடுத்துக்கொண்டு, கடற்காற்றில் சிரிப்பைக் கலக்கவிட்டு, போட்டை எடுத்துக்கொண்டு போனான் பணியாளன்.

ஜட்டியோடு இருந்ததால் குதிக்கலாமா என யோசித்துக்கொண்டு இருக்கும்போது, கதவைத் திறந்து கொண்டு தீப்திகா வந்தாள்.

அதற்குள் அந்த உடைக்கு ஏற்ற லிப்ஸ்டிக்கைப் போட்டுக்கொண்டு இருந்தாள். பாப் பாடகி போல நின்று காட்டினாள்.

அவளை நோக்கி ஜட்டியோடு நடக்க ஒரு மாதிரி இருந்தது ஜெயமோகனுக்கு. ஜட்டியோடோ, ஜட்டி அல்லாமலோ, படுக்கையில் என்ன வேண்டுமானாலும் செய்யும் ஆண்களுக்கு ஜட்டி மட்டும் போட்டுக்கொண்டோ அல்லது வெற்றுடம்போடோ பெண்ணுக்கு முன்னால் நடப்பது என்பது அசௌகர்யம்தான்.

“செமயா இருக்கு..!” என்று சொல்லியபடி அவளருகில் வந்து ஸ்டைலாக நிற்க முயன்றான் ஜெயமோகன்.

“தேங்க்யூ” என்று சொல்லிய தீப்தி, அவனது ஜட்டியைக் கீழே இழுத்து விட்டாள்.

ஜட்டியை இழுத்து விட்டுக்கொண்டே, சிரித்தபடியேஉள்ளே ஓடினான் ஜெயமோகன்.

கருப்பு கலர் ஜீன்ஸும் கருப்பு கலர் டீஷர்டும் அதன் மேல் கருப்பு கலர் சட்டையும் அணிந்து கொண்டு வந்தான் ஜெயமோகன். தீப்தியைக் கையைப் பிடித்து அழைத்துக்கொண்டு கடற்கரைக்குச் செல்லும் வழியில் சென்றான். கடற்கரையில் கால் வைத்து இறங்கி கொஞ்ச தூரம் நடந்து சென்றார்கள். இந்த கடற்கரை முழுக்க இந்த ரெஸார்ட் வளாகத்திற்குள் இருந்தது.

பத்துப்பதினைந்து குச்சிகள் நட்டு, அதில் பலூன்கள் மற்றும் ஒளி விளக்குகள் ஒளிர்ந்து கொண்டிருக்க, ஜெயமோகனும் தீப்தியும் நெருங்கியதும் லைவ் பேண்ட் வாசிக்கத் தொடங்கினார்கள். முதலில் தீப்தியை வாழ்த்தி இரண்டொரு வாழ்த்துக்கள் சொல்லி விட்டு, தீப்தியின் அழகைப் பாராட்டி பாட

ஆரம்பித்தார்கள். இரண்டு பெண்கள் தீப்தியை வணங்கி ஒரு இருக்கையில் அமர வைத்தார்கள். அது இளவரசி அமரும் இருக்கை போல இருந்தது. பக்கத்திலேயே ஜெயமோகன் அமர்ந்து கொள்ள, இசை நிகழ்ச்சி தொடங்கியது. இசைக்கு நடுவே நடன நிகழ்ச்சி, மீண்டும் இசை என ஓடியது. இடையிடையே ஸ்டேண்ட் அப் காமடி செய்பவர் போல இருந்த ஒருவர் வந்து தீப்தியை ஜோக் அடித்து மகிழ்வித்துக்கொண்டு இருந்தார். ஜெயமோகனையும் தீப்தியையும் சேர்த்து வைத்து ஃபீல் குட் கமெண்ட் அடித்தபடி இருந்தார்.

இருக்கைக்கு பக்கத்திலேயே இருந்த மேஜையில் மது, பழங்கள், ஜூஸ், சிகார் என அடுக்கி வைக்கப்பட்டு இருந்தன. சற்று தூரத்தில் லைவ் கிச்சன் ஏற்பாடு செய்யப்பட்டு இருந்தது. முதலில் அதில் இருந்து புலி இறால் எடுத்து வந்து வைத்தார்கள்.

தீப்தியைப் பாட அழைத்தார்கள். தீப்தி இரண்டொரு ஆங்கிலப் பாடல்கள் பாடினாள். ஜெயமோகனைக் கூப்பிட அவனும் ஒரு ஆங்கிலப் பாடல் பாட கச்சேரி முடிவுக்கு வந்தது.

ஒருவர் வந்து ஜெயமோகனிடம் ஏதோ சொல்லிவிட்டு, கொஞ்ச நேரம் பேசிவிட்டுச் சென்றார்.

பதினைந்து நிமிடத்தில் மொத்த இடமும் காலி, யாருமில்லை.

“இனிமே இந்த இரவு முழுக்க நாம் மட்டும்தான். சர்வீஸுக்கும் யாருமில்லை. பாதுகாப்புக்கு மட்டும், கண்ணுக்கெட்டாத தூரத்தில் ஆட்கள் இருப்பார்கள். போன் செய்தால் மட்டும் வருவார்கள்” என்றான் ஜெயமோகன்.

அந்த குட்டி பங்களா, கடற்கரை, கடல், நீச்சல் குளம், இருவர் மட்டுமே என்ற எண்ணம் பயக்குறும்பாக இருந்தது தீப்திக்கு.

மீண்டும் அறைக்கு அழைத்துச் சென்றான். இன்னொரு உடை கொடுத்தான். அது, பிங்க்கும் லிலாக்கும் கலந்த மெல்லிய சாட்டின் கவுன். முட்டிக்கு கொஞ்சம் மேலே வரை ஊஞ்சலாடும் கவுன். ஜெயமோகன் ஷார்ட்ஸ் மாட்டிக்கொண்டான். மீண்டும் அழைத்துச் சென்றான். இசை நிகழ்ச்சி நடந்த இடத்தைத் தாண்டி நடந்தால் இப்போது அங்கே வெளிச்சம் தென்பட்டது.

கடற்கரையை ஒட்டி ஒரு பெரிய படுக்கை, மேலே அழகுக் கூரை, சுற்றிலும் அதிக ஒளியில்லா விளக்குகள், தற்காலிகக் கழிவறை மற்றும் வாஷ் பேசின், கைக்கெட்டும் தூரத்தில் வித விதமான உணவு வகைகள், மெல்லிய சூட்டில் வைக்கப்பட்டு இருந்தன. ஒரு மேஜை முழுக்க மதுபான வகைகள், ஐஸ் கிரீம், பழங்கள், ஜூஸ் என தேவையான அனைத்தும் அங்கே அடுக்கி வைக்கப்பட்டு இருந்தன.

லைவ் கிச்சனில் பயன்படுத்தப்பட்ட அடுப்பு இங்கே இடம் மாறி இருந்தது.

மணி இரவு பதினொன்று ஆகி இருந்தது.

"எல்லாம் உனக்காக மை ஏஞ்சல். நானே பார்த்து பார்த்து ஆர்டர் செய்து, ஆர்கனைஸ் செய்தது மை டியர்" என்றான். அவளை அந்தப் பெரிய வெல்வெட் மெத்தையில் அமர வைத்தான். அவளின் கைகளை எடுத்து முத்தமிட்டான் ஜெயமோகன்.

முதன்முறையாக ஜெயமோகனை இழுத்து அணைத்துக் கொண்டாள் தீப்தி. அவளுக்குள் இடையூறு செய்து கொண்டிருந்த ஏதோ ஒன்று உடைந்தது.

# பொண்டாட்டி குறுங்கதைகள் — 1

“சா ந்தி, எனக்கு ஒரு நல்ல பையனை சொல்றியா..? ஒரே ஒரு தடவை மட்டும் அவன் கூட படுக்கணும். அதுக்குப் பிறகு அவன் என்னைத் தொந்தரவு செய்யக் கூடாது" என்று கேட்டிருந்தாள் பரிமளா.

சாந்தி சொல்லி ஊசி,  ஒரு விண்டேஜ் ஜீப்பில் வந்து இருந்தான். சாந்தி அதை எடுத்துக்கொண்டு ரவுண்ட் அடிக்கப் போய்விட ஊசி பரிமளாவைச் சந்தித்தான்.

பரிமளத்தின் மார்புகள் பக்கவாட்டிலும் மேற்பக்கமாகவும் திமிறாமல் அடக்கி வைக்கப்பட்டு இருந்தன. அருமையாகப் புடவை உடுத்தி இருந்தாள். மல்லிகைப்பூ வைத்து வைலட் கலர் ஸ்டிக்கர் பொட்டு வைத்திருந்தாள்.

பரிமளா, படபடப்பாக இருந்தாள்; “படபடப்பு குறையட்டும்” என்றான் ஊசி.

"நான் எப்பவும் படபடப்பாதான் இருப்பேன்" என்று சொல்லிய பரிமளா, "சாந்தி சொன்னாளா..?" என்றாள்.

"சொன்னா" என்று சொல்லிய ஊசி, காண்டம் பாக்கெட்டை எடுத்துக் கட்டில் மேல் போட்டு விட்டு, அமர்ந்திருந்த பரிமளத்தை எழுப்பி நிற்க வைத்துப் பின்பக்கமாக அணைத்து, அவளின் ஜடையைத் தூக்கி அவளின் பின்னங்கழுத்தில் முத்தமிட்டான்.

அவளைப் படுக்க வைத்து வயிற்றில் முத்தமிட்ட ஊசி, "லிப்ல கிஸ் பண்ணவா..?" என்றான்.

"எது வேணா பண்ணு" என்றாள்.

பன்னீர்க்குளியல் குளிப்பாட்டுவது போல முத்தங்களால் குளிப்பாட்டினான். இருவரும் கிணற்றில் குதித்து முங்கிக் குளிப்பது போல புணர்ந்து முடித்தார்கள். பரிமளம் குளித்து முடித்துப் பாவாடை மட்டும் தூக்கிக் கட்டிக்கொண்டு குளியலறையில் இருந்து வந்தாள். அது புத்தம் புதிய

பாவாடை. ஊசிக்கு மீண்டும் கிளர்ந்தெழுந்தது. அவளை இழுத்து அணைத்து மார்பில் முகம் புதைத்து எதையோ தேடினான்.

"வேணாம்" என்று மறுதலித்தவள், "அதான் சொன்னேன் இல்ல, ஒரு தடவைதான்னு" என்றாள்.

விலகிய ஊசி, "அது என்னா ஒரு தடவைதான்..?" என்றான்.

"எம் புருஷனை லவ் பண்ணிதான் கட்டிகிட்டேன். பெருசா வேற ஒண்ணும் குறையில்லை. ஆனா, எப்ப பாத்தாலும் தேவடியா தேவடியான்னு திட்டறான். வேற என்னா வேணா சொல்லித் திட்டு, இது எனக்கு சுத்தமா புடிக்கலைன்னு எத்தனையோ தடவை சொல்லிப் பாத்துட்டேன். கேக்க மாட்டேங்கிறான். அதான் இப்படி பண்ணேன். இனிமே அவன் என்னை தேவடியான்னு கூப்பிட்டாவோ, திட்டினாலோ எனக்கு டென்ஷன் ஆகாது" என்றாள்.

"அது சரிதான். ஒரே நாள்ளதானே இன்னொரு தடவை கேக்கறேன்" என்றான் ஊசி.

"ஒரு தடவைன்னா ஒரு தடவைதான்" என்று சிரித்தாள் பரிமளம்.

"போடி தேவடியா" என்றான் ஊசி.

"நீதாண்டா தேவடியா" என்று அவனைக் கட்டிக்கொண்டாள்.

தீப்தி, கே ஆர் புரத்திலிருந்து இறங்கிய ரயிலின் டிரைவர் வேலூரில் இறங்கி வீட்டுக்கு வந்தார். சாவி போட்டு வீட்டைத் திறந்தார்.

கொஞ்ச நேரத்தில் வீட்டுக்குள் நுழைந்த பரிமளாவிடம் "எங்கடீ தேவடியா போய்ட்டு வர..?" என்று கேட்டார்.

"உளுத்தம்பருப்பு வாங்கிட்டு வரப்போயிருந்தேன் மாமா" என்றாள் பரிமளா.

# தீப்தி – கடல் – ஜெயமோகன்

கூட்டத்தோடு இருந்த நமக்குத் தனிமை தேவை என்று தோன்றும். வீட்டுக்குள்ளோ, அறைக்குள்ளோ சற்று நேரம் தனிமையாக இருப்போம். தனிமை வேண்டிக் குளியலறையை நாடுவதும் தமிழகத்தில் இயல்புதான். ஆனால் இதெல்லாம் தனிமை அல்ல. இது விலகி இருத்தல், அவ்வளவுதான். ஒரு பெரிய காட்டுக்குள், பெரிய மலைக்குமேல், யாருமில்லாதத் தீவில் கடலலைகளைத் துணையாகக் கொண்டு அமர்ந்திருப்பதுதான் உண்மையில் தனிமை.

எந்த தகவல் தொடர்பும் இல்லாமல், அழைத்தாலும் யாரும் வர முடியாத இடத்தில், ஏன் அழைக்கவே வழியில்லாத இடத்தில், மனித சஞ்சாரமே இல்லாத இடத்தில் இருப்பதுதான் தனிமை. இந்தத் தனிமை முதலில் பயமுறுத்தும்; மனதை அலைக்கழிக்கும்; புத்தி பேதலிப்பது போலக்கூட ஆகும்; ஆனால், தாக்குப் பிடித்தால் பழகி விடும்; மிக இயல்பான ஒன்றாக மாறி விடும்.

நாம் நம்மைப் பார்த்துக்கொள்ள ஆரம்பிப்போம். நமக்காகச் சிரிப்போம்; அங்கே அழுகையே இருக்காது. நாம் ஒன்றை செய்தோ, நினைத்தோ, சிரித்தோ, அந்த சிரிப்பையும் நாமே பார்த்துக்கொள்வது இருக்கிறதே, அதி அற்புதமாக இருக்கும். நடை உடை பாவனை என எதிலும் நடிப்பு இருக்காது, இயல்பான நம்மைக் காணலாம்.

என்ன இது..? பாவ்லோ கொய்லோ, பால குமாரன் கதையை மாற்றி எடுத்து விட்டோமோ என்று எண்ணத் தூண்டுவது நோக்கம் அல்ல. இந்தியாவின் அதியற்புத ஆன்மீகக் கண்டெடுப்புகளை மேலோட்டமாக காக்டெயில் செய்து கொடுத்து, லயன்ஸ் கிளப், கலக்டர் மனைவிகள் சங்கம் போன்ற மனிதர்களை இந்தப் புத்தகத்தைப் பற்றி பெருமையாக பேட்டி கொடுக்க வைப்பதும் நோக்கமல்ல.

தீப்தி, ஜெயமோகனை இழுத்து அணைக்கும்போது கடலும் அலையும் சார்ந்த தனிமையுணர்வில் இருந்தாள் தீப்தி. அந்தத் தனிமைக்கு ஜெயமோகனின் இருப்பு பாதுகாப்பாக இருந்தது. மனதில் உருண்டுக்கொண்டிருந்த பெரிய கருப்பான பந்து வெடித்து வண்ணமயமாக ஆனது. மிகவும் இலகுவாக உணர்ந்தாள்.

அந்தத் தன்னந்தனியான தனிமையுணர்வை விரட்டியடித்த அதே வேளையில், மிகவும் ஆதுரமாக நீண்ட நேர வெதுவெதுப்பான வெப்ப முத்தத்தை ஜெயமோகனுக்கு அளித்தாள். அதைத்தொடர்ந்து ஐந்து நிமிடங்களில் உடை களைந்து, வெட்கம் களைந்து, உடல் அளைந்து, பெருங்காமம் முடிந்து விடும். அதை ஏன் விளக்கி எழுதித் தமிழ்ச்சூழலில் இருட்டுக்குள் தடவித் தடவி உயிர்ப்பெருக்கத்தில் ஈடுபடும் எளிய தமிழ் மனங்களை கெடுக்க வேண்டும் என்றே பாவ்லோ கொய்லோ போல போலியாகக் கசகசாவை உரலில் அரைப்பதுபோல அரைக்க வேண்டியதாகி விட்டது. ஆனால் அப்படி ஏதும் நடக்க வில்லை.

ஜெயமோகனை இழுத்து அணைத்த தீப்தி, அவனின் இதயத்துடிப்பைத் தன் இதயத்தில் உணர்ந்தாள். வெகுநேரம் அப்படியே அணைத்த அணைப்பை விடாமல் இருந்தாள். கை கால்களெல்லாம் தத்தமது நிறையை இழந்து காற்றில் ஊசலாடிக்கொண்டு இருந்தன. அவை தீப்தியின் உடலோடு சேர்ந்து இல்லாவிடின் நிச்சயம் பறக்க ஆரம்பித்து விடும்.

தீப்திக்கு, வயிறு பசிப்பதுபோல ஒரு செய்தியை அனுப்பிக்கொண்டே துடித்தது. இவ்வளவு நேர அணைப்புக்குப் பின், ஒரு பெரிய காற்றுக் கற்றை இருவரையும் தாக்கிப் பின் மென்ரூபம் கொண்டு கருணையுடன் கலைந்து பரவியது.

ஜெயமோகனை மெல்ல விடுவித்த தீப்தி அவன் கண்களை ஒளிக்கத்தியின் கூர்மையுடன் பார்த்தாள். ஜெயமோகனின் கண்கள் என்னைத் தின்று கொன்று துப்பிவிடு என்பதாகச் சொல்லிக்கொண்டு இருந்தது.

அவனை அமரவைத்து அவனது மடிமீது அமராமல், முட்டிக்கால் போட்டுக்கொண்டு, அவனது தலைக்கு மேல் உயர்ந்தாள். அவனது தலையைக் கோதினாள். அப்போது பறந்து வந்து முன் விழுந்த தன் கேசக்கற்றையைத் தலையை வலப்பக்கமாக ஒரு சிலுப்பி சிலுப்பிக்

கைகளால் பின்தள்ளினாள். சாட்டின் கவுனுக்கு பின்னால் முயலாட்டம் போட்டுக்கொண்டிருந்த தீப்தியின் முலைகள் அவ்வப்போது மேலேறி வந்து வெண்மையைப் பரப்பின. அதனால் தன்னிலை இழந்த ஜெயமோகன், தீப்தியின் மார்பில் முகம் புதைக்க, அவனது பிடரி மயிரைப் பற்றிப் பின்னிழுத்து நிறுத்தினாள்.

ஜெயமோகனின் உச்சந்தலையில் பொறுமையாக முத்தத்தை விதைத்துக்கொண்டு இருந்தாள். அப்போது தீப்தியின் மார்பகங்கள் ஜெயமோகனின் முகத்தில் ஒத்தடம் கொடுத்துக்கொண்டிருந்தாலும் தீப்தி இன்றைய ராஜாங்கத்தின் சட்ட திட்டங்களைப் பிடறி மயிர்பற்றி உணர்த்தி விட்டதால் கட்டுப்படுத்திக்கொண்டு அமைதியாக இருந்தான் ஜெயமோகன்.

தன்னுயரம் கொஞ்சம் இழந்து ஜெயமோகனின் நெற்றியில் சில முத்தங்களை விதைத்து விட்டு, ஆசையாக அவனது கன்னங்களைப் பற்றினாள். தன் கன்னத்தை ஒற்றியெடுத்துத் தன் கண்களை மூடிக்கொண்டாள். ஜில்வென்று கடந்த காற்று தீப்தியின் உடையைப் பறக்கடித்தது. மென்மையாக ஜெயமோகனை முத்தமிட்டவள், அலையின் சத்தம் உச்சத்துக்குச் சென்றபோது கன்னத்தைக் கடித்தாள். அவனது முகத்தைத் தன் இருகைகளாலும் ஏந்தி, சற்றே மேலே தூக்கி நிலவின் ஒளியில் பார்த்தவள் இருகண்களிலும் மாறி மாறி உதடுகளைப் பதித்தாள். இதை முத்தம் என்று சொல்ல முடியாது. இதைச் சொல்ல வார்த்தை உள்ளதா என்று தெரியவில்லை. இரு உதடுகளையும் கொஞ்சமாக இடைவெளி விட்டு, மொத்த கண்ணையும் இரு உதடுகளுக்குள் சிறைப்படுத்துவது. அப்போது வெண்மணிகள் அங்குமிங்கும் அலைபாய்வதை உதடு மூலம் உணர்ந்து, அழுத்தமாக முத்தமிட்டு அவற்றைச் சாந்தப்படுத்தி ஓரிடமாக நிற்க வைப்பது.

கண்களை விட்டு அகலும் முன் போய்விட்டு மீண்டும் வருகிறேன் என்று சொல்வது போல இரு மென்முத்தங்களை மேலாக்க விதைத்து விட்டு, முட்டிப்போட்டுக்கொண்டிருந்த ஒரு காலை எடுத்து விட்டு, ஒரு காலால் முட்டிப்போட்டுக்கொண்டு ஜெயமோகனின் காதருகே சென்றாள்.

“ஐ லவ் யூ.”

தீப்தியின் வாயில் இருந்து காற்றின் மூலம் உருவான இந்த வார்த்தைகளின் சத்தம் வெளியேறியதா இல்லை ஜெயமோகனது காதுகளில் ஒலித்து விட்டு மீண்டும் தீப்தியின் தொண்டைக்குளேயே போனதா என்று புரிந்து கொள்ள முடியாத அளவுக்கு இருந்தது. காதின் மேன்மடல்களில் முத்தமிட்டு, காதின் மடல்களை கடித்தாள். நாவால் சுழற்றினாள்; தீப்தியின் வெப்பக்காற்றும் நாவெம்மையும் காதுகளில் களிநடம் புரிய, ஜெயமோகனின் காற்சுண்டுவிரல் வரையில் குளிர் மின்சாரம் பரவியது. ஜெயமோகன் தீப்தியைக் கீழே விழுந்து விடாமல் இருக்க, முதுகில் கைகொடுத்ததைக் கூட தட்டி விட்டாள்.

ஜெயமோகனின் காதை விடுத்து அவனின் கழுத்தில் புதைந்தாள். வெவ்வேறு கோணத்தில் முகத்தை வைத்து ரசித்து முத்தமிட்டாள். அவன் அணிந்திருந்த சட்டைப் பொத்தான்களை தெறிக்க விட்டாள். உண்மையில் கழட்டவில்லை, கிழித்து எடுத்தாள். ஆனால் வெறியுடன் செய்யவில்லை. முகத்தை சாந்தமாக வைத்துக்கொண்டு, கோழிக் கழுத்தை மட்டும் திருகும் பாவனையில், வெடுக்கெனக் கிழித்தாள்; பட்டன் தெறித்தது.

இப்போது அவன் மடியில் அமர்ந்து கொண்டு, அவனை எதிர்ப் புறமாகச் சற்று விலக்கினாள். அவனுடைய மார்பில் தன்னுடைய வலது கைகளால் ரோமங்களிடையே கோலமிட்டாள். நகச்சாயம் பூசி இருந்த நகங்கள் கீறிக்கொண்டே மார்பு முழுக்க பயணித்தன. இடது கையும் இப்போது சேர்ந்து கொள்ள, ஜெய மோகன் கண்களை மூடிக்கொண்டான்; கண்களில் நீர் ததும்பியது.

ஜெயமோகனின் மார்புக்காம்பைச் சுற்றி இருக்கும் முடிகளைப் பற்றி ஒரு இழு இழுத்தாள். ஜெயமோகனின் கண்களில் தேங்கி இருந்த கண்ணீர் ஒரு சொட்டு சிதறியது. மார்பில் முத்தமிட்டுக்கொண்டே, உதடுகளில் சிக்கிய ரோமங்களைப் பல்லிடுக்கில் மாட்டும்போது ஒரு இழு இழுத்தாள். அவன் மார்பில் உப்புக்காற்றால் ஏற்பட்டு இருந்த உப்புச்சுவையையும் அவனது வேர்க்கால்களினால் உண்டான உப்புச்சுவையையும் உணர்ந்து அதை தன் நாவால் மேல் ஈறுகளில் பரவ விட்டாள்.

கொஞ்சம் பின்வாங்கி, ஒரு காலால் முட்டிப்போட்டுக்கொண்டு, இன்னொரு முட்டிக்காலை அவன் மார்பில் வைத்து பின்புறமாக தள்ளினாள். காற்று

புகுந்து உப்பியிருந்த மெத்தையில் மென்மையாக விழுந்தான் ஜெயமோகன். அவன் மேல் படர்ந்த தீப்தி, அவனது கைகளைத் தூக்கி அவனது தலைக்கு மேல் போட்டவள், அவனது அக்குளில் முகம் வைத்து முகர்ந்து மூச்சிழுத்தாள். அவனது அந்தரங்க நறுமணத்தை நாசியால் ருசித்தவள், நாவுக்கும் கொஞ்சம் கொடுத்தாள். இப்போது ஜெயமோகனின் கால்கள் நிறையிழந்தன. அவளைப் பற்றி இழுத்துக் கடித்து மேலேற வேண்டும் என்ற தூண்டுதலை அடக்கிக்கொண்டு படுத்திருந்தான் ஜெயமோகன்.

எழுந்து அவன் இடுப்பிலமர்ந்த தீப்தி தன் கைகளைத் தூக்கினாள். ஜெயமோகன் அமைதியாய் இருக்க, அவனது கைகளைப் பற்றி தனது கவுனில் வைத்தாள். அவன் அவளது உடையை மேல் நோக்கி இழுத்துக் கழற்ற முயல்கையில், அவன் கன்னத்தில் அடித்துக் கைகளைத் தட்டி விட்டாள். பாலே நடன அசைவு போல தன் கைகளைச் சுழற்றித் தானே தன்னுடைய உடையைக் கழற்றி அவன் முகத்தில் எறிந்தாள். ஜெயமோகன் அவளது சுகந்த மணம் கொண்ட அந்த உடையை வெறியுடன் முத்தமிட்டான். அந்த உடையை வாய்க்குள் வைத்து சுவைத்துப் பார்த்தான்.

அவனது வாயில் இருந்து உடையைத் தூக்கி எறிந்த தீப்தி, அவனது இரு கைகளையும் எடுத்து தன் இடையில் வைத்துக்கொண்டாள். இடையிலேயே நின்ற அவன் கைகளை எடுத்து தன் மார்புகளில் வைத்துக்கொண்டாள்.

தீப்தி கருநீல வண்ணத்தில் உள்ளாடை அணிந்து இருந்தாள். அந்த உள்ளாடை சல்லி சல்லியாக இடைவெளியுடன் காணப்பட்டது. அந்த இடைவெளியினூடாக பல எல்ஈடி விளக்குகளின் பிராகசத்தைப் போல மார்பகங்கள் குட்டிக் குட்டி மின்னல்களை உருவாக்கிக்கொண்டு இருந்தன.

ஜெயமோகன் மார்பில் கை வைத்தாலும் ஏதும் செய்யாமல் இருந்தான். தீப்தியின் உள்ளாடையைத் தாண்டி, யோனியின் வெம்மையும் ஈரமும் ஜெயமோகனின் வயிற்றில் இறங்கியது.

தீப்தியே ஜெயமோகனின் கைகளைப் பற்றி, தன் மார்பகங்களை மெல்ல மெல்ல வருடி விட்டுக்கொண்டு இருந்தாள். தன் மார்க் கச்சையின் கொக்கிகளை அவிழ்க்க பின் பக்கமாக அவளது கைகள் சென்றபோது மார்பகங்கள் விம்மி விஸ்வரூபம் எடுத்து ஒரு கணத்தில் உலகளக்க

உயர்ந்தது போல இருந்தன. மார்க்கச்சை கீழே விழுந்ததும், குனிந்து ஜெயமோகனின் முன்முடி பற்றித் தூக்கி, தான் கொஞ்சமாக பின் நகர்ந்து அவன் கால்களுக்கு இடையே அமர்ந்து கொண்டு, அவன் முகத்தைத் தன் மார்பகத்தில் வைத்துக்கொண்டாள்.

ஜெயமோகன் ஆட்ட விதிகளுக்குட்பட்டு அமைதியாய் பரம்பொருளை விஸ்தாரமாகக் கண்டவன் போல ஆடாதிருக்க, அவனது பின்னந்தலைக்குள் கை கொடுத்து அவனது உதடுகளை மார்பகத்துக்குள் அழுத்தினாள். அவன் முத்தமிட்டு காம்புகளை கவ்வ, பிடித்துப் பின்னால் தள்ளியவள், முட்டிக்கால் போட்டு அமர்ந்து கொண்டு அவனது முகத்தை வயிற்றில் வைத்துக்கொண்டாள். அவனது கைகளை இடையில் படர விட்டுக்கொண்டாள். அவனது முகத்தை இடையிலும் வயிற்றிலும் மாறி மாறி மாற்றியவள், தானும் கீழே அமர்ந்து தன் கை தூக்கி அவன் முகத்தை தன்னுடைய அக்குளுக்குள் சிறை பிடித்தாள். முளை கட்டிய பயிறில் வரும் முளைகளைப் போல புத்தம் புதிதாகப் பூத்திருந்த கேசப்பூக்கள் தனித்தன்மையான மணத்தை வீசிக்கொண்டிருந்தன. அதில் ஜெயமோகனின் முகத்தைத் தேய்த்தவள் தன் தலையை பின்னால் சாய்த்துக்கொண்டு கண்களை மூடி அவனின் தலைமுடிகளை கத்தையாகப் பற்றி, வெளியிழுத்து மீண்டும் அமுக்கினாள்.

அவனை அமரவைத்து, அவனின் பின்னால் போய் அமர்ந்து கொண்டு தன் முதுகால் அவன் முதுகைத் தேய்த்து, அவன் முகத்தைப் பற்றி இடது தோளில் சாய்த்து, அவனின் கீழுதட்டைக் கடித்தாள். துளி ரத்தம் வந்து எச்சிலுடன் கலந்தது. அசைவ முத்தம் கொடுத்த அடுத்தக் கணம், ஒரு பேரலை எல்லை மீறி வந்து படுக்கையில் சில நீர்த்துளிகளை தெளித்துப் பின்வாங்கியது.

ஜெயமோகனைப் படுக்க வைத்து, அவனது மார்பிலிருந்து மீண்டும் முத்தம் கொடுத்துக்கொண்டே வந்து அவனது அரைக் கால்சராய் பொத்தான் அருகே தனது உதட்டை நிறுத்தி, பற்களால் அந்த பொத்தானை திறந்தாள். அவனைப் பக்கவாட்டில் கட்டிப்பிடித்துக்கொண்டே, தன் வலது காலால் அவனது கால் சட்டையை கீழிறிக்கினாள். மொத்தமும் இறங்கி காலை விட்டு

வெளியேறியதும், அதை வலது கால் கட்டை விரல் மற்றும் ஆள் முத்த விரலால் பற்றித் தூக்கிக் கடல் பக்கம் எறிந்தாள்.

ஜெயமோகனின் வயிறு உள்வாங்கி இருந்தது. ஜெயமோகன் ஒரு தனித்தன்மையாக வடிவமைக்கப்பட்ட உள்ளாடை அணிந்து இருந்தான். ஆண்குறி இருந்த இடத்தில் பட்டு நூலால் பாம்பு படம் எடுப்பது போல கைவேலைப்பாடு செய்யப்பட்டு இருந்தது.

தீப்தி இதுவரை ஆண்குறியை பார்த்தது இல்லை. உடனே குஞ்சு குளுவான், வீடியோவில் பார்த்தது என்றெல்லாம் தூக்கிக்கொண்டு வரக்கூடாது. தனக்கான ஆண்குறியை முதன்முதலாக பார்க்கப் போகிறோம் என்ற நினைப்பு தீப்தியின் இதயத்துடிப்பைக் கூட்டியது. அவளுடைய மார்பகங்கள் சற்று இறுகின. தீப்தி வெளிப்படையாக பேசுபவள் என்பதால் பல பெண்கள் தீப்தியிடம் சொல்லி இருக்கிறார்கள். ஆண்குறியை பிடித்துப் பார்க்க வேண்டும்; அதனுடன் விளையாட வேண்டும்; அதன் மேல் முகம் வைத்துப் படுத்து தூங்க வேண்டும்; முத்தமிட வேண்டும்; கடித்து விட வேண்டும்; அதில் ஐஸ்கிரீம் தடவி சுவைக்க வேண்டும்; அதை லிக்யூரில் மூழ்கிச் சுவைக்க வேண்டும் என பற்பல ஆசைகள். ஆனால், ஆண்குறிக்கு என்ன அவ்வளவு அவசர வேலையோ, இதற்கெல்லாம் அது மாட்டுவதே இல்லை. ஒரு தோழிக்கு அதில் சக்கரைப் பொங்கலை அப்பி உண்ண வேண்டும் என்பதும் ஒன்று..!

தீப்தி உள்ளாடையோடு சேர்த்தே அதில் முத்தமிட்டாள். தன் கன்னத்தை வைத்துத் தடவினாள். தன் நாவால் அவன் உள்ளாடையை கீழிழுத்தாள். சுற்றிச் சுற்றி முத்தமிட்டாள். உள் வாங்கினாள்; துழாவினாள்; மென்மையாகக் கடித்தாள்; உள்ளங் கையால் பிடித்துக்கொண்டு, அதைக் கண்கள் முழுவதால் கண்டு காற்றில் முத்தமிட்டாள்.

தனது கீழ் உள்ளாடையைக் கழற்றி, அவனின் விரல்களைப் பற்றி ரகசிய இடங்களை அறிய வைத்தாள். எழுந்து நின்று கொண்டு சிலை போலத் தன் கைகளைப் பின்னந்தலைக்குக் கொடுத்தாள். ஒரு காலைத் தூக்கி அவன் பின்னந்தலையில் கொடுத்து, இடுப்புக்கு கீழே இழுத்தாள். அவன், பிறந்த இடத்துக்கு மீண்டும் செல்லும் வெறியுடன் முட்டி மோதினான்.

அவனைக் கீழே தள்ளிய தீப்தி, அவனை புரட்டிப் போட்டாள். அவனின் பின்புறத்தைக் கடித்தாள்; முத்தமிட்டாள்; அடித்து முத்தமிட்டாள்; அவனின் மேல் படர்ந்து கட்டிக்கொண்டாள்; அவனைத் திருப்பிப்போட்டு, அவன் மீது அமரச் செல்கையில், அவன் தன் ஆண்குறியை நேர்த்திசையில் வைக்க முயற்சிக்கையில், அவனைப் பளாரென்று அடித்தாள். அவன் அமைதியாகி விட, அவனது குறியைப் பற்றி வாகாக வைத்துக்கொண்டு, முதன்முறையாக தன் யோனிக்கு விடுதலை கொடுத்தாள்.

முதன்முறை என்றாலும், வலிக்கவில்லை. இறுக்கமாக இருந்தாலும் வழுக்கிக்கொண்டு போனது. அவனது மார்பில் கைகளை வைத்துக்கொண்டு மேலும் கீழும் இயங்கினாள். இடதும் வலதும் மேலும் கீழும் என இயங்கிக்கொண்டே குனிந்து அவனது உதடுகளைக் கவ்வியபோது, தீப்தியின் மார்பகங்கள் அவனது மார்பினை அழுத்த, அவனால் தாங்க முடியாமல் உடனே உச்சத்துக்கு வந்தான்.

அவளை இழுத்து அணைத்துக்கொண்டான். "லவ் யூ பேபி" என இறைஞ்சினான். முகத்தில், மார்பில் என வெறி கொண்டு முத்தமிட்டான்; இப்போது அனுமதித்தாள். உறவின் இனிப்பை நுனி நாக்கால் உணர்ந்த அடுத்த கணமே, இனிப்பு கரைந்து இளநீர் ஆனது போல இருந்தது. அந்த நுனி நாக்கின் இனிப்புச்சுவை அடத்தியாக இன்னும் நுனி நாக்கில் இருந்தது. அதை மட்டுமே இன்று இரவு முழுக்க அசை போட்டுக்கொண்டு இருக்கலாம் என்று தோன்றியது தீப்திக்கு. கூர்மையான கத்தியால் வெட்டுப்பட்ட தசைகள் வலியை உணர்த்துவதற்கு முன் இருக்கும் ஒருவிதமான கிறக்க நிலையில் இருந்தாள் தீப்தி.

விரைவில் உச்சம் வந்ததால், ‘‘சாரி சாரி’’ என்றும் இறைத்துக்கொண்டே சொல்லியபடி அவளின் தோளில் அடைக்கலமானான் .

"ச்சீ சீ, மை பேபி, என் செல்லம், என் குழந்தை" எனக் கொஞ்சிக்கொண்டே, அவனைத் தன் மடியில் படுக்க வைத்துக்கொண்டு தலையைத் தடவிக் கொடுக்க ஆரம்பித்தாள். மென்பஞ்சுத் துண்டை எடுத்துத் துடைத்து விட்டாள். அவன் பூனை மாதிரி அவளின் மடியில் ஒடுங்கினான்.

பேரிரைச்சலோடு அலைகள் இன்னும் வீர்யமாக அடிக்க ஆரம்பித்து இருந்தன.

அவ்வலைகளுக்கு முன்னால், பூனைக்குட்டியை மடியில் படுக்க வைத்துக்கொண்டிருக்கும் காளி போல நிர்வாணமாக அமர்ந்து இருந்தாள் தீப்திகா..!

# ஆதிரை – லக்ஸ்

க ல்லூரி வாழ்க்கை ஆதிரைக்கு ஓரளவு மன விடுதலையைக் கொடுத்தது. மனத் தொந்தரவு கல்லூரியில் இருக்கும்போது ஓரளவு குறைந்தது. விடுதியில் விட்டத்தைப் பார்த்துக்கொண்டு அமர்ந்து இருக்கையில், தீப்திதான் பேச்சு கொடுத்து, மற்ற தோழிகளிடம் அழைத்துச் சென்று கவனத்தைத் திசைதிருப்புவாள்.

லக்ஷ்மனும் இவர்கள் வகுப்புதான் என்றாலும் ஆரம்பத்தில் அப்படி ஒருவன் இருந்ததே ஆதிரைக்குத் தெரியாது. லக்ஷ்மன் தமிழகத்தில் தொடர் சங்கிலி உணவகம் நடத்தி வரும் பெரிய குடும்பத்துப் பையன். இஞ்சினியரிங்க் படித்துப் பெரிதாக ஒன்றும் ஆகப்போவதில்லை என்பதால், தொண்ணூறுகளின் சினிமா ஹீரோவை வெகு தாமதமாக நகலெடுத்துப் போக்கிரியாக வலம் வந்து கொண்டிருந்தான். பேராசிரியர்களை அவமதிப்பது, கல்லூரி முதல்வரையே எகிடு தகிடாகப் பேசுவது எனத் தெம்பாக வளைய வந்து கொண்டிருந்தான்.

அவனுடைய பிறந்த நாளின்போது, வகுப்பில் எல்லோருக்கும் சாக்லெட்டை நீட்டினான். ஆதிரை ஏதோ கவனத்தில் எடுத்துக் கொள்ளாமல் இருந்தபோது, மொத்த சாக்லேட்டையும் அவள் தலையில் கொட்டினான். இது சாதரணமாக கடந்து போயிருக்க வேண்டிய சம்பவம். ஆனால் அப்போது ஆதிரை பழைய ஞாபகங்களின் பிடியில் உருகித் தவித்துக்கொண்டு இருந்ததால், இந்தச் சம்பவம் ஒரு தூண்டுகோல் போல ஆகி, வெடித்து அழ ஆரம்பித்து விட்டாள்.

பலருக்கும் என்ன ஏதென்றே புரியாமல் குழம்பிக்கொண்டிருக்க, தீப்தி மட்டும் "அமைதியா இருடீ , ஹாஸ்டலுக்கு போலாமா..?" என்று தேற்றிக்கொண்டு இருந்தாள்.

“யேய் அறிவில்லை, ஒரு பொண்ணு கிட்ட இப்டியா இன் டீஸண்ட்டா நடந்துக்குவ..?” என்று தீப்தி எகிறினாள்.

என்னதான் ரௌடியாக இருந்தாலும் ஒரு பெண் திடீரென வெடித்து அழும் காரணம் புரியாமல் குழம்பி நின்ற லக்ஷ்மன், ‘‘எதா இருந்தாலும் அவ பேசட்டும், நீ யாரு நடுவுல..?’’ என்று தன் பங்குக்கு எகிறினான்.

மறுநாள் பார்த்தபோது, ‘‘சாரி, நான் விளையாட்டாதான் பண்ணேன்" என்று கூறிச் சென்றான்.

அதோடு அவனை ஆதிரை மறந்து விட்டாள். ஆனால் அவ்வப்போது சைட் அடிப்பது, பின் தொடர்வது என லக்ஸ் ஆதிரை மேல் அதிக கவனம் எடுத்துக்கொண்டான்.

"யேய், அவன் உன் பின்னால சுத்திட்டு இருக்கான், பாத்துக்கோ. பக்கா ஃபிராடு, ரௌடி, சைக்கோ" என தீப்தி எச்சரித்தாள்.

ஆதிரை லக்ஸையும் கண்டு கொள்ளவில்லை, அதனால் தீப்தியின் வார்த்தைகளும் மூளைக்கு ஏறவில்லை.

சில மாதங்களுக்குப் பிறகு, தான் காதலிப்பதாகத் திமிராகக் கூறிச் சென்றான். அதையும் ஆதிரை பொருட்படுத்தவில்லை. தொடர் காதல் தெரிவித்தலால் கடுப்பான ஆதிரை, முதல்வரிடம் புகார் அளித்தாள்.

‘‘நான் காதலிக்கிறேன்னுதான் சொன்னேன். என்னைக் காதலிக்கச் சொல்லலை, அவளை கைய புடிச்சி இழுக்கலை. நீங்க எந்தெந்த லெக்சரர் கூட லூட்டி அடிக்கிறீங்கன்னு எனக்குத் தெரியும்" என்று கூறி முதல்வர் வாயை அடைத்தான்.

பின்னொருநாள் ஆதிரை ஸ்கூட்டியில் சென்று கொண்டிருந்தபோது, சாலையில் கிடந்த மணல் வழுக்கி விழுந்து விட்டாள். கை காலெல்லாம் சிராய்ப்பு.

பின்னாலேயே வந்த லக்ஸ், அவளைத் தூக்கித் தன் காரில் போட்டுக்கொண்டு, மருத்துவமனைக்கு விரைந்தான். பெரிய அடி ஏதுமில்லை. ஆனால் எந்த ஒரு சந்தர்ப்பத்திற்கும் அழுது விடும் மனநிலையில் இருந்ததால் ஆதிரை தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள்.

"அழாதடி, நான்தான் உனக்கு இருக்கேன் இல்லை" என்ற லக்ஸ், மருத்துவமனையில் எல்லோரையும் அதட்டி வேலை வாங்கினான். வைத்தியம் பார்த்துக்கொண்டிருந்த செவிலியிடம் , "இவ என் ஆளு, இவளுக்கு ஏதாச்சும்

ஆச்சின்னா, நீங்க யாரும் உயிரோட இருக்க மாட்டீங்க; இந்த ஹாஸ்பிடலே இருக்காது" என்று மிரட்டினான்.

"பயப்படாதடீ நான் இருக்கேன் உனக்கு" என்று ஆதிரையிடம் கூறினான்.

இந்த வெற்று வார்த்தைகள் அப்போது ஆதிரைக்குத் தேவையாக இருந்தன. என்னதான் நெருங்கிய தோழி தீப்தி அரவணைப்பாகவும் அன்பாகவும் பார்த்துக்கொண்டாலும், அது பத்தவில்லை ஆதிரைக்கு. அவளுக்கு ஏற்பட்ட மன பாதிப்புக்கு, ஒரு ஆணின் அனுசரணை தேவைப்பட்டது. இவன் இவ்வளவு உரிமையாகப் பேசியது ஆதிரைக்குப் பிடித்து இருந்தது. ஒரு ஆசுவாசம் வந்தது.

விடுதிக்கு வந்ததும், "ஏண்டி எனக்கு போன் பண்ணலை" என தீப்தி கோபித்துக்கொண்டாள். "அவன் கிட்ட ஜாக்கிரதையா இரு" என்று எச்சரித்தாள்.

இந்தக் காலகட்டத்தில், விடுமுறைக்கு வீட்டுக்குப் போனால், மீண்டும் முரண்டு பிடிப்பது, அப்பாவைக் காரணமே இல்லாமல் திட்டுவது, பொருட்களை போட்டு உடைப்பது என எந்த மாற்றமும் இல்லாமல் வீட்டு நாட்கள் கழிந்தன. ஆனால், அப்பாவோ அம்மாவோ ஒரு சுடுசொல் சொன்னதில்லை. ஆதிரைக்கு வீட்டில் வானளாவிய சுதந்திரம் கிடைத்து இருந்தது.

லக்ஸ் அவ்வப்போது காதலைச் சொன்னால், எதிர்ப்பு தெரிவிக்காமல் சிரித்துக் கடக்கும் நிலைக்கு வந்திருந்தாள் ஆதிரை. ஆனால் கல்லூரி முழுக்க, "ஆதிரை லக்ஸ் ஆளு, ஆதிரையும் லக்ஸும் காதலிக்கிறாங்க" என்று பேச்சு அனைவரிடத்திலும். ஒரு கட்டத்தில் தீப்தி இது சம்மந்தமாகப் பேசுவதை நிறுத்தினாள்.

ஒருமுறை வகுப்பு நடந்து கொண்டு இருந்தபோது வெளியில் இருந்து வகுப்பறைக்குள் நுழைந்த லக்ஸ், ஆதிரையைக் கையைப்பற்றி இழுத்துக்கொண்டு சென்றான். பேராசிரியர் தடுத்தபோது, "அவ கம்ப்ளெயிண்ட் பண்ணா ஆக்ஷன் எடுங்க" என்று கூறி இழுத்துச் சென்றான்.

சினிமா தியேட்டரில் பால்கனியில் இவர்கள் இருவர்மட்டும். வேறு யாரும் அனுமதிக்காதது போல லக்ஸின் ஏற்பாடு.

"தோ பாருடீ, எவ்ளோ நாள் ஆனாலும் உனக்கு நான் மட்டும்தாண்டி. என்னைத் தவிர உனக்கு யாரும் இல்ல" என்று, எண்பதுகளின் ரௌடி கதாநாயகன் போலவே தொடர்ந்து வசனம் பேசினான் லக்ஸ். ஆனால் அது ஆதிரைக்குப் பிடித்து இருந்தது. தன் மீது யாரேனும் ஆளுமை மற்றும் ஆதிக்கம் செலுத்தி, அடக்கி ஆண்டு அன்பு செலுத்த வேண்டும் என்ற உள்மன வேட்கை, ஏற்கனவே ஏற்பட்ட மனக்காயத்துக்குச் சூட்டு ஒத்தடம் கொடுப்பது போல இருந்தது.

"ஐ லவ் யூ", என்று சொல்லி அவன் மேல் சாய்ந்து கொண்டாள் ஆதிரை.

அவளை எழுப்பித் தன் மடியில் உட்கார வைத்துக்கொண்டான். ஒத்துழைத்தாள் ஆதிரை; தன்னை ஒரு குழந்தையாக நினைத்துக்கொண்டாள்; எல்லா பருவ குழந்தைகளுக்கும் முலை முட்டிக்கொண்டு இருப்பது மறந்து விடுகிறது.

அவனும்," நீ என்னோட பேபி" என்றதும், ஆனந்தக் கண்ணீரில் பிரேசியரை நனைத்தாள். இவன் அவளைத் திருப்பித், தன் இருக்கையில் அமரவைத்து, அவள் மேல் படர்ந்து முகம் முழுக்க முத்தமிட்டு, உதடுகளைக் கவ்வினான். இவை அனைத்தையும் அவன் கொஞ்சம் வன்முறை கலந்து செய்தான். அது ஆதிரைக்கு பிடித்து இருந்தது; முலையில் கை வைத்ததும், வேண்டாம் என மறுத்தாள். தான் பக்கத்து சீட்டில் அமர்ந்து கொண்டு, அவளின் தலையைத் தன் மடிக்குக் கொண்டு வந்தான்.

ஆசையாகப் படுக்க வைக்கிறான் என்று முகத்தைக் கொண்டு சென்றாள் ஆதிரை. லக்ஸ் தன் குறியை வெளியே எடுத்து வைத்திருந்தான்.

# பொற்செல்வி

பொற்செல்வி வகுப்பில் தொடர்ந்து முதல் மாணவியாக வந்தாள். சங்கீதத்தோடு பரத நாட்டியப் பயிற்சியும் சேர்ந்து கொண்டது. பொற்செல்வி பாடும்போது அவளது நா நடனமாடுவது போல இருக்கும். அவள் நடனமாடும் போது காற்றில் இசை உருவாவது போல இருக்கும். பொற்செல்வியே கேட்டுத் தற்காப்பு பயிற்சியும் எடுத்துக்கொண்டாள்.

அதிகாலை ஐந்து மணிக்கு எழுந்து நீட்டு கால்சராய் மாட்டிக் கொண்டு ஓடுவாள். ஓட்டப் பயிற்சி முடிந்தவுடன் கொஞ்ச நேரம் யோகா. அது முடித்துக், குளித்து முடித்து சாமி முன் அமர்ந்து கொஞ்ச நேரம் பக்திப் பாடல்கள் பாடுவாள். அதற்குப் பிறகுதான் படிப்பு. கொஞ்ச நேரத்திலேயே அனைத்தும் கைவந்து விடும் பொற்செல்விக்கு.

கோவில்களில் விசேஷம் என்றால் பொற்செல்வியைக் கூப்பிட்டுப் பாட வைப்பார்கள். பெரிய நிகழ்ச்சி என்றால் நடனம் ஆடுவாள்.

நேரம் கிடைக்கையில் அடுப்பங்கரையில் புகுந்து அம்மாவுக்கு சமையலில் உதவி செய்வாள். அப்படியே சமைக்கக் கற்றுக்கொண்டும் இருந்தாள். சில ஆலோசனைகளையும் சொல்லுவாள் அம்மாவுக்கு.

மார்கழி மாதத்தில் அழகழகான கோலங்கள் போடுவாள் பொற்செல்வி. தோட்டத்தில் இருந்து பூசணிப்பூ பறித்து வந்து, மாட்டுச் சாணத்தை உருண்டையாக்கி அதைக் கோலத்தின் நடுவே வைத்து அதில் பறித்து வந்த பூசணிப்பூவை சொருகி அதைக் கைப்பேசியில் ஒரு புகைப்படம் எடுத்து வைத்துக்கொள்வாள்.

கோவிலுக்கு போவதென்றால், தன் கையாலேயே பூக்கட்டி எடுத்துச் செல்வதுதான் பொற்செல்விக்குப் பிடிக்கும். தன் வீட்டுத் தோட்டத்தில் மற்றும் அக்கம் பக்கத்து வீட்டுத் தோட்டத்தில் இருக்கும் செவ்வரளி, கொன்றை, பவழமல்லி, சம்பங்கி, மனோரஞ்சிதம் பூக்களில் ஏதோ ஒன்றைப் பறித்துக்

கட்டி எடுத்துக்கொண்டு கோவிலுக்குச் செல்வாள். தனக்குக் கனகாம்பரம், டிசம்பர் பூ போன்றவற்றைக் கட்டித் தலை நிறைய வைத்துக்கொள்வாள்.

அவள் பூக்கூடையை எடுத்துக்கொண்டு கோவிலுக்குச் செல்வது, சின்ன அம்மனே நடந்து செல்வது போல இருக்கும். பொற்செல்வி கோவிலில் விளக்கு போடுகிறாள் என்றால் அவள் விளக்கு போடும் வரையில் அர்ச்சனை ஆரம்பிக்காது. அவ்வளவு நேர்த்தியாக விளக்கைப் போடுவாள்.

ஒன்பதாம் வகுப்பு படிக்கும் போது வயதுக்கு வந்தாள் பொற்செல்வி.

# தீப்தி – ஜெயமோகன்

மாலத்தீவு விடுமுறை முடிந்து மலர்ந்து திரும்பினாள் தீப்தி. தீப்தியிடம் இருந்த லேசான ஆண்மைத்தனம், முரட்டுத்தனம், அகன்று நளினமான பெண்ணாய் ஜொலித்தாள். கொஞ்சுதல் குலவுதல் எல்லாவற்றையும் கிண்டல் செய்து கொண்டு இருந்தவள், கொஞ்ச ஆரம்பித்தாள், குலவுதல் என்றால் என்ன என்று தெரியாமலேயே குலவ ஆரம்பித்தாள். உடல் முழுவதும் பெருக்கெடுத்த மகிழ்ச்சி கண்கள் வழியாகவும், உதடுகள் வழியாகவும் பொங்கி ஊற்றிக்கொண்டு இருந்தன.

ஜெயமோகன் எப்போது வருவான் எனக் காத்திருக்க ஆரம்பித்தாள். அவனுக்குத் தொடர்ந்து மெசேஜ்கள் பறக்க விட்டுக்கொண்டு இருந்தாள். நின்றால், நடந்தால், ஏதேனும் வாங்கினால், சாப்பிட்டால், எல்லாவற்றையும் புகைப்படம் எடுத்து வாட்ஸப்பில் அனுப்பினாள்.

தான் படித்தவற்றில் பிடித்தது, பார்த்தவற்றில் பிடித்தது, அவனுக்கு ஏற்ற உடைகள், கூலர்ஸ், பர்ஃப்யூம், பெல்ட், வாலட் என தேடித் தேடி அவனுக்கு ஃபார்வேர்ட் செய்தாள். அவனுக்காக இவள் தனியாக ஷாப்பிங் சென்றாள்.

சமையற்கட்டு பக்கமே செல்லாத தீப்தி, ஜெயமோகனுக்காக வந்த வரை சமைத்துப் பார்த்தாள். புடவை உடுத்திக் காட்டினாள். ஒரு நாள் சர்ப்ரைஸாக தாவணி உடுத்தி, தலையில் மல்லிகைப்பூ வைத்து கை நிறைய வளையல் போட்டுக்கொண்டு வரவேற்றாள்.

தீப்தியின் மாற்றங்களை மோப்பம் பிடித்த தோழிகள் குழம்பினர். தோழிகளைச் சந்திப்பதைத் தவிர்த்தாள். ஆதிரையிடம் மட்டும், தவிர்க்க முடியாமல் பேசினாள்.

“தீப்தி, நீ எதோ தப்பு பண்ணிட்டு இருக்கன்னு தெரியிது” –ஆதிரை

“ஏன்டி அப்டி சொல்ற..?” –தீப்தி

“அவனை அறிமுகப்படுத்த சொன்னாலே, பேச்சை மாத்திடற. அவனும் உன்னை அப்சைட் டவுனா மாத்தி வச்சிருக்கான். சம்திங்க் ராங்க், ஹீ ஈஸ் சம்திங்க் டேஞ்சர்” என்றாள் ஆதிரை.

“ச்சீ ச்சீ அப்படில்லாம் இல்லை. இப்ப கொஞ்சம் கமிட்மெண்ட்ஸ், நானே உங்களை எல்லாம் கூட்டி ஒருநாள் பார்ட்டி வைக்கிறேன். அப்ப அறிமுகப்படுத்தறேன்.விடிய விடிய பேசிக்கோங்க” என்றாள்.

“கல்யாணம் பண்ணிக்கப் போறியாடீ..?” —ஆதிரை

“கண்டிப்பா ஆதிரை..” — தீப்தி

ஜெயமோகன் வீட்டுக்கு எப்போது வருவான் என்று தெரியாது. பகலில் கூட வந்து தூங்கிக்கொண்டு இருப்பான். இரவு இரண்டு மணிக்கு வருவான். நான்கைந்து நாட்கள் வராமலேயே இருப்பான். இதெல்லாம் தீப்திக்குப் பெரும் துன்பமாக இருந்தாலும், அவன் வந்த அடுத்தக் கணம் அனைத்தும் மறந்து போவதால் இதைப்பற்றிய பேச்சே எழவில்லை.

ஜெயமோகன் வந்தால் நிறைய வாங்கி வருவான். வீட்டை விட்டு வெளியே செல்ல வேண்டிய தேவையே இருக்காது. அப்படியே வெளியே சென்றால், மைசூர், பண்டிப்பூர், முதுமலை, கபினி, கூர்க் எனத் திகட்டத் திகட்ட வெளியூர்ப் பயணம் இருக்கும். வார இறுதி எப்படி முடிகிறது என்றே தெரியாது. தீப்தி கேட்ட அனைத்தையும் நிறைவேற்றித் தந்தான். பண்டிப்பூரில் தங்கி இருந்தபோது, மான்களுக்கு நடுவில் உடலுறவு கொள்ள வேண்டும் என்று கேட்ட தீப்தியின் ஆசையை மட்டும் ஜெயமோகனால் நிறைவேற்ற முடியவில்லை. ஓர் அடி எடுத்து வைத்தாலே, என்னமோ அவற்றைக் கற்பழிக்க வருவது போல மிரண்டு துள்ளி ஓடின மான்கள்.

சரி, மான்கள் இல்லாமல் காட்டில் இயற்கையாகச் செய்து பார்க்கலாம் என்று முடிவு செய்து இறங்கிப் பார்த்து, தீப்திக்கு முதுகு சிராய்த்து, ஜெயமோகனுக்குக் கொட்டையில் ஏதோ ஒரு காட்டு வண்டு கடித்ததுதான் மிச்சம். அந்த விடுமுறை முழுக்க மூன்று கொட்டை அதிசய மனிதனாக வலம் வந்தான் ஜெயமோகன்.

சில மாதங்கள், எதிர்காலத்தைப் பற்றிய பேச்சு, திட்டங்கள் என எதுவுமில்லாமல் ரொமான்ஸ், காமம், விளையாட்டுக்கள், ஊர் சுற்றுதல் என்றே ஓடிக்கொண்டிருந்தது.

தீப்தியுடன் இருக்கும்போது, ப்ரியாந்தினி பற்றி பேச்சு ஏதும் வந்ததில்லை. தன்னுடைய குழந்தைகள் பற்றி கூட ஜெயமோகன் பேச்சு எடுத்ததில்லை. தீப்தியுடன் இருக்கையில் ப்ரியாந்தினியிடம் இருந்து எந்த போன் காலும் வந்ததில்லை. ஜெயமோகனும், ப்ரியாந்தினிக்கு போனோ, மெசேஜோ அனுப்பியதில்லை. அதனால் தீப்தி, எந்தப் பதட்டமும், எதிர்காலத்தைப் பற்றிய பயமும் இல்லாமல் இருந்தாள்.

ஒரு நாள் அதிகாலையில் எழுந்து ஜெயமோகன் செல்ல வேண்டியிருந்தது. விழித்தவுடன் ஒரு கூடலுக்குத் தயரானான் ஜெயமோகன். தூக்கக் கலக்கத்தில் சொக்கும் அழகுடன் மாய மந்திரக்காரன் வரைந்த படம் போல இருந்தாள் தீப்தி. தூக்கத்தின்போது உண்டாகும் ஒரு ரகசிய நறுமணம் அவளிடமிருந்து வீசிக்கொண்டு இருந்தது. அவளை அணைத்து முத்தமிட்டபோது, ஜெயமோகனுக்கு போன் அடித்தது; காரியதரிசிதான் பேசினாள். பேசி முடித்து விட்டு, இருவருக்கும் தேநீர் கலந்து எடுத்து வந்தான் ஜெயமோகன்.

ஜெயமோகனை ஒட்டி அமர்ந்து கொண்டாள் தீப்தி.

“ஜெய், நம்ம கல்யாணத்தைப் பத்தி என்னடா பிளான்..?” — தீப்தி

“டிவேர்ஸ் அப்ளை பண்ணி இருக்கேன்மா, கொஞ்ச டைம் ஆகும். அது முடிஞ்சதும் நாம கல்யாணம் பண்ணிக்கலாம்.” —— ஜெயமோகன்

இப்படி பேச்சு வேறு திசையில் சென்றதால் அன்றைய அதிகாலைக் கூடல் நடக்கவில்லை. குளித்து முடித்து, வீட்டுக்குச் சென்று காலை உணவு சாப்பிட்டு, ப்ரியாந்தினியைச் செல்ல முத்தமிட்டு, விமானம் பிடிக்க ஓடிப்போனான் ஜெயமோகன்.

இதுவரை நடந்த கூடல்களின்போது இருவரும் காண்டமோ, கர்ப்பத் தடுப்பு மாத்திரைகளோ எடுத்துக்கொண்டதில்லை. மாலத்தீவின் காமச் சொர்க்கத்தில் திளைத்தபோது, எதைப்பற்றியும் கவலையில்லாமல் ஆரம்பித்த கூடல்

அப்படியே தொடர்ந்து கொண்டிருந்தது. தீப்திகா இரண்டரை மாத கர்ப்பமாக இருந்தாள். அவளுக்கு இரண்டு மாத கர்ப்பத்தின் போதுதான், தான் கர்ப்பமாக இருப்பதே தெரியவந்தது. கல்யாணப் பேச்சை எடுத்து, ஒரு முடிவு தெரிந்ததும் ஜெயமோகனிடம் சர்ப்ரைஸாக சொல்லலாம் என்று விட்டு வைத்திருந்தாள்.

இப்படி ஆரம்பித்த இந்தப் பேச்சு அவ்வப்போது தொடர்ந்தது. அதில் இருந்து ஜெயமோகன் பேசிய சிலவற்றை மட்டும் பார்க்கலாம்.

‘‘எனக்கும் ப்ரியாவுக்கும் கல்யாணம் ஆனதிலிருந்தே ஒத்து வரலை.’’

‘‘அவ மேல எனக்கோ, என் மேல அவளுக்கோ கொஞ்சம்கூட லவ்வே இல்லை.’’

‘‘ஏதோ கட்டி வச்சிட்டாங்கன்னு, கடமைக்கு குடும்பம் நடத்தி புள்ளை பெத்துகிட்டோம்.’’

‘‘செக்ஸ் சும்மா மெஷின் மாதிரி இருக்கும்.’’

‘‘என்னைப் பத்தி அவளுக்கு கவலையே இல்லை.’’

‘‘ஒரு டீ கூட போட்டுக் கொடுத்தது இல்லை.’’

‘‘பொண்டாட்டின்னு நினைச்சா உன் ஃபீல்தான் ஞாபகம் வருதுடா.’’

‘‘என்னைப் பத்தி எதுவுமே அவளுக்குத் தெரியாது. எனக்கு என்ன பிடிக்கும்னு கூட தெரியாது.’’

‘‘கல்யாணம் ஆன புதுசுலயே செக்ஸுக்கு கூப்பிட்டா, தூக்கம் வருதுன்னு தூங்கிடுவா.’’

‘‘என் அப்பா அம்மா வீட்டுக்கு வந்தாலே சண்டை ஆயிடும்.’’

‘‘செலவு கூட தனித்தனியாதான் பாத்துக்கறோம்.’’

‘‘எனக்கு உடம்பு முடியாமப் போனா, அம்மா வீட்டுக்குத்தான் போயிடுவேன்.’’

‘‘அவ கெட்டவ இல்ல, ஆனா எங்களுக்குள்ள கம்பேட்டபிலிட்டி இல்ல.’’

‘‘அவளை கிஸ் பண்ணியே இரண்டு வருஷம் இருக்கும்.’’

‘‘என் ஃபிரன்ட்ஸ் யாரையும் அவளுக்குப் பிடிக்காது.’’

‘‘இதுவரைக்கும் நாங்க ஓரல் செக்ஸ் செஞ்சிகிட்டதே இல்லை.’’

# பொண்டாட்டி குறுங்கதைகள் – சின்னப்பசங்க

இ ந்த சுமதி இருக்காளே, அதான் சந்திரவோட பொண்ணு, அட அதாங்க, உத்திரத்தோட தோழி சந்திராவோட பொண்ணு. இப்படில்லாம் சொல்றதை விட அன்னத்தோட பையன் பாலு பொடியனா இருக்கும்போது மாரை அவன் மூஞ்சில வச்சி அமுத்துனாளே, அவதான். இதைச்சொல்லாம சுத்தி வளைச்சி முதுகுக்கு கீழ கிஸ் அடிக்கிற மாதிரி வளவளன்னுகிட்டு என்கிற மைண்ட் வாய்ஸ் கேக்குது.

அந்த சுமதி, பேரன் பேத்தியெல்லாம் எடுத்து, அறுவத்தேழு வயசுல ஜாக்கெட் போடாம புடவையை மட்டும் சுத்திட்டு வாழ்ந்து இருந்தா. புருஷன் போய்ச் சேந்து பத்து வருஷத்துக்கு மேல ஆச்சி.

மவன் வீட்லதான் வாழ்ந்துட்டு இருந்தா. ரேஷன் கடைக்கு போய்ட்டு வரும்போதோ, கோயில்ல அன்னதானம் வாங்கும்போதோ, மூர்த்தின்னு ஒரு தாத்தாவைப் பாத்தா. மூர்த்திக்கு வயசு ஒரு அறுவத்தஞ்சு இருக்கும்.

சுமதி திடீர்னு ஜாக்கெட் போட ஆரம்பிச்சா. வளையல் போட்டு கிட்டா. மல்லிகைப்பூ வச்சிகிட்டா. பொட்டு மட்டும் ரகசியமா இரவில் வச்சிகிட்டு, பகலில் அழிச்சிட்டா.

திடீர்னு சுமதியும், மூர்த்தியும் ஊரை விட்டு ஓடிப் போய்ட்டாங்க .

பையனோ பொண்ணோ ஊரை விட்டு ஓடிப்போனா எவ்வளவு தீவிரமா தேடுவாங்களோ, அதை விட தீவிரமா சுமதியோட பையன்கள் கொலை வெறியோட தேடினாங்க. ஊர்ல ரொம்ப அசிங்கமா போச்சி. பாக்கறவன் எல்லாம் நக்கல் அடிக்க ஆரம் பிச்சாங்க. கெழவி கெடச்சா கொலைதான்னு பையன் வெறியோட அலைஞ்சிட்டு இருந்தான்.

மூர்த்திக்கு குடும்பம் இருக்கு. அவங்களும் தேட ஆரம்பிச்சாங்க. இரண்டு குடும்பமும் சேர்ந்து ஐந்து தனிப்படை அமைச்சி தேடிட்டு இருந்தாங்க.

எவ்ளோ நாள் மறைஞ்சி வாழ முடியும்..? தகவல் கிடைச்சி போய்ப் பாத்தா, கெழவனும் கெழவியும் அருமையா ஒரு வீடு எடுத்து பண்ட பாத்திரமெல்லாம் வாங்கிப் போட்டு, தெருப்பெருக்கி கோலம் போட்டு, பொங்கித்தின்னு கனஜோரா வாழ்ந்துட்டு இருந்தாங்க.

கெழவனையும் கெழவியையும் தெருவுல இழுத்துப் போட்டு அடிச்சி, கெழவியை வீட்டுக்கு கூட்டிட்டு வந்துட்டாங்க. அவ பொட்டழிச்சி, பூவைப் பிடுங்கி போட்டு அறைக்குள்ள தள்ளிட்டாங்க. அவ போங்கடா லுடாக்குங்களான்னு ஜாக்கெட்டை அவுத்து கடாசிட்டா.

அவ்ளோதான் கதை முடிஞ்சி போச்சி.

இந்தக் கதைக்கு முடிவு வேணுமே..! கதை முடிஞ்சதும் சன்னதம் வந்து ஆடிட்டு இருக்கும், கலா இதுக்கு வெளக்கம் கேப்பாளேன்னு யோசிச்சான் இந்தக் கதையை எழுதிட்டு இருப்பவன்.

அந்த கெழவி கிட்டயேபோய், “எதுக்காக நீ ஓடிப்போன..? இந்த வயசுல செக்ஸ் வச்சிக்க முடியாதே, என்னதான் பண்ணீங்கன்னு கேக்கவா”னான், கெழவியோட சொந்தக்கார பயகிட்ட.

நீ போய் கேட்டின்னா, கெழவி வெளக்குமாத்தால அடிச்சி, மூஞ்சில சாண்டையைக் கரைச்சி ஊத்திடுவான்னு சொன்னான் சொந்தக்கார பய..!

என்னடா இது வம்பாப்போச்சி, தமிழ், இலக்கியம், தங்கிலீஷ், போஸ்டு மாடர்னிஸம் எல்லாம் நம்மளை கை விட்டுடுத்தே, என்னாத்தை சொல்லி முடிக்கிறதுன்னு விசனமா இருந்தப்போ, சாயங்கால குடி சபைல ஒரு ஆள் மாட்டினான். அவனும் கெழவி குடும்பத்தைச் சேந்தவன்தான். ஆனா, அவன் கிட்ட கெழவி கதையை பேசினாலே வெட்டிடுவான்னு சொன்னாங்க.

கொஞ்சம் குடி அதிகமாகி போதையானதும், ஒரு கெழவன் 19 வயசு பொண்ணை இழுத்துட்டு ஓடிய கதையை ஜாலியா சொல்லி, அவனுக்கு ஒரு சிகரெட் கொடுத்ததும் கொஞ்சம் தோஸ்த் ஆனான்.

மெல்ல கெழவி கதையை சிரிப்பு சிரிப்பா ஆரம்பிச்சி,

“ஏன் தான் ஓடிப்போனாங்க..? என்னதான் அவங்க ஆசை..?”ன்னு கேட்டதும்,

“செக்ஸ்தான்”னு சொன்னான்.

‘‘இல்லீங்க, இந்த அம்மாவுக்கு அறுவத்தேழு வயசு; அந்தாளுக்கு இருக்கும் அறுவத்தஞ்சு; எப்டிங்க செக்ஸ்... என்னாங்க பண்ண முடியும்..?’’ என்றதும்

ஒரு ரவுண்டை கவுத்துக்கொண்டு, மகிழ்ச்சி தேஜஸ் முகத்தில் படிய, குடிகார புத்தர் போல அவன் அருளியது...

‘‘சின்னப் பசங்க அப்பா அம்மா வௌாட்டு வௌாடுமே, அதுங்க என்னா ஓழ்த்துக்குதா..? எதோ சும்மா அங்க தடவுறது, இங்க தடவுறது, குஞ்சா மணியை புடிச்சி ஆட்றது, அப்புச்சியைப் புடிச்சி கிள்றது, இப்டித்தானே..? அது மாதிரி இவங்களும் எதாச்சும் இவங்களால முடிஞ்சத செஞ்சிப்பாங்க. வயசான எல்லோரும் கொழந்தைங்கதானே’’ என்றான்.

# ஆதிரை — லக்ஸ்

தி ரையரங்கில் குறி தடுக்கி திடுக்கிட்ட ஆதிரை, அழுது கொண்டு உடனே வெளியேறினாள். கொஞ்ச நாட்கள் லக்ஸை தவிர்த்தாள். லக்ஸ் மன்னிப்பு, கடிதம், மெசேஜ், போன் என பல வழிகளில் முயன்றான். நேரில் ஒருநாள் பலர் முன்னிலையில் காலில் விழுந்ததும் இளகினாள். சமாதானத்துக்குப் பிறகான ஒரு நாளில், "லவ் பண்றவ கிட்டதான எடுத்துக் காட்ட முடியும்..? தெருவுல போறவ கிட்டல்லாமா எடுத்து காட்ட முடியும்..?" என்றான். "ஏய் இது உன்னோடதுடீ, உன்னோடத உன்கிட்ட கொடுத்தேன்" என்றெல்லாம் சொல்லி சிரிக்க வைத்தான்.

காதல் நெருக்கம் அதிகமானதும், தன்னுடைய மனச் சிக்கலையும், தந்தையால் தான் ஏமாற்றப் பட்டதையும் அவனிடம் சொன்னாள் ஆதிரை. லக்ஸ், ஆதிரை வீட்டுக்குத் தெரிய வந்தான். ஆதிரையின் மீது உரிமையாக, அன்பாக இருப்பதாக காட்டிக்கொண்டதால், வீடும் நிம்மதிப் பெருமூச்சு விட்டது. லக்ஸ் ஆதிரையை மீட்டெடுத்ததாக வீடு நினைத்துக்கொண்டு ஆசுவாசப் பட்டது.

ஆதிரை விடுமுறைக்கு வீட்டில் இருக்கும்போது கூட , வீட்டுக்கு போன் செய்து, ‘‘ஆதிரை சாப்பிட்டாளா..? எத்தனை மணிக்கு தூங்கினா..? எத்தனை மணிக்கு எழுந்தா..?’’ என அதிகாரம் செய்ய ஆரம்பித்தான். வெளியே சென்று ஆதிரை வீடு திரும்ப தாமதமானால், ‘‘இதான் பொண்ணு வளக்கற லட்சணமா..? நைட்ல பொண்ணு வெளில சுத்தலாமா..? போய் கூட்டிட்டு வாங்க’’ என்று ஆதிரையின் அப்பாவுக்கே ஆர்டர் போட்டான். அப்பாவும் அவனுக்குக் கீழ்படிய ஆரம்பித்தார்.

பணக்காரக் குடும்பமாக இருந்தாலும், பிற்போக்கான குடும்பத்தில் இருந்து வந்ததால் ‘‘பொண்ணுன்னா இப்படி இருக்கணும், அடங்கி இருக்கணும்,

இப்படித்தான் உடை அணியணும், எதுத்து பேசக்கூடாது'' என்றெல்லாம் மெதுமெதுவாகச் சொல்லி மென்விஷத்தை ஏற்றி ஆதிரையை மாற்றினான்.

''எங்க ஜாதில, உங்க ஜாதிப் பொண்ணை கட்டிக்க மாட்டாங்க'' என்று சொல்லி ஆதிரைக்கு ஒரு தாழ்வு மனப்பான்மையை உருவாக்கினான். இதற்கே சமூகப் படிக்கட்டுகளில் ஆதிரை ஜாதி லக்ஸ் ஜாதியைவிட உயர்ந்ததாகக் கருதப்பட்டு வந்தது. ஆதிரையின் பெற்றோர் கலப்பு மணம் என்பதால் அதை ஒரு பிரச்னையாக மாற்றினான்.

''எங்க ஜாதியில, கொறைஞ்சது இருநூறு பவுன் நகை போட்டுட்டு வருவாளுங்க பொண்ணுங்க'' என்றான். அன்றிலிருந்து நகை சேர்க்க ஆரம்பித்தாள் ஆதிரை. அப்பாவை விரட்டினாள். பெரும் பதவியில் அவர் இருந்ததால் தானாகவே அன்பளிப்புப் பணம் நிறைய வரும். எல்லா பணத்தையும் வெறிகொண்டு நகைகளாக மாற்றினாள். கல்லூரி முடித்து வேலைக்குச் சேர்ந்து, வரும் சம்பளத்திலும் நகை வாங்கிக்கொண்டே இருந்தாள்.

ஆதிரையும் தனி வீடு எடுத்து வசித்ததால், லக்ஸ் அடிக்கடி வந்து போக ஆரம்பித்தான். அப்படியான ஒரு நாளில், இருவருக்கும் உணர்ச்சி மிகுந்த தருணத்தில் உடலுறவு நடந்து முடிந்தது. காமத்தின் ருசி அறிந்த ஆதிரை அதில் திளைக்கத் தொடங்கினாள். இன்னதுதான் என்றில்லாமல், அனைத்து வகை காம விளையாட்டுகளையும் விளையாண்டு பார்த்தார்கள்.

இதுவரை, ஆதிரையுடன் ரொம்ப நேரம் தொடர்ந்து லக்ஸ் இல்லாததால் ஆதிரை கவனிக்கத் தவறினாளா, அல்லது லக்ஸ் இப்போதுதான் இந்த வேலையை ஆரம்பித்தானா என்று தெரியவில்லை. மற்ற சில பெண்களுடன் லக்ஸ் பேசுவது தெரிய வந்தது. அதை ஆதிரை கேட்டால், 'யேய் அதெல்லாம் சும்மா, ஜஸ்ட் ஃபிரண்ட்ஸ்' என்று அலட்சியமாக மறுத்து விடுவான். ஆனால் உத்தம பத்தினியாக இருக்கும் ஆதிரையை சந்தேகப்பட்டுச் சண்டை போட ஆரம்பித்தான். வெட்டிப் பிரச்னையாக இருக்கும். ஆனால் பெரிய சண்டையாக ஆகும். கடைசியில், கலவி முடித்து வைக்கும்.

கலவி ஒரு கட்டத்தில் அலுத்து, வருவதும் குறைய ஆரம்பித்தது.

வருகையும் கலவியும் அரிதாகிப் போன பின்பு, மது உள்ளே நுழைந்தது. சில ரவுண்டுகள் அடித்த பின்புதான் முத்தமே ஆரம்பிக்கும். பாதிக்கு மேல் விளையாட்டுகள் முடிந்து மீண்டும் மது இரண்டு ரவுண்டுகள். அதன் பின் நீண்ட நேரம் இயந்திரப் புணர்ச்சி.

இந்த இயந்திரப் புணர்ச்சி பிடிக்காவிட்டாலும், அதுவே பழக்கமானது ஆதிரைக்கு. ஆதிரை இந்த இயந்திரப்புணர்ச்சியின் போது ஜடமாகக் கிடப்பதை உணர்ந்த லக்ஸ், ஆதிரையையும் மது குடிக்க வைத்தான். மது மயக்கத்தில் அவளும் ஒத்துழைப்பது போன்ற ஒரு மாயை உருவானது. ஒரு கட்டத்தில் இந்த அரவை மெஷின் புணர்ச்சி போரடிக்க ஆரம்பித்தபோது, டில்டோவை வாங்கி வந்தான் லக்ஸ்.

நல்ல குடி; அது முடிந்ததும் ஆதிரையை நிர்வாணமாக்கி, டில்டோவை உபயோகிப்பான். ஒரு முறை ஆர்கஸம் வந்ததும் மல்டிபிள் ஆர்கஸம் வர வேண்டும், நீ நிறைய எஞ்சாய் செய்ய வேண்டும் என்று கூறி, மீண்டும் மீண்டும் அதை பயன்படுத்திக்கொண்டே இருப்பான். வலி தாங்க முடியாமல் ஆதிரை கதறும்போது, அவளுக்கு மதுவைக் கொடுத்து தானும் குடித்து, கையில் கிடைக்கும் திரவத்தை யோனியில் ஊற்றி, மீண்டும் டில்டோ. ஆதிரை மயக்க நிலைக்குச் செல்கையில், இவன் உச்சகட்ட போதையில் இருப்பான். அப்போது அதிகாலை நான்கு மணியைத் தாண்டி இருக்கும். தன் உடைகளைக் களைந்து, ஒரு உணர்ச்சியும் இல்லாத தன் குறியை வெளியில் எடுப்பான். அது பழக்க தோஷத்தில் விரைத்து முழித்துக்கொண்டு இருக்கும். அரைத் தூக்கக் குறியை வறட்டு யோனியில் நுழைத்து இயங்குவான். வலி இருந்தாலும் போதை மற்றும் அசதியால் ஆதிரைக்குக் கண்கள் சொருகும். அப்போது ஒரே அறை. இப்படித்தான் புணர்ச்சியின்போது அடிக்கும் பழக்கம் ஆரம்பமானது. அறை வாங்கிய ஆதிரை, திடுக்கிட்டு விழித்து, ஆ... ஊ... பேபி என, ஒத்துழைப்பதாகக் காட்டிக்கொள்வாள். சில நிமிடங்கள் நீடிக்கும் இந்த வறட்டுப் புணர்ச்சி முடிவுக்கு வராமலேயே குறி சுருங்க, சரிந்து விழுந்து தூங்கி விடுவான்.

மறுநாள் எழுந்தால் ஆதிரைக்கு, நூறு காளைமாடுகள் உடல் மீது ஓடியது போல இருக்கும். "நேத்து செம செக்ஸ் இல்ல..?" என்பான்.

இப்படி ஒரு இயந்திரப் புணர்ச்சி முடிந்ததும், பல நாட்கள் வீட்டுக்கு வர மாட்டான். அவ்வப்போது வீடியோ கால் வரும். அப்போது அவன் சொல்வது போலெல்லாம் ஆதிரை செய்ய வேண்டும். அவன் சுய இன்பம் முடிந்ததும் கால் கட் ஆகி விடும். வெளியில் கடையிலோ அல்லது திரையரங்கிலோ, நண்பர்களோடோ ஆதிரை இருக்கும்போது லக்ஸ் போன் வந்தால், சிக்கல்தான். ''உடனே வீட்டுக்கு போடீ; உன் முலையை உடனே பாக்கணும்" என்பான். விடாமல் போன் அடித்து கத்துவான். ''வீடு ரொம்ப தூரம் இருக்குடா" என்றால், ''பக்கத்துல எங்கயாவது ரெஸ்ட் ரூமுக்கு போய் அவுத்துக் காட்டுடீ தேவடியா..!" என்று கத்துவான். ஒருமுறை எஸ்கேப் சினிமாஸில், படத்தின் நடுவே எழுந்து ரெஸ்ட் ரூம் ஓடிக் காட்டிவிட்டுத்தான் திரும்ப வந்து படம் பார்த்தாள்.

அடுத்த கட்டத்துக்கு நகர்ந்தான் லக்ஸ். அதாவது, புணர்ச்சியில் ஈடுபடுவதற்கு முன் ஆதிரையின் தோழிகளைப் பற்றி பேச ஆரம்பிப்பது. மது குடித்துக்கொண்டே, அவர்களின் முலைகளைப் பற்றி, இடைகள், தொடைகள், பிருஷ்டம், யோனி எனப் பேசுவான். ஆரம்பத்தில், ''இப்ப ஏன் அவங்களைப் பத்தி பேசற..?" என்று கடுப்பானாள் ஆதிரை. பிறகு, ''இதெல்லாம் ஒரு ப்ளே. செக்ஸில் என்ன வேணாலும் ப்ளே பண்ணலாம்" என்று அவளைக் குழப்பி ஒத்துக்கொள்ள வைத்தான்.

ஆதிரையின் உடைகளைக் களைந்து கையையும் வாயையும் மேய விட்டுக்கொண்டே பேச ஆரம்பிப்பான்.

''ஏஞ்சலின் – முலையைப் பாத்து இருக்க இல்ல..? எப்பிடிடீ இருக்கும்..?''

''சின்னதா, க்யூட்டா இருக்கும்.''

''நிப்பிள், ப்ளாக்கா ப்ரௌனா..?''

''ப்ரௌனா இருக்கும்.''

இப்படி ஆதிரை சொல்லிக்கொண்டே வர வேண்டும்.

''ஏஞ்சலின் என்ன கலர் பேண்டி போட்டிருந்தா..?''

''வொயிட் கலர்.''

''அங்க முடி இருக்குமா... க்ளீன் ஷேவ்டா..?''

“நான் அதையெல்லாம் பாத்ததில்லைடா” என்று ஆதிரை சொன்னால் அறை விழும். “பாருடீ, பாத்துட்டு சொல்லு, இப்பத்திக்கு பாத்த மாதிரி சொல்லு.”

“முடி இருக்கும்.”

“அவளை ஒரு நாள் கூட்டிட்டு வறியா..?”

“கூட்டிட்டு வரேன்.”

“அவளை வச்சிகிட்டே நாம செய்வோமா..?”

“செய்வோம்.”

“அவளையும் சேத்துக்குவோமா..?”

“சேத்துப்போம்.”

“ஆனா, நான் உன்னை மட்டும்தான் செய்வேன்.”

இதற்கு ஆதிரை, “லவ் யூ டா, தேங்க்ஸ்டா” என்று சொல்ல வேண்டும்.

“அவ பாவம்தானே..? அவளுக்கு ரெண்டு ஷாட், ஆனா முடிக்கிறது உன்கிட்டதாண்டீ செல்லம்.”

இதற்கும், “ஆஹ், ஆஹ், தேங்க்ஸ், லவ் யூ” சொல்ல வேண்டும்.

“இது யார் முலை..?” என்று இடது முலையைக் காட்டி கேட்பான்.

“இது என் முலை” என்று சொல்ல வேண்டும்.

வலது முலையைக் காட்டி கேட்டால், “ஏஞ்சலினோடது” என்று சொல்வாள் ஆதிரை.

ஆதிரை, ஏஞ்சலின் என மாறி மாறிச் சொல்லிக்கொண்டே முலைகளை சுவைப்பான்.

“உன் முலைதாண்டி டாப், செமையா இருந்திச்சி” என்பான்.

“லவ் யூ டா” —என்று சொல்லி அவனைக் கட்டிக்கொள்ள வேண்டும்.

# பொற்செல்வி – அமிர்த கடேஸ்

வயதுக்கு வந்த திருவிழாவைக் கோலாகலமாகக் கொண்டாடச் சொந்த கிராமத்துக்குச் சென்றனர். சின்ன ஐயா நான்கைந்து பெண்மணிகளுடன் திருபுவனம் சென்று பட்டுத்துணிகள் எடுத்து வந்தார்.

பாவாடை தாவணியில் பொற்செல்வியின் குழந்தைத்தனம் அதிகரித்துக் காணப்பட்டது. புதிதாக வாங்கிய நகைகளும் பழைய நகைகளும் பொற்செல்வியின் உடலில் கிடைத்த இடத்தில் தஞ்ச மடைந்தன.

ஆறுமுகம் தாத்தாவுக்கு உடம்பு முடியவில்லை என்பதால் பார்த்துக்கொள்ள சின்னப் பொண்ணுவோடு அமிர்தும் வந்திருந்தான். ஆறுமுகம் வீட்டுக்குப் பத்திரிக்கை வந்திருந்தாலும் பழநியின் வற்புறுத்தலால் அமிர்தும் சின்னப்பொண்ணும் பொற்செல்வியின் சடங்கு விழாவிற்குச் சென்றிருந்தார்கள். அமிர்து பொறியியல் படித்துக்கொண்டிருந்தாலும் பள்ளிப் பையன் போன்ற அமத்தலான தோற்றம் அவனுக்கு வாய்த்திருந்தது.

சுமதியும் தாய் வீட்டுக்கு வந்திருந்ததால், சந்திராவுடன் விழாவிற்கு வந்திருந்தாள். சுமதியின் பிள்ளைகளும் வந்திருந்தனர்.

டீக்கடை மாஸ்டர் தனியாக வந்திருந்தார். ஓடிப்போன மனைவி செத்தாளா பிழைத்தாளா என்று தெரியாததால், இன்னொரு கல்யாணம் செய்து கொண்டிருந்தார். ஆனால் அவள், இவரை விட தாழ்த்தப்பட்ட சாதி என்பதால் பொது நிகழ்ச்சிக்கு அழைத்து வருவதில்லை. கல்யாணம் என்று கதையில் சொன்னாலும் ஊரைப் பொறுத்தவரை, 'சேத்துகிட்டாரு' என்றுதான் சொல்லிக்கொண்டனர்.

தனக்கு ஏற்ற ஆட்களுடன் அமர்ந்திருந்த மணி மாஸ்டர், “என்னா கூதி வெழாடா இது..? எவ்ளோ நேரம் சடங்கு செய்றாங்க..?” என்றார்.

ஒரு பெருசு, “யோவ் மணி, கூதி வெழாதான் இது. கொஞ்சம் பொறு, ஜோடனை செய்யறாங்க" என்றார் .

‘‘என்னா கூதி ஜோடனையோ" என்றார் மணி.

‘‘எல்லாரும் பண்ற எல்லா ஜோடனையும் கூதிக்குதாம்யா. ஆண்டவனே கூதியை மொதல்ல படைச்சிட்டு, அதுக்கு மேலதாம் மத்த பாகத்தைக் கட்டினானாம்."

‘‘இவருதான் ஆண்டவன் பக்கத்துல நின்னு ஒவ்வொரு கூதியா பொறுக்கி குடுத்தாரு. ஆளையும் பூளையும் பாரு, நொண்டிப்பூளா வச்சிகிட்டு ஒனக்கு என்னா அதப்புய்யா..?"

‘‘என் பூளு நொண்டனதை நீ பாத்த..?’’

‘‘நான் ஏன்யா அந்தக் கருமத்தை பாக்கணும்..? ஒம்பூளுக்கு பூள்தடி வச்சிருக்குறதா, அந்தக் கூதிதான் சொல்லிச்சி.’’

‘‘யோவ் நல்லது நடக்குற எடத்துல ஏன்யா அசிங்கமா பேசிட்டு இருக்கீங்க’’ என்று ஒருவர் குறுக்கிட, ‘‘ஆமாய்யா, கூதில ஜடை பின்னி, பூ தச்சி விடறாங்க, மூடிட்டு ஒக்காந்து இருப்போம், நீ போய் தாழம்பூ எடுத்து குடு" என முடித்து வைத்தார் மணி மாஸ்டர்.

அன்னத்தின் பையன் பாலு, சிக்கன் – மட்டன் கடையோடு, இப்போது திருமணப் பாத்திரங்கள் வாடகைக்கு விடுவது, ஷாமியானா பந்தல் போடுவது, டியூப் லைட், சீரியல் லைட் செட்டிங்க் என கலந்துகட்டி செய்வதால், அவனும் வேலையாட்களுடன் வந்திருந்தான். சுமதி, ‘‘எப்பிடிடா பாலு இருக்குற..?’’ என்று கேட்டதும், ‘‘நல்லா இருக்கேன் சுமதி. பசங்கள்ளாம் எப்டி இருக்காங்க..?’’ என்று கேட்டான்.

சுமதிக்கு வயதாகி விட்டாலும் அந்தப் பழுத்த உடல் மேல் ஒருக்கணம் பாலு காம வசப்பட்டான். சின்ன வயதில் அவள் முலைகளை வைத்து முகத்தில் அமுக்கியது இன்னும் அவனுக்கு மறக்கவில்லை.

அமிர்த கடேஸ், பொற்செல்வியைப் பார்த்தவுடன் காதல் வயப்பட்டான். இவள்தான் தன் தேவதை என முடிவு செய்து கொண்டான். ஜொலிக்கும் பொற்செல்வியைப் பார்த்து, கண்களில் நீர் திரளத் தன் இஷ்ட தெய்வமான அங்காளம்மனிடம், பொற்செல்வி தன் மனைவியாக வர வேண்டும் என்று வேண்டிக்கொண்டான்.

அங்காளம்மன் கோவிலில் அமர்ந்திருந்த கலாவுக்கு திடீர் என்று சாமி வந்தது. முடியை விரித்துப்போட்டுக்கொண்டு ஆடினாள். பூசாரி சூடம் கொளுத்தி வாயில் போட்டும் ஆட்டம் நிற்கவில்லை. புதைத்து வைக்கப்பட்டு இருந்த சூலத்தைப் பிடுங்க முயன்றாள் கலா. கையை கிழித்து ரத்தம் வந்தது. அந்த ரத்தக் கையோடு நந்தி மேல் அடித்தாள். அங்காளம்மன் கண்கள் மூடிக்கொண்டு இருந்ததுபோல இருந்தது. பூசாரி ஒழுங்காகக் காப்பு போடவில்லை.

அன்று இரவு, தூரத்தில் படுத்திருந்த சுமதியின் மகளைத் தட்டி எழுப்பினான் அமிர்து. அவள் திடுக்கிட்டு விழித்ததும், "கொல்லைக்கு போகலாம் வா" என்றான்.

‘‘நான் வரலை’’ என்று மறுத்தாள். அவள் இன்னும் வயதுக்கு வரவில்லை. எந்தக் கணமும் வந்து விடும் வாய்ப்பு, உடல் வனப்பிலும் பூக்க ஆரம்பித்து இருக்கும் புது உறுப்பிலும் தெரிந்தது.

‘‘வான்னு சொல்றேன் இல்ல’’ என்று இழுத்தான்; சன்னமாகப் பேசினான்.

‘‘நீ என்னா செய்வன்னு தெரியும், நான் வர மாட்டேன்’’ என்றாள்.

‘‘ஒண்ணும் செய்ய மாட்டேன் வா’’ என்று கூறி இழுத்துக்கொண்டு கொல்லைக்குச் சென்றான். கொல்லையில் போய், அவளின் சட்டையை அவிழ்க்கப் பார்க்க, அவள் பிடிவாதமாக மறுக்க, அவளைப் படுக்கவைத்துப் பாவாடையைத் தூக்கி மேலே படர்ந்தான் அமிர்து. ஆசையை திரவமாக வெளியேற்றி விட்டு, அவளை அப்படியே விட்டு விட்டுக் கிளம்பிச் சென்றான்.

துண்டை முகத்தில் போட்டுக்கொண்டு தூங்குவதற்கு முன் பொற்செல்வி தன் மனைவியாக வர வேண்டும் என அங்காளம்மனை வேண்டிக்கொண்டான் அமிர்து.

# தீப்தி – ஜெயமோகன் – ஆதிரை

“ச ரி டீ, ஜெயமோகனை இண்ட்ரோ குடுக்கறேன் வா" என்று தீப்தி ஆதிரையை அழைத்திருந்தாள். ஆதிரையிடம் நெருக்கமாக அமர்ந்து, ஜெயமோகன் திருமணமானவன், ஆனால் முதல் மனைவியை விவாகரத்து செய்யப்போகிறான் என்று விளக்கிச் சொன்னாள்.

ஆதிரை தீப்தியின் அபார்ட்மெண்டைப் பார்த்து மிரண்டு விட்டாள்.

“ஏய், என்னாடி இது, பேலஸ் மாதிரி இருக்கு. நீ தனியாவா இருக்க..?” என்றாள்.

“இல்லடீ, ஜெயமோகனும் இங்க தங்குவாரு” என்றாள்.

“ஜெயமோகன் இங்க இருப்பது மாதிரி தெரியவே இல்லடீ, அவரோட ஒரு திங்க்ஸும் இல்லையே” என்றாள் ஆதிரை.

“ஒரு பையில எல்லாத்தையும் எடுத்துட்டு வருவாரு, அப்புறமா எடுத்து போயிடுவாரு” என்றாள்.

ஆதிரைக்குச் சரியாகப் படவில்லை. தீப்தியை உற்றுப் பார்த்தாள்.

குட்டி முடி, நீண்ட மயிராகி இருந்தது. கழுத்தில் தங்கச் சங்கிலி மின்னியது. தெனாவட்டு மறைந்து நளினம் கூடிக் காதலோ, காமமோ கண்களில் மின்னிக்கொண்டு இருந்தது.

“சரி கல்யாணத்தைப் பத்தி பேசினியா..?”

“டிவேர்ஸ் அப்ளை பண்ணி இருக்காராம். கூடிய சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கிறேன்னு சொன்னாருடீ.”

“அவரோட அப்பா – அம்மாகிட்ட அறிமுகப்படுத்தினாரா..?”

“இல்லடீ.”

“அவரோட மனைவிகிட்ட பேசினியா..? “

‘‘இல்லையே.’’

‘‘அவரோட ஃபிரண்ட்ஸ், அதுவும் பேசி இருக்க மாட்ட. அவரோட வைஃப் , அப்பாம்மா யார் போன் நம்பராவது இருக்கா உன்கிட்ட..?’’

‘‘இல்லை, இப்ப என்னாடீ சொல்ல வர்ற..?’’

‘‘அவரோட ஆஃபீஸுக்கு போயிருக்கியா..?’’

‘‘இல்ல.’’

‘‘வீட்லயே கெடப்பியா..? அவர்கூட பெங்களூர்ல எங்கதான் போய் இருக்க..?’’

‘‘மைசூர், பண்டிப்பூர், கூர்க், கோவா, இன்னும் நிறைய இடங்களுக்கு போயிருக்கேன். மாலத்தீவு கூட போயிருக்கேன்.’’

‘‘பெங்களூர்ல ரெஸ்டாரண்ட், மால், சினிமா, பார்க், இப்டி எங்கயாச்சும் போனியா..?’’

‘‘இல்ல, அதுக்கு என்னா..?’’

‘‘ஒண்ணுமில்லை, அவன் உன்னை வப்பாட்டியா வச்சிருக்கான்..!’’

‘‘ஏய், என்னாடி டூ மச்சா பேசற..? ஓவரா திங்க் பண்ணாத, வீ ஆர் வெரி ஹேப்பி."

"இன்னொண்ணு சொல்லவா..? நான் கர்ப்பமா இருக்கேன். வயித்துல பாப்பா" என்று கூறிக்கொண்டு வயிற்றைத் தொட்டுக் காட்டினாள் தீப்திகா.

‘‘நீ என்ன லூஸா..? கல்யாணம் பண்றதுக்குள்ள என்னடி அவசரம்..?’’

‘‘கல்யாணத்துக்கும் இதுக்கும் என்னடீ சம்மந்தம்..? ஐ லவ் பேபி. இதை நான் வளத்துக்கப் போறேன்.’’

‘‘அப்பா பேரு வேண்டாமா..?’’

‘‘அப்பாவாவது குப்பாவாவது. இது என் குழந்தை, அவ்ளோதான். ஆனா, ஜெயமோகன் ஈஸ் எ குட் டாடி டூ. அவரு கல்யாணம் பண்ணிப்பாரு."

‘‘கடைசி வரை வப்பாட்டியா இருக்க ஓக்கேன்னா, கடைசி வரை ஹேப்பி கப்பிள்ஸா இருக்கலாம். பேபியும் வப்பாட்டி பேபிதான்..!’’

‘‘நெவர், நான் இன்னிக்கே தெளிவா பேசிடறேன். நீ ஜெயமோகனை நேர்ல பாத்தா, அவரைப்பத்திய இமேஜ் மாறிடும்டீ."

ஆதிரை வருவதை முன்கூட்டியே சொல்லி இருந்தாள். மாலை வருவதாகச் சொல்லி இருந்தான் ஜெயமோகன். இப்போது ஆதிரை 'வப்பாட்டி' என்று சொல்லியதால் கடுமையாகப் பாதிக்கப்பட்டு, ஜெயமோகனுக்கு போன் அடித்தாள்.

‘‘அதான் ஈவ்னிங் வரேன்னு சொன்னேனே.’’

‘‘அது இல்ல, எனக்கு உங்க அப்பா — அம்மாவைப் பாக்கணும்.’’

‘‘ஏன் திடீர்னு..?"

‘‘இல்ல, எங்க அப்பா — அம்மா கேக்கறாங்க .அவங்க வந்து பாக்கணு மாம். அதுக்கு முன்னாடி நான் பாத்துடலாம்னு தோணிச்சி."

‘‘சொல்றேன், பிளான் பண்ணி பாக்கலாம்.’’

‘‘அப்பா — அம்மாவை பாக்க எதுக்கு பிளான்..?"

‘‘தீபுக்குட்டி, பயங்கர தலைவலி இப்ப, அப்புறம் பேசிக்கலாமே.’’

‘‘தலைவலியா..? என் கூட பேசினா தலை வலிக்கிதா..?’’

‘‘யேய் ப்ளீஸ், தலைவலி மட்டும் இல்ல, டயரியா மாதிரி போகுது. ஃபுட் பாய்ஸன் போல, ஹெவி ஃபீவர், எழுந்திருக்ககூட முடியலை. கவனிக்கவும் யாருமில்லை, வெறும் குளுகோஸ் குடிச்சிட்டு படுத்து இருக்கேன்.’’

தீப்திக்கு கோபம் போய் பாசம் வந்தது.

‘‘ஏய் என்னாடா இது..? எனக்கு கால் பண்ண வேண்டியதுதானே..? நான் வரேன், வா போய் ஹாஸ்பிடல்ல அட்மிட் ஆகலாம்."

‘‘இல்ல, அம்மா வராங்க, டாக்டர் வீட்டுக்கே வரச் சொல்லிட்டேன். ஆன் தி வே."

‘‘ஓ அப்டியா..? சரி...’’ தீப்திக்கு என்ன சொல்வது என்று தெரியவில்லை.

‘‘உன்னை பாக்கணும்போல இருக்கேடா... நான் இப்ப அங்க வர முடியாதா..?’’

‘‘இப்ப வந்தா எல்லாம் கெட்டுப் போயிடும். நான் ரெகவர் ஆயிட்டு போன் பண்றேன், அப்பறம் பாக்கலாம்.’’

இணைப்பு துண்டிக்கப் பட்டது.

ஆதிரையிடம் சொன்னாள்.

ஆதிரை நமட்டுச் சிரிப்பு சிரித்தாள்.

‘‘உனக்கு லக்ஸ் கூட பழகிப் பழகி எல்லாரையும் ஃப்ராடாத்தாண்டி நினைக்கத் தோணும்." என்றாள்.

தீப்திக்குக் கொஞ்சம் தனிமை தேவையென்று ஆதிரைக்குத் தெரிந்தது. அவளை தனியே விட்டாள். ஆதிரை கொஞ்ச நேரம் தூங்கினாள். மதிய உணவு உண்டு, சிறிது நேரம் மற்ற கதைகளைப் பேசிக்கொண்டு இருந்து விட்டு, மீண்டும் போர் அடிக்கத் தொடங்கும்போது, ‘‘வெளிய போலாமா..? என்றாள் ஆதிரை.

"எங்கடீ..?"

‘‘எனக்கு ஷாப்பிங் போகணும். எதாச்சும் மால் போலாம். அப்படியே படத்துக்கு போலாம். நைட்டு பப்புக்கு போலாம்" என்று கூறி கண்ணடித்தாள் ஆதிரை.

கோரமங்களா ஃபோரம் மாலில் நின்று கொண்டு ஆதிரையும் தீப்தியும் ஃபேஸ்புக்கில் போடுவதற்காக செல்ஃபி எடுத்துக்கொண்டு இருந்தார்கள், பின்னணியில் ஜெயமோகன்—ப்ரியாந்தினி கையைப் பிடித்துக்கொண்டு, தன்னுடைய குழந்தையோடு சிரித்தபடி உற்சாகமாக வந்து கொண்டிருந்தான்.

தீப்தி பார்த்துத் துணுக்குற்று, செல்ஃபி எடுப்பதை நிறுத்திவிட்டுத் திரும்பினாள்.

இருவரும் நேருக்கு நேர் பார்த்துக்கொண்டனர். அந்த சூழ்நிலையை எப்படி கையாள்வது என்று ஜெயமோகனுக்குத் தெரியவில்லை. உற்சாகம் குறைந்து, ஒருக்கணம் நின்று, தீப்தியைப் பார்த்துப் பின் எங்கோ பார்ப்பது போல பார்த்து, ப்ரியாந்தினியின் கையை விட்டுவிட்டு, பதட்டத்தை மறைக்க குழந்தையைத் தூக்கிகொண்டு, இவை அனைத்தையும் சில நொடிகளில் செய்தான்.

தீப்தி அப்படியே பார்த்துக்கொண்டு இருந்தாள்.

ஜெயமோகன் சமாளித்துக்கொண்டு கடந்து சென்று விட்டான்.

ப்ரியாந்தினி நொடிப்பொழுதில் இவை அனைத்தையும் உள்வாங்கி விட்டாள். ப்ரியாந்தினிக்கு 'சடக் சடக்' என என்னன்னவோ தோன்றியது, அவள் முகக்குறிப்பு மாற்றங்களில் தெரிந்தது.

வீட்டுக்கு போலாம் வாடி ப்ளீஸ் என்றாள் தீப்தி, ஆதிரையிடம்.

‘‘கூல் டவுன், எதுவா இருந்தாலும் பாத்துக்கலாம், கண்ட்ரோல் யுவர்செல்ஃப்" என்றாள் ஆதிரை.

‘‘திருட்டுத் தேவடியா மவன், இவனை சும்மா விட மாட்டேண்டி" என்றாள் தீப்தி.

தீப்தியின் சித்தப்பா தமிழ்நாட்டில் டிஎஸ்பி; மாமா, புகழ் பெற்ற வக்கீல்.

# ஆதிரை – லக்ஸ்

பு ணர்ச்சியின்போது ஆதிரையின் தோழிகளைப் பேச்சுக்கு இழுத்த காலம் மாறி, அவர்களின் போட்டோக்களை எடுத்து வரச் சொன்னான். வழக்கம் போலவே ஆதிரை மறுக்க, குடித்து விட்டுப் புணரும்போது நைச்சியமாகப் பேசினான். ‘‘இது எல்லாமே கேம். ஃபாரீன்ல இது எல்லாம் சர்வ சாதாரணம். எம் மேல நம்பிக்கை இருக்கு இல்ல..? இதெல்லாம் செக்ஸை என்ஹேன்ஸ் பண்ணும். நம்ம ரிலேஷன்ஷிப் இன்னும் ஸ்டிராங்க மாறும்" என்றான். ‘‘நான் என்னா அவங்க கூட பழகவா முயற்சி செய்றேன்..? சும்மா போட்டோதாண்டீ..? ஃபன்னா இருக்கும்" என்று உசுப்பி விட்டான். அப்போதே, இருக்கும் புகைப்படங்களைக் காட்டச் சொன்னான்.

ஆதிரை போட்டோ கேலரியில் இருந்து ஒவ்வொன்றாக காட்டினாள். செல்ஃபி எடுத்துக்கொண்டது, குழுவாகச் செல்லும்போது எடுத்தவை, உணவு சாப்பிடும்போது எடுத்தவை என இருந்தன.

‘‘இதெல்லாம் நார்மல். வீட்ல ஃப்ரியா இருக்கும்போது, தூங்கும்போது, ப்ரைவசியா இருக்கும்போது எடுத்துட்டு வா’’ என்றான்.

ஆதிரையும் தீப்தியின் வீட்டில் ஜாலியாக அமர்ந்து பேசிக்கொண்டு இருக்கும் போது செல்ஃபி எடுக்க ஆரம்பித்தாள். தீப்தி, ‘‘ஏண்டி லூஸா..? இப்ப ஏண்டி எடுக்குற..?" என்றாள். ‘‘சும்மா ஒரு சேஞ்சிக்குத்தான்" என்றாள் ஆதிரை.

இப்படி எடுக்கையில் க்ளீவேஜ், தொடை போன்ற அம்சங்கள் தெரிவதால், லக்ஸுக்கு வசதியாக இருந்தது. உறவின்போது இந்த படங்களை வைத்துக்கொண்டு, அவள் பக்கத்தில் இருப்பது போலவும், அவளுடனும் பேசிக்கொண்டு செய்வது போலவும் செய்தான். ஆதிரையும் இதற்கு ஒத்துழைக்க ஆரம்பித்து இருந்தாள். இதைப்போல புதுப்புது போட்டோக்கள் எடுத்துக் கொண்டு போய் காட்டும்போது, அவன் அதிகமாக கொஞ்சுவதும் செல்லம் கொடுப்பதும் இழைவதுமாக இருந்ததால், அதிகப் புகைப்படம்

எடுக்கும் நிலைக்கு ஆளானாள் ஆதிரை. மற்ற தோழிகள் உடை மாற்றும் போது, குளித்து முடித்து வரும்போது என அவர்களுக்கே தெரியாமல் நிறைய புகைப்படங்கள் எடுத்தாள். இந்த வகையில் 'பிரபா மார்பகம்' ஒன்று மாட்டியது. அதை வைத்துக் கொண்டாடித் தீர்த்தான்.

ஏஞ்சலினைக் கிட்டத்தட்ட நிர்வாணப் புகைப்படம் ஒன்றை எடுத்தாள் ஆதிரை.

தீப்தியின் புகைப்படம் லக்ஸ் கேட்டதற்கு மட்டும் மறுத்து விட்டாள் ஆதிரை.

இதற்குப்பின் அடுத்த ஆட்டம் ஆரம்பித்தான். ஆதிரை வீட்டுக்குச் செல்கையில், இரவு போன் செய்து ‘‘அப்பா பக்கத்துல படுத்துகிட்டு, எனக்கு விடியோ கால் செய்" என்றான்.

‘‘நீ என்ன பைத்தியமா..?" என எவ்வளவோ மன்றாடியும் கேட்காததால், அப்பா அறைக்குள் நுழைந்தாள் ஆதிரை. அப்பா நன்கு உறங்கிக்கொண்டு இருந்தார். ரம் பாட்டிலில் மீதம் இருந்தது.

சத்தம் போடாமல் அப்பா பக்கத்தில் படுத்துக்கொண்டாள். வீடியோ கால் செய்தாள். வீடியோவில் அப்பாவும் தெரிய வேண்டும் எனச் சொல்லி அப்படி ஃப்ரேமை வைக்கச் சொன்னான்.

சைகையால் இப்போது மார்பைக் காட்டச் சொன்னான். பயந்து கொண்டே செய்தாள். அப்பா திரும்பி விடுகிறாரா, விழித்துக் கொள்கிறாரா என்ற பயத்தோடு பார்த்துக்கொண்டே செய்து கொண்டு இருந்தாள். அவன் அதை ரசித்துச் சுயஇன்பம் செய்து கொண்டிருந்தான்.

யோனியைக் காட்டு என்று தொடர்ந்து வற்புறுத்தியபோது, செய்யக்கூடாது என்றுதான் ஆதிரைக்குத் தோன்றும். ஆனால், மண்டைக்குள் ஆயிரம் குளவிகள் கொட்டுவதுபோல அவன் குரல் பல்கிப்பெருகி விடும். அவனும் தொடந்து மந்திரவாதிபோல பேசிக்கொண்டே இருப்பான். தன் நைட்டியை மேலேத் தூக்கி, அப்பாவைப் பார்த்து, பேண்டியைக் கீழிறக்கி, அப்பாவைப் பார்த்து, தனது யோனியை லக்ஸுக்கு போனில் காட்டி, உடனே மூடி விட்டு, அடுத்த நொடி அப்பாவைப் பார்த்தாள். உயிர் போய் உயிர் வந்தது; இதயம் வெடித்துச் சிதறி விடுவதுபோல மூச்சிறைத்தது; வியர்த்து ஊற்றியது; தள்ளாட்டமாக எழுந்துத் தன் அறைக்கு வந்தாள் ஆதிரை. தூக்கம்

வராததால், மொட்டை மாடிக்குச் சென்றாள். கீழே பார்த்தாள் குதிக்க வேண்டும்போல எண்ணம் எழுந்தது. அதைக் கட்டுப்படுத்தவும் முடியவில்லை. அங்கே இருந்து அகலவும் இயலவில்லை. ஐந்து நிமிடங்கள் போராட்டத்தோடு மண்டையைப் பிடித்துக்கொண்டு அங்கேயே நின்றிருந்தாள். மொட்டை மாடியில் மணல் கொட்டி வைத்திருந்தார்கள், வேலைக்காக. தண்ணீர் தொட்டியின் மீது ஏணியின் மூலம் ஏறினாள். தண்ணீர் தொட்டி மேலிருந்து மணலில் குதித்தாள். முட்டி வலித்தது; முகம் மண்ணில் புதைந்தது; வாயில் மணற்துகள்கள் நுழைந்தன. எச்சிலும் மணலும் கோழையுமாக வாயிலிருந்து ஊற்றியது. ஆதிரை அழுது கொண்டிருந்தாள்.

ஒரு நாய் தெருவில் இருந்து ஊளையிட ஆரம்பித்தது.

# ப்ரியாந்தினி – தீப்தி

ப் ரியாந்தினி ஜெயமோகனிடம் எதுவுமே கேட்கவில்லை. சாதாரணமாக எப்போதும்போல இருந்தாள். ஜெயமோகன் இல்லாதபோது அவனுடைய அறைக்குள் நுழைந்து மேலோட்டமாகப் பார்த்தாள். கண்ணில்பட்ட மற்ற பொருட்களை விட்டுவிட்டு, கிரடிட் கார்ட் ஸ்டேட்மெண்ட் கவர்களை எடுத்தாள். எதுவும் பிரிக்கப்படாமல் இருந்தது. ஒவ்வொன்றாகப் பிரித்து, வேகப்பார்வை ஓட்டினாள்.

ஒரு விமான டிக்கட்டுகள் புக்கிங்க் செய்யும் செயலிக்கு எழுபத்தியிரண்டாயிரம் ரூபாய் போயிருப்பது தெரிந்தது. மனதுக்குள் குறித்துக்கொண்டு வெளியேறினாள்.

ஜெயமோகனிடம், 'இரவு சீக்கிரம் வர முடியுமா' என எழுத்தில் வினவினாள். ‘வருகிறேன், என்ன விஷயம் என்று தெரிந்து கொள்ள முடியுமா' என எழுத்துக்களைக் கோர்த்தான் ஜெயமோகன்.

'குடித்து ரொம்ப நாட்கள் ஆகிறது. வேலை செம ஸ்டிரெஸ்ஸாக இருக்கிறது. நன்கு குடித்து விட்டு நீண்ட நேரம் தூங்க வேண்டும்' என்று எழுத்துகளைப் பறக்க விட்டாள்.

'வருகிறேன். மது என் கடமை, உணவு உன் கடமை' என பதில் அனுப்பிச் சிரிப்பானைப் பறக்க விட்டான் ஜெயமோகன்.

ஜெயமோகனுக்கும் தனக்கும் பிடித்த உணவுகளைத் தருவித்து ஹாட் பேக்கில் போட்டு வைத்தாள். ஜெயமோகன் வருவதற்கு முன்னமே குளித்து முடித்து, அரைப்பாவாடை அணிந்து கொண்டு, இடுப்பைப் பிடிக்கும் ஆண்கள் சட்டை அணிந்துகொண்டு, இரண்டு மேல் பட்டன்களை திறந்து விட்டு ஒரு மச்சத்தைக் கண் அடிக்க விட்டாள். இந்த உடை ஒரு வித்தியாசமான கலவையாக இருந்தது. வயதை வெகுவாகக் குறைத்து கான்வென்ட் பெண்ணின் கெட் அப் வந்திருந்தது.

ஜெயமோகன் வந்ததும் குளிக்க ஓடினான். பெரிய பால்கனி கொண்ட படுக்கையறைக்குச் சென்றார்கள். அது வெறும் படுக்கை அறை மட்டும் கிடையாது. ஸ்டுடியோ அபார்ட்மெண்ட் போல இருந்தது. பெரிய மஹாராஜா கட்டில்; இரண்டு ஜோடிகள் படுத்துத் தூங்கும் அளவுக்குப் பெரியதாக இருந்தது. த்ரீசம் எல்லாம் புகழ்பெற்று நடைமுறைக்கு வந்து கொண்டிருக்கும் காலத்தில் அதற்கென பிரத்யேகப் படுக்கைகள் இன்னும் தயாராகாமல் இருப்பது வருத்தத்திற்குரியதுதான். ஆனால் இந்தப் படுக்கை ஃபோர்சம்முக்குக் கூட ஈடு கொடுக்கக் கூடிய அளவில் இருந்தது.

நான்கு பேர் அமர்ந்து பேச சோஃபா, ஒருவர் அமர்ந்து வேலை செய்ய நாற்காலி, விளக்குடன் கூடிய மேசை, சின்னதாக ஒரு கிச்சன் மேடை; அதில் க்ரில்லர், டோஸ்டர், காஃபி மேக்கர், கோல்ட் ப்ரஸ்ட்டு ஜூஸ் மேக்கர், இண்டக்ஷன் ஸ்டவ் போன்றவை இருந்தன.

‘‘பால்கனியில் உட்காரலாமா..?" எனக் கேட்டு பால்கனிக்குச் சென்றாள் ப்ரியாந்தினி. பூந்தொட்டிக்கள், கொடிகள், அதில் பூக்கள் சூழ இருந்த பால்கனியில் அமர்ந்தார்கள். ஜெயமோகன் 'ப்ரின்ஸ் பாலிக்நாக்' என்ற கோனியாக் எடுத்து வந்திருந்தான். ப்ரியாந்தினிக்கு இந்த கோனியாக் ரொம்ப பிடிக்கும்.

பெரிதாக எதுவும் பேசாமல் குடிக்க ஆரம்பித்தார்கள். ஜெயமோகன் முதல் ரவுண்ட் முடிந்ததும் ப்ரியாந்தினியை இழுத்துத் தன் அருகில் அமர வைத்துக்கொண்டான். இரண்டாவது ரவுண்ட் முடிந்ததும் ‘‘இந்த டிரஸ்ல ரொம்ப குட்டியா தெரியிற" என்றான். அணைத்து ஒரு முத்தமிட்டான். மூன்றாவது ரவுண்ட் முடிந்ததும், உதட்டு முத்தம் நீண்ட நேரம் கொடுத்துக்கொண்டார்கள். ஜெயமோகன் அவளைச் சாய்த்து சட்டையை மேலே தூக்கி வயிற்றில் முத்தமிட்டு, அவளின் குட்டைப் பாவாடையுடன் சிநேகம் பாராட்டிப், பாவடைக்கு ஒரு ஹாய் சொல்லிவிட்டுக் கையை உள்ளே நுழைக்கும்போது,

‘‘இன்னொரு ரவுண்ட் ப்ளீஸ்’’ என்றாள் ப்ரியாந்தினி.

எப்போது குடித்தாலும், ரவுண்ட் என்றால் ப்ரியாந்தினிக்கு ஸ்மால், ஜெயமோகனுக்கு லார்ஜ்.

ஜெயமோகன் ஒரு லார்ஜ் ஊற்றிக்கொண்டு, வேகமாகக் குடித்தான். ப்ரியாந்தினி அந்த ஸ்மாலை முடிக்கும் முன்பே, அவளைத் தூக்கிக் கொண்டு அறைக்குள் சென்றான். அந்த மஹாராஜா கட்டிலில் அவளைக் கிடத்தி, அந்தப் பாவாடையை இழுத்து எடுத்தான். பட்டுத் துணியால் நெய்த பேண்ட்டி போட்டிருந்தாள் ப்ரியாந்தினி. அது, அழகாக நாடாவால் முடிச்சிடப்பட்டு இருந்தது.

“ஏய் என்ன இது சர்ப்ரைஸ், எப்ப வாங்கின..?” என்று கேட்டு, அதற்கு முத்தமிட்டுக்கொண்டே இருந்தான். அந்த நாடாவை அவிழ்க்க மனம் வரவேயில்லை. சட்டையை கழட்டினால், அங்கு பட்டுத் துணியால் நெய்த கச்சை. இரண்டும் ஒரே அரக்கு வண்ணம். மல்லாக்கப் படுத்திருந்த ப்ரியாந்தினி தலையை இடப்புறம் திருப்பி இருந்தாள்; கால்களை வலப்புறம் திருப்பி இருந்தாள்; ஒரு விளம்பரத்தில் நடித்துக்கொண்டிருப்பவள் போலப் படுத்துக்கிடந்தாள். உடலில் உருவான லேசான வியர்வை பட்டு மிளிர்ந்த அந்த பட்டுக் கச்சைகள் இச்சையை அதிகரித்தன.

மெல்ல மெல்ல வேகத்தை அதிகரித்துப் புணர்ந்து முடித்தான். அணைப்பையும் முத்தத்தையும் அவ்வப்போது தானாகக் கிளர்ந்து வந்த அன்பையும் புணர்ச்சியின்போது அவனுக்கு அளித்தாள் ப்ரியாந்தினி.

புணர்ந்து முடித்ததும் உடனே எழுந்து பால்கனிக்குப் போய் சிகரட் பற்ற வைத்துக்கொண்டான் ஜெயமோகன். குளியலறைக்குச் சென்றாள் ப்ரியாந்தினி.

சிகரட் அடித்து முடித்து ஜெயமோகன் நின்றிருக்க அவனுக்கு ஒரு லார்ஜ் ஊற்றினாள். தான் தன்னுடைய பழைய ஸ்மாலையே குடித்தாள்.

ரவுண்ட் முடிந்ததும் இருவரும் ஒரு சிகரட் பிடித்தனர்.

அடுத்த ரவுண்ட், அடுத்த சிகரட்.

ஜெயமோகன் போதுமென்று சொன்னாலும் “ஒருநாள்தானே, ஸ்டிரெஸ்ஸா இருக்கு" என்று இன்னொரு ரவுண்ட் போட்டாள் ப்ரியாந்தினி.

இருவரும் போய் படுக்கையில் வீழ்ந்தார்கள். இருபது நிமிடத்தில் ஜெயமோகன் மெல்லிய குறட்டை ஒலியை எழுப்ப ஆரம்பித்ததும் அவனுக்கு நன்கு போர்த்தி விட்டு ஏசியை ஒரு பாயிண்ட் குறைத்தாள் ப்ரியாந்தினி.

ஜெயமோகனின் செல்போனை எடுத்து ஊசியால் குத்தி அவனுடைய சிம் கார்டை எடுத்தாள். அதை இன்னொரு போனில் போட்டு, அந்த விமான டிக்கட் எடுக்கும் செயலியை நிறுவினாள். ஓடிபி போன்ற சாங்கியங்கள் முடிந்ததும் ஆப் ரெடியானது. டிக்கட் எடுத்த வரலாறை நோண்டிப் பார்த்து மாலத்தீவு பயணச்சீட்டை எடுத்துப் பார்த்தாள்.

தீப்திகா, வயது, இமெயில், மொபைல் நம்பர் என அனைத்தையும் அது கண்களில் கொட்டியது.

சிம் கார்டை எடுத்து அவனுடைய போனிலேயே போட்டு விட்டு, அவனைக் கட்டிக்கொண்டு, அவனது தலையைத் தடவி விட்டபடியே தூங்கிப்போனாள்.

# பொற்செல்வி

மிதிவண்டியில் இருந்து கைனடிக் ஹோண்டாவுக்கு மாறினாள் பொற்செல்வி. ஆனால் ஓட்டுநர் உரிமம் இல்லாததால், தான் இருக்கும் தெரு, விளையாட்டு மைதானம் இவற்றில் மட்டுமே ஓட்டிப் பார்ப்பாள். இந்தப் பசங்களுக்கு எப்படித்தான் வயதுக்கு வருவது மூக்கில் வியர்க்குமோ தெரியாது, உடனே பின்னால் சுற்ற ஆரம்பிப்பார்கள்.

பொற்செல்வியின் பின்னால் பலர் சுற்ற ஆரம்பித்தார்கள். தெருவில் நடந்து செல்லும்போது விசில் அடிப்பது, பொற்செல்வி உடனே நின்று விசில் அடித்தவனை அருகில் அழைப்பாள், அவன் ஓடி விடுவான். ஒருவன் மட்டும் அழைத்ததும் பயந்து கொண்டே அருகில் வந்தான்.

‘‘திரும்ப அடி."

தயங்கினான்.

‘‘அடிடா."

விசில் அடித்தான். ‘‘இன்னொரு தடவை அடி."

அடித்தான் .

‘‘இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை, இன்னொரு தடவை..."

அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான், அடித்தான்...

‘‘போதும் நிறுத்து. ஒரு மாசத்துக்கு அடிச்சிட்ட... இன்னும் ஒரு மாசத்துக்கு அடிக்கக் கூடாது, என்னா..? அடுத்த மாசம் அடிச்சிக்கலாம், போய்ட்டு வா" என்றாள்.

ஃபிளையிங்க் கிஸ் குடுப்பார்கள் சிலர், "இங்க வேணாம், வீட்டுக்கு வா, நல்லா குடுக்கலாம்" என அழைப்பாள்; ஓடி விடுவார்கள்.

நடந்து சென்று கொண்டிருக்கும்போது மிதிவண்டியில் பின்னாலேயே வந்த ஒருவன் பொற்செல்வியின் பின்புறத்தில் ஒரு தட்டு தட்டிவிட்டு முந்திச் சென்றான். தனது செருப்பைக் கழட்டி, அவனது தலையைக் குறி வைத்து எறிந்தாள். ஆனால் அது படவில்லை. உடனே துரத்திக்கொண்டு ஓடினாள். அவன் வேகமாக ஓட்டிக்கொண்டு சென்றதால், பிடிக்க முடியவில்லை.

பஜாஜ் சேட்டக் ஓட்டிவந்த ஒருவரை நிறுத்தி, விஷயத்தைச் சொல்லித் துரத்தச் சொன்னாள். அருகிலிருந்த விறகுக் கடையில் இருந்த மெல்லியதான ஒரு சவுக்குக் கட்டையை எடுத்துக்கொண்டு அவர் பின்னால் அமர்ந்தாள். அவன் தூரத்தில் புள்ளியாக மறைய இருந்த தருணத்தில் துரத்த ஆரம்பித்தார்கள். சின்னப்புள்ளி, கொஞ்சம் கொஞ்சமாக பெரிய புள்ளி ஆகி, அதற்குக் கைகால் முளைத்து, தலை பெரிதானதும், பின்னந்தலையிலேயே சவுக்கால் ஒரு போடு.

கீழே விழுந்தான்; பலரும் கூடி விஷயத்தைக் கேட்டு அவனை அடிக்க ஆரம்பிக்க, போலீஸில் ஒப்படைக்க வேண்டும் என்றாள். போலீஸில் பொற்செல்வி எதிரிலேயே, அவனை நாலு அடி அடித்து விட்டு, "நீ போம்மா, நாங்க பாத்துக்கறோம்" என்றனர்.

"நீங்க என்கிட்ட கம்ப்ளெயிண்டே கேக்கலையே" என்று கேட்ட பொற்செல்வி, எழுதிக்கொடுத்து, "எஃப் ஐ ஆர் போடுங்க சார்" என்றாள். இதை தன் தலைமை ஆசிரியரிடம் சொல்லி, ஏ இ ஓ, டி இ ஓ வரை கொண்டு செல்லப் போவதாகச் சொன்னாள். "ஸ்கூல் பசங்க நிம்மதியா, பாதுகாப்பா ஸ்கூலுக்கு நடந்து போகணுமா வேணாமா சார்" என்று கேட்டாள்.

அவன் உள்ளே தூக்கி வைக்கப்பட்டான்.

பயந்து நடுங்கிக் கொடுக்கப்பட்ட காதல் கடிதங்களை அவர்களிடமே திருப்பிக்கொடுத்து, ‘‘சரியா ஆறு வருஷம் கழிச்சி என்னைப் பாத்து குடு; அப்ப மூடு வந்தா லவ் பண்றேன். இப்ப படிக்கணும், அதுவும் இல்லாம, நம்மூர்ல லவ் பண்ண இடமும் இல்லை" என்றாள்.

கன்னத்தைக் கிள்ளி பாராட்டும் ஆசிரியர்களிடம், ‘‘நான் சின்ன குழந்தை இல்லை சார். அந்த டீச்சரை கன்னத்தை கிள்ளினா செருப்பால அடிப்பாங்க இல்லையா..? எங்க அம்மா குட் டச் பேட் டச் சொல்லிக் குடுத்து இருக்காங்க எனக்கு. என்னைப் பொறுத்தவரை, எல்லா டச்சுமே பேட் டச் தான்" என்று சொல்லி மிரள வைப்பாள்.

தன் தோழியைப் பார்த்து ஆபாச செய்கை செய்து கொண்டு, பின்னாலேயே இரண்டு பேர் செல்வதைப் பார்த்தாள்.

‘‘டேய், ஒழுங்கா போயிடுங்க. இல்லன்னா போலீஸ்ல பிடிச்சி குடுத்துடுவேன்’’ என்று மிரட்டினாள் பொற்செல்வி. ‘‘எங்க புடிச்சி குடுப்ப..? எப்பிடி புடிச்சி குடுப்ப..? இதைப்புடிச்சி குடுப்பியா..?" என லுங்கியைத் தூக்கி குஞ்சைக் காட்டினான் ஒருவன் .

அந்த ‘குஞ்சி' எனச் சொல்லப்படும் வஸ்துவைக் கட்டை விரல், ஆள் காட்டி விரல் மற்றும் நடுவிரலைப் பயன்படுத்திப் பற்றி, கோவைப்பழத்தை நசுக்குவதைப் போல நசுக்கி, அவரைக் கொடியில் இருந்து அவரைக்காய் பறிப்பது போல இழுத்தாள். நசுக்கிக்கொண்டே, விட்டு விட்டு சொடக்கு போடுவதுபோல இழுக்க, அவன் ‘‘ஐயோ, யம்மா’ என்று அலறினான். இன்னொருவன் உதவிக்கு வந்தான்; கற்றுக்கொண்ட தற்காப்புக் கலையின் பயனை உடனே உணர்ந்தாள்; இரண்டே நிமிடங்களில், நேர்த்தியான அடிகள் மற்றும் உதைகள் மூலம் மண்டியிட்டு கீழே விழுந்தான்.

பொற்செல்வி, ஏழ்மையான சின்னக் குழந்தைகளுக்குக் கணக்கு மற்றும் ஆங்கிலம் சொல்லித்தருவாள். சனி ஞாயிறுகளில் மட்டும். இதற்காக அவள் தனியாக தயாரித்துக்கொள்வாள்.

பொற்செல்வியின் கவனத்துக்கு வராமலேயே அமிர்த கடேஸ் பொற்செல்வியைப் பின் தொடர்ந்து, பொற்செல்வியின் தெருப் பையன்களால் அடித்துத் துரத்தப்பட்டான். நான்கைந்து பையன்கள் சேர்ந்து அமிர்துவைப்

புரட்டி எடுத்துவிட்டனர். அமிர்துவும் திருப்பிக் கொடுத்தான், ஆனால் நான்கு பேரை எதிர்த்து வெல்ல முடியவில்லை. இந்தச் சம்பவம் பொற்செல்வியின் கவனத்திற்கே வரவில்லை. இது மட்டுமல்ல, இதைப்போல பொற்செல்விக்கே தெரியாமல் நிறைய பையன்கள் சண்டியிட்டுக்கொண்டு இருந்தார்கள். மண்டை உடைத்துக்கொண்டார்கள்.

பள்ளியில் நல்ல மதிப்பெண்கள் எடுத்துத் தேர்ந்த பொற்செல்வி, மருத்துவப் படிப்பு சேர்ந்தாள்.

# பொண்டாட்டி குறுங்கதைகள் –

# மசாஜ்

தீப்தியையும் ஷரியாவையும் பப்பில் இறக்கி விட்டு, அவர்கள் பேச்சால் டென்ஷன் ஆகி சிகரட் அடித்து புஸ் புஸ் என்று புகை விட்டு, தன் மனைவி செல்லம்மாளை திட்டிய டிரைவர் வேலு வெறும் டிரைவர் மட்டும் அல்ல; ஆறு கார்கள் ஓடுகின்றன. ஆளைப் போட்டு ஓட்டுகிறான். செல்லம்மா வீட்டில் சொத்து பிரிக்கும்போது வந்த சொத்து, நகைகள் மற்றும் பணத்தை வைத்து கார்களை அதிகப்படுத்தினான்.

ஐம்பது வயதைத் தாண்டிய தன் வயதையொத்த தோழர் கோஷ்டியு டன் ஒரு பாரில் பேசிக்கொண்டு இருந்தபோது, தாய்லாந்து போய் மஜா பண்ணலாம் என்று முடிவானது.

சுற்றுலா போவதாகச் சொல்லிவிட்டுக் கிளம்பி விட்டான்.

செல்லம்மா சிறிய உணவகம் நடத்தி வருகிறாள். உட்கார்ந்து கொண்டு சாப்பிடும் வசதியுடையது. பலர் நின்று கொண்டும் சாப்பிடுவார்கள். அதில் வழக்கமாகச் சாப்பிடும் ஒரு மெடிக்கல் ரெப் செல்லமாவுக்கு பழக்கம்; பேசிப் பேசித்தான் பழக்கம்; பேச்சு மட்டும்தான் பழக்கம்.

ஏதோ பேச்சின்போது, வேலு தாய்லாந்து போயிருப்பதை அந்த மெடிக்கல் ரெப்பிடம் சொன்னாள் செல்லம்மா.

"நீங்க போலையாங்க..?" என்று அவன் கேட்ட போது...

"அங்க, பூ போட்டு தொட்டில படுக்க வச்சி வெந்நீர்க் குளியல் இருக்கும். எண்ணெய் மசாஜ் இருக்கும். சின்னப் பொண்ணுங்க செஞ்சி வுடுவாங்க. அதுக்குத்தான் போறாங்க. நாம, தெரிஞ்சும் தெரியாத மாதிரி கண்டுக்காம உட்டுடணும். அவளுங்க கூட உழுந்து பொரண்டுட்டு கூட வரலாம். எனக்கு இதுலல்லாம் பெருசா வருத்தம் கெடையாது தம்பி" என்றாள்.

முதன்முறையாக அந்த மெடிக்கல் ரெப்பை இப்போதுதான் 'தம்பி' என்றாள் செல்லம்மா.

# ஆதிரை

ஆ திரை லக்ஸுடன் உடல்ரீதியான உறவு தொடர்ந்து இருந்த காலத்தில், குழந்தை உருவாவதைத் தடுக்க மாத்திரை போட்டுக் கொள்வாள். உறவு குறைந்து எப்போதாவது என்று ஆனவுடன் மாத்திரை போடுவதை நிறுத்தினாள். மாத்திரை போடாத காலத்தில் லக்ஸ் உச்சத்தின்போது குறி வாந்தியை வெளியில் எடுத்து விடுவது வழக்கம். வெளியே இழுக்க மறந்தானா அல்லது இழுத்தும் சென்றதா..? அல்லது மயக்கத்தில் தவறு நடந்ததா என்று சரிவர இருவருக்கும் தெரியவில்லை. ஆதிரை கர்ப்பமானாள்.

வீட்டில் லக்ஸ் ஜாதியைச் சேர்ந்த ஒரு பெண்ணைப் பார்த்திருப்ப தாகவும், அவளைத் திருமணம் செய்தால்தான் பல கோடி சொத்தும் வியாபாரத்தில் பங்கும் தன் வீட்டில் கொடுப்பார்கள். இல்லையென்றால் எதுவும் கொடுக்க மாட்டார்கள் என்று ஆரம்பித்தான்.

இது விஷயமாக இருவருக்குள்ளும் பெரும் சண்டை நடந்து வந்தது.

சும்மா விளையாட்டுக்கு அவளை கல்யாணம் செய்து கொள்வ தாகவும், சொத்தெல்லாம் வந்த பின்பு அவளைத் துரத்திவிட்டு ஆதிரையுடன் வாழ்வதாகவும் சொன்னான். இந்த ஏற்பாட்டுக்கு ஆதிரை ஒத்துக்கொள்ளவேயில்லை. அதனால், ஆதிரை நம்பும் பொருட்டு, ஒரு கோவிலுக்கு அழைத்துச் சென்று ஆதிரைக்குத் தாலி கட்டினான். செக்ஸ் டார்ச்சர்களைக் குறைத்துக்கொண்டான். ஆனால், கர்ப்பத்தை கலைத்து விடச் சொன்னான்; கலைக்க ஆதிரை மறுத்து விட்டாள்.

லக்ஸுக்கு நிச்சயதார்த்தம் முடிந்தது. அங்கே இருந்து ஆதிரையுடன் பேசிக்கொண்டே இருந்தான். அன்று இரவு செக்ஸ் வீடியோவுக்கு அழைத்தான். ஆதிரை ஆர்வமுடன் ஒத்துழைத்தாள். இருவரும் கொஞ்சிக்கொண்டார்கள்.

நிச்சயதார்த்தம் முடிந்த பின் சந்தித்த ஒரு நாளில்...

நீண்ட நேர மது மற்றும் கலவிக்குப் பின் லக்ஸ் தூங்குகையில், ஏதோ சந்தேகம் வந்த ஆதிரை அவனுடைய போனை எடுத்து நோண்டினாள். அதை அவனுடைய முகத்துக்கு நேராக காட்டி அன் லாக் செய்தாள்.

வந்தனா என்ற பெண்ணுடன் தொடர்ந்து சாட் செய்து கொண்டி ருந்ததை கண்டாள். அவள்தான் நிச்சயிக்கப்பட்ட பெண். எக்கச்சக்கமாகக் கொஞ்சிக் குலாவிக்கொண்டு இருந்ததைப் பார்த்தாள். ஹனிமூன் போகும் இடம் முதல் எத்தனை குழந்தை, குழந்தைகளுக்கு பெயர்கள் வரை விவாதித்து இருந்தார்கள்.

இருவரும் முத்தம் கொடுத்துக்கொள்ளும் போட்டோ மற்றும் நீண்ட நேர முத்த வீடியோ ஆகியவற்றைப் பார்த்தாள். மாடல்போல முலைகளை ஸ்டைலாக காட்டிக்கொண்டு இருக்கும் ஒரு போட்டோவைப் பார்த்தாள் ஆதிரை.

மறுநாள் லக்ஸ் எழுந்ததும் அவன் கட்டிய தாலியை அறுத்தெறிந்து அவன் மேல் வீசினாள். ‘‘இனி இந்த வீட்டுப்பக்கமே வரக்கூடாது" எனக் கத்தினாள். அவன் சமாதானப்படுத்த ஆரம்பிக்கும்போது, அவன் போனைத் தூக்கி தரையில் எறிந்து உடைத்தாள். அவன் மீண்டும் பேச ஆரம்பிக்க, ‘‘இப்ப போறியா இல்லையா..?" என கத்திக்கொண்டே, கிச்சன் கத்தியை எடுத்துத் தன் வயிற்றில் வைத்துக்கொண்டாள், ‘‘குத்திக்குவேன். நீதான் காரணம்னு 100க்கு போன் போட்டு சொல்லிட்டு செத்துடுவேன்" என்றாள்.

அப்போதும் அவன் நெருங்கவே முயன்றான்.

‘‘தோபாரு, இதான் வந்தனா நம்பர். வீடியோல இப்ப கூப்பிடட்டுமா..?" என்றாள்.

லக்ஸ் பின்வாங்கினான்.

‘‘இனிமே இந்த வீட்டுப்பக்கம் வந்த, வந்தனாவை கூப்பிடுவேன். நம்ம கதையை சொல்லுவேன், நம்ம போட்டோ எல்லாம் அனுப்பிடுவேன். த்ரீசம் வரியாடீன்னு கேப்பேன்" என்று கத்தினாள்.

லக்ஸ் வீட்டை விட்டு அகன்றான்.

ஆதிரைக்குப் பைத்தியம் தலைக்கேறியது. கையிலிருந்த கத்தியால் தொடர்ந்து மூன்று மணி நேரம் தரையில் குத்திக்கொண்டே இருந்தாள்.

# ப்ரியாந்தினி – தீப்தி

‘‘யெஸ், தீப்தி ஸ்பீக்கிங்.‘‘

‘‘ஹாய், நான் ப்ரியாந்தினி பேசறேன், எப்படி இருக்கீங்க..?’’

‘‘ஹ்ம்... ஆன்ஹ், நான் நல்லா இருக்கேன், நீங்க எப்படி இருக்கீங்க..?’’

‘‘ஆம் ஃபைன். தீப்தி, நீங்க என்னிக்கி ஃப்ரீயா இருப்பீங்க..? நாம ஒரு தடவை மீட் பண்ணலாமா..?’’

‘‘ம்ம்... உங்களுக்கு எப்பன்னு சொல்லுங்க, நான் ஃப்ரீ பண்ணிக்கிறேன்."

‘‘இன்னிக்கி ஈவ்னிங் இல்லன்னா நைட் டின்னர் போற மாதிரி, ஓக்கேவா..?"

‘‘ஓக்கே."

‘‘நான் மேப் லொக்கேஷன் அனுப்புறேன், என்னோட ஹாஸ்பிடலுக்கு வந்துடறீங்களா..? அங்கேர்ந்து போயிடலாம்."

‘‘ஓக்கேங்க."

தீப்திகா ஜெயமோகனை மன்னிக்கத் தயாராகவே இல்லை. தான் முழுமையாக ஏமாற்றப் பட்டோம் என்ற எண்ணமே அவளை உறுத்திக்கொண்டு இருந்தது. ஆதிரை, குழந்தையைக் கலைக்கச் சொன்னதற்கு மறுத்துவிட்டிருந்தாள்.

‘‘நான் பெத்து நானே வளத்துப்பேன், ஆனா அவனை ரேப் கேசில் தூக்கி உள்ளே போடுவேன்" என்று சொல்லியிருந்தாள். இப்போது, ப்ரியாந்தினி அழைத்ததும் அவளைப் பார்த்து பேசினால் இன்னும் கொஞ்சம் தகவல் கிடைக்கும், தெளிவு கிடைக்கும் என்பதால் செல்வதற்கு ஒத்துக்கொண்டாள்.

‘‘வாங்க..." என்று கைப்பிடித்து தன் அறைக்கு அழைத்துச் சென்றாள் ப்ரியாந்தினி. பிரம்மாண்டமான அலுவலக அறை. ‘‘ஹாஸ்பிடலை சுத்திக் காட்டவா..?" என்று கேட்டதற்கு, ‘‘அதெல்லாம் வேண்டாம்" என்றாள் தீப்தி.

அடிப்படையாகச் சில விஷயங்களைப் பேசிய பிறகு, சுய அறிமுகத் துக்குப் பிறகு, விஷயத்துக்கு வந்தாள் ப்ரியாந்தினி. முகத்தில் எந்த சலனமும் கோபமும் இல்லாமல், தெளிவாகப் பேச ஆரம்பித்தாள்.

‘‘ஜெயமோகனை எப்படி தெரியும்..?’’

‘‘ஒரு மீட்டிங்ல பாத்தேன், அப்புறம் பப்ல பாத்துகிட்டோம்."

‘‘அப்புறம்..?’’

‘‘அப்புறம்... அப்படியே பழகி, கோவா போனோம்.’’

‘‘ஓக்கே, அப்புறம்..?’’

‘‘அப்புறம் மாலத்தீவு போனோம், அப்புறம் செட் ஆயிடிச்சி, சோ லிவ் இன் ஆரம்பிச்சோம்."

‘‘ஜெயமோகன், கல்யாணம் ஆகி குழந்தைங்க இருப்பதை மறைச்சாரா..?’’

‘‘இல்ல, மறைக்கல..!’’

‘‘சாரி டு ஆஸ்க் திஸ், தென் எப்படி லிவ் இன் போன..? ஏற்கனவே நானும் குழந்தைங்களும் இருக்கோம்."

‘‘இல்ல, அவர் உங்களை டிவேர்ஸ் பண்ணப் போறதா சொன்னார்.’’

‘‘ஆரம்பத்துலயே சொல்லிட்டாரா..?"

‘‘இல்ல, கொஞ்ச நாள் பழகினதுக்கு அப்புறம்தான்."

‘‘சோ, அப்ப அன்கண்டிஷனலாதான் பழக ஆரம்பிச்சீங்க இல்லையா..?"

‘‘ம்ம்... ஆமாம்."

‘‘ஆரம்பத்துல ஏதும் கமிட்மெண்ட் தரலை இல்லியா..?’’

‘‘ஆமாம்."

‘‘தீப்திகா, நான் ஒரு பொண்ணு. உன் நல்லதுக்கு தான் சொல்றேன். உன்னை என்னோட ஃபிரண்டா, தங்கச்சியா நினைச்சி சொல்றேன். கேப்பியா..?’’

‘‘சொல்லுங்க."

‘‘ஆம்பளைங்களுக்கு சபலம் தட்டும், பொம்பளைங்களுக்கும்தான். ஒரு லிமிட்டோட யாருக்கும் தெரியாம ரெண்டொரு தடவை வச்சிகிட்டா பெரிய பிரச்னை இல்லை. லாங்க் டேர்ம் ரிலேஷன்ஷிப்புக்குள்ள போகும்போது கவனம் தேவை. நீ என்கிட்ட ஒரு தடவை கேட்டிருந்தா நான் சொல்லி இருப்பேன் இல்லையா..? ஆனா நீ கேக்கலை. அதுவும் எனக்குப் புரியிது. ஏன்னா, உன் வயசு; அந்த மயக்கம் எதையும் யோசிக்க விடாது. யோசிக்கவும் பிடிக்காது. ஜெயமோகனுக்கும் அப்படித்தான். உன்னை மிஸ் பண்ணாம ஹோல்ட் பண்றதுக்கு பொய் சொல்லி இருக்காரு. நான் யாரையும் குறை சொல்லல. ஆனா, இனிமே யாருக்கும் சிக்கல் இல்லாம இருக்கறதைப் பத்தி யோசிக்கணும் இல்லியா..?"

தீப்தி அமைதியாக இருக்க, ப்ரியாந்தினி தொடர்ந்தாள்.

‘‘உனக்கும் ஜெயமோகனுக்கும் பதினெட்டு வயசு வித்தியாசம். ப்ராக்டிக்கலா அது சரி வராது. இப்ப கொஞ்ச நாளைக்கு அது ஓக்கேவா இருக்கலாம். அப்புறம் கொஞ்ச நாளில் உனக்கு ஜெயமோகனைப் பாத்தாலே வெறுப்பும் கோபமும்தான் வரும். வாழ்க்கையே நரகமாயிடும்.’’

‘‘ம்ம், புரியிது.’’

‘‘ஹீ லவ்ஸ் மீ வெரி மச். அது எனக்கு நல்லாத் தெரியும். ஏதோ ஒரு கேப், ஏதோ ஒரு லோன்லீநெஸ், இட் ஈஸ் மை மிஸ்டேக். வீ ஆர் சோல் மேட் தீப்தி. காதல் காமம் எல்லாத்தையும் தாண்டி, புருஷன் பொண்டாட்டின்னு ஒரு பிணைப்பு, அது எங்களுக்குள்ள இருக்கு. உனக்கும் இதையெல்லாம் தாண்டி ஒரு சோல் மேட் கிடைப்பான். இதை நான் உன்னை மறக்கச் சொல்லலை, இதை ஒரு குட் மெமரியா எடுத்துகிட்டு மூவ் ஆன் ஆகச் சொல்றேன்."

‘‘உங்க பாயிண்ட் ரொம்ப கரக்ட், நான் கொஞ்சம் அவசரப் பட்டுட்டேன். ஆக்சுவலி, நான் ரொம்ப மெச்சூர்ட். ஆனா, இவர் விஷயத்துல ஏதோ ஒரு மயக்கத்துல சறுக்கிட்டேன்."

‘‘இட்ஸ் ஓக்கே, ஆம் யூர் குட் ஃபிரண்ட், கொஞ்ச நாள் நீ வேலையை மாத்திகிட்டு வேற ஊருக்கு போயிட்டா எல்லாம் சரியாயிடும். நானும் ஜெயமோகனை உன் வழிக்கு வராம பாத்துக்கறேன்.’’

‘‘அப்புறம், நீங்க ஹானஸ்டா இருக்குறதால நானும் ஒண்ணு சொல்றேன்; நான் கர்ப்பமா இருக்கேன்.’’

‘‘எத்தனை மாசம்?’’

‘‘ரெண்டரை மாசம்.’’

‘‘தட்ஸ் நாட் எ ப்ராப்ளம், நானே கலைச்சிடறேன்.’’

‘‘இல்ல, நானே பெத்து, நானே வளத்துக்கலாம்னு பாக்கறேன்.’’

சிரித்தாள் ப்ரியாந்தினி.

‘‘ஹேய் தீப்தி, கமான், தனியா குழந்தை பெத்துக்கறது, அதை வளர்க்கறதெல்லாம் ரொம்ப கஷ்டம். அதுவும் சிங்கிள் பேரண்ட் சைல்ட், வெரி டிஃபிகல்ட். உங்க வீட்லயும், சொசைட்டிலயும் எந்த ஹெல்பும் கெடைக்காது. ஒரு கட்டத்துல, நீயே அந்தக் குழந்தையை கழுத்தை நெறிச்சி கொல்லலாம்னு பாப்ப..!"

தீப்தி அமைதியாக இருந்தாள்.

‘‘குழந்தை பொறந்தா முதல்ல அழகு போயிடும். உடம்புல வலு குறைஞ்சிடும். அதுவே பெரிய டிப்ரஷன் பொண்ணுங்களுக்கு. முதல்ல நமக்கு நாம முக்கியம். நம்ம அழகு, ஆரோக்கியம், கான்ஃபிடண்ட் முக்கியம். நாம எமோஷனலி, எக்கனாமிக்கலி, செட்டில் ஆனதுக்கு அப்புறம் குழந்தை பெத்துக்கறதைப் பத்தி யோசிக்கலாம். அதுவுமில்லாம, இப்ப இருக்குற கால கட்டத்துல குழந்தைங்க பொண்ணுங்களுக்கு ஒரு பேர்டன்தான். கரியர், எஞ்சாய்மெண்ட், முன்னேற்றம் எல்லாமே குழந்தை காவு வாங்கிடும். சரி, இந்தியாவுல குழந்தைங்களுக்கா பஞ்சம்? ஏன் நாம வேற வத வதன்னு பெத்துப் போட்டுகிட்டு...’’

தீப்தி யோசித்தாள்.

‘‘உடனே முடிவெடுக்கச் சொல்லலை. யோசிச்சி சொல்லு" என்றாள் ப்ரியாந்தினி.

‘‘ஒரு உயிரைக் கொல்லணுமா..? அது என்ன தப்பு பண்ணிச்சி..? அதுவா கேட்டிச்சி, நாமதானே உருவாக்கினோம்..!"

‘‘யேய் தீப்தி, நீ என்ன முட்டாளா..? சாரி, ஒரு உரிமைல சொல்லிட்டேன். உயிர்னா என்னான்னு தெரியுமா..? எந்தக் குழந்தையும் இந்த பூமியில பொறந்ததுக்கு அப்புறம்தான் அது ஒரு உயிர். நீ குழந்தையை உருவாக்கலை, அது உருவாக ஒரு வாய்ப்பு ஏற்படுத்தி குடுக்குற. குழந்தை உருவாவது ஒரு ப்ராபப்பிளிட்டி. அது இந்த பூமியில் பிறக்கும் வரை அது உன்னோட ஒரு பார்ட், அவ்வளவுதான். அதுவும் முழுக்க வளராத ஒரு பார்ட். ஒரு கட்டி மாதிரின்னு வச்சிக்கோயேன். இப்ப அதைக் கலைச்சா, அதுக்கு ஒண்ணும் தெரியாது, அதுக்கு வலிக்காது. யாருக்கு வலிக்கும் சொல்லு."

‘‘எனக்குத்தான் வலிக்கும்."

‘‘கரக்ட், உனக்குத்தான் வலிக்கும். நீ உன்னைத்தான் துன்பப் படுத்திக்கிற, டோண்ட் வொர்ரி, நீ எந்த தப்பும் பண்ணலை" என்றாள் ப்ரியாந்தினி.

அந்த வார இறுதியில் தீப்திக்கு குழந்தையை கலைத்துவிட்டு, இரண்டு நாட்கள் மருத்துவமனையில் வைத்துப் பார்த்துக்கொண்டாள் ப்ரியாந்தினி.

‘‘ஹாஸ்பிடல்ல நீ இருந்திருக்க வேண்டாம், இருந்தாலும் உன் கூட ரெண்டு நாள் இருக்கணும்னு தோணிச்சி. கொஞ்சம் உடம்பைத் தேத்தி அனுப்பலாம்னு பாத்தேன்’’ என்று சொல்லியபடி கட்டிப்பிடித்து தீப்தியை வழியனுப்பி வைத்தாள் ப்ரியாந்தினி.

ப்ரியாந்தினி கடைசியாகச் சொன்ன வாக்கியம், ‘‘எப்ப, எந்த ஹெல்ப் வேணும்னாலும் என்னைக் கேளு" என்றாள். அன்றிரவு ஜெயமோகனிடம், ‘‘ஐ நீட் எ ப்ரேக், மாலத்தீவுக்கு ஒரு ஹாலிடே ஏற்பாடு பண்ணுடா" என்றாள்.

# வந்தனா

வந்தனாவுக்கு ஒரு உயிர்க்காதலன் இருந்தான். இவளும் அவனுக்கு உயிர்க் காதலியாக இருந்தாள். வீட்டில் லக்ஸை மாப்பிள்ளை பார்த்ததும் ஓக்கே சொல்லி விட்டாள். ஆனால் உயிர்க்காதலனிடம், ‘‘வீட்ல ரொம்ப பிரஷர், தற்கொலை பண்ணிப்பேன்னு சொல்றாங்க, என்னால எதுவும் செய்ய முடியலைடா" என்று சொல்லி இருந்தாள்.

ஒரே நேரத்தில் லக்ஸுடன் 'கிளுகிளு சாட்டும்' உகா—வுடன், அதான் உயிர்க்காதலனுடன் 'சோக சாட்டும்' செய்து வந்தாள்.

உகா கொஞ்சம் புத்திசாலி; அவனுடைய கல்லூரித் தொடர்புகள் மூலம் லக்ஸின் கடந்த காலத்தைக் கண்டுபிடித்து, அந்தக் கடந்த காலத்தில் உலவிக்கொண்டிருந்த ஆதிரையைப் பிடித்தான்.

‘‘அக்கா, வந்தனாவை லக்ஸுக்கு நிச்சயம் பண்ணி இருக்காங்க, நீங்க லக்ஸை லவ் பண்றீங்கன்னு தெரியும். நீங்க எப்டியாவது லக்ஸை கூட்டிட்டு ஓடிடுங்க, நான் வந்தனாவைக் கூட்டிட்டு ஓடிடறேன்" என்றான்.

ஆதிரைக்கு சிரிப்பு வந்தாலும், ‘‘எனக்கும் லக்ஸுக்கும் எந்த சம்மந்தமும் இல்ல, நீ வேணா வந்தனாவைக் கூட்டிட்டு ஓடு" என்றாள்.

உகா—வுடன் ஓட வந்தனா ஒத்துக்கொள்ளாமல், மொக்கை காரணங்களைச் சொல்லிச் சொல்லி இழுத்துக்கொண்டே வந்து லக்ஸை திருமணம் செய்து கொண்டாள்.

முதலிரவன்று இரவு இரண்டு மணிக்கு, ஆதிரைக்கு போன் அடித்தான் லக்ஸ்.

‘‘ஃபர்ஸ்ட் நைட்ல இருக்கேன், எனக்கு மூடே வர மாட்டேங்குது. உனக்குத்தான் தெரியுமே, எனக்கு உன்னைப் பாத்தாதான் மூட் வரும், கொஞ்சம் வீடியோல காட்றியா" என்றான்.

‘‘செருப்பு பிஞ்சிடும் நாயே, இதான் நீ எனக்கு பண்ற கடைசி போன் காலா இருக்கணும். இதுக்கு மேல போன் பண்ண, உங்க அப்பா அம்மாவுக்கு போன் பண்ணிடுவேன்" என்றாள்.

அதுதான் லக்ஸ் கடைசியாக ஆதிரைக்கு போன் செய்தது.

# பொற்செல்வி

ம ருத்துவம் படிப்பவர்கள் ‘அந்த’ விஷயத்தில் தாராளம் என்று ஒரு கருத்து நிலவுகிறது. அதற்கு ஒரு காரணத்தையும் சொல்வார்கள். அதாகப்பட்டது, அவர்கள் அறுவை சிகிச்சை செய்வது, பிரசவம் பார்ப்பது, முக்கியமாக ஹெர்னியா சிகிச்சையின்போது பாம்பாட்டிபோல, படம் எடுத்து ஆடும் பாம்பை மகுடியால் விலக்கி அந்தக் கரிசல் காட்டுக்குள் வைத்தியம் பார்ப்பதால், அவர்களுக்கு பாம்பெல்லாம் சப்பை மேட்டர் என்ற கருத்து நிலவுகிறது.

பொற்செல்வி படித்த மருத்துவ கல்லூரியில் படித்த ஆட்கள் தபால் வழியில் சாதாரண பிரிவுகளில் பட்டம் படிக்கும் ஆட்களை விட குறைவாகவே அந்த விஷயத்தில் இருந்தார்கள்.

கல்லூரியில் அவ்வப்போது சிலர் பொற்செல்வியிடம் நாகரீகமாகத் தங்கள் காதலைச் சொல்ல முயன்றபோதெல்லாம், "எனக்கு அப்படி எந்த ஃபீலிங்கும் வரலையேடா" என்றே சொல்லி வந்தாள்.

கல்லூரியில் பொற்செல்விக்கு நல்ல தோழியாக வந்து சேர்ந்தவள் ஸப்ரின்.

ஸப்ரினுக்கு பாய் ஃபிரண்ட் இருந்தான். ஸப்ரின் பாய் ஃபிரண்டுடன் வெளியே போய்விட்டு வரும்போது விடுதியில் அமர்ந்து படித்துக்கொண்டு இருப்பாள் பொற்செல்வி. ஸப்ரினுக்கு ஆச்சர்யமாக இருக்கும்.

‘‘செல்வி, எப்பிடிடீ இப்படி இருக்க..? நாங்கள்ளாம் வெளில சுத்தறோம், பாய் ஃபிரண்டு தேவைப்படுது. இல்லன்னா ஒரு மாதிரி எம்ப்டியா இருக்கு, நீ எப்பிடி தனியாவே இருக்க..?’’

‘‘நான் எங்கடீ தனியா இருக்கேன்..? நானும்தான் சினிமா பாக்கறேன். உங்க கூட ஷாப்பிங் வரேன், கோவிலுக்குப் போறேன், டேன்ஸ் க்ளாஸ் போறேன், டேக்வாண்டு போறேன். என்னா ஒரே வித்தியாசம்னா, எனக்கு பாய் ஃபிரண்டு இல்ல;. உங்களுக்கு இருக்கான். பாய் ஃபிரண்டு இருக்குறதால, உங்களால

வேற எதுவுமே செய்ய முடியலை. உங்க மத்த எல்லா ஆக்டிவிடீஸையும் பாய் ஃபிரண்டு ரீப்ளேஸ் பண்றான்.''

''சரிடீ, உனக்கு லவ்வே வராதா..?"

''நான் அப்படிச் சொன்னேனா..? நான் முதல்ல என்னை லவ் பண்றேன். என்னை ரொம்ப லவ் பண்றேன். முதல்ல எனக்கு புடிச்சதெல்லாம் செஞ்சிக்கணும். அப்புறம் ஒரு ஸ்டேஜ்ல, எனக்கு புடிச்சவனைப் பாத்தா லவ் பண்ணுவேன், கல்யாணம் பண்ணிக்குவேன். அப்புறம் ரெண்டு பேருக்கும் பிடிச்சதை செய்வோம்.''

''கேக்க நல்லாத்தான் இருக்கு. ஆனா இப்ப உனக்கு லவ் ஃபீலிங்க் தேவைப்படலையா..?"

''இது தேவை சம்மந்தப்பட்ட விஷயம் இல்லடீ. ஃபீல்னுதான நீயும் சொல்ற..? எனக்கும் ஃபீல் இருக்கு. ஆனா, அதுக்காக வம்படியா பக்கத்துல இருக்குற ஒரு ஆம்பளைய அவசரமா தேர்ந்தெடுக்க மாட்டேன்."

''அப்ப ஃபீலை என்னா பண்ணுவ..?''

''எஞ்சாய் பண்ணுவேன். எதிர்கால, முகம் இல்லா ஆளை லவ் பண்ணி ஃபீல் பண்ணி எஞ்சாய் செய்வேன். அவனைப் பாத்ததும், உன்னை நான் ரொம்ப நாளா லவ் பண்ணிட்டு இருந்தேண்டான்னு சொல்வேன். என் பாஸ்ட்டும் நீதாண்டான்னு சொல்வேன்.''

''சரிடீ, ஓப்பனா கேக்கறேன். செக்ஸ் ஃபீலிங் வந்தா என்னாடீ செய்வ..?''

''அதையும் எஞ்சாய் செய்வேன்."

''மாஸ்ட்ருபேட்டா..?''

''இல்லை.''

''அப்புறம் எப்படி எப்படி..?''

''சொல்லித் தெரிவதில்லை மன்மதக் கலை."

''ப்ளீஸ் சொல்லுடீ."

''மனசிலேயே எஞ்சாய் பண்ணிப்பேண்டி..."

# ஆதிரை

ஆதிரை ஒரு மாதம் மருத்துவ விடுப்பு எடுத்தாள். பயணம் செய்தால் மனநிலை சரியாகும் என ஊர் ஊராக தனியாகச் சுற்றினாள். ஆதிரையால் தூங்க முடியவில்லை. இரவு தூக்கம் வராதது பேரெரிச்சலைக் கொடுத்தது. தினமும் குடிக்க ஆரம்பித் தாள். வயிற்றில் வளரும் குழந்தைக்கு அது மிகப்பெரிய தீங்கு எனத் தெரிந்தும் குடித்துக்கொண்டேயிருந்தாள்.

அவளைப் பார்க்க அவள் வீட்டுக்கு வந்த அப்பாவை வாயிலோடு திருப்பி அனுப்பினாள். அப்பா கவலையோடு திரும்பி அம்மாவை அனுப்பினார். அம்மாவை ஒரு பகல் மட்டும் அனுமதித்தாள். இரவு கிளப்பி அனுப்பி வைத்தாள். அவளுக்கு இரவு குடிக்க வேண்டும்.

ஆதிரையின் இந்தச் சிக்கல் மற்றும் இப்போதைய நிலைமை தீப்திக்குத் தெரியாது. தீப்திகா அப்போது தனது கணவன் 'யெஸ்' ராமக்ருஷ்ணனோடு இமயமலை பைக் பயணத்தில் இருந்தாள். திருமணத்தின்போது ஆதிரையைப் பார்த்ததோடு சரி. அப்போது, ‘‘ஏண்டி ரொம்ப டல்லா இருக்க..?" என்று ஆதிரையை தீப்தி கேட்டதற்கு , ‘‘கல்யாணப் பொண்ணுதான் செமையா இருக்கணும், எனக்கு என்னாடீ..?" என்று சிரித்துச் சென்றாள்.

வயிறு அதிகமாக வலிக்க, மருத்துவமனை சென்றபோது, டாக்டர் திட்டியபோது, அழுதாள் ஆதிரை.

அந்த டாக்டர் அணைத்துக்கொண்டு, ஆறுதலாக சில வார்த்தைகள் சொன்னார்.

‘‘ரொம்ப அதிகமா குடிச்சி இருக்க. எந்த பிரச்னைக்கும் குடி தீர்வு இல்லை. ரெண்டு மூணு நாள் குடிக்கலாம். குடிச்சிட்டு, அதுல இருந்து வெளில வந்துடணும். வெளில வர்றதுக்குத்தான் குடிக்கணுமே ஒழிய, திரும்ப திரும்ப அதுக்குள்ளயே போறதுக்கு இல்லை. பேபிக்கு லக்கிலீ பெருசா ஒண்ணும் ஆகலை. பேபிக்காக இனிமே குடிக்காதே. ரொம்ப முடியலைன்னா,

எப்பவாச்சும் ஒயின் சாப்பிடு" என்று கூறி, மனநல மருத்துவரைப் பரிந்துரைத்தார்.

மனநல மருத்துவர், குழந்தை வயிற்றில் இருப்பதால் முதலில் மருந்து கொடுக்காமல் சில தெரப்பிகள் பரிந்துரைத்தார். கடற்கரையில் தினமும் நடக்க அறிவுறித்தினார். ஆனால் எதுவும் சரிப்படாததால், மருந்துகள் கொடுத்தார். மருந்துகளை ராணுவ ஒழுங்கோடு எடுத்து வந்தாள் ஆதிரை. உடல்தான் கொஞ்சம் கொஞ்சமாக குண்டானது.

கர்ப்ப விஷயம் வெளியில் தெரிய ஆரம்பித்ததும், ஆதிரையின் அண்ணன் அதுவரையும் இல்லாத அந்தத் தொடர்பையும் அறுத்துக்கொண்டான். அம்மா வந்து ஒருநாள் அழுது விட்டுப் போனாள். அப்பா அப்போது வாசலிலேயே நின்றிருந்தார்.

தனியாக மருத்துவமனையில் சேர்ந்து, குழந்தை பெற்றுக்கொண்டாள். ஒரு சேவை மையத்தின் மூலம் ஒரு ஆயாவை வேலைக்கு எடுத்துக்கொண்டாள். அதிர்ஷ்டவசமாக மஞ்சரி எந்த சிக்கலும் குறையும் இல்லாமல் பிறந்து, வளர ஆரம்பித்தாள்.

இதற்குப்பிறகுதான் ஆதிரை, வாழ்வில் முக்கியமான முடிவை எடுக்கப்போகிறாள். அவள் தன் வேலையை ராஜினாமா செய்து சொந்தமாக ஒரு ஈவண்ட் மேனேஜ்மெண்ட் கம்பனி ஆரம்பிக்கப் போகிறாள். அதில் அவளுக்கு எக்கச்சக்க சிக்கல்கள் வரும். பணம் கையிருப்பு குறைந்து கஷ்டப்படுவாள். ஆனால் யாரிடமும் கடன் வாங்க மாட்டாள்.

மஞ்சரி ஐந்தாவது படிக்கும்போது வேலைக்கு வந்து கொண்டிருந்த ஆயாவை நிறுத்துவாள்.

ஆதிரைக்கும் மஞ்சரிக்கும் ஒரு தனிப்பட்ட வித்தியாசமான உறவு உண்டாகும். அவர்களின் உலகம் தனித்துவமானதாக இருக்கும். இந்த உலகில் இருந்து பிரிந்து அவர்களுக்கான உலகில், அவர்களுக்கான விதிகளுடன் வாழ்வார்கள்.

மனமும் உடலும் மரத்துப்போயிருந்த ஆதிரையை, மஞ்சரிதான் இதமான உலகத்தை நோக்கி அழைத்து வருவாள். அம்மாவும் மகளும் அன்பைப் பொழிவார்கள்.

அம்மாவின் கதைகளை மஞ்சரி தெரிந்து கொள்வாள். ஆதிரையின் அம்மா அவ்வப்போது வீட்டுக்கு வந்து, பேத்தியுடன் கொஞ்சிவிட்டுச் செல்வாள். ஆதிரையின் அப்பா, கால்நடையாகவே உலகைச் சுற்றி வரக் கிளம்பி விடுவார். ஒருநாள் அவர் இறந்த செய்தி வரும்போது, யாராலும் அவர் உடலைச் சென்று பார்க்கமுடியாது. ஏதோ ஒரு நாட்டில், யாராலோ அவர் புதைக்கப்படுவார்.

மஞ்சரியால் உடலும் மனமும் மீட்டெடுக்கப்பட்ட ஆதிரைக்கு, மனம் யாருடைய துணையையாவது நாடும். அது கொஞ்ச நேரம்தான், பழையன எல்லாம் நினைவுக்கு வந்து, தன்னைச் சுருக்கிக் கொள்வாள்.

எப்போதாவது, எந்த ஆண்மகனோடாவது ஆதிரை கொஞ்சம் பேச ஆரம்பித்தாலே மஞ்சரிக்கு தெரிந்து விடும்.

“அது எப்படித்தான் மஞ்சரிக்கு தெரியிதோ..? ஆச்சர்யமா இருக்கு..!" என்று ஒருமுறை அராத்தோடு கா∴பி அருந்தும்போது ஆதிரை சொல்லியிருக்கிறாள்.

“போன்ல டெக்ஸ்ட் பண்ணிட்டு இருக்கும்போது, அது அ∴பீஷியலா, ∴பிரெண்ட்லியா, ∴ப்லிர்டிங்கான்னு மஞ்சரிக்கு தெரியிது. எப்படி கண்டு புடிக்கிறான்னே தெரியலை அராத்து."

“அவ உங்களை மிஸ்யூஸ் பண்றாங்க. நீங்க யாரையாச்சும் பிடிச்சா கல்யாணம் பண்ணிக்கோங்க."

“கல்யாணமா..? அய்யய்யோ..."

“ரெண்டொரு பேரை வச்சி எல்லாரையும் நெகட்டிவா நினைக் காதீங்க. மஞ்சரி இன்னும் கொஞ்ச வருஷத்துல பாய் ∴பிரண்டு கிடைச்சி சுத்துவா, அப்பறம் கல்யாணம் பண்ணிட்டு போயிடுவா. உங்களைத் திரும்பிப் பாக்க கூட நேரமிருக்காது. அப்புறம் நீங்க ரொம்ப லோன்லியா ∴பீல் பண்ணுவீங்க."

“இல்ல அராத்து. நான் ஆம்பளைங்க எல்லாரையும் நெகட்டிவா நினைக்கலை. மஞ்சரியையும் அப்படி வளக்கலை. ஆனா, காலேஜ் முடிக்கிற வரைக்கும் பாய் ∴பிரண்ட் வேணாம்னு சொல்லி இருக்கேன். அம்மாகிட்ட எல்லாத்தையும் சொல்லிடணும்னு சொல்லி இருக்கேன். அவளும் சொல்லிடுவா."

‘‘அதெல்லாம் ஒக்கே, இப்ப அவளை ஹாஸ்டலில் விட்டுட்டு, நீங்க கல்யாணமோ, லிவ் இன்னோ, ஏதோ ஒண்ணு, ஒரு துணையை தேடிக்கலாம்."

‘‘ஹாஸ்டலா..? அதெல்லாம் அவ போகவே மாட்டா."

‘‘அதான் சொல்றேன். அவ உங்களை மிஸ்யூஸ் பண்றா. அவ நல்லா சேஃபா வளந்துட்டு, உங்க முதுகு மேல ஏறிப்போய் எவன் கூடவாவது செட்டில் ஆயிடுவா. நீங்க கடைசில மாட்டிக்குவீங்க."

‘‘உங்களுக்கு என்னோட பழைய கதை தெரிஞ்சா இப்படி பேச மாட்டீங்க அராத்து..!"

‘‘என்னாது, கதையா... பழைய கதையா..? அய்யய்யோ, ஆளை விடுங்க" என்று கூறி எழுந்து ஓடி, ரேடியோ ரூம் பப்பில் புதிதாகச் சந்திக்க விரும்பிய ஒரு பெண்ணுடன் அமர்ந்து அவள் உளறுவதை கேட்பதுபோல நடிக்க ஆரம்பித்தான்.

‘‘பள்ளி முடித்தவுடன் நான் ஹாஸ்டலுக்கு போயிடறேன் அம்மா. நீ, விருப்பப்பட்டபடி இருந்துக்கோ" என்று மஞ்சரி சொல்வாள். ஆனால் அதையும் மீறி, ‘‘கல்லூரி முடிஞ்சதும் நீ என்ன வேணா பண்ணிக்கோ" என்று நீட்டுவாள். ஆதிரையை உடும்புபோல பிடித்துக்கொண்டு அவள் வாழ்வை அழிப்பாள்.

ஆதிரைக்கு காதலான எண்ணங்களோ, காமம் சார்ந்த எண்ணங் களோ தோன்றும்போது, சுய இன்பம் கூட அனுபவிக்க முடியாதபடி பழைய எண்ணங்கள் தொந்தரவு படுத்தும்.

ஆதிரைக்கு, தனக்கான தனிப்பட்ட வாழ்வின் அதிகப்படியான ஏக்கம் என்பது ஜஸ்ட் ஃபிலிர்ட்டிங்க் என்றாகிப்போகும். ஆனாலும், அவள் விரும்பிய ஆள் ஃபிலிர்ட் செய்ய மாட்டான்.

ஆதிரை விரும்பாத ஆயிரம் பேர் ஆதிரையை முயற்சிப்பார்கள். ஆதிரைக்கு அலுப்புதான் வரும். ஃபிலிர்ட்டிங்க், போன், நேரில் எனப் பலர் ஆதிரையிடம் விருப்பத்தைத் தெரிவிப்பார்கள். ஆதிரை அனைத்தையும் மறுப்பாள்.

சும்மா உடல் இச்சைக்காக ஒருவனுடன் ஓர் இரவு படுத்து எழுந்து தொலைக்கலாம் என்றாலும், அவன் இதை முன் வைத்து மஞ்சரியையும்

ஏதேனும் செய்வான் என்ற பயமே கடைசிவரை ஆதிரையை எவனுடனும் எதற்காகவும் நெருங்க விடாது.

மஞ்சரி காதலித்து திருமணம் செய்து கொண்டு, டென்மார்க் சென்று விடுவாள். ஆதிரை...

# பொண்டாட்டி குறுங்கதைகள் –
# பீஸ் பீஸ்

அவன் ஒரு தொழிலதிபர். அவள், அவன் மனைவி. தொழிலதிபரின் மனைவி. என்ன தொழில்..? எல்லா தொழிலும்தான். அந்த எல்லா தொழிலிலும் கட்டுமான தொழிலும் ஒரு தொழில். அதற்கு ஒரு சீஃப் இஞ்சினியர். இதைப்போல இஞ்சினியர் எல்லாம் நம்பிக்கையான இஞ்சினியர்களாக இருப்பார்கள்தானே..? அந்த நம்பிக்கை, தொழிலதிபரின் வீட்டுக்கு பணி நிமித்தம் வந்து போவான். நம்பிக்கையை நம்பி கோடி கோடியாக பணத்தை ஒப்படைப்பான் தொழில்.

நம்பிக்கை என்றாலே, நம்பிக்கை துரோகம் வருமல்லவா..?

நம்பிக்கையும் தொழில் மனைவியும் கள்ளக்காதலில் ஈடுபட்டார்கள்.

இப்போது நம்பிக்கை, தொழிலுக்கு துரோகமாகவும் தொழிலின் மனைவிக்கு நம்பிக்கையாகவும் மாறிப்போனான்.

இதைத் தொழில் கண்டுபிடித்துவிடுவான்தானே..?

பிடித்து, கூலிப்படையிடம் சொன்னான். தொழிலுக்கு கூலிப்படை தலைவன் நன்கு பழக்கம்.

தொழிலுக்குச் சொந்தமான தோப்புக்குத் துரோகத்தை தூக்கி வந்தார்கள்.

தொழில் தேவையான மட்டும் போட்டு அடித்தான்.

கூ.படையினர், துரோகத்தைச் சின்னச் சின்ன பீஸாக ஆட்டுக்கறி கடையில் நறுக்குவதைப் போல நறுக்கி, அதை விடியோ எடுத்துத் தூர தூரமாக பல குழிக்கள் தோண்டி, கொஞ்சம் கொஞ்சம் கறியாகப் போட்டு புதைத்தார்கள். இரவு முழுக்க குடித்து கொண்டாடிக்கொண்டே இதை ஒரு திருவிழா போல செய்தார்கள்.

தொழில் மனைவிக்கு இந்த விஷயம் தெரியாமல், நம்பிக்கையை தேடிக்கொண்டு இருந்தாள். மனம் வெதும்பினாள்.

ஒரு நாள் நன்கு குடித்து விட்டு தொழில், தொழில் மனைவியை இழுத்துப் போட்டு அடித்தான். கடைசியில், அந்த வீடியோவைக் காட்டினான். ‘‘இதான் கதிடீ கூதி, தேவடியா முண்டை, வீட்ல புருஷன் இருக்கறப்போ, கூதிய வழிச்சிகிட்டு தெருத்தெருவா அலைய வேண்டியது" என்றுத் திட்டி அங்கேயே உதைத்தான். உறங்கினான்.

மறுநாள் தொழிலை போலீஸ் அரெஸ்ட் செய்து கொண்டு போனது. தூக்கு தண்டனை விதிக்கப்பட்டது.

தொழில் மனைவி நம்பிக்கையை நினைத்துக்கொண்டே தனியாக வாழத் தொடங்கினாள்.

தொழில் = லக்ஸ்

தொழில் மனைவி = வந்தனா

# கலா

க தை ஆரம்பித்த முதல் அத்தியாயத்தில் வந்த மாரியம்மன் கோவிலுக்கு மீண்டும் சென்றான் இந்தக் கதையை எழுதிக் கொண்டிருப்பவன்.

அம்மனைப் பார்த்தான்; அம்மன் முகத்தில் உக்கிரமோ, கருணையோ தென்படவில்லை; குழப்பம் அதிகமாக இருந்ததுபோல இருந்தது. அம்மன் கோபப்படுவதோ, அன்பு காட்டுவதோ அம்மன் கையிலா இருக்கிறது..? அம்மனுக்கு அலங்கரிக்கும் பூசாரி கையில்தான் உள்ளது. இந்த வரியைப் படித்து விட்டு நாத்திகர்கள் சந்தோஷப்படுவார்கள். யாரையும் நீண்ட நேரம் சந்தோஷத்தில் வைத்திருக்கக் கூடாது அல்லவா..? அடுத்த வரியில் அந்த சந்தோஷத்தைக் குலைத்து விடலாம். அந்தப் பூசாரியின் கையே அம்மன் கையில்தானே உள்ளது. தனக்கான அன்றைய அலங்காரத்தை அம்மன், தானே தீர்மானித்துக்கொள்கிறாள்.

குப்பத்தில் இருக்கும் அம்மன், தன் மக்கள் கிழிந்த உடைகளையும் அழுக்கு உடைகளையும் அணிந்திருப்பதைப் போலவே, தானும் கிழிந்த பாவாடையும், அழுக்குப் புடவையையும் தானே கட்டிக்கொண்டு அருள்பாலிக்கிறாள். கிழிந்த பாவாடை கட்டிக்கொண்டிருக்கும் அம்மன் முகத்தில் எப்படிக் கருணை வழியும்..? கோபம்தான் பீறீட்டு அடிக்கும்; குப்பத்தில் இருந்து கிளம்பிச் சென்று நகரத்தில் குடியேறி பணக்காரனான யாரேனும் அம்மனுக்குப் புத்தாடை எடுத்து வந்து கொடுத்து அபிஷேகம் செய்யும் அன்று மட்டும் அம்மன் சற்று கோபம் குறைந்து மலர்ச்சியாகக் காணப்படுவாள். தேவையான அருளை அன்றே அம்மனிடம் வாங்கிக்கொண்டு, குப்பத்துவாசிகள் நகரத்துக்கு ஓடி விடலாம். ஆனால் இந்தக் குப்பத்துவாசிகளுக்கு அந்த அளவு நேக்கு பத்தாது. அன்று அம்மனை தரிசித்து வேண்டிக்கொள்வதை விட்டுவிட்டு, அந்த அபிஷேகம் கொடுத்த பணக்காரன் பின்னால் சுத்துவார்கள்.

குழப்பமான அம்மனைப் பார்த்துக்கொண்டிருந்தவன், வந்த பூசாரியிடம் “கலா எப்ப வருவா..?" என்றான். “இன்னும் ஒரு மணி நேரத்துல வந்துடுவா..?

வெள்ளிக்கிழமையாச்சே... குறி சொல்லணுமே..." என்றபடிக்கு அம்மனின் பழைய உடைகளைக் களைந்துவிட்டு, தண்ணீர் ஊற்றித் துவைக்காமல் சுருண்டு கிடக்கும் இன்னொரு உடையை அம்மனுக்கு மாற்றி விட்டார்.

கலா வரும் வரையில் ஏதேனும் எழுதலாம் என்று நினைத்தவன் எழுத ஆரம்பித்தான்.

## கலா

# கலா

க லா வருவதற்கு முன்பே ஜனம் வரத்தொடங்கிவிட்டது. எத்தனை பேர் வந்தாலும், கலா இவனைத்தான் முதலில் அழைப்பாள். சன்னதம் வராதபோது இவனும் கலாவும் பேசிக்கொண்டதே இல்லை.

கலா வந்தாள்.

அம்மன் முன் நின்றாள்; பம்பை அடிப்பவர்கள் பீடியைத் தூக்கிக் போட்டு விட்டு அருகில் வந்து நின்றார்கள்; பம்பை அடிக்க ஆரம்பித்தது.

அம்மனை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்த கலா, கண்களை மூடிக்கொண்டாள். கால்கள் மெல்ல ஆட ஆரம்பித்தன. பிறகு, உடல் மெல்ல நடுங்க ஆரம்பித்தது. ஏதோ ஒரு சக்தி திடீரென உள்ளே புகுந்ததுபோல கலா விலுக்கென நிமிர்ந்தாள். பூசாரி சூடத்தைக் கொளுத்தி கலாவுக்குக் காட்டியபடியே வேப்பிலைக் கொத்தைக் கையில் கொடுத்தார்.

‘‘மேற்குத் தெருவுல என்னமோ தப்பு நடந்திருக்கு; சீக்கிரம் சரி பண்ணிடுங்க. இல்லன்னா, நான் என்ன பண்ணுவேன்னு எனக்கேத் தெரியாது" — கலா கர்ஜித்தாள்.

இவன் கதைக் கட்டோடு கலா கண்ணுக்குத் தெரிவதுபோல நகர்ந்தான்.

‘‘முன்னால வாடா..."

முன்னால் வந்தான்.

‘‘என்னாடா கைல கட்டு..? முடிக்காமயே ஏன் இங்க வந்துருக்க..?"

‘‘ஆத்தா, சில சந்தேகம். அதான் கேட்டுட்டு போலாம்னு..."

‘‘கேளுடா..."

‘‘உம்மேல பாரத்தைப் போட்டுத்தான் கதையை ஆரம்பிச்சேன். கதை முடியாம இழுத்துட்டே போவுது..."

‘‘கதை பேர் பொண்டாட்டின்னு வச்சா இழுத்துட்டுதான் போவும். பொண்டாட்டிக்கு ஏதுடா முடிவு..?’’

‘‘இனிமே கதை பேரை மாத்தா முடியாதே ஆத்தா..."

‘‘ஏண்டா..?"

‘‘ஃபேஸ்புக்ல எழுதியாச்சி. எல்லோருக்கும் பொண்டாட்டின்னாதான் தெரியும்...’’

‘‘ஏண்டா லூஸுப்பயலே, ஃபேஸ்புக்ல இருக்குறவன் எல்லாம் புத்தகம் வாங்கறவன்னு நெனைச்சிட்டு இருக்கியாடா..? புத்தகம் வாங்கிப் படிக்கிறவன் வெளில இருக்கான்டா. ஃபேஸ்புக்ல இருக்குறவன் எல்லாம் உருப்புடாம போறவன். ஆத்தாவுக்கு கோவம் வந்தா காலரா, பிளேக் மட்டும்தான் பரப்புவேன்னு நினைச்சியா..? ஃபேஸ்புக்கையும் பரப்புவேன்டா. மார்க் 'கைஞ்சி தம்' வந்தப்ப எங்கோவிலுக்கும் வந்தான். ‘பெரிய பிஸினஸ்மேன் ஆவணும்’னு வேண்டிக்கிட்டான். அவனை அப்பவே மார்க் பண்ணிட்டேண்டா..."

‘‘ஏன் ஆத்தா இவ்ளோ கோவம்..? உலகம் முழுக்கப் பரப்பி நாசம் பண்றியே ஆத்தா...’’

‘‘எல்லா பயலுவளும் பொம்பளைங்கள சீரழிக்கிறீங்கடா, உலகம் முழுக்க. அதான் ஃபேஸ்புக்கை பரப்பி, அவளுங்க கால்ல விழுந்து கெடக்க வைக்கிறேன். ஆசம் தோழி, அழகு தோழி, அம்பாள் போல இருக்கீங்க தோழின்னு பேரன் பேத்தி எடுத்த ஃபிகருக்கு எல்லாம் கமெண்ட் போட வச்சி கால நக்கிட்டு கெடக்க வச்சிருக்கேன்டா..."

‘‘ஆத்தா, இருந்தாலும் தலைப்பை மாத்த எனக்கே பிடிக்கலை ஆத்தா. வேற வழி சொல்லு..."

‘‘சொல்றேண்டா, சொல்றேன். தோபாரு, இந்த கதை இப்படியே போனா முடியாது. நீ எழுதின வரைக்கும் போதும். அப்டியே நிப்பாட்டு. இதுக்கு மேல எழுதும்போது, சட்டு புட்டுன்னு முடியிற மாதிரி எழுது...’’

‘‘சரி ஆத்தா..."

‘‘டேய், நீ இன்னும் ஏஞ்சலின், கன்யா, பிரபா, இனியா கதையெல்லாம் ஆரம்பிக்கவே இல்லையேடா...’’

‘‘ஆமா ஆத்தா..."

‘‘அதையெல்லாம் ஒரே அத்தியாயத்துல எழுது..."

‘‘அது கொஞ்சம் கஷ்டம் ஆத்தா..."

‘‘டேய்... டேய்... கூறு கெட்டவனே, அராத்து தெரியுமாடா... அராத்து..? அவன், ‘தற்கொலை குறுங்கதைகள்’, ‘பிரேக் அப் குறுங்கதைகள்’னு மைக்ரோ நேரேஷன்ல எழுதி இருக்கான்டா. அதையெல்லாம் படிக்காதீங்க. ஆத்தா நானே அப்கிரேட் ஆயிட்டேன், நீங்க இன்னும் பழசையே நக்கிட்டு கெடங்க. அராத்து மாதிரி மீதி கதையை மைக்ரோ நேரேஷன்ல எழுதுடா..."

‘‘சரி ஆத்தா, இப்பவே அராத்தோட புத்தகம் வாங்கி படிச்சிடறேன்..."

‘‘வெளங்காதவனே, இந்த எழவெடுத்த ஊர்லதான் புத்தகம் மட்டும் பரவலா கெடைக்காதே. மத்த எல்லா மயிரையும் தேடி வாங்குவாங்க, புத்தகத்தை மட்டும், எழுதுனவன் கிட்டயே போய் ‘எங்க கெடைக்கும்..?’னு தான கேப்பாங்க. எப்பிடி வாங்குவ..? அராத்தோட புத்தகம் அமேசான் கிண்டில்ல கெடைக்கும்டா; உடனே ஆன்லைன்ல படிச்சிடு..."

‘‘சரி ஆத்தா. அப்படி எழுதினா கதை முடிஞ்சிடுமா..?’’

‘‘முடியாதுடா, முடியவே முடியாது. மீதிக்கதையை எழுதி எடுத்துட்டு வந்து என்னைப் பாரு. நான் முடிச்சிக் குடுக்கறேன்...’’

‘‘ஆத்தா இன்னொண்ணு, நீயும் ஒரு பொண்டாட்டிதானே..?"

‘‘இல்லடா, இல்ல; நான் ஒரு ஆத்தா. நான் பொண்டாட்டி இல்ல. இந்த உலகத்துல எவளும் பொண்டாட்டி இல்ல. எல்லாவளும் ஆத்தாதான்..!"

சூடத்தை வாயில் போட்டுக்கொள்ளாமலேயே மலையேறி மயங்கி விழுந்தாள் ஆத்தா, இல்லையில்லை கலா..!

# தீப்திகா – கன்யா, பிரபா, இனியா, ஏஞ்சலின் – ஆதிரை

தீப்திகா மீண்டும் சென்னைக்கு வந்ததும் சோர்ந்து கிடந்தாள். அவளைத் தோழிகள் அப்படிப் பார்த்ததே இல்லை. தண்ணி அடிக்கலாம் என்றாலும் கடமைக்கு அடித்தாள். சினிமாவுக்குப் போனால், எங்கோ வெறித்துக்கொண்டிருந்தாள். ஒரு வாரஇறுதியில் வந்து பார்த்த ஆதிரை, அவளை அழைத்துக்கொண்டு போய் டாட்டூ போட்டு விட்டாள்.

‘‘மனக்கஷ்டத்துக்கு இந்த டாட்டூ வலி இதமாக இருக்கும்’’ என்றாள். ஆதிரையும் ஒரு டாட்டூ போட்டுக்கொண்டாள். அடுத்தது, தீப்திகாவை அழைத்துக்கொண்டு போய், நீண்டு கிடந்த முடியை வெட்டிக் குறைத்தாள். "ஒரு மாதிரி சின்னதா ரிலாக்ஸா இருக்காடீ..?" என்று கேட்டாள்.

சின்னதாகச் சிரித்தாள் தீப்திகா.

"இன்னிக்கி வீட்ல எல்லோரும் சமைச்சி சாப்டுட்டு, ஜாலியா குடிப்போம். நம்ம பிரச்னையை ஏதும் நினைச்சிப் பாக்கவே கூடாது என்னா..?" என்றாள் ஆதிரை.

"சரிடீ... ஆனா, உன் கதை என்னா ஆச்சி... நான் அதைக் கேக்கவே இல்ல..? சாரிடீ" என்றாள் தீப்தி.

"அதை விடுடீ, உனக்கு இருக்கும் பிரச்னைல இதெல்லாம் எதுக்கு..? அப்புறம் சொல்றேன்" என்றாள் ஆதிரை.

‘‘பரவால்ல சொல்லு... இன்னும் அந்த லக்ஸ் உன்னை டார்ச்சர் பண்ணிட்டுதான் இருக்கானா..?’’ என்றாள் தீப்தி.

‘‘இல்ல தீப்தி, அவன் வீட்ல பொண்ணு பாத்திருக்காங்களாம். கடமைக்கு அவளை கட்டிகிட்டு, அப்புறமா அவளை டிவோர்ஸ் பண்றேன்னு சொல்றான்.’’

‘‘அடப்பாவிங்களா, என்னாடீ எல்லாரும் இப்படியே இருக்கானுங்க..? இவனுங்களுக்கு பொண்டாட்டி மெட்டீரியல் வேற, வப்பாட்டி மெட்டீரியல்

வேறயா..? ஏய், என்னாடி... நாம் ரெண்டு பேரும் வப்பாட்டி மெட்டீரியல்தானாடீ...? என்னாடி நமக்கு குறைச்சல்..?'' என்றாள் தீப்தி

''இவனுங்களுக்கு, குனிஞ்ச தலை நிமிராம, குத்து வெளக்காட்டம் இருக்கணும். தண்ணி அடிக்கக்கூடாது, சமைக்கணும், கால்ல விழணும், எதிர்த்து பேசக் கூடாது'' என்றாள் ஆதிரை

''ஏன்டி, இதெல்லாம் செய்றவளுங்க நைஸா எத்தனைபேரு கூட படுத்துகிட்டு, தொடைச்சிக்காமகூட எழுந்து ஓடி வந்துடறாளுங்க. அதெல்லாம் இவனுங்களுக்குத் தெரியப் போகுதா..? நான் எல்லாம் விர்ஜினா இருந்தேன்டீ. ஜெயமோகனை கட்டிக்கலாம்னு முடிவு பண்ணதுக்கு அப்புறம்தான் படுத்தேன். நீயும் அப்டித்தானேடீ..? அப்புறம் ஏன்டீ நம்மளை வப்பாட்டியா வச்சிக்கப் பாக்குறானுங்க..?'' என்றாள் தீப்தி.

''வெளில ஜீன்ஸ் – டீஷர்ட் போட்டுகிட்டாலும், மனசுக்குள்ள இன்னும் இவனுங்க கோமணம்தான் கட்டிட்டு இருக்கானுங்க தீபு. இவனுங்களுக்கு ப்ளோ ஜாப் பண்றவ எல்லாம் வப்பாட்டி. வெளக்கை அணைச்சிட்டு, கால விரிச்சிட்டு, வலிக்குதுங்க, வலிக்குதுங்கனு சொல்றவளுங்கதான் பொண்டாட்டி'' என்றாள் ஆதிரை.

அந்தப் பக்கமாக வந்த பைத்தியக்காரி ஒருத்தி, ''ஆத்தா, கதையை இனிமே விறுவிறுன்னு வேகமா எடுத்துட்டுப்போவச்சொல்லி உத்தரவு குடுத்து இருக்கு. நீங்க என்னடான்னா, வளவளன்னு பேசிட்டு இருக்கீங்களே'' என்றபடி கடந்து போனது.

''என்னாடி, தினுசு தினுசா பைத்தியங்க உருவாயிட்டு இருக்குதுங்க..? சரி, இவனுங்களைப் பத்தி பேசிட்டு இருந்தா டென்ஷன் ஏறி தலைதான் வலிக்கும். வாடி வீட்டுக்குப் போயி ஜாலியா எல்லாத்தையும் மறந்துட்டு குடிக்கலாம்" என்றாள் ஆதிரை.

வேகமாக வீட்டுக்குத் திரும்பி, அனைத்தையும் நிமிடங்களில் ஏற்பாடு செய்து, கூடிக் களித்துக் குடிக்க ஆரம்பித்தார்கள். பிரபா மட்டும் ஓவராகக் குடித்துக்கொண்டு இருந்தாள்.

‘‘ஏய் பிரபா, ஏண்டி ஓவரா குடிக்கிற..? நீ இந்த மாதிரி ஆள் இல்லியே..?" என்று தீப்தி கேட்டாள்.

‘‘நீ மட்டும் இந்த மாதிரி ஆளா..?"

‘‘என்னாடி ஔர்ற..?" என்றாள் தீப்தி.

‘‘மசுர்ல ஔர்றேன். எப்டி இருந்தவடீ நீ..? இப்டி போய் ஏமாந்துட்டு வந்து நிக்கிறியே..? தாவடியாப் பொய்யன், அவனை பொளக்கணும்டீ" என்றாள் பிரபா.

‘‘ஏய், நான் என்ன அபலையா..? ஏமாறவெல்லாம் இல்ல. எதோ டைம், எதோ சிச்சிவேஷன், ஒரு எக்ஸ்பீரியன்ஸ், அவ்ளோதான்" என்றாள் தீப்தி.

"ஆத்தா கதைய வேகப்படுத்தச் சொன்னா, இவளுங்க வேற சரக்கை போட்டு ஔறிட்டு இருக்காளுவ" என, பைத்தியம் கத்திக்கொண்டே இவர்கள் வீட்டைக் கடந்தது.

"ஆயோ... ஆய்யோ, எக்ஸ்பீரியன்ஸாம் இல்ல..? நீ நடந்து போறப்ப உன் சூத்தைத் தட்டிட்டுப் போவான் ஒருத்தன்; அதுவும் ஒனக்கு ஒரு எக்ஸ்பீரியன்ஸ்தான் இல்லியா..?"

"ஏய், இப்ப ஒனக்கு என்னா பிரச்னை..? என்னா செய்யணும்..?"

"நான் மாடலிங்க்ல பெரிய ஆள் ஆவணும், அதுக்கு அப்பறம்தான் என் ஆளை கல்யாணம் பண்ணிக்கணும்னு இருந்தேன். ஆனா அவன் கவுத்துட்டான்" என்றாள் பிரபா.

"என்னாடி கவுத்துட்டான்..? தெளிவாச் சொல்லு" என்றாள் தீப்தி.

பிரபா கடும்போதையில் இருந்ததால், அவள் ‘தெளிவாக’ சொன்னது அவளுடன் குடித்துக்கொண்டு இருந்தவர்களுக்குத்தான் புரியும்; படித்துக்கொண்டு இருப்பவர்களும் அவர்கள் உடன் போய் அமர்ந்து குடிக்க முடியுமா என்ன..? பிரபா உளறி முடிப்பதற்குள் நாம் தெளிவாகப் பார்த்து விடலாம்.

பிரபாவுடன் பள்ளியில் படித்த பையனை நீண்ட நாள் கழித்துக் கோவிலில் சந்தித்து, தினமும் கோவிலுக்குப் போக ஆரம்பித்தாள் பிரபா. மொக்கை போட ஆரம்பித்து, அது பல நாடகத்தனங்களுக்கும் பித்துக்குளி சேஷ்டைகளுக்கும்

பிறகு ஒரு மாதிரி காதலாகக் கனிந்தது. கனிந்தும் ஒரு மசிரும் ஆகவில்லை. பிரபா அப்படித்தான் இப்போது அவர்களிடம் சொல்லிக்கொண்டு இருக்கிறாள்.

முத்தம் கூட கொடுக்காமல், விசித்திரமாக ஏதோ வெட்டுக்கிளி காதல் போல ஒன்றைச் செய்து கொண்டிருக்கிறார்கள். இந்த கருமம் பிடித்த காதலும் பிரபா வீட்டுக்குத் தெரிந்து விடுகிறது. பிரபாவின் மொபைலில் இருக்கும் சாட்டை எடுத்து பிரபாவின் தங்கையை விட்டுப் படித்துக் காட்டச் சொல்கிறார் பிரபாவின் அன்னை. காதல் ரசம், காம ரசம் என எந்த ரசமும் சொட்டாத அந்த சாட் வரலாறைப் பார்த்தே கடும்சினம் கொள்கிறார் பிரபாவின் அன்னை. இருவரையும் பிரிக்க முயல்கிறார்; ஆனால் பிரிக்க முடியவில்லை; ஏனென்றால், சேர்ந்து இருந்தால்தானே பிரிக்க முடியும்..? சேர்ந்து இல்லாத இருவரை பிரிக்க முயன்றால் என்ன ஆகும்..? இருவரும் சேர்ந்து கொண்டார்கள்.

‘‘அப்புறம்தான்டி மொத கிஸ் அடிச்சோம்’’ என்று பிரபா சொல்லிக்கொண்டு இருக்கிறாள்.

‘‘கருமம் டீ’’ என்கிறாள் தீப்தி.

பிரபாவின் காதலன் வெளிநாடு சென்று உயர்படிப்பு படிப்பதற்காகப் பயிற்சி வகுப்பில் படித்துக்கொண்டிருக்கிறான். அவன் வெளிநாடு சென்று, அதான் அமெரிக்கா சென்று படிப்பை முடித்து, அங்கேயே வேலை வாங்கி, அதன் பின் கிரீன் கார்டு வாங்கி, அதன் பின்பு கல்யாணம் செய்து கொள்ளலாம் என்று இருவரும் சேர்ந்து முடிவு செய்கிறார்கள். அதற்குள் பிரபா மாடலிங்கில் பிரபலமாகி, அமெரிக்காவும் சென்று பின்னி எடுக்கலாம் என்று திட்டம். அவன் அமெரிக்கா செல்கிறானோ இல்லையோ, பிரபா அமெரிக்க மாப்பிள்ளையின் மனைவி என்று மெண்டலாக செட்டில் ஆகிவிடுகிறாள்.

இவர்கள் முதல் கிஸ் அடித்துக்கொண்டதையும் ஒருவர் பார்த்து வீட்டில் போட்டுக்கொடுத்து விடுகிறார். இவர்கள் கிஸ் அடித்த இடம் சினிமா தியேட்டர்.

இவர்களைப் பிரிக்க முயற்சித்து சேர்த்து வைத்த பெற்றோர்கள், இப்போது சேர்த்து வைக்க முயல்கிறார்கள். இரு வீட்டாரும் பேசி, "இவங்களைப் பிரிக்க முடியாது. வெளி இடத்துல சேந்து சுத்தி, அப்பிடி இப்பிடி பண்ணி நமக்குத்தான் அசிங்கம்; கல்யாணம் பண்ணி வச்சிடலாம்" என்று முடிவெடுக்கிறார்கள்.

பிரபா கல்யாணத்துக்கு ஒத்துக்கொள்ளவில்லை.

‘‘என்னாடீ காதலிக்கிற..? நாங்களே கட்டி வக்கிறோம்னு சொன்னா வேணாங்கற, கொழுப்பா..?’’ என்று வீட்டார் எகிறினார்கள்.

காதலனுக்கு போன் அடித்த பிரபா ‘‘கல்யாணத்துக்கு இப்ப ஒத்துக்காத, எவ்ளோ கட்டாயப்படுத்தினாலும் ஒத்துக்காத, நாம் அமெரிக்கா எல்லாம் போனதுக்கு பிறகு கல்யாணம் பண்ணிக்கலாம்’’ என்று சொல்லி இருந்தாள்.

ஆனால் பிரபா வீட்டார் அவன் வீட்டில் பேசியதும் அவன் கல்யாணத்துக்கு ஒத்துக்கொண்டான். அதுதான் இப்போது பிரபாவுக்குக் கடுப்பு; அதைத்தான் தோழிகளிடம் புலம்பிக்கொண்டு இருக்கிறாள்.

‘‘உன்னை மீறி எப்பிடிடீ கட்டி வைப்பாங்க..?" என்று தீப்தி கேட்டு, அந்தக் கதைக்கு முற்றுப்புள்ளி வைத்தாள்.

‘‘தீப்தி, நீ ரைடிங்க் க்ளப்ல சேந்துக்கோ; ஒரு சேஞ்ச் கிடைக்கும்" என்று ஆதிரை தீப்திக்குச் சொல்ல, தீப்தி உடனே மொபைலை எடுத்து, ரைடிங்க் க்ளப்புகளைத் தேட ஆரம்பித்தாள்.

‘‘என் ஆள்தான் என்னை வெயிட் பண்ணச் சொல்றான். நான்லாம் இப்பவே கல்யாணம் பண்ணிக்க ரெடி" என்று

ஏஞ்சலின் பிரபாவிடம் சொன்னாள்.

‘‘எங்க மேட்டர் எங்க வீட்டுக்கே இன்னும் தெரியாது" என்றவள் கன்யா.

‘‘எங்க வீட்லயும் சரி, அவன் வீட்லயும் சரி, எங்களை கட்டாயப் படுத்தலையே, நாலு வருஷம் கழிச்சிதான் கல்யாணம் பண்ணிப்போம்னு சொன்னதுக்கு ஓக்கேன்னுட்டாங்க" என்றாள் இனியா.

பிரபாவுக்குத்தான் போதை அதிகமாக இருந்தது. மற்றவர்கள் எல்லோரும் மிதமான போதையில் இருந்தார்கள். தீப்திக்கு நடனம் ஆட வேண்டும் போல இருந்தது. ‘‘ஏஞ்சலின், மியூசிக் போடேன்" என்றபடி எழுந்தாள் தீப்தி. சடாரென ஒலித்த அட்டகாசமான பீட்டுக்கு ஒவ்வொருவராய் ஆடத் தொடங்கினார்கள். எப்படியும் இன்னும் நான்கு ரவுண்ட் போட்டு விடிய விடியக் கூத்து களைகட்டும்.

ஆத்தாவின் வாக்குப்படி கதையை, இவர்கள் ஆடிக்கொண்டிருக்கும் போதோ, அல்லது நாளை காலை போதை கலைந்து பேசிக்கொண்டிருக்கும் போதோ முடித்து விடலாம். அதற்குள்...

இவர்கள் ஆடி முடிப்பதற்குள், இவர்களின் எதிர்காலக் கதையை சுருக்கென்று ஒரு எட்டு போய் பார்த்து விட்டு வந்தால் கொஞ்சம் சுவாரசியமாக இருக்கும்.

எதிர்காலக் கதை என்பதை, ஃப்யூச்சர் டென்ஸில் எழுத வேண்டும். உதாரணமாக,

ஏஞ்சலின் குளிப்பாள், தீப்தி அவனை பைக்கில் இருந்து தள்ளி விடுவாள், இப்படி எழுதிக்கொண்டு போனால் ஒரு மாதிரியாக இருக்கும் அல்லவா..? ஆனாலும் ஆதிரையின் எதிர்காலக் கதையை இப்படி எழுதி, இப்படித்தான் படித்து முடித்து இருக்கிறீர்கள். அது உங்களுக்கு விசித்திரமாகத் தெரியவில்லை அல்லவா..? எல்லாம் ஆத்தாவின் அருள்தான்.

இருந்தாலும், இப்படிச் செய்ய வேண்டாம். நாம் அனைவரும் எதிர்காலத்துக்குப் போய் கதையை இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் பார்த்துவிட்டு, இவர்கள் ஆடி முடிப்பதற்குள் வந்து விடுவோம்.

# பிரபா – எதிர்காலம்

பிரபா என்னதான் பிடிவாதம் பிடித்தாலும் காதலன் ஒத்துக்கொண்டதால் இரு வீட்டாரும் கல்யாண ஏற்பாட்டில் இறங்கினார்கள். பிரபாவை காதலன் சமாதானப்படுத்தினான். "எல்லாமே நம்ம கைலதான இருக்கு. கல்யாணம் ஆனதையே மறந்துடு. நம்ம இஷ்டத்துக்கு இருக்கலாம்" என்று கூறி கல்யாணத்தை முடித்து விட்டான்.

பிரபா மாடர்னாக இருந்தாலும் வேறு எந்த ஆண்மகனையும் தொட்டதில்லை. க்ரஷ், பப்பி லவ் போன்ற எந்த டகால்டிகளும் பிரபா வாழ்வில் இல்லை. சின்ன வயதில் அப்பா – அம்மா விளையாட்டு என்ற பெயரில்கூட எந்த சில்மிஷ விளையாட்டுக்களிலும் பிரபா ஈடுபட்டதில்லை. நல்ல தரமான, ஐ எஸ் ஐ, ஐ எஸ் ஓ 9001:2008 முத்திரை குத்திய சிஎம்எம் லெவல் 5 விர்ஜின் பிரபா.

முதல் இரவின்போது கூட கன்னி கழியவில்லை. கட்டிக்கொண்டு, முத்தமிட்டுக்கொண்டு, உடைகளைப் பாதி களைந்து உரசிக்கொண்டு தான் கிடந்தார்கள்.

காதலனின் பெற்றோர்களோடு வசிக்க ஆரம்பித்தனர் தம்பதி.

நான்கைந்து நாட்கள் கழித்துதான் முதல் உடலுறவுக்கு முயற்சித்தார்கள். அப்போதுதான் பிரபா மிரண்டு விட்டாள். பிரபாவின் கணவனுக்கு மிகப்பெரிய குறி இருந்தது. பிரபாவுக்கு அதைப் பார்க்க குறி போலவே இல்லை. ஏதோ பெருச்சாளி போல இருந்தது. இது என்ன 'ஹைப்ரிட் குறி' மாதிரி இருக்கிறதே என்று வெகுண்டாள். முதலில் அவன் புணர முயற்சித்தபோது வெகுவாக வலித்தது. அவனைத் தள்ளி விட்டாள். இருவரும் சும்மாவே படுத்துத் தூங்க ஆரம்பித்தார்கள். இதைச் செய்யவே ஏன் நான்கைந்து நாட்கள் ஆனது என்றால், அந்த வீட்டில் தனிப்படுக்கையறைதான் இவர்களுக்கு என்றாலும் வெளியே நடக்கும் எதுவும் உள்ளே கேட்கும்; உள்ளே பேசுவதும் வெளியே கேட்கும். அது மட்டுமல்லாமல், பொதுக்கழிப்பிடத்தில் அவசரத்தில் கதவைத்

தட்டுவதைப் போல் அவன் அப்பா இவர்களின் படுக்கையறைக் கதவைத் தட்டுவார்.

இதனால், தாமதமாக ஆரம்பித்த செக்ஸும் வெற்றி பெறாமல்போக, கொஞ்ச நாட்கள் கழித்து மீண்டும் முயன்றார்கள். அந்த ஹைப்ரிட் நுழைய முடியவில்லை; வலி உயிர் எடுத்தது.

கிட்டத்தட்ட சில மாதங்கள் கழித்து ஹைப்ரிட் வெற்றிகரமாக உள்ளே நுழைந்தான். ஆனாலும் வலி வலிதான். ஹைப்ரிட் முன்னும் பின்னும் போய்வர பிரபாவுக்கு வலி தெறித்தது. அவனைப் பிடித்து தள்ளி விடலாமா என்று பார்த்தாள். அந்த நேரம் பார்த்து வலியும் எரிச்சலும் குறைந்து, செக்ஸ் என்றால் என்ன என்று காட்டும் அந்த நல்ல உணர்வு தெரிய ஆரம்பித்தது. 'ஆஹா, இதான் செக்ஸா..? இதற்குத்தான் எல்லோரும் இப்படிப் பறக்கிறார்களா..?' என்று யோசித்து முடிப்பதற்குள் ஹைப்ரிட் கக்கி விட்டுக் களைப்பானான்.

ஹைப்ரிட் தொடர்ந்து இதே வேலையைக் காட்டிக்கொண்டு இருந்தான். பிரபாவுக்கு வலி உயிர் எடுக்கும். பொறுத்துக்கொண்டு இருந்தால், ஒரு கட்டத்தில் இன்பம் தட்டுப்படும் நேரத்தில் அனைத்தும் முடிவுக்கு வந்து விடும். ஹைப்ரிட் வேலை முடிந்த அடுத்தக் கணம் கணவன் தூங்கி விடுவான்.

இது சம்மந்தமாகக் கணவன் எந்த நடவடிக்கையும் எடுக்கவில்லை; மருத்துவரிடம் செல்லவில்லை; லூப்ரிகண்ட் ஏதேனும் வாங்கிப் பயன்படுத்தவில்லை.

"உன்னைப் பாத்தாலே எனக்கு பயங்கர மூட் ஆயிடுது. அதனாலதான் சீக்கிரம் வந்துடுது. சீக்கிரமா சரி ஆயிடும்" என்றே சொல்லி வந்தான்.

காதலர்கள் கணவன் — மனைவி ஆனதும் நடந்திருக்க வேண்டிய மேஜிக் பிரபா விஷயத்தில் நடக்கவில்லை. காதலர்களாக இருந்த காலத்திலிருந்த புரிதல்கூட இல்லாமல் உறவு சிதிலமடைய ஆரம்பித்தது. அந்த மேஜிக் நடக்காமல் போனதற்கு முழு முதற்காரணம், சரியான தாம்பத்திய உறவு இல்லாததுதான். மற்ற காரணங்கள் எல்லாம் சின்னச் சின்னவைதான். இது ஒழுங்காக இருந்திருந்தால், அந்தச் சின்னக் காரணங்கள் எல்லாம் தெரியா மலேயே போயிருக்கும்.

இப்போது பிரபா சின்னச் சின்ன விஷயங்களுக்கும் சண்டைபோட ஆரம்பித்தாள். அம்மா – அப்பா, மாமியார் – மாமனார் என எல்லோரையும் கடுகடுக்க ஆரம்பித்தாள். கணவன் உறவுக்கு அழைத்தால் மறுக்க ஆரம்பித்தாள். முத்தம் கூட இல்லாமலானது.

பிரபாவின் கணவனுக்குத் திருப்பதிக்கு மாற்றல் வந்தது. பிரபா மிகவும் வற்புறுத்தித் தனிக்குடித்தனம் அழைத்துக்கொண்டு போனாள். அங்கே போய் எப்படியாவது இவனைச் சரிப்படுத்தி நிம்மதியாக உறவுகொள்ள வேண்டும் என்பதுதான் பிரபாவுக்கு ஆர்வமாக இருந்தது.

திருப்பதி வீட்டில் முதல் நாள் இரவு. அவன் அழைத்ததும் உடனே ஒட்டிக்கொண்டாள். அந்த நேரமும் வந்தது. ஹைப்ரிட் நேரம்; அதேதான் நடந்தது; இப்போது, இதை எதிர்பார்த்து இருந்ததால், பிரபா எரிச்சல் அடையவில்லை. தூங்கப்போன கணவனைத் தன் பக்கம் திருப்பினாள்.

‘‘இது ஒரு பிரச்னையே இல்லை... கொஞ்சம் கொஞ்சமா சரிப்பண்ணிடலாம்’’ என்று கூறி, மூச்சை இழுத்து வைத்துக்கொள்ளும் தெரபி, பாதியிலேயே எடுத்து விடும் தெரபி போன்றவற்றைச் சொன்னாள். அவற்றை முயன்று பார்க்கலாம் என்று சொன்னாள்.

ஆனால் கணவனுக்குக் கண் இழுத்துக்கொண்டு போனது. எதையும் கேட்கும் மனநிலையில் இல்லை.

மருத்துவரிடம் செல்லலாம் எனப் பிரபா அழைத்தபோது கணவன் கடுப்பானான்.

‘‘எனக்கு எந்த பிரச்னையும் இல்லை. உன்னை பார்த்தா ரொம்ப மூட் ஆயிடறேன். சீக்கிரம் வந்துடுது. கொஞ்ச நாள்ல சரியாயிடும். இதைக்கூட உன்னால பொறுத்துக்க முடியாதா..?’’ என்று கத்தினான்.

‘‘நான் பொறுத்துக்கறேன். செக்ஸ் முடிஞ்சி நீ ஏன்டா உடனே தூங்கிட்ற..? சும்மா இருந்த என்னை கிளப்பி விட்டுட்டு, நீ தூங்கிடுற. நான் அதுக்கு அப்புறம்தான் ரொம்ப ஆக்டிவா ஆயிட்றேன். நீ கொஞ்ச நேரம் என்கூட ஒக்காந்து பேசலாம் இல்ல..? சும்மா கட்டிக்கலாம், கிஸ் பண்ணலாம், கொஞ்சலாம், உள்ள உட்டு ஆட்றதைத் தவிர வேற ஒண்ணும் தெரியாதா உனக்கு..?" என்று கத்தினாள் பிரபா.

ஒன்றும் மாறவில்லை; அதே தொடை விரிப்பு, அதே வலி, அதே இன்பத்தின் கூர்நாக்கு பட்டவுடன் அனைத்தும் முடிவுக்கு வருதல், அடுத்தக் கணம் கணவனின் குறட்டை; அவன் ஹைப்ரிட்டைக் கூடக் கழுவாமல் தூங்க ஆரம்பித்தான்.

‘‘அவன் எப்ப பாத்தாலும் தூங்கிட்டு இருக்கான்டா. லீவ் நாள்ல மதியம் ஃபுல்லா தூங்கறான். நைட்டும் தூங்கறான். நல்லா நாலு வேளை சாப்படறான். அது இல்லாம ஸ்நாக்ஸ். இவன் என்னை கௌப்பி வுட்டுட்டு தூங்கிடுவான். நான் நைட் ஃபுல்லா முழிச்சிட்டு இருந்துட்டு, அதிகாலை தூங்குவேன். ஆனா ஏழு மணிக்கே எழுந்து இவனுக்கு டிஃபன் பண்ணி தரணும். தூக்கம் சொக்கும், தலை வலிக்கும்" என அர்ஜித்திடம் சொல்லிக்கொண்டு இருந்தாள் பிரபா..!

கணவன் மேல் உண்டான வெறுப்பால், எரிச்சலாய் இருந்து கொண்டிருந்தபோது, மனதுக்கு ஆறுதலாய் ஒத்தடம் கொடுப்பது போல அறிமுகமானவன் அர்ஜித்.

அர்ஜித், திருமணமானவன்; ஆனால், பார்க்க பிரம்மச்சாரி போன்றே தோற்றமளிப்பான். விளம்பரப் படங்கள் எடுப்பவன். அது சம்மந்தமாகப் பேச ஆரம்பித்துப் பற்றிக்கொண்டது. அர்ஜித் மென்மையாக பேசுவான். எதையும் கலை நயத்தோடு செய்வான். பிரபாவின் தோற்றத்தை அங்குலம் அங்குலமாக வர்ணிப்பான். அவள் தினமும் அணியும் ஆடையைப் பற்றி விரிவாக கமெண்ட் செய்வான். அவள் சொல்லும் ஒவ்வொன்றையும் பாராட்டுவான். அவள் சோகத்தில் அழுதால், நாற்பது நிமிடங்கள் வெறுமனே அழுது கொண்டிருந்தாலும் போனை கட் செய்யாமல் கேட்டுக்கொண்டே இருப்பான். ஆறுதல் சொல்வான்.

திருப்பதியில் இருந்து சென்னை வந்திருந்தபோது, அவனுடைய ஸ்டுடியோவுக்கு முதன்முறைச் சென்றாள் பிரபா. அன்று அவளுக்கு பீரியட்ஸ் மூன்றாம் நாள். முதல் சந்திப்பில் கட்டியணைத்து முத்தமிட்டுக்கொண்டார்கள். கட்டி அணைத்தலுக்கும் முத்தமிடுதலுக்கும் எந்தத் தயக்கமும் இருவருக்கும் இல்லை. அந்தத் தயக்கத்தையெல்லாம் சாட்டிங்கிலேயே துடைத்து எறிந்து இருந்தார்கள். அர்ஜித் பிரபாவை அணைத்தபோது, பிரபாவுக்கு அவ்வளவு

நிம்மதியாக இருந்தது. அவனது மார்புதான் அவள் இந்த ஜென்மத்தில் மிக விரும்பிய இடம் எனப்பட்டது.

மரியாதையாக நடத்தி, வெகுநேரம் பேசி, அவளை அனுப்பி வைத்தான் அர்ஜித்.

அடுத்த சந்திப்பில் இருவரும் உறவு வைத்துக்கொண்டார்கள். அது மிகவும் இயல்பாக நடந்தது. முதன்முறையாகப் பிரபாவுக்கு வலி இல்லாமல் உள்ளே நுழைந்தது. அதற்கு இரண்டு காரணங்கள். ஒன்று நீண்ட நேரம் இருவரும் காம முன் விளையாட்டில் ஈடுபட்டது. இரண்டாவது, 'அர்ஜித்தின் மடிப்பூரான்Õ அளவாக இருந்தது. பிரபாவின் யோனிக்குப் பொருத்தமான அளவில் சின்னதாக இருந்தது. நீண்ட நாட்கள் ஹைப்ரிட்டின் ஆதிக்கத்தில் இருந்த பிரபாவின் யோனிக்கு நாட்டு வெண்டைக்காய் போல ஒன்று கிடைத்தது குதூகலமாக இருந்தது.

அர்ஜித், கொஞ்சிக்கொண்டேதான் எதையும் செய்வான். உதாரணமாக, "என் செல்லத் தங்ககுட்டி" என்று சொல்லி முத்தமிடுவான். "அய்யோ, உன் கன்னம் என்னாடீ பஞ்சு மாதிரி இருக்கு" என்று சொல்லிக் கன்னத்தை மெல்லக் கடிப்பான். இதைப்போல எது செய்தாலும் செல்லம் கொஞ்சிக்கொண்டு, பேசிக்கொண்டேதான் முன் விளையாட்டுக்களில் ஈடுபடுவான். யோனிக்கு என்ன சொல்லிச் செல்லம் கொஞ்சி முத்தமிடுவான் என்று நீங்களே கற்பனை செய்து கொள்ளுங்கள். அப்போது பிரபா, "ஆஆஆஆ, நான் செத்துடறேன்டா" என முனகுவாள்.

அர்ஜித்துக்கு நன்றாகப் பாடவும் வரும் என்பதால், உறவு முடிந்ததும் பிரபாவை மடியில் படுக்க வைத்துக்கொண்டு பாடுவான். அப்போது இருவரும் நிர்வாணமாக இருப்பார்கள். பிரபாவின் நிர்வாணத்தைத் தடவிக்கொடுத்துக்கொண்டே, வருடிக்கொண்டே, அமுக்கி விட்டுக்கொண்டே பாடுவான்.

அர்ஜித்துடன் உறவு நடந்து கொண்டிருக்கும் போது மயக்கத்தில் மிதப்பாள் பிரபா. இதைப்போல ஆறேழு சந்திப்புகள் நடந்து முடிந்தன. அனைத்து சந்திப்பும் அர்ஜித்தின் ஸ்டுடியோவில்தான். முதல் இரண்டு சந்திப்புகளுக்குப் பிறகு, கணவனிடம் சென்னைக்கே சென்று விடலாம் என்று நச்சரித்து,

சண்டையாகி, முதலில் பிரபா கிளம்பிச் சென்னைக்கு வந்து அம்மா வீட்டில் தங்கிவிட்டாள். சென்னையில் வந்து தங்கி விட்டாலும் பிரபா நினைத்தால் அர்ஜித்தைப் பார்க்க முடியாது. அர்ஜித் நினைத்தால்தான் பிரபாவைப் பார்க்க முடியும். இது பிரபாவுக்கு ஆறேழு சந்திப்புகளுக்குப் பிறகே உறைக்க ஆரம்பித்தது. இருந்தாலும், பிரபா அவன் மேல் பைத்தியமாக இருந்தாள். அவனைத் திருமணம் செய்து கொள்ளலாம் என்ற முடிவுக்கு வந்தாள். அவனுக்கு முதல் மனைவி இருப்பதைப் பற்றியெல்லாம் கவலையே படவில்லை. அதைப்பற்றி யோசிக்கக் கூட இல்லை. பிரபாவுக்கு முதலிலேயே இதைப்போல ஒரு செக்ஸ் அனுபவம் கிடைத்து இருந்தால் கூட இவ்வளவு எக்ஸைட் ஆகியிருக்க மாட்டாள். ஒரு கசப்பான அனுபவத்தில் விழுந்து, 'வாழ்க்கையே போச்சி' என்ற நிலைக்குத் தள்ளப்பட்டு, கடும் ஏமாற்றத்திலும், விரக்தியிலும் இருக்கும்போது கிடைக்கும் ஒரு நல்ல அனுபவம், அதனுடைய உண்மையான மதிப்பைத் தாண்டி பல மடங்கு பெரிதாகத் தோன்றி விடுகிறது. அர்ஜித்துடன்  லிவ் இன் ஆக இருக்கக் கூடத் தயாரானாள் பிரபா.

தன் கணவனை விவாகரத்து செய்ய என்ன வழிகள் என இணையத்தில் தேடினாள். கணவன் உறவுக்கு அழைத்த போதெல்லாம் தயவு தாட்சண்யமே இல்லாமல் மறுத்தாள். அவனைத் தொடக்கூட அனுமதிக்கவில்லை. நெருங்கி வந்தாலே குத்திக்காட்டித் திட்ட ஆரம்பித்தாள்.

இவளுடைய திடீர் மாற்றத்தையும், எப்போது பார்த்தாலும் மொபைலை நோண்டிக்கொண்டு இருப்பதையும் கணவன் கவனித்து, ஒருநாள் மெதுவாகப் பேச்சு கொடுத்தான்.

‘‘ஓப்பன் ரிலேஷன்ஷிப் பத்தி நீ என்ன நினைக்கிற பிரபா..?’’

‘‘கேள்விப்பட்டு இருக்கேன். தெளிவா என்னான்னு தெரியாது."

‘‘அது, புருஷன் பொண்டாட்டி ரெண்டு பேருமே, மறைக்காம, சொல்லிகிட்டே இன்னொருத்தர் கூட உறவு வச்சிக்கறது."

பிரபாவுக்கு ஆர்வமாக இருந்தது. ‘நீ எவ கூட வேணா போ; நான், அர்ஜித் கூட போயிடறேன். விவாகரத்து கூட தேவையில்லை. சொசைட்டி பிரஷரும் இருக்காது’ என்று மனதுக்குள் துள்ளிய பிரபா,

“ஓ, அப்படியா..? ஓக்கே, ஏன் கேட்ட..?" என்றாள்.

“இல்ல, நமக்குள்ளதான் சரி வர மாட்டேங்குதே, சும்மா ஒரு சேஞ்சிக்கு அப்டி டிரை பண்ணிப் பாக்கலாமா..?" என்றான்.

“ம்ம்... பாக்கலாம். ஆனா, உறவெல்லாம் அப்புறம் வச்சிக்கலாம். முதல்ல பேசிப் பாக்கலாம். அப்புறம் டிராவல் போலாம். அதுவே கொஞ்சம் ரெஃப்ரஷிங்கா இருக்கும்" என்றாள் பிரபா.

“குட் ஐடியா. யாராச்சும் உனக்கு தெரிஞ்சவங்க இருக்காங்களா..?”

பிரபா மித மிஞ்சிய ஆர்வத்தில், அர்ஜித் ப்ரொஃபைலை எடுத்துக் காட்டினாள். “இவர்கூட பேசி இருக்கேன். ஜென்டில்மேன். நீ சொன்னதால, டிராவல் போலாமான்னு யோசிக்கிறேன்" என்றாள்.

'பளாரெ'ன்று அறைந்தான் கணவன்.

உடனே பிரபாவும் திருப்பி அடித்தாள்.

“தேவடியா மாடு, இவன் கூடத்தான் பொழுதன்னிக்கும் பேசிட்டு இருக்கியா..? இவன்கூட டிராவல் புண்டை போறியா..? ரெண்டு நாற முண்டங்களுக்கும் கொலம்பஸுன்னு நெனைப்பு. டிராவல் புண்டை போறாங்களாம், டிராவல் புண்டை. ங்கோத்தா தேவடியா, ரூம் போட்டு ஒழுக்க போறோம்னு சொல்லு. ஒரு பேச்சிக்கு கேட்டா, புருஷன் கிட்டயே இவன்கூட போறன்னு சொல்றியா..? என்னா கூதி அரிப்புடீ ஒனக்கு..? சும்மா ஒக்காந்து கூதி வளத்தா, இப்டிதான்டி பேசத்தோணும். உன்னை வேலைக்கும் அனுப்பி, வீட்டு வேலையும் செய்ய வச்சி மாடு மாதிரி நடத்தி இருந்தா மூடிட்டு இருந்து இருப்ப” என்றான் கணவன்.

“போடா நாயே, பொண்டாட்டி கிட்டயே போட்டு வாங்கறியாடா பொட்டை நாயே; உன்னை நம்பி சொன்னேன் பாரு. எப்ப பாத்தாலும் தின்னு தின்னு தூங்கிட்டு, சும்மா உள்ள வுட்டு ஆட்ட எதுக்குடா உனக்கெல்லாம் பொண்டாட்டி..? ஏன்டா என்னைக் கட்டிகிட்ட..? ஆட்டைக் கட்டிகிட்டு குடித்தனம் பண்ண வேண்டியதுதானே" என்று வெடித்தாள் பிரபா.

“இருடீ, இன்னிக்கே இதை முடிக்கிறேன். உங்க வீட்டுக்கு போன் பண்ணி வர வச்சி நாறடிக்கிறேன்” என்று கறுவினான்.

“கூப்புடுடா, நானும் சொல்றேன். இவனுக்கு ஆண்மையே இல்லைன்னு சொல்றேன். மேட்டரே பண்ணத் தெரியலைன்னு சொல்றேன். அதனாலதான் புள்ளை பொறக்கலைன்னு சொல்றேன்” என்று கத்தியதும்,

இருவரும் கொஞ்சம் அமைதியானார்கள். இருவருக்கிடையில் விரிசல் அதிகரித்தது.

அர்ஜித்துடனான நெருக்கத்தைப் பிரபா அதிகரிக்க அதிகரிக்க, அர்ஜித் விலக ஆரம்பித்தான். உடனே பார்க்க வேண்டும் என்று பிரபா மெசேஜ் அனுப்பினால், பத்து நாட்கள் கழித்துதான் சந்தித்தான்.

பிரபா போன் செய்து அழுதாள். “அழுது முடிச்சிட்டு போன் பண்ணு” என்றான்.

வண்டி வண்டியாகச் சண்டை போடலாம் என்று போனால், நீண்ட நாள் கழித்துப் பார்ப்பதால் ஏற்படும் ரொமான்ஸ் அனைத்தையும் மறக்கடித்தது.

“உங்கூடயே வந்துடறேன், என்னை கல்யாணம் பண்ணிக்கோ” என்றெல்லாம் பிரபா சொல்லும்போது அர்ஜித் கடுப்படித்தான். கொஞ்சல்கள் குறைந்தன; சாட்டிங்குகள் இல்லாமலேயே ஆயின; சந்திக்கும்போது நிறைவான காமம் மட்டுமே மிஞ்சி இருந்தது; மற்ற அனைத்தும் வற்றி விட்டன.

பிரபாவுக்குத் தேவைப்படும் எந்த நேரத்திலும் அர்ஜித் அவளுக்கு கிடைத்ததில்லை. பிரபா டெங்கு ஃபீவர் தாக்கி மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டு, சிகிச்சை எடுத்து முடித்து வந்து மீண்டும் தயாரானவரை அர்ஜித்தைப் பிரபாவால் பிடிக்கவே முடியவில்லை. வந்து பார்க்காததுகூட பரவாயில்லை; அவளுடைய மெசேஜைப் பார்த்து பதில் கூட அளிக்கவில்லை.

இதைக் கேட்டதற்கு, அவளை என்ன என்னவோ குறை கண்டுபிடித்துத் திட்ட ஆரம்பித்தான். “நீ ஏன் இந்த மாதிரி போட்டோ போடற..? இவனுக்கு எல்லாம் ஏன் இளிச்சிகிட்டு கமெண்ட் போடற” என சம்பந்தம் இல்லாமல் விவாதத்தைத் திசைதிருப்பி, அவளை அபத்தமான கேள்விகளுக்கு விளக்கமளிக்கும் நிலைக்குத் தள்ளினான். இதைப்போல, முடிவில்லாக் குற்றச்சாட்டுகளுக்கு பதில் சொல்லிச் சொல்லிக் களைத்துப் போனாள் பிரபா.

ஒரு கட்டத்தில், தான் ஒரு பைத்தியமோ என நினைக்கும் நிலைக்குத் தள்ளப்பட்டாள் பிரபா. இங்கு கணவனுடன் சீர்கெட்ட உறவு; விரும்பிய

இடத்தில் உதாசீனம்; அது மட்டுமல்லாமல் சைக்காலஜிக்கல் ‘‘மைண்ட் கேம்’’ ஆடிஆடி அர்ஜித் பிரபாவைப் பித்துபிடிக்கும் நிலைக்குத் தள்ளினான். டிப்ரஷனுக்குள் சென்றாள் பிரபா. எப்போதேனும் கிடைக்கும் காமம் மட்டுமே ஒரே ஆறுதல். அது முடிந்ததும் மீண்டும் முடிவில்லாச் சண்டை; விடை காண முடியா வாதப் பிரதிவாதங்கள்.

ஒருநாள் இரவு ஸ்டுடியோவில் உறவு முடிந்து தூங்க ஆரம்பித்தபோது, அர்ஜித் தூங்கி விட்டான். தூக்கம் வராத பிரபா, அர்ஜித்தின் லேப்டாப்பை எடுத்து இண்டர்நெட்டில் மேயலாம் என நுழைந்தாள். ஆட்டோ லாகின் மூலம் அர்ஜித்தின் அனைத்து அக்கவுண்டிலும் நுழைய முடிந்தது.

இவளுடன் உறவு முடித்து குளியலறை சென்று இருந்த போது கூடத் தன்னை நிர்வாணப் படம் எடுத்து ஒரு பெண்ணுக்கு அனுப்பி இருந்தது தெரிய வந்தது. நிறைய பெண் தொடர்புகள்; நிறையக் கொஞ்சல்கள்; நிறைய விலக்குதல்கள் எல்லாவற்றையும் பார்த்து மனமருகி அழ ஆரம்பித்தாள் பிரபா.

காலையில் அவன் எழுந்திருக்கும் வரை விழித்திருந்து இதையெல்லாம் கேட்டாள்.

‘‘மொதல்ல நீ என் லேப்டாப்பை எடுத்து பாத்தது தப்பு. கெட் அவுட்’’ என்றான்.

அவமானத்தில் குறுகி ‘‘ஏன்டா இத்தனை பொண்ணுங்க கூட, என்கிட்ட சொல்லிச் சொல்லி என்னை மயக்குன மாதிரியே மயக்கி வச்சிருக்க. எத்தன பொண்ணுங்களை உனக்குத் தேவையில்லைன்னதும் கழட்டி விட்டு இருக்க..? ஒருத்தி சூசைட் பண்ணிக்கப் போறேன்னு தெளிவா மெசேஜ் பண்ணி இருக்கா... அவளுக்கு கூட ஆறுதலா ஒண்ணும் சொல்லாம இக்நோர் பண்ணி இருக்க..?’’

‘‘வெளில போடீன்னு சொன்னேன்.’’

‘‘என்னடா இப்பிடி அசிங்கப்படுத்துற..? ஏன்டா இப்டில்லாம் பண்ற..?’’

‘‘நான் என்னிக்காவது ராமன்னு உன்கிட்ட சொல்லி இருக்கேனா..? உன்னை மட்டும்தான் லவ் பண்றேன்னு சொல்லி இருக்கேனா..? நீ மட்டும் என்னாடீ..? ஒம்புருஷனை விட்டுட்டுதான வந்த..? ரொம்ப யோக்கியம் மாதிரி பேசற..? இப்ப

என்கூட சண்டை போட்டுகிட்டு போய் சும்மா இருப்பியா..? ஒரு வாரத்துக்குள்ள இன்னொருத்தனை புடிச்சி படுத்துக்க மாட்ட..?"

பிரபா விசும்பி விசும்பி அழுது கொண்டிருந்தாள்.

"வந்தமா, செக்ஸ் வச்சிகிட்டமா, போனமான்னு இல்லாம, நொய்யி நொய்யின்னுகிட்டு. உன் சோகத்தை எல்லாம் என் தலையில கொட்டுவ. நீ ஒளுறதை எல்லாம் நாள் முழுக்க போன்ல கேட்டுகிட்டு, உன் கூட போன்லயே குடித்தனம் பண்ணிட்டு இருந்தா, எப்படி வேலை பாக்குறது..?"

உடல் தளர்ந்து எழுந்து நடக்க ஆரம்பித்தாள் பிரபா.

"இப்பவும் உன் மேல எனக்கு கோவம் இல்ல. எமோஷனல் அட்டாச்மெண்ட் எல்லாம் வேண்டாம். எப்ப வேணா கால் பண்ணி, நான் ஃப்ரீயா இருந்தா வா; செக்ஸ் வச்சிக்கலாம். சும்மா லவ்வு, கேரிங்குன்னு குழப்பிகிட்டு இங்க வராத. யாரையும் யாராலயும் கேர் பண்ண முடியாது. அவங்கவங்க கேர் பண்ணிக்க வேண்டியதுதான். பாத்து போ" என்றான் அர்ஜித்.

ஒரு வாரம் சுருண்டு கிடந்தாள் பிரபா. கணவனைப் பார்க்க இப்போது பரிதாபமாக இருந்தது. கொஞ்சம் தேற்றிக்கொண்டு, மீண்டும் அவனுக்குத் தேவையானதைச் செய்ய ஆரம்பித்தாள். அவன் அழைத்தபோது ஒத்துழைக்க ஆரம்பித்தாள். அவனும் இவளுக்கு உடைகள் வாங்கிக் கொடுப்பது, சினிமாவுக்கு அழைத்துச் செல்வது எனக் கொஞ்சம் கொஞ்சமாக மாறினான்.

மருத்துவரிடம் சென்றார்கள்; அவர் லூப்ரிகண்டும் அவனுக்கு ஒரு மாத்திரையும் பரிந்துரைத்தார். குறி பெரிதாக இருப்பதால், யோனியின் இறுக்கத்தால் விரைவில் விந்து வெளியேறிவிடுவதாகச் சொல்லி, அது அவன் குறையல்ல என்றார். அதன் மூலம் தன்னம்பிக்கை பெற்ற கணவனிடம், உடலுறவின் போது முன்னேற்றம் தென்பட்டது.

தமிழ் பாண்டி என்ற பெயர் கொண்ட ஒரு பையன் பிரபாவுக்கு மெசேஜ் அனுப்பிப் பேச ஆரம்பித்தான். பிரபாவும் சும்மா பேசிக்கொண்டு இருக்கையில், சந்திக்க விருப்பம் தெரிவித்தான். போய்த்தான் பார்ப்போமே என்று போன பிரபாவை ஒரு ரெஸார்டுக்கு அழைத்துச் சென்றான். அர்ஜித் ஆரம்பித்தது போலவே ஆரம்பித்தான்.

‘‘சாரி தமிழ், இது எல்லாம் எனக்கு அத்துப்படி; இப்படி ஆரம்பிச்சி அது எதுல போய் முடிப்பன்னு எனக்குத் தெரியும். எவன் எப்படி ஆரம்பிச்சாலும் எண்ட் படுக்கைதான். அந்த ஆரம்பிக்கிறதுலதான் அவனவன் வித்தியாசப் படறான்."

இப்படி ஆரம்பித்த பிரபா, தன் மொத்தக் கதையையும் அவனிடம் சொன்னாள். அவளுக்கு யாரிடமாவது கொட்ட வேண்டும் போல இருந்தது. கொட்டி முடித்துக் கடைசியாக...

‘‘கடைசியா யோசிச்சேன். என் புருஷன் மேல என்ன தப்பு..? சின்ன வயசு, மெச்சூரிட்டி இல்ல, நானும் கொஞ்சம் வெயிட் பண்ணி இருக்கலாம். எவ எவனுக்கோ, கண்ட நாயிக்கு எல்லாம் கால் அமுக்கி விட்டிருக்கேன். என் புருஷனுக்கு செஞ்சா என்ன..? இவ்ளோ பிரச்னையிலயும், அவன்தான் சம்பாதிச்சி குடும்பத்தைக் காப்பாத்தறான். எனக்கும் எல்லாம் செய்யறான். டெங்கு வந்தப்பகூட அவந்தான் ஹாஸ்பிடல் வந்து கவனிச்சிக்கிட்டான். நானும் கொஞ்சம் விட்டுக்கொடுத்தா, இன்னும் நல்லா பாத்துக்கிறான். எவ்ளோ பிரச்னை வந்தாலும் என்னை துரத்தி அடிக்கலை. அர்ஜித் சிம்பிளா கெட் அவுட்டுன்னு சொல்லிட்டான். அதனால, இதெல்லாம் வேண்டாம்; நான், என் புருஷனை காதலிக்க ஆரம்பிச்சிட்டேன். அவன்கூட நிம்மதியா வாழப்போறேன். மாடலிங்க் கம்பனி ஆரம்பிக்கப் போறேன்" என்றாள்.

‘‘சாரி பிரபா, ரொம்ப கஷ்டமா இருக்கு; உன்னை ஹக் பண்ணிக்கட்டுமா..?’’ என்றான் தமிழ் பாண்டி.

‘‘அதெல்லாம் ஒரு மசிரும் வேணாம்; இந்த டெக்னிக்கெல்லாம் எனக்குத் தெரியும். இப்பதானே சொன்னேன்" என்று கூறிச்சிரித்தாள்.

‘‘புரியிது, ஆனா நான் உன்னை லவ் பண்ணிட்டேன். என்னால உன்னை மறக்கவே முடியாது" என்றான் தமிழ்.

‘‘என் ப்ரொஃபைல் பாத்தியா..? மேரீட்னு தானே போட்டு இருக்கேன்."

‘‘ம்ம் பாத்தேன்... ஆனாலும் லவ் வந்துருச்சு."

‘‘சரி, கல்யாணம் பண்ணிப்பியா..?’’

‘‘இல்ல... வந்து, மொதல்ல பழகிப் பாத்து...’’

‘‘அதாவவது, நாலைஞ்சி வாட்டி ஒழுத்துப் பாத்து..." புன்முறுவலோடு நிறுத்தி நிதானமாகக் கேட்டாள் பிரபா.

‘‘இல்ல, இப்ப உன் மூடு சரியில்லை; அதைப்பத்தி பேச வேண்டாம்’’ என்று சொல்லிய தமிழுக்கு முகம் சுருங்கிப் போனது.

வீட்டில் இறக்கி விட்டுச் சென்றான் தமிழ்.

கணவன் மேல் பாசம் கூடிய ஒரு நாளில், கணவன் எதையோ நோண்டிக்கொண்டு இருந்தபோது அவனிடம் அர்ஜித் விஷயத்தைச் சொல்லி மன்னிப்பு கேட்டு விடலாம் என்ற முடிவில் சென்றாள் பிரபா.

‘‘ஏய், உன் கிட்ட ஒரு விஷயம் சொல்லணும்...’’

‘‘சொல்லுடீ.."

பிரபாவுக்குக் கண்கள் கலங்க ஆரம்பித்தன.

‘‘யேய்... அழுவாத, அப்புறம் பேசிக்கலாம். எனக்கு வெளிய ஒரு வேலை இருக்கு" என்று கூறிக் கிளம்பிச் சென்றான் கணவன்.

இதேபோல நான்கைந்து முறை முயற்சித்தாள் பிரபா. ஒவ்வொரு முறையும் அதை எதிர்கொள்ளாமல் தவிர்த்து வந்தான் கணவன்.

ஒரு டூர் போகலாம் என்று முடிவு செய்தனர். அதுவும், புதிதாக வாங்கிய கார் தான் அந்த எண்ணத்தை விதைத்தது. ஒரு வாரம் என முடிவு செய்து இருவரும் கிளம்பினார்கள். திரும்பி வரும்போது மூவராக வந்தார்கள். அது, அப்போது அவர்களுக்குத் தெரியவில்லை.

# பொற்செல்வி – அமிர்த கடேஸ்வரன்

**வி**டுமுறைக்கு ஊருக்கு வரும்போதெல்லாம் ஊரில் இருக்கும் பள்ளிக்குச் சென்று பெண் குழந்தைகளுக்குத் தற்காப்பு பயிற்சி அளித்து வந்தாள் பொற்செல்வி. இரு பாலாருக்கும் ஆங்கிலமும் சொல்லிக்கொடுப்பாள். மருத்துவப் படிப்பு முடித்து ஹவுஸ் சர்ஜனாகப் பணியாற்ற ஆரம்பித்த போதுதான், ஊருக்கு வருகையில் மருத்துவ முகாம் என்று போர்டு போடாமல், ஆனால் இலவசமாக மருத்துவம் பார்த்து மருந்து கொடுக்கத் தொடங்கி இருந்தாள்.

என்னதான் பொற்செல்வி நகர வாழ்க்கை, ஐந்து நட்சத்திர விடுதி நீச்சல் குளம் எல்லாம் பார்த்து இருந்தாலும், தன் கிராமத்து வீட்டுத் தோட்டத்தில் இருக்கும் தாமரை மலர்ந்த குளம்தான் அவளுக்கு இஷ்டம். அப்பாவிடம் சொல்லிக் குளத்துக்குப் பக்கத்திலேயே ஒரு தடாகம் கட்டி, நவீனமான குளியலறையும் கட்டிக்கொண்டாள்.

அமிர்த கடேஸ்வரன், பொற்செல்வியை உயிருக்கு உயிராகக் காதலித்து வந்தாலும், அதைச் சொல்ல பயந்து கொண்டு, அவளுக்குத் தெரியாமலேயே அவள் பின்னால் சுற்றிக்கொண்டு இருந்தான். நல்ல மென்பொருள் நிறுவனத்தில் நல்ல சம்பளத்தில் வேலையில் இருக்கிறான். பொற்செல்வி விடுமுறைக்கு ஊருக்கு வந்திருப்பது தெரிந்து அவனும் ஊருக்கு வந்திருக்கிறான்.

ஒருமுறை, பொற்செல்வி இருக்கும் தெருவில் அடி வாங்கிக்கொண்டு ஓடிய அமிர்து அன்று இரவு ஒரு விலைமாதுவிடம் சென்றான். அவளை அவனுக்குப் பிடித்துப் போனதால், அவளிடம் அடிக்கடி செல்ல ஆரம்பித்தான். அவள் மூலமாகப் பல விலைமாதுக்களின் தொடர்புகள் கிடைத்தன.

அதில் ஒரு விலைமாதுவின் கணவனே அவளை வைத்துத் தொழில் செய்பவன். அந்தக் கணவன், உறவு கொள்வதை ஜன்னல் வழியாகப்

பார்ப்பான். அதை முன்பே சொல்லி விடுவான். முதலில் அமிர்துக்கு அது சங்கடமாக இருந்தாலும் ஒரு கட்டத்தில் அது மிகவும் பிடித்துப் போனது.

ஒருநாள், ஒரு போலீஸ்காரர் மனைவியைத் தேற்றி, அவர் வீட்டிலேயே மேட்டர் செய்து கொண்டிருக்க, அவர் எதிர்பாரா விதமாக வந்து, இவன் மாட்டிக்கொண்டு, இரவு முழுக்க வீட்டில் கட்டி வைத்து அடித்துக் காலையில் துரத்தி விட்டார். சென்னையிலும் வேலை செய்யும் இடத்திலும் அமிர்துக்குச் சில பெண் தோழிகள் உண்டு. ஆனால் காதல் என்று வந்து விட்டால், அமிர்துக்கு பொற்செல்விதான். காதல் கூட அல்ல, பொற்செல்விதான் அமிர்துக்கு மனைவி. அவளுக்காக உயிரையும் கொடுக்கத் தயாராக இருந்தான்.

"பொண்ணாடா அவ..? எல்லாருக்கும் ஹெல்ப் பண்றா. நல்லா படிக்கிறா, மியூசிக் தெரியும், டேன்ஸ் ஆட்றா, கராத்தே தெரியும், நல்லா சமைக்கிறா, அவ்ளோ அழகா இருக்குறா, எவனையும் ஏறெடுத்து பாக்கறது இல்ல" என்று தன் நண்பர்களுடன் தண்ணி அடிக்கும்போது சொல்லி இருக்கிறான். எப்படியும் தன் காதலைச் சொல்லி விடுவது என்றுதான் குளத்தில் குளிக்க வந்தான்.

முதலில் தன் நண்பனிடம் காதல் கடிதம் கொடுத்து, பொற்செல்வியிடம் கொண்டு கொடுக்கச் சொன்னான். அவன் நீச்சல் அடித்துக்கொண்டே சென்று, எசகு பிசகாகப் பொற்செல்வியின் தனிப்பட்ட குளியலறைக்குள் எட்டிப்பார்க்க, தாவாங்கட்டையிலும் இடுப்பிலும் மார்பிலும் மாத்து வாங்கிக்கொண்டு குளத்தில் விழுந்தான் நண்பன்.

பொற்செல்வி முட்டிக்கால் வரை இறுக்கமான நீச்சலுடை அணிந்து, மேலே முழுவதும் மறைக்கக் கூடிய நீச்சல் டீ ஷர்ட் அணிந்து இருந்தாள். எட்டிப்பார்த்தவனை நையப்புடைத்து விட்டு, குளத்தில் நீந்தி குளித்தாள். தைரியத்தை வரவழைத்துக்கொண்ட அமிர்து பொற்செல்வியை நோக்கி நீந்தினான். பொற்செல்வியின் வேகத்துக்கு ஈடுகொடுக்க முடியவில்லை. குளத்தை வேகமாக ஒரு சுற்று சுற்றிய பொற்செல்வி, மீண்டும் தடாகத்திற்குள் தாவி விழுந்து குளியலறைக்குள் சென்று வெந்நீர் இருக்கும் பாத்டப்பில் விழுந்தாள்.

அமிர்துக்கு நீச்சல் அடித்து மூச்சிறைக்க ஆரம்பித்தது.

# கன்யா

க ன்யா – இறந்த காலம்

துடிப்பான பெண்ணான கன்யாவுக்கு எல்லாமே துடிப்பாக இருந்தது. சாதாரணமாகப் பார்த்தால் சராசரி மார்பகம் போல இருக்கும். ஸ்பெஷலாகப் பார்த்தாலும் சராசரி மார்பகம் போலத்தான் இருக்கும் என்று வையுங்களேன். இங்கு இப்போது ஒரு சிக்கல் வருகிறது. ‘‘அவிழ்த்து’’ என்ற வார்த்தையைப் பயன்படுத்தி அவிழ்த்துவிட்டுப் பார்த்தால் மலைப்பாக இருக்கும் என்று எழுதினால் ஆபாசம் என்று முளைத்து மூன்று இலை விடாதது கூட சொல்லும். இதையே உடையில்லாமல் பார்த்தால், வெற்றுடம்புடன் பார்த்தால் என்று எழுதினால் ஆபாசம் அல்ல என்று ஆசுவாசம் அடைவார்கள்.

இங்குதான் ஒரு நுட்பம் இருக்கிறது. அதெல்லாம் ரசனையில் கரை கண்டவனுக்குத்தான் தெரியும். எந்த ரசனையா? பெண்களைத் தாண்டி என்ன ரசனை இருக்கிறது? பொண்டாட்டி நாவலில் ஆணாதிக்கம் தலை தூக்குகிறது இது ஒரு ஆணாதிக்கப் படைப்பு என்று முணுமுணுக்கலாம். ஆனால் பெண்களைப் பெண்களாலும் ரசிக்க முடியும். ஆண் ஜென்மங்களை ஆண்களால் ரசிக்க முடியுமா? புல்புல் கூட பாருங்கள் ‘அவளைப் போடணும்' போல இருக்கு என்று போஸ்ட் போடுகிறார்.

நுட்பம், ரசனையை விட்டுவிட்டு எங்கேயே போய் விட்டோம். என்ன நுட்பம் என்றால் – உடையின்றிப் பார்ப்பதற்கும் அவிழ்த்துப் பார்ப்பதற்கும் வித்தியாசம் உள்ளது. ஆனால் பல ஜென்மங்களுக்கு இது தெரியாது. உடையின்றி என்றாலெல்லாம் தூங்கிக்கொண்டு இருக்கும். அவிழ்த்து என்றால் ஒருவர் அவிழ்க்கும் போது, அந்தப் பெண், மார்பை முன்னகர்த்தி, தோளை விரிப்பாள். இந்த நுணுக்கத்தையெல்லாம், எழவு, தமிழ் கூறும் நல்லுலகில் சொல்லிக்கொடுத்துக்கொண்டு நாவல் எழுதினால் நாவல் முடிந்த மாதிரிதான்.

மார்பகத்தைப் போலவே அவளையும் சாதாரணமாகப் பார்த்தால் சராசரிப்பெண் போலவே தெரிவாள். அது கெடக்கட்டும், அவிழ்த்துப் பார்த்தால்

கன்யாவின் மார்பகம் எப்படி இருக்கும் என்று சப்புக்கொட்டிக் கேட்கிறீர்கள் பாருங்கள், அது மேட்டர்.

கன்யாவின் மார்பகத்தை மெரினா பீச்சில் கை வியர்வையோடு தடவி தீப்திகாவிடம் திட்டு வாங்கினானே, அவன் யுவன், அல்லது புவன் என்று கூட பெயர் வைத்துக்கொள்ளலாம். அவன்தான் கன்யாவைத் திருமணம் செய்து கொள்ளப்போகிறவன்.

முதன்முதலில் அவிழ்த்துப் பார்த்தவன் நகுலன் இல்லை முகுந்த் என்று கூட வைத்துக்கொள்ளலாம். பெயரா மேட்டர்? இவர்கள் இருவரையும் இனி இரண்டு பெயர்களிலேயே மாற்றி மாற்றி அழைக்கலாம்.

கன்யாவுக்கும் நகுலனுக்கும் தொடர்பு ஏற்பட்டது மிகமிகச் சாதாரணமான ஒன்று. ஆன்லைனில் ஒரு சின்னத் தொடர்பு ஏற்பட்டு, அதை இருவரும் மறந்து போனார்கள். முகுந்துக்கும் கன்யாவுக்கும் ஏற்பட்ட தொடர்பைப் பார்ப்பதற்கு முன்னால், கன்யாவுக்கும் யுவனுக்குமான தொடர்பை, மூன்று வரிகளில் பார்த்து விடலாம்.

கன்யா சென்னை வந்த புதிதில் உருவான நண்பர்கள் கூட்டத்தில் ஒருவன் புவன். மூன்று வரி என்பது ஒரு கோட்டாதான். ஒரு வரியில் முடித்து விட்டாகி விட்டது என எழுதுவதற்குள் இரண்டு வரி ஆகி விட்டது.

தூய நட்பு என்று சொல்வார்களே, அது போல இருவரும் தூய நட்போடு பழகினார்கள். தொட்டுக்கொண்டாலும் இருவருக்குள்ளும் திரவங்கள் ஏதும் சுரந்ததில்லை. இந்த தூய நட்பு சில வருடங்கள் தொடர்ந்தது. ஒரு நாள், யுவன், "நாம ஏன் கல்யாணம் பண்ணிக்கக் கூடாது என்று கேட்டான். அட ஆமால்ல, நாம கல்யாணம் பண்ணிக்கலாமே" என்று பதில் சொன்னதில் இருந்து இருவரும் காதலர்கள் ஆனார்கள்.

இருவருக்கும் ஒருவரை ஒருவர் அவ்வளவு பிடித்து இருந்தது. ஒருவருக்கு ஒருவர் அவ்வளவு உதவிக்கொண்டார்கள். கம்பேட்டி பிலிட்டி என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே, அதைத்தான் தமிழில் இணக்கம் என்று சொல்வார்கள். இணக்கம் என்று சொன்னாலே, மேட்டர் சம்மந்தப்பட்டதுதான் ஞாபகம் வரும் இல்லையா? அது இல்லை, மேட்டர் இல்லாத மற்ற அனைத்து

விஷயங்களிலும் இருவருக்கும் இணக்கம் இருந்ததால் கம்பேட்டிபிலிட்டி என்று சொல்ல வேண்டியதாகி விட்டது.

காதலிக்கலாம், திருமணம் செய்து கொள்ளலாம் என்று முடிவு செய்தாலும் தூய நண்பர்கள் போலவே தொடர்ந்தார்கள். இவ்வளவு நாட்கள் தூய நண்பர்களாகத் தொடர்ந்தவர்கள், ஒரு தியரட்டிக்கல் முடிவு எடுத்ததன் காரணமாக, உடனே பிராவையும் பேண்ட்டியையுமா அவிழ்க்க முடியும்?

அதற்குதான் நகுலன் எண்ட்ரி. முகுந்த் எண்ட்ரி மொக்கையாகத்தான் இருந்தது. 'ஹாய் ஹாய்' சொல்லிக்கொண்டு, எலிமெண்டரி ஸ்கூல் பிள்ளைகள் போலப் பேசிக்கொண்டு ஆஃப் லைன் சென்றார்கள்.

பெண்களும் சரி, ஆண்களும் சரி, பழைய சாட்டுகளை நோண்டு வார்கள். அப்போது ரேண்டமாக ஏதேனும் ஒரு பழைய சாட்டை எடுத்து ஹாய் போடுவார்கள். அப்படி கன்யா பொழுது போகாமல் நகுலனுக்கு ஒரு ஹாய் போட, முகுந்த் அப்போது நியாயமான போதையில் இருக்க சாட் நீண்டது.

இதே யுவன் அப்போது கன்யாவுக்கு சாட் தீனி போட்டு இருந்தால், கன்யா நகுலனுக்கு ஹாய் போட்டு இருக்க மாட்டாள்.

புவன் சாட் தீனி போடாமல், கன்யா நமக்குத்தான் என்ற மித மிஞ்சிய மிதப்பில் எங்கோ ஏதோ செய்து கொண்டிருக்க நகுலன் கன்யாவின் சாட்டைத் தொடர்ந்தான்.

போதை அதிகமாகித் தூக்கம் வந்தது முகுந்துக்கு.

இப்போது வரை கன்யாவும் யுவனும் புவனும் போலவே , கன்யாவும் நகுலனும் முகுந்தும் தூய நண்பர்கள்தான். போதையில் தூக்கம் வந்ததால், போதையில் ரிஸ்க் என்று தெரியாமலேயே ஒரு ரிஸ்கை எடுத்தான் நகுலன்.

‘‘ஒரு கிஸ் கிடைக்குமா?" என்று மெசேஜ் அனுப்பினான் முகுந்த்.

‘‘போன்ல மட்டும்தான்" என்று ரிப்ளை வந்தது.

‘‘ஓக்கே.’’

‘‘ஒரு தடவை மட்டும்தான்."

‘‘ஓக்கே.’’

“Ummauh.”

அதுவரை டம்ப்ப்ப்ச் என்று ஆன்லைனில் முத்தம் கொடுத்துக் கொண்டிருந்த நகுலனுக்கு, இந்த உம்மாவ் மாடு கத்துவது போல இருந்தாலும், கிக்காக இருந்தது.

“இன்னொண்ணு ப்ளீஸ்."

“ஒண்ணுதான்."

“ப்ளீஸ் ப்ளீஸ்."

“Ummauh.”

“மெசேஜ் போதும், வாய்ஸ்ல குடுக்கறியா?"

“ஒரு தடவைதான்."

“ஓக்கே, கால் பண்ணாத."

“ஹ்ம்ம்."

கால் செய்தான் நகுலன்.

சாட்டுக்கு சம்மந்தம் இல்லாமல், “எப்டி இருக்கீங்க?" என்றாள் கன்யா.

“நல்லா இருக்கேன், நீங்க?” என்று கேட்டு விட்டு முழித்து அடுத்த ரவுண்ட் கவிழ்த்துக்கொண்டான் முகுந்த்.

“ஹ்ம்ம்."

அடுத்த ரவுண்ட் கொடுத்த தைரியத்தில் “ஒரு கிஸ் பண்ரேன்னு சொன்னீங்களே?”

“ஒரு தடவைதான்.”

“ஓக்கே.”

“உம்மாவ்.”

“ம்ப்ப்ப்ச்.”

“உம்மாவ்.”

“ம்ப்ப்ப்ச்.”

“உம்மாவ்.”

“ஐ லவ் யூ.”

போன் கட்டானது.

சிறிது நேரம் கழித்து கன்யா என டிஸ்பிளே காட்டியது.

“ஹலோ.”

“ஹலோ.”

“ஏங்க கட் பண்ணிட்டீங்க?”

“சாரிங்க, எங்க அம்மா, யார் கூடடீ கடலை போட்டுட்டு இருக்கன்னு கேட்கறாங்க... ஹ்ஹாஹஹ்ஹா.”

“ஐயோ, மாட்டிக்கிட்டீங்களா!?”

“யுவன் கூட பேசும் போது கூட மாட்டிகிட்டது இல்லை, உங்க கூட பேசும் போதுதான் மாட்டிகிட்டேன்.”

“ஓ, சரிசரி, இப்ப ஃப்ரிய்யா?”

“ம்ம்."

“ஐ லவ் யூ.”

“மீ டூ.”

“தேங்க்யூ.”

“ஆனா போன்ல மட்டும்தான்.”

“ஓக்கே, நான் போன்ல மட்டும் இல்ல, எல்லாத்துலயும்.”

“ம்ம்.”

“கிஸ் யூ.”

“மீ டூ."

“ஹக் யூ.”

“மீ டூ.”

“ஃபக் யூ.”

“செருப்பு :—)”

“அதோடதான்.”

# கன்யா — நிகழ்காலம்

கன்யா நடனமாடிக்கொண்டு இருந்தாள். கன்யாவுக்கு கேக்குகள் பிடிக்கும். நடனமாடிக்கொண்டே ஃப்ரிட்ஜிக்குள் கேக் இருக்கிறதா என்று பார்த்தாள் இல்லை. அவளுக்கு நகுலன் நினைவு வந்தது. இரவு மணி இரண்டு ஆகி இருந்தாலும் கேக் வேண்டுமென்றால், அவளைத் தூக்கிப்போட்டுக்கொண்டு கேக் வாங்க கிளம்பி விடுவான்.

“ஐ நீட் எ கேக்” என நகுலனுக்கு மெசேஜ் அடித்தாள்.

அந்த மெசேஜ் முகுந்துக்கு சென்று சேரவில்லை.

கன்யா — எதிர்காலம்

கன்யாவுக்குக் குழந்தையைப் பார்த்துக்கொள்வதே இன்பமாகவும் எரிச்சலாகவும் மாறி மாறி இருந்தது. இதில் வேலைக்கும் போக வேண்டி வந்தது, பெரும் தொந்தரவாக இருந்தது. அவளின் இறந்த காலத்தில், வேலையை மட்டும் எப்போதும் விட்டுவிடாதே என்று நகுலன் சொல்லி இருந்தான்.

கன்யா — இறந்த காலம்

யுவன் காதலைச் சொல்லி நீண்டநாள் கழித்து , முத்தம் கொடுக்க முயற்சித்தான். நெருப்புத் துண்டை மிதித்த குழந்தை போல விலகினாள் கன்யா. பலநாள் முயற்சிக்குப்பின், கன்னத்தில் ஈரமில்லா முத்தம் கொடுக்க அனுமதித்தாள். புவன் ஒருமுறை அவளின் மார்பகத்தை தொட முயற்சித்து அறை வாங்கினான். இவர்கள் கதை இப்படி போய்க்கொண்டு இருக்க,

முகுந்தும் கன்யாவும் முதன்முதலில் பார்க்கப் போவதற்கு நாள் குறித்த போது பேசிக்கொண்டது...

“நான் காலை ஆறு மணிக்கு வந்து இறங்கிடுவேண்டா.”

‘‘நான் வந்து பிக் பண்ணிக்கவா?’’

‘‘வேண்டாம், என் ஃபிரண்டு ரூமுக்கு போயிட்டு, ரெஃப்ரஷ் ஆயிட்டு வந்துடறேன்’’

‘‘ஓக்கே, புடவை கட்டிட்டு வறியா?’’

‘‘உனக்கு புடவைதான் பிடிக்குமா?"

‘‘புடவைல உன்னைப் பிடிக்கும்.’’

‘‘ஏன்?’’

‘‘புடவை செத்துட்டு இருக்குடீ, உன்னைப்போல மார், இடுப்பு உள்ளவதான் புடவைக்கு வாழ்வளிக்கணும்.’’

‘‘என் மாரை பாத்தியா?"

‘‘இல்ல, ஆனா உன் கண்ணோட கான்ஃபிடன்ஸ்லயே உன் மார் தெரியிதுடீ."

‘‘சரி, புடவை கட்டிட்டு வரேன், ஆனா உனக்காக, எனக்கு புடவை பிடிக்காது.’’

‘‘எனக்கும் தாண்டீ, உன்னைப் பார்ப்பதற்கு முன்னால் புடவை பிடிக்காது.’’

காலை எட்டு மணிக்கு கன்யாவை நகுலன் பைக்கில் ஏற்றினான். தன்னுடைய நண்பன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். நண்பன் வீடு, நண்பனின் மனைவியுடன் கூடிய பெரிய வீடு; ஊரில் இல்லாததால் ஜாக்பாட்.

புடவையில் அம்சமாக இருந்தாள் கன்யா.

எந்தத் தயக்கமும் இல்லாமல், இருவரும் ரெஸ்ட் ரூம் சென்று சிறுநீர் கழித்தபின் கட்டிக்கொண்டார்கள்.

அதைப்பற்றி கன்யா பிறிதொரு நாளில், நகுலனுக்குக் காதல் கடிதம் அனுப்பினாள். அதில் ‘இட் ஈஸ் ஏ வாவ் ஃபீலிங்க்' என்று தமிழில் நீட்டி முழக்கி எழுதி இருந்தாள். அதுவரை கன்யா காதல் கடிதம் எழுதினாளில்லை. முகுந்த் கேட்டுக்கொண்டதற்கிணங்க எழுதிய கடிதம் அது. அந்தக் கடிதம் இப்போது எங்கோ இருக்கிறது, அழியவில்லை.

கட்டிக்கொண்ட பின் முகுந்த் அவளின் வயிற்றில் கை வைத்தான். டால்ஃபின் போலத் துள்ளினாள் கன்யா. அந்த துள்ளல் முகுந்துக்குப் பிடித்து இருந்ததால், துள்ள வைத்துக்கொண்டே இருந்தான்.

அன்று நகுலன் அவளின் எந்த ஆடையையும் கழட்டவில்லை; உதட்டு முத்தத்திற்கு எதிர்ப்பு இல்லையெனினும், எவ்வளவு நேரம்தான் உதட்டு முத்தம் பதிப்பது. பற்களை எல்லாம் முத்தம் கொடுத்துச் சுத்தப்படுத்தியாகி விட்டது; அவளைப் படுக்க வைத்தான், உடைகளோடுதான். மேலே படர்ந்தான்; இருவரும் உடைகளோடு கட்டிக்கொண்டார்கள்; உடைகளோடே இயங்க ஆரம்பித்தார்கள்.

அவள் புடவை ரவிக்கையில் இருக்க, இவன் பேண்ட் டீ ஷர்டில் இருக்க, இயல்பான புணர்ச்சியை விட இது கிளுகிளுப்பாக இருந்தது.

கன்யா அவனை இழுத்துக் கட்டிக்கொண்டாள். ஆனால் இன்னொரு கையால், தன்னுடைய புடவையை அவன் மேலே தூக்கி விடக்கூடாது என்று அதையும் பிடித்துக்கொண்டு இருந்தாள். அதுவே நகுலனுக்கு மாபெரும் கிக்காக இருந்தது. முழுக்க முழுக்க உடைகளோடு ஒரு சம்போகம் அன்று நடைபெற்றது. நகுலனுக்கு விந்து வெளியேறி அவள் மீது துவண்டு விழுந்தான்.

ஒருவன் முதன்முதலில் துவண்டு விழுவதை அனுபவித்த கன்யா அவனை அணைத்துக்கொண்டாள்.

# கன்யா – எதிர்காலம்

“என்னோட கல்யாணத்துக்கு வறியாடா?”

“வேணாண்டீ, உனக்கு டிஸ்டர்பன்ஸா இருக்கும்.”

“உனக்கு இருக்காதாடா?”

“எனக்கு இருக்காதுடீ.”

“ஏண்டா?.”

“எனக்கு எப்பவும் நீ என் கன்யாதாண்டீ.”

‘‘லவ் யூ டா."

‘‘லவ் யூ செல்லம்.’’

‘‘உன் ஆளு எப்பிடிடா இருக்கா?"

‘‘நல்லா இருக்காடீ."

## கன்யா – நிகழ் காலம்

ஃப்ரிட்ஜில் கேக் இல்லாததால் சாக்லேட்டை எடுத்துக்கொண்டு வாயில் கொடுத்தபடியே ஹாலுக்கு வந்தாள். பிரபா கண்களைச் சொருகியபடியே, ‘‘ஓத்தா, ஏமாத்திட்டான், கல்யாணத்துக்கு ஒத்துகிட்டான்" என்று புலம்பியபடி சோஃபாவில் கிடந்தாள்.

அவளை எழுப்பிப் பார்த்தாள் கன்யா. அவள் புலம்பியபடியே இருந்தாள். பிரபாவின் உதடுகள் உண்மையிலேயே பழுத்த கோவைப்பழம் போல இருக்கும். கன்யாவுக்கு, அவளுக்குள் மறைந்திருந்த ஏதோவொன்று போதையில் வெளிப்பட, பிரபாவைக் கட்டிக்கொண்டு, அவளின் உதட்டில் முத்தம் கொடுத்தாள்.

பிரபாவும் கன்யாவின் உதட்டைக் கவ்விக்கொண்டாள். இருவரும் ஒருவரின் முலைகளை இன்னொருவர் பிடித்துக்கொண்டனர். இதை ஏதும் கவனிக்காத, தீப்தியும் ஆதிரையும் ஏஞ்சலினும் உச்சக்கட்ட ஆட்டம் போட்டுக்கொண்டு இருந்தனர்.

## கன்யா – இறந்த காலம்

அடுத்தடுத்த சந்திப்புகளில் நகுலனுக்கு கன்யா நெஞ்சைப் பிளந்து காட்டினாள். காட்டினாள் என்று கடந்த வாக்கியம் முடிவடைந்தாலும் முகுந்த் கன்யாவின் பிரேசியரை விடுவிக்க எடுத்த முயற்சியின் வெளிப்பாடுதான், கன்யாவின் முலைகளின் எழுச்சிக்குக் காரணம். இதை நியூட்டனின் மூன்றாம் விதியோடு ஒப்பிட்டுப் பார்க்கலாம் எனினும், அதில் ஒரு சிக்கல் உள்ளது.

சட்டியில் இருந்தால்தான் ஆப்பையில் வரும் என்ற பழந்தமிழர் பழமொழியை நியூட்டனின் மூன்றாம் விதி கணக்கில் எடுத்துக்கொள்ளவில்லை.

அசந்து தான் போனான் நகுலன்; அவ்வளவு அப்பழுக்கற்ற முலை கன்யாவுடையது. திரிஷா முலை என்ற பெயரில், குளியலறைக் காட்சிகளில் வரும் முலைகளுக்கு எல்லாம் சவால் விடும் முலை கன்யாவுடையது. குப்பையில் கிடந்தாலும் குன்றின் மணி நிறம் போகுமா என்பதுபோல, மொக்கை பிராவுக்குள் கிடந்தாலும் கன்யாவின் முலை சோடை போகுமா என்பது போல நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையுமாக இருந்தன கன்யாவின் முலைகள்.

ஆனால் கன்யாவின் காம்பில் ஒரு முடி இருந்தது. ஒரே ஒரு முடிதான்; அதை எடுக்கச் சொல்லிப் பார்த்தான் நகுலன். ‘‘அதெல்லாம் வேணாம்’’ என்றாள் கன்யா.

இவ்வளவு நடந்தும் கன்யா நகுலனை ஓரல் செய்யவில்லை, முகுந்தும் கன்யாவின் பேண்டியை கழட்டவில்லை.

# கன்யா – எதிர் காலம்

யுவனும் கன்யாவும் மதிய உணவுக்கு ஒரு உணவகத்தில் சந்தித்துக் கொண்டார்கள். கல்யாணப் பேச்சு இரு வீட்டிலும் ஆரம்பித்ததைத் தொடர்ந்து இவர்களும் அது சம்பந்தமாகப் பேசிச் சண்டை முற்றி யுவன் போட்டிருந்த மோதிரத்தைக் கழற்றி புவன் முகத்துக்கு நேராக விட்டெறிந்து விட்டுக் கிளம்பி விட்டாள் கன்யா.

இது நடந்த மறுநாள் நகுலனைச் சந்தித்தாள். நீண்ட நேரம் இருவரும் ஒன்றாக இருந்ததால் அன்று நகுலன் எல்லை மீறி அவளின் பேண்ட்டியை அவிழ்க்க முயற்சித்தான்.

"ஏய் ஏய் ஏய்..." என கன்யா பேண்ட்டியை ஒரு கையால் பிடித்துக்கொண்டு இருக்க, முகுந்த் வெளியே தெரிந்த வரைக்குமான மேல் யோனியில் முகம் புதைத்தான். இறுக்க பேண்ட்டியை பிடித்து இருந்த கன்யாவின் கை நழுவியது, முழுக்க அவிழ்த்த முகுந்த், முற்றாக முகம் புதைக்க, வாழ்வில்

முதன்முறையாக நாத்தீண்டலை அனுபவித்து உடல் முழுக்கப் பரவசம் உணர்ந்தாள் கன்யா.

இதற்கு முன்பு பேண்ட்டியை முற்றிலும் அவிழ்ப்பதற்கு முன்பாக, ‘‘பயப்படாதே நான் ஃபக் பண்ண மாட்டேன்" என்று சொல்லி இருந்தான் நகுலன். பேண்ட்டியை முழுதாக அவிழ்க்க விடுவதற்கு இதுவும் ஒரு காரணம்.

தேவையான அளவு இன்பத்தை வழங்கிய பிறகு எழுந்த நகுலன், ‘‘என்னோடதைப் பாக்கறியா?’’ என்றான்.

'ம்ம்...’ என்று வெட்கச் சிரிப்போடு தலையைக் குனிந்துகொண்டு கண்களை மேல் நோக்கினாள். நகுலன் எடுத்துக் காட்டினான். குறுகுறுப்பாக பார்த்துக்கொண்டிருந்த கன்யாவிடம் ,

"பிடிச்சி பாக்கறியா?" என்றான்.

‘‘வேண்டாம்" என்பதை வேண்டும் போலச் சொன்னாள்.

அவள் கையைப் பிடித்து அதில் வைத்தான். கைகளை விரித்தே வைத்து இருந்தாள்.

‘‘பிடிச்சிக்கோ" என்றான்.

அவள் கைகள் நடுங்கியது.

‘‘பிடிச்சிக்கோடீ" என்றான்.

இன்னும் கைகளை விரித்தே வைத்திருந்தாள். வெள்ளைத்தாள் மேல் வைக்கப்பட்டு இருக்கும் ரூல் தடி போல இருந்தது அந்தக் காட்சி.

நகுலனே அவளது கைகளை மூடிப் பிடித்துக்கொள்ளச் செய்தான். அப்போதும் பிடித்துக்கொண்டு சும்மாவே இருக்க, அவளை அணைத்துக்கொண்டான். இப்போது கன்யா கையில் இருந்ததோடு சிநேகம் பாராட்ட ஆரம்பித்தாள். அவளை அமரவைத்து அவளின் முகத்துக்கருகே கொண்டு சென்ற போது, வேண்டாம் என விலகினாள்.

‘‘ஏய் என்னா ஆச்சி?’’ என்றான்.

‘‘எனக்கு ஓரல் பிடிக்காது’’ என்றாள்.

‘‘நான் பண்ணும் போது காட்டின?’’

“உனக்கு புடிச்சிது நீ பண்ண, எனக்கு புடிக்காது, நான் பண்ண மாட்டேன்.”

அதோடு அதை விட்டுவிட்டு, அன்றொரு நாள் உடையோடு புணர்ந்ததைப் போல இப்போது உடையில்லாமல் புணர்ந்தார்கள். அதாவது நகுலன், யோனிக்குள் விட மாட்டான். யோனிக்கு மேலேயே வைத்துச் செய்து கொள்ள வேண்டும் என்பதுதான் டீல்.

முதலில் முகுந்துக்கு சற்று சிரமமாக இருந்தாலும் காலப்போக்கில் நன்கு பழகிக்கொண்டான். கன்யாவும் முழு முற்றான புணர்ச்சி போல தன் உணர்வுகளை வெளிப்படுத்தினாள். உச்சகட்டத்தின் போது, “அழகி, என் ரோஜாக்குட்டி" என்று உயிரை உருக்கிச் சொல்லி கன்யா மேல் கவிழ்ந்தான் நகுலன்.

அவனை அணைத்துக்கொண்ட கன்யா, சிறிது நேரம் கழித்து,

“உன்னோட ஆளை செஞ்சி முடிச்சிட்டு, அவ மேல கவிழும் போது என்னடா சொல்வ?” என்றாள்

“அது சீக்ரெட், சொல்ல மாட்டேன்” என்றான்

“என் கிட்ட என்னடா சீக்ரட் சொல்லுடா" என்றாள்.

“இப்ப என் ஆளு, உன் மேல கவுறும் போது, என்ன சொல்வன்னு கேக்கறப்போ, நான் சொன்னா உனக்கு புடிக்குமா?”

“அய்ய, புடிக்காது.”

“அதே மாதிரிதான்.”

“சரி, ஒண்ணு மட்டும் சொல்லு, என் கிட்ட சொன்னதையே, வேற யார்கிட்டயும் சொல்லமாட்டியே?”

“ச்சீ சீ, இது உனக்கு மட்டும் தாண்டி.”

## கன்யா – இறந்த காலம்

நண்பனின் பிறந்தநாள் என்று சொல்லி, கன்யாவை ஒரு முறை யுவன் அழைத்துச் சென்று இருந்தான். காலையிலேயே அழைத்துச் சென்று விட்டான்.

புவன்தான் சாவி போட்டுத் திறந்தான்.

‘‘என்னடா பொறந்த நாள்னு சொன்ன யாருமே இல்லை’’ என்று கன்யா கேட்டதற்கு ‘‘சாயங்காலம் தான் பர்த் டே பார்ட்டி, நாம ஃப்ரியா இருக்குறதால காலைலயே வந்துட்டேன்’’ என்றான்.

வீட்டில் யாரும் இல்லாததால் கொஞ்ச நேரத்திலேயே இயல் பானார்கள்.

யுவன் ஷார்ட்ஸ் மாற்றிக்கொண்டு வந்து, கன்யாவையும் உடை மாற்றிக்கொள்ளச் சொன்னான்.

கன்யா பிரேசியர் மற்றும் பேண்ட்டியோடு இருக்கையில் பின்னால் சென்று அணைத்துக், கன்யாவின் மார்பகங்களைப் பற்றினான்.

திடுக்கிட்டுத் திரும்பிய கன்யா, அவனைத் தள்ளி விட்டாள். அவன் சுவரோடு மோதி விழுந்தான். அவசர அவசரமாகத் தன்னுடைய உடைகளை எடுத்துப் போர்த்திக்கொண்டு,

‘‘வெளிய போடா, ஒடனே வெளிய போ’’ என்று கத்தினாள்.

அவன் பயந்து கொண்டு வெளியேறினான். நீண்ட நேரம் ஆகியும் கன்யா வெளியே வராததால், மீண்டும் அறைக்குள் வந்து பார்த்தான். உடைகளை அணிந்து கொண்டு, முகத்தை முட்டிக்கால்களில் புதைத்துக்கொண்டு அழுது கொண்டிருந்தாள் கன்யா.

# கன்யா – எதிர் காலம்

கன்யா தெளிவாகச் சொல்லி விட்டாள் நகுலனிடம். அவளுக்குச் சின்ன வயதில் எதனாலோ பயம் ஏற்பட்டு விட்டது. யோனிக்குள் எது நுழைந்தாலும் வலிக்கும் என்று பயம். பயம் என்றால் மரண பயம்; அதனாலேயே நகுலனின் விரல்களைக் கூட அனுமதிக்க வில்லை. நாக்கு மெல்லிய, எலும்பில்லா வஸ்து என்பதால் பயமில்லை.

வழக்கம் போல, முன் விளையாட்டுகள் முடிந்து மேற்புணர்ச்சி செய்ய ஆரம்பிக்கும் போது,

‘‘ஏய், அட் லீஸ்ட் அந்த ஸ்டார்ட்டிங்க் பாயிண்ட்லயாவது வச்சிக்கிறேன் டீ, கொஞ்சம் ஹெல்ப் பண்ணு’’ என்றான்.

‘‘போடா நான் ஸ்டார்ட்டிங்க் பாயிண்ட்ல வச்சா, நீ டபக்குன்னு உள்ள சொருகிடுவ எனக்கு பயம்’’ என்றாள். இருந்தாலும் அவளைச் சமாதானப்படுத்தி ஆரம்ப நுழைவாயிலில் கொஞ்ச நேரம் நுழைந்து நுழைந்து பார்த்தான்.

ரோஜாக்குட்டி கொஞ்சல் முடிந்து கொஞ்ச நேரம் கழித்து, ‘‘உன்னைப் பாத்தா, பாவமா இருக்குடா, எனக்கு கல்யாணம் ஆனதும் ஒருநாள் என்னை உனக்கு முழுசா கொடுக்கறேன்’’ என்றாள்.

அதே போல கல்யாணம் முடிந்து, ஒருநாள் வந்தாள்.

அவனைக் கீழே தள்ளி ஆவேசமாக முத்தமிட்டு, அவன் மேல் ஏறி அமர்ந்து இயங்கித் தளர்ந்தாள்.

‘‘எப்படி டீ? பயம் போயிடிச்சா?’’

‘‘ஓரளவு."

‘‘யுவன் தான் செஞ்சி பயத்தை போக்கினானா?’’

‘‘புவனை இன்னும் அலோ பண்ணல.’’

‘‘சரி முன்ன இருந்தே அவனை கிஸ் பண்ண, கட்டிப்பிடிக்க எதுக்கும் அலோ பண்ணலையே, ஏண்டி? உன்னை கட்டிக்கப் போறவனாத்தானே இருந்தான்.’’

‘‘அதான் சிக்கல். அவனை அலோ பண்ணி இருந்தா, கட்டிக்கிறதுக்கு முன்னாடியே படுத்தவதானடி நீன்னு கல்யாணத்துக்கு அப்புறம் சண்டைல சொல்லுவான். மாமியார் வீட்டுக்கும் இது எப்டியாவது தெரிஞ்சி என் மரியாதை போயிடும். காலத்துக்கும் எனக்கு சிக்கலா இருந்திருக்கும்.’’

அன்று போனவள்தான், அதற்குப் பிறகு கன்யாவின் தொடர்பு கொஞ்சம் கொஞ்சமாகக் குறைந்து தொடர்பே இல்லாமல் ஆனது.

ஒருமுறை நகுலன் போன் செய்து ‘‘செக்ஸுக்காக கூட கூப்பிடலைடீ, பார்த்து ரொம்ப நாளாச்சி’’ என்று மன்றாடியபோது, ஒரு காபி ஷாப்புக்கு அவசரமாக வந்து அரை மணி நேரத்தில் பேசி விட்டுச் சென்றாள்.

குழந்தை பிறந்ததால், கொஞ்சம் கனிந்திருந்து இன்னும் செக்ஸியாக இருந்தாள் கன்யா.

அவள் சொல்லிச் சென்றது:

“குழந்தையை கவனிக்கவே நேரம் இல்லடா. வேலைக்குப் போயிட்டு, எப்ப பாத்தாலும் குழந்தை நினைவாவே இருக்கு. வேலை

முடிஞ்சதும் அவளைப் பாக்கதான் ஓடறேன். வேற ஒண்ணும் இல்லை."

நகுலனுக்குப் புரிந்தது. இனி தொடர்பு வைத்துக்கொண்டு, சின்ன அளவில் மாட்டிக்கொண்டாலும் குடும்ப வாழ்வே சிக்கலாகி விடும். கன்யா குடும்பத்தை நேசிக்க ஆரம்பித்து விட்டாள் என்று கன்யாவின் மொபைல் நம்பரை டிலீட் செய்து விட்டு யாரிடம் பேசலாம் என்று யோசித்தபடியே சிகரட் பற்ற வைத்தான் முகுந்த்.

# தீப்திகா — எதிர்காலம்

தீ ப்தி பைக் ரைடிங்க் கிளப்பில் சேர்ந்தாள்; அந்தக் குழுவோடு நான்கைந்து டிரிப் சென்றாள். நிறைய புதிய தோழர்கள் கிடைத்தார்கள். பழைய சொகுசு வாழ்க்கை பழகி இருந்தது தீப்திக்கு. இப்போது அதிலிருந்து விலகி அப்பர் மிடில் க்ளாஸ் வாழ்க்கைக்குத் திரும்புவது மிகவும் சிரமமாகவும் மனஅழுத்தத்தையும் தந்தது. பைக் ரைட் செல்லும் போது எல்லோரும் தீப்திகாவுக்கு முக்கியத்துவம் தந்தார்கள். தீப்தியின் அழகால் வசீகரிக்கப்பட்டுச் சுற்றிச் சுற்றி வந்தார்கள். அது மட்டும் தீப்திக்கு மனமகிழ்ச்சியாக இருந்தது.

ஒரு கூட்டத்தின் நடுவே விஐபி அந்தஸ்த்து கிடைப்பது குதூகலமானதுதானே. ஒரு செலிபிரிட்டி மனப்பான்மையில் இருந்தாள். யாரையும் தனிப்பட்ட முறையில் நெருங்கவிடவில்லை. அவள் அடிமன ஆழத்தில் மீண்டும் ஒரு பெரிய செல்வந்தன்தான் வேண்டும் என்று இருந்திருக்கலாம். வெறும் செல்வத்தை மட்டும் பார்த்துத் தேர்ந்தெடுப்பவள் இல்லை தீப்தி. ஆனால் அதுவும் மிக முக்கியம்.

இந்த டிரிப் கோஷ்டியில் ஒருவனைப் பற்றி அடிக்கடி பேசிக் கொண்டிருந்தார்கள்.

‘‘நம்ம ‘யெஸ்ஸுÕ இருந்தா இதை ஏற்பாடு பண்ணி இருப்பாரு."

‘‘நம்ம ‘யெஸ்ஸுÕ ஒரு போன் பண்ணா உடனே வந்துடும்."

தீப்திகாவுக்கு யாருடா இந்த ‘யெஸ்ஸு' என்று அவ்வப்போது ஆர்வம் வந்தாலும் கேட்டுக்கொண்டதில்லை.

‘‘வாங்க, நல்லா இருக்கீங்களா?" என்றால்

‘‘யெஸ், யெஸ், நல்லா இருக்கேன்" என்பான்.

போன் அடித்தால்,

‘‘யெஸ்" என்றுதான் ஆரம்பிப்பான்.

கோலி பவுண்டரி அடித்தால்

‘‘ய்யெஸ்ஸ்" என்பான்.

‘‘உங்களைப் பார்க்க ஒருத்தர் வந்திருக்காங்க" என்றால்,

‘‘யெஸ் யெஸ் உள்ள அனுப்புங்க" என்பான்.

இது அல்லாமல் வாழ்க்கையில் எதற்கெடுத்தாலும் ‘யெஸ்Õதான்.

அவன் சிகரட் குடிக்க மாட்டான் . யாராவது சிகரட் கொடுத்தால்,

‘‘யெஸ், ஐ டோண்ட் ஸ்மோக் சிகரட்" என்பான்.

இதனால் அவனுக்கு ராமகிருஷ்ணன் என்ற பெயரைத் தாண்டி 'யெஸ்ஸு' என்ற பெயரே நிலைத்து விட்டது.

'யெஸ்ஸு' என்று சொல்லும் போது, சிலருக்குப் புரியாமல், "யெஸ்ஸா? யாருங்க அந்த எஸ்ஸு?" என்று கேட்கும்போது மட்டும், "அதாங்க யெஸ்ஸு. ராமகிருஷ்ணன்" என்று சொல்வார்கள்.

'யெஸ்ஸு' பெரும் பணக்காரன்; எல்லாம் பரம்பரை சொத்துதான்; பல மலைகளில் யெஸ்ஸு குடும்பத்துக்கு எஸ்டேட் இருந்தது. அது அல்லாமல், யெஸ்ஸு குடும்பத்தினர் நிறைய தொழில்கள் செய்து வந்தார்கள்.

இதையெல்லாம் நம்ம யெஸ்ஸு கடமைக்கு, ஓனர் என்ற பெயரில் கவனித்து வந்தான்.

யெஸ்ஸிடம் ஒரு புல்லட் , ஒரு ஹார்லி டேவிசன் , ஒரு ஃபோர் வீல் ஜீப் (ஜீப் பிராண்டே தான்) இன்னும் பலப்பல அட்வென்ச்சர் கலக்ஷன் வைத்திருந்தான்.

ஜாலியாக ஊர் சுற்றுவான். எங்கே எதற்குப் போகிறான் என்று தெரியாது. வெட்டியாக ஊர் ஊராகச் சுற்றிக்கொண்டிருப்பான். தன்னை ஒரு சாகச விரும்பி, டிராவலர் என்று காட்டிக்கொள்ள விரும்புவான்.

ஒரு டிரிப்பின் போது யெஸ்ஸைப் பார்த்த தீப்திக்குப் பிடித்துப் போனது. "யெஸ்ஸு" என்றால் கிழவன் என்று நினைத்துக் கொண்டிருந்த தீப்திக்கு யெஸ் இளைஞனாக இருந்ததே முதல் ஆச்சர்யம். மற்றவர்கள் பேசாமல்

இருந்தால் கூட, சலிக்காமல் யெஸ்ஸு மட்டும் பேசிக்கொண்டே இருந்தான். முக்கியமான விஷயம், அவனைப் பார்த்தால் கொஞ்சம் கூட சிக்கலான (காம்ப்ளெக்ஸ்) ஆள் போலத் தெரியாமல் மிகவும் சிம்பிளாக இருந்தான். எதுவாக இருந்தாலும் மென்மையாக நேரடியாகப் பேசிக்கொண்டிருந்தான்.

தீப்திகாவுக்கு யெஸ்ஸைப் பிடித்தது போலவே, யெஸ்ஸுக்கு தீப்தியைப் பிடித்துவிட்டது. இதுவரை டிரிப்பில் பெண்கள் என்ற பெயரில் ஆண்டிகளையே பார்த்து வந்த யெஸ்ஸுக்கு, தீப்தி மாபெரும் அழகியாகத் தெரிந்தாள்.

இதற்குப்பிறகு எல்லாம் ராக்கெட் வேகத்தில் நடந்தது.

இருவரும் அடிக்கடி சந்தித்துக்கொண்டார்கள். அடிக்கடி ரைட் கிளப் மூலம் ரைட் சென்றார்கள். இருவரும் தனித்தே சில ரைட்கள் சென்றார்கள். “இதைக் கொஞ்ச நாள் வச்சி ஓட்டிப்பாரு" என்று தன்னுடைய ஹார்லி டேவிசன் ‘ஹெரிடேஜ் க்ளாஸிக்கைŐ தீப்திக்குக் கொடுத்தான்.

ஹெரிடேஜ் க்ளாஸிக்கை தீப்தி ஓட்டிக்கொண்டு செல்வதை ஊரே வாய் பிளந்து பார்த்தது. எங்கும் ராஜ மரியாதை. ஐம்பது லட்ச ரூபாய் காருக்குக் கிடைக்கும் மரியாதையை விட இந்த இருபத்தாறு லட்ச ரூபாய் பைக்குக்குக் கிடைத்தது. ஹோட்டல் சென்றால், லாபியிலேயே பார்க் செய்து கொள்ள அனுமதித்தார்கள். ரெஸ்டாரண்ட் சென்றால் பைக்குக்கு என்று தனியாக செக்யூரிட்டி போடப்பட்டான். சிக்னலில் நின்றால் பலரும் போட்டோ எடுத்துக்கொண்டார்கள். ஐம்பது லட்ச ரூபாய் காரையே ஓரங்கட்டிய ஹெரிடேஜ் க்ளாஸிக்குக்கு, இந்த ஹ்யூண்டாய், மாருதி, ஃபோர்ட் எல்லாம் எம்மாத்திரம். இது நின்றால் மற்ற மிட் ரேஞ்ச் கார்கள் எல்லாம் குப்பை வண்டிகள் போலாயின.

யெஸ் வழக்கமாகவே யெஸ் போடுவான். தீப்திகா எது சொன்னாலும் யெஸ் போட்டான். பெண்களுக்கு மறுத்துப்பேசாமல் யெஸ் போடும் ஆட்களை பிடிக்காமலா இருக்கும் . இவன் தன்னுடைய வீட்டுக்கும் தீப்திகாவை அழைத்துப் போனான். திண்டுக்கல்லில் இருக்கும் ஒரு மிகப்பெரிய மாளிகை. தன் வீட்டில் அனைவரையும் அறிமுகப்படுத்தினான். அந்த மாளிகையில் பழைய ஹெரிடேஜ் பொருட்கள் நிறைய இருந்தன. பணம் இழை இழையாக

அந்த வீட்டில் இருந்ததை முகர முடிந்தது. தீப்தி ஒரு அரசியைப் போல உணர்ந்தாள்.

அங்கிருந்து தன்னுடைய எஸ்டேட்டுக்கும் அழைத்துச் சென்றான்.மலை மேல் இருக்கும் எஸ்டேட்டில் ஒரு பங்களா இருந்தது. பழைய பங்களாவில் நவீன வசதிகள் அனைத்தும் இருந்தன. இதுவரை தனித்து இருவரும் எங்கும் சென்றிருந்தாலும் யெஸ் தீப்திகாவை உடல் ரீதியாகத் தொட்டதில்லை. ஒரே கட்டிலில் கூடப் படுத்து இருக்கிறார்கள். ஆனால் அவன்பாட்டுக்கும் யெஸ் யெஸ் என்று முனகிக் கொண்டே தூங்கி விடுவான்.

இந்த எஸ்டேட் பங்களாவில் இருவரும் மது அருந்தி விட்டு குளிர் லேசாக உடலில் வெப்பத்தை ஏற்படுத்த ஆரம்பிக்கும் போது வெளியே வந்தார்கள். எங்கும் பசுமை ரம்யமாக இருந்தது.தீப்திகா சிகரட்டைப் பற்ற வைத்துக்கொண்டு, வேண்டுமென்றே ‘‘வேணுமா?" என்றாள்.

‘‘யெஸ் யெஸ், வேண்டாம், நான் ஸ்மோக் பண்ணறதில்லையே" என்றான்.

அவனே ‘‘இந்த இடம் உனக்கு புடிச்சிருக்கா, கண்ணுக்கு எட்டிய தொலைவு வரை எல்லாம் நம்ம இடம்தான்?" என்றான்.

‘‘எனக்கு எல்லாமே புடிச்சி இருக்கு ராம்கி" என்றாள் தீப்தி. தீப்திக்கு அவனை யெஸ் என்று அழைப்பது பிடிக்கவில்லை.

‘‘தீப்தி, உன்னை எனக்கு ரொம்ப பிடிச்சி இருக்கு" என்று சொன்ன யெஸ், ‘‘ஐ லவ் யூ" என்றான், தூரத்தில் நின்று கொண்டு. தீப்திதான் அவன் அருகில் சென்று "நானும் ரொம்ப லவ் பண்றேன்" என்றாள்.

அடுத்தமாதமே விமரிசையாக இருவரும் திருமணம் செய்து கொண்டார்கள். உள்ளூர் பத்திரிக்கைகளில் செய்தியாகக் கூட வந்தது. நிறைய சினிமாக்காரர்கள், அரசியல்வாதிகள் என பெரும் பட்டாளமே வந்திருந்தது. மிகவும் சந்தோஷமாக இருந்தாள் தீப்தி.

திருமணத்திற்கு வந்திருந்த ஆதிரை மட்டும் ‘‘ஏன்டி இவ்ளோ சீக்கிரம் கல்யாணம்?" என்றாள். திருமணத்திற்கு வந்திருந்த மற்ற தோழிகளும் இதையொட்டியே பேசிக்கொண்டு இருந்தனர்.

திருமணம் முடிந்து முதலிரவன்றுதான் இருவரும் உடலுறவு கொண்டனர். அதற்கு முன்பு கட்டிப்பிடித்து முத்தம் கொடுத்ததோடு நிறுத்திக் கொண்டிருந்தனர். “முதல் உறவு உனக்கும் வேணாம் எனக்கும் வேணாம்" என்பது போல எந்தவித அதீத மகிழ்ச்சியும் இல்லாமல், வஸந்த பவன் மதிய உணவு போல இருந்தது. உச்சகட்டம் வந்து யெஸ் யெஸ் என்றபடி வேலையை முடித்தான் யெஸ். கொஞ்சநேரம் கழித்து, “இந்த தாலி உனக்கு அழகா இருக்கு தீப்தி" என்றான்.

“அப்படியா?" என்று சொல்லித் தாலியைக் கழட்டிப் பார்த்தாள். பிறகு பக்கத்தில் இருந்த டேபிளில் வைத்து விட்டுத் தூங்கிப்போனாள் தீப்தி.

அடுத்த வாரமே ஹனிமூன் என்று திட்டமிட்டு இமயமலை பயணம் சென்றார்கள் இருவரும். தங்கள் ஹெரிடேஜ் க்ளாஸிக்கை முன்கூட்டி மணாலிக்கு அனுப்பி விட்டு, அதை அங்கே எடுத்துக்கொண்டு, முதல் நாள் அதிகாலை கிளம்பினார்கள். முதலில் யெஸ் ஓட்ட ஆரம்பித்தான். யெஸ்ஸுக்கு தீப்தி தன் மனைவி என்பதில் மிகவும் பெருமை. அடிக்கடி தீப்தியை மென்மையாக முத்தமிடுவான். செல்ல அணைப்பு அணைப்பான். ரோத்தாங்க் பாஸ் வரை ஓட்டி வந்த யெஸ் , தீப்திக்கு பைக்கை மாற்றினான். தீப்தி ஜிஸ்பா வரை ரசித்து ஓட்டிக்கொண்டு வந்தாள். ஜிஸ்பாவில் ஒரு தனியார் ரெஸார்ட்டில் தங்கினார்கள்.

அவர்கள் இரண்டு விதமான தங்குமிடங்களைக் காட்டினார்கள். அப்போதே குளிர் புரட்டி எடுத்துக்கொண்டு இருந்தது. அது மாலை நேரம்; முட்டை டிகிரி செண்டிகிரேட் அப்போதே இருக்கலாம். ஒன்று, கட்டடத்திற்குள் ஒரு அறை; மற்றொன்று கூடாரம் போட்டிருந்தார்கள். அது நதிக்கரையை ஒட்டி இருந்தது. நதி உறைந்து கிடந்தது. எதை வேண்டுமானாலும் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம்.

யெஸ் உடனே கட்டடத்திற்குள் இருந்த அறை எடுத்துக்கொள்ளலாம் என்று சொன்னான். அவனுக்கு அப்போதே குளிரில் மூச்சு விடச் சிரமமாக இருந்தது. தீப்தியோ, குழந்தை போலக் கூடாரத்தில் தங்கலாம் என்று அடம் பிடித்தாள். கூடாரமே தேர்ந்தெடுக்கப் பட்டது. தெர்மல் வேர், அதன் மேல் உடை, அதன் மேல் ஸ்வெட்டர், அதன் மேல் லெதர் ஜாக்கெட் என மேலே மேலே ஏற்றிப்

போட்டுக்கொண்டாலும் குளிர் அனைத்தையும் தாண்டி உள்ளே போய் பதம் பார்த்துக்கொண்டு இருந்தது. நான்கைந்து கம்பளிகளும் கொடுத்து இருந்தார்கள்.

இரவுக்கு அங்கேயே தயாரிக்கப்பட்ட அரிசி வைன் தருவதாகச் சொல்லி இருந்தார்கள். நல்ல தரமான உணவு தயாராகிக்கொண்டு இருந்தது. "இருட்டுவதற்குள் ஒரு நடை போய்விட்டு வரலாமா?" என்று யெஸ்ஸிடம் கேட்டாள் தீப்தி.

‘‘வேண்டாம்மா, ரொம்ப டயர்டா குளிரா இருக்கு."

‘‘அதான் ஜாக்கெட் போட்டு இருக்கியே, ஊர் சொர்க்கம் மாதிரி இருக்குடா, வாடா எஞ்சாய் செய்யலாம்"

‘‘இப்பவே எனக்கு நடுக்கிட்டு இருக்கும்மா" யெஸ் இப்போது லெதர் ஜாக்கெட் மேல் இரண்டு கம்பளிகளைப் போத்திக்கொண்டு, குத்துக்காலிட்டு அமர்ந்து கொண்டு நடுங்கிக்கொண்டு இருந்தான்.

தீப்தி அவனை விட்டுவிட்டுத், தனியாக ஒரு நடை சென்றாள். ஆடு மேய்க்கும் சிறுவன், பூப்பறிக்கும் சிறுமி என வாழ்நாளில் காண முடியாத காட்சிகளை அந்தப் பனிச்சொர்க்கத்தின் பின்னணியில் கண்டாள். கொஞ்சநேரம் சுற்றி விட்டுப் புகைப்படங்கள் எடுத்துக் கொண்டு திரும்பினாள்.

சூப் கொடுத்தார்கள்.

இப்போது யெஸ் முகம் முழுக்க மூடிக்கொண்டு படுத்திருந்தான். ஆனால் தூங்கவில்லை. சூப் குடிக்க யெஸ்ஸால் எழுந்திருக்க முடியவில்லை.

தீப்தி உறைந்து கிடக்கும் நதியைப் பார்த்தவாறே சூப் குடித்தாள். நதியின் மேற்பரப்பில் மீன்களும் உறைந்து கிடக்கின்றனவா என்று பார்த்தாள். மேலே ஏதும் தட்டுப்படவில்லை . ஒருவேளை நதியின் ஆழத்தில் மீன்கள் ஐஸ் கட்டிகளோடு உறைந்து கிடக்குமா என்ற யோசனை எழுந்தது. நதி ஒரே நாளில் ஒரே நொடியில் உறையாது. கொஞ்சம் கொஞ்சமாகத்தான் உறையும்.அது மீன்களுக்குத் தெரியுமா? உறைய ஆரம்பிக்க ஆரம்பிக்க மீன்கள் என்ன செய்யும்? எங்கே ஓடும்? துள்ளித் தரையில் விழுமா? அல்லது இயற்கையுடன் ஒன்றிணைந்து உறையத் தன்னை ஒப்புக்கொடுத்துவிடுமா?

அப்படியே உறைந்து போனாலும் நதி மீண்டும் தண்ணீராக மாறி ஓட ஆரம்பிக்கும் போது மீனுக்கும் உயிர் வந்து உறைந்த இடத்தில் இருந்து மீண்டும் வாழ்க்கையைத் துவக்கி ஓட ஆரம்பிக்குமா? அல்லது இறந்து விடுமா? அது இறந்தது என எப்போது சொல்ல முடியும்? இதே போல நம் வாழ்க்கைக்கும், கொஞ்ச நாள் உறையும் வசதி இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? மொத்த உலகையும் ஒரு வருடம் உறைய வைத்தால் கூட தேவலாம். ஏன் இப்படி ஓடிக்கொண்டிருக்கிறோம் என்று தீப்திகா யோசித்துக்கொண்டு இருந்தாள். அவளே , என்ன இது!!! , தீவிர இலக்கியப் புத்தகத்தில் வருவது போல யோசித்துக்கொண்டிருக்கிறோம் என்று எண்ணிச் சிரித்துக்கொண்டாள். இந்த இடம் இப்படி நம்மை பித்துக்குளி போல எண்ண வைக்கிறது. இந்தத் தனிமை, இந்த மாபெரும் மலை, இந்தப் பனிக்காடு, இந்தக் குளிர், இந்த ஏகாந்தம், இந்த உறைநதி இவையெல்லாம் சேர்ந்து நம்மை இப்படிச் சிந்திக்க வைக்கிறது. நம் சிந்தனா முறையையே மாற்றி விடுகிறது என்று நினைத்துக்கொண்டாள். இந்த நதியில் ,இந்தக்குளிரில் மீன்களே கூட இல்லாமல் இருக்கலாம், யார் கண்டது என நினைத்துக்கொண்டு, தலையைத் தட்டிக்கொண்டாள்.

கூடாரம் வந்த போது வைன் வைத்திருந்தார்கள். அதைக் குடிக்கவும் யெஸ் எழுந்திருக்கவில்லை. கூடாரத்தின் வாசலில் கணப்பு போட்டிருந்தார்கள். தனியாக அமர்ந்து வைன் குடித்தாள். பக்கத்துக் கூடாரத்தின் வாசலில் ஏழெட்டு பேர் அமர்ந்திருந்தார்கள். அதில் ஒருவன் தீப்திகாவை அழைத்தான். “யூ கேன் ஜாயின் வித் அஸ்"

எல்லோருமே ஆண்களாக இருக்கிறார்களே என்று தீப்திகா தயங்கவில்லை. வைனை எடுத்துக்கொண்டு அவர்கள் அருகே சென்றாள். அவர்கள் இருக்கை கொடுத்தார்கள். அந்தக் குளிரிலும் மணாலியில் வாங்கி எடுத்து வந்திருந்த செர்ரிப்பழத்தை சாப்பிட்டுக்கொண்டிருந்த ஒருவன் தன்னை அராத்து என்று அறிமுகப்படுத்திக்கொண்டு, மற்ற நண்பர்களையும் அறிமுகப் படுத்தினான்.

“இவரு கணேசன் அன்பு" என்று அறிமுகப்படுத்தியதும் கணேஷ் என்பவன் தீப்தியிடம் அனுமதி கேட்காமலேயே தன்னிடம் இருந்த எஸ் எல் ஆர் கேமராவால் அவளைப் புகைப்படம் எடுத்தான். தீப்தி கண்டுகொள்ளவில்லை.

மற்றவர்களையும் சேர்த்து எடுப்பது போல தீப்தியை மட்டும் நான்கைந்து புகைப்படங்கள் எடுத்தான் கணேஷ் .

தீப்தியோடு சேர்த்துத் தன்னைத் தனியாக ஒரு புகைப்படம் எடுக்கும் படியும் அதை, தான் கவர் போட்டோவாக வைத்துக்கொள்வதாகவும் சைகையிலேயே அராத்து சொல்ல அதையும் செய்தான் கணேஷ்.

கருப்புசாமியை அறிமுகப்படுத்தியதும், ‘‘மேடம் நான் உங்க கூட ஒரு போட்டோ எடுத்துக்கொள்கிறேன்" என அனுமதி கேட்டுக் கொண்டே அராத்துக்கும் தீப்திக்கும் இடையில் போய் நின்று கொண்டான் கருப்பு. புகைப்படம் எடுத்த பின்பும் கருப்பு அந்த இடத்தை விட்டு நகரவில்லை.

பொதுவாகக் கொஞ்ச நேரம் பேசிக்கொண்டு இருந்தார்கள். அராத்து தீப்திக்கு சிகரட் கொடுத்தான். ‘‘இங்க சிகரட் பிடிக்காதீங்க, உடம்புக்கு ஆபத்துன்னு போர்ட் போட்டிருக்கே" என்று தீப்தி சொன்னதும், ‘‘அதெல்லாம் அப்டித்தான் சொல்வாங்க நீங்க அடிங்க" என்றான்.

தீப்தி தயங்க

‘‘இப்ப உங்களுக்கு மூச்சுவிட சிரமமா இருக்கா?" என்றான்.

‘‘இல்லை" என்றதும் ‘‘தைரியமா அடிங்க" என்றான்.

தீப்தி சிகரட் பற்ற வைத்துக்கொண்டாள். இதமாக இருந்தது. எந்தச் சிக்கலும் ஏற்படவில்லை.

‘‘நாளைக்கு என்ன ப்ரோக்ராம்?" என்றான் அராத்து.

‘‘நாளைக்கு சார்ச்சுல ஸ்டே" என்றாள் தீப்தி.

‘‘நாங்களும்தான்" என்று அராத்து சொல்லும் போது உணவு வந்தது. அனைவரும் உணவைச் சாப்பிட்டு விட்டு கூடாரத்துக்குள் புகுந்தனர்.

யெஸ் இன்னும் போர்வையை விட்டு வெளியே வரவில்லை. தீப்திகா எழுப்பிப் பார்த்தாள். முனகினானே ஒழிய வெளியே வரவில்லை. தீப்திகா படுத்துக்கொண்டாள். விசித்திர விசித்திரமாக ஏதேதோ எண்ணங்கள் தோன்றின. குழம்பியபடியே வைன் கொடுத்த போதையில் உறங்கி விட்டாள்.

இரவு மணி பன்னிரண்டுக்கு மேல் யெஸ்ஸுக்கு தூக்கி தூக்கி போட்டது. முனகுதல் அழுதலாக மாறியது. அது ஒரு மெல்லிய ஊளையிடுதல் போன்று இருந்தது. கனவிலிருந்து திடுக்கிட்டு விழித்த தீப்திதா பயந்து போனாள். வெளியே குளிர் மைனஸில் இருக்கலாம். வெளியே வந்து அந்த ரெஸார்ட் வரவேற்பறையை அடைந்தாள். ஒருவன் ஒரு அறையில் பல போர்வைகளுக்குள் புதைந்து இருந்தான். அவனை எழுப்பினாள். அவன் இன்னும் இருவரைக் கூட்டிக்கொண்டு, கூடாரத்துக்கு வந்தான். யெஸ்ஸின் போர்வையை விலக்கிப் பார்த்தால் , சுருண்டு நடுங்கிக்கொண்டு , அரை மயக்கத்தில் இருந்தான். அவனை போர்வையோடு குண்டுக் கட்டாகத் தூக்கிக்கொண்டு போய் கட்டடத்தில் இருந்த அறையில் கிடத்தினார்கள். அங்கே அறை வெதுப்பான் இருந்தது. அதைப் போட்டு விட்டு , மீண்டும் போர்வையைப் போர்த்திப் படுக்க வைத்தார்கள். அடுப்பைப் பற்ற வைத்துப் , பூண்டுத் தண்ணீர் போட்டு குடிக்க வைத்தார்கள். அதுவும் வாந்தி வருகிறது என்று கூறி குடிக்க மறுத்து விட்டான்.

தீப்திகா, மீண்டும் சென்று கூடாரத்திலேயே படுத்துக்கொண்டாள்.

மறுநாள் காலையில் அராத்து கோஷ்டியினர் கிளம்பிச் செல்வதைக் கையாட்டி விட்டுப் பார்த்துக்கொண்டு அமர்ந்திருந்தாள். ஓரளவு தயாராகி வந்தான் யெஸ்ஸு. ஒரு மணி நேரம் சூரியனைப் பார்த்து சூடேற்றிக்கொண்டு, ‘‘ரெடி ஹனி" என்றான்.

மூட் அவுட் ஆகி இருந்த தீப்திகா, கொஞ்சம் தெளிவானாள். இருவரும் சார்ச்சுவை நோக்கிக் கிளம்பினார்கள். யெஸ்தான் ஓட்டினான். ஒரு மணி நேரம் கூட ஓட்டி இருக்க மாட்டான். இடுப்பு வலிக்கிது டார்லிங்க் என்று கூறி தீப்தியை ஓட்ட விட்டான். தீப்தி நடுநடுவே நிறுத்தி புகைப்படம் எடுத்துக்கொண்டே, ஓட்டிக்கொண்டிருந்தாள். தன்னைப் புகைப்படம் எடுக்கச் சொன்னபோதெல்லாம் தயங்காமல் தான் எடுத்துக்கொடுத்துக்கொண்டு வந்தான் யெஸ்ஸு. ஆனாலும் ஏனோ தீப்திக்கு அவன் மேல் எரிச்சலாக இருந்தது.தீப்தி பைக் ஓட்டும்போது அவன் அவ்வப்போது அவளுடைய தோள்களில் சாய்ந்து கொண்டான். லேசாகத் தூங்குகிறான் என்பது அவளுக்குத் தெரிய வந்தது. டெட் வெயிட்டுக்கும் லைவ் வெயிட்டுக்கும்

வித்தியாசம் தெரியாதவளா என்ன தீப்தி? இது கூட எரிச்சலுக்குக் காரணமாக இருக்கலாம்.

ஒருவழியாக சார்ச்சு வந்து சேர்ந்தார்கள். சார்ச்சு பொட்டல் வெளி; ஆக்ஸிஜன் குறைவு. அங்கே கூடுமான வரை தங்குவதைத் தவிர்க்கச் சொல்வார்கள். ஆக்ஸிஜன் குறைவாலும், பிரம்மாண்டமான மலையைக் காண்பதாலும் அக்கம்பக்கம் மனிதர்கள் இல்லாததாலும் மனம் பேதலிக்கும் என்பார்கள். யெஸ்ஸுக்குப் பேதலித்தது. கூடாரத்தை அடைந்த ஒரு மணி நேரத்திற்குள் மீண்டும் படுத்து விட்டான். போர்வையை விட்டு வெளியே வரவே முடியவில்லை. மூக்கில் இருந்து ரத்தம் வந்து கொண்டு இருந்தது. அதை தீப்தி துடைத்து விட்டுக்கொண்டு இருந்தாள்.

யெஸ்ஸு தன்னை ஒரு சாகச விரும்பியாகவும் அட்வென்ச்சர் பயணியாகவும் காட்டிக்கொண்டாலும் உண்மையில் அவன் அப்படி இல்லை. அவனுடைய பயணமெல்லாம் சொகுசான பயணம்தான். எல்லாமும் ஏற்பாடு செய்யப்பட்டு, அலுங்காமல் குலுங்காமல், ஏசி, கட்டில், மெத்தை, வேளைக்குச் சாப்பாடு எனப் பழக்கப்பட்டவன். தட்பவெட்ப சூழலிலும் பெரிய வித்தியாசம் இருக்கக் கூடாது. ஆல் வீல் டிரைவ், ஹார்லி டேவிசன், பைக் டிரிப் என்று பீலா விட்டுக்கொண்டு சுற்றிக்கொண்டு இருந்தாலும் இதுவரை ஒரு மலையேற்றம் கூட ஏறியதில்லை யெஸ்ஸு. அதனால் விவரம் புரியாமல் வந்து மாட்டிக்கொண்டான்.

தீப்தி கடும் எரிச்சலில் அமர்ந்திருந்தாள். கையில் சிகரட் வேறு இல்லை. இந்த அராத்து கோஷ்டியையும் காணவில்லை. அவர்கள் வேறு ஏதோ ஒரு கேம்பில் தங்கி இருப்பார்கள் போலிருக்கிறது. அந்த கேம்பில் வேலை செய்பவனிடம் சிகரட் கேட்டாள். அவன்

கஞ்சா இருக்கிறது வேண்டுமா என்று கேட்டதும், வாங்கி அடித்தாள்.

மலையினூடாக தனியாக போய்க்கொண்டு இருந்தாள். மலை பிளந்து ஒரு அற்புத உலகம் தெரிந்தது. அதில் இறங்கிய உடன் பறக்க ஆரம்பித்தாள். ஆனால் கட்டிலில் கிடப்பதும் புரிந்தது. கால்கள் மட்டும் மேலெழுந்து பறப்பது போல இருந்தது.உடல் கால்களை விடாமல் பிடித்து வைத்திருப்பதாக நினைத்தாள். மனம் மட்டும் அந்த அதிசய உலகத்தில் சஞ்சரிப்பதாகவும்

உடலால் மனதைத் தொடர்ந்து செல்ல முடியவில்லை எனவும் நினைத்துக் குழம்பியபடியே தூங்கிப்போனாள்.

வழக்கம் போல சூரியன் வந்ததும் ஓரளவுக்குத் தேறினான் யெஸ்ஸு. இங்கிருந்து ஒரேயடியாக லே செல்வதுதான் திட்டம். அங்கே தங்கி விட்டு , பேங்காங் லேக், கர்துங்க் லா பாஸ் போய் விட்டு வருவதும் திட்டத்தின் அடுத்த படிகள். தீப்திதான் பைக்கை எடுத்தாள். ஒரு மணி நேரம் ஓட்டியதுமே, யெஸ்ஸு தீப்தியின் தோள்களில் பாரத்தைப் போட ஆரம்பித்தான். இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும் மயக்கம் வருகிறது என்றான். ஒரு கூடாரத்தின் அருகே நிறுத்தித் தேநீர் வாங்கிக் கொடுத்தாள். அதைக் குடித்து விட்டுக் கிளம்பினார்கள். இப்போதும் தீப்திதான் ஓட்டினாள். பைக்கை நிறுத்தச் சொன்னான் யெஸ்ஸு. சுத்தமாக முடியவில்லை என்று கூறி இறங்கி வாந்தி எடுத்தான். தரையில் அமர்ந்து விட்டான்.

“ராம்கி நீ இதுவரைக்கும் இது போல வந்ததில்லையா? உனக்கு இது ஒத்துவராதுன்னாவது தெரிஞ்சி இருக்கணும் இல்லியா?" என்றாள் தீப்தி.

யெஸ்ஸு அமைதியாக இருந்தான்.

“இப்பிடின்னு தெரிஞ்சி இருந்தா, எங்காச்சும் வயலு வாய்க்கால்னு டவுன் பஸ்ல போயிருக்கலாம்" என்று முணுமுணுத்தாள்.

“என்னாது?'' என்றான் யெஸ்ஸு.

“கேரளாப் பக்கம் போயிருக்கலாம்னு சொன்னேன்" என்றாள்.

ஒரு வேன் வந்தது.அதைக் கை காட்டி நிறுத்தி, அவர்களிடம் பணிவுடன் கேட்டு யெஸ்ஸை அதில் ஏற்றி அனுப்பி வைத்தாள். எந்த மறுபேச்சும் பேசாமல் யெஸ்ஸு அதில் ஏறிப்போனான்.

தனியாக அன்று முழுக்க பைக் ஓட்டி மாலை ஆறு மணிக்கு லே வந்தடைந்தாள். விடுதியில் யெஸ்ஸு தூங்கிக்கொண்டு இருந்தான்.

தீப்தியைப் பார்த்ததும், “நாளைக்கு காலைல லே—ல இருந்து ஃப்ளைட்ல ஊருக்கு போயிடலாமா?'' என்றான்.

“ப்ரோக்ராமை நான் மாத்த விரும்பலை, நீ போறதுன்னா போயிக்கோ" என்றாள்.

உடனே விமான டிக்கட்டைப் போட்டு விட்டுத் தூங்க ஆரம்பித்தான்.

இரவு தனியாக கிளம்பி லே—வை வலம் வந்தாள். லோக்கல் பாரில் அமர்ந்து, காக்டெயில் அருந்திக்கொண்டே அங்கிருக்கும் வெளிநாட்டுக்காரர்களிடம் பேசிக்கொண்டு இருந்து விட்டு இரவு வந்து தூங்கினாள்.

மறுநாள் யெஸ்ஸு, கையாட்டிவிட்டு வாடகைக் காரில் ஏறிச் சென்றான்.

தீப்தி தனியாக பேங்காங்க் ஏரி, கர்துங்க்லா பாஸ் எல்லாம் சுற்றிப் பார்த்து விட்டு, இன்னும் இரண்டு நாட்கள் லே—வில் தங்கி விட்டு, பைக்கை ஏற்கனவே ஏற்பாடு செய்திருந்தவரிடம் திரும்ப அனுப்ப ஒப்படைத்து விட்டு விமானம் ஏறினாள்.

சென்னையில் வாழ்வதற்கு அருமையான வீட்டை ஏற்பாடு செய்து வைத்திருந்தான் யெஸ்ஸு. முதல் கோணல் முற்றும் கோணல் என்பது போல, ஒவ்வொரு விஷயத்திலும் குறை கண்டு பிடித்தாள். ஜெயமோகன் பழக்கப்படுத்தி வைத்திருந்த விஷயங்கள் தீப்தியைப் பெரிதாக இன்ஃப்ளூயன்ஸ் செய்தன. யெஸ்ஸிடம் பணம் இருந்தாலும், ஜெயமோகனிடம் இருந்த ‘க்ளாஸ்Õ இல்லை. அந்த ஜெயமோகனின் ‘க்ளாஸ்Õ இவளிடமும் தொற்றிக்கொண்டு யெஸ்ஸை எரிச்சலாகப் பார்க்கத் தூண்டியது.

ஆதிரையிடம் தீப்தி யெஸ்ஸைப் பற்றிக் குறைகளாகப் பகிர்ந்து கொண்டவை,

‘‘மூக்குல முடி நீட்டிகிட்டு இருக்குடீ, அதை எடுக்க மாட்டேங்கறான்."

"காது பட்ஸ் யூஸ் பண்ணவே மாட்டேங்கறான்."

‘‘ஹேண்ட் சானிடைஸர் யூஸ் பண்ணத் தெரியலை."

‘‘கால் துடைக்காம பெட்ல ஒக்காறரான்."

‘‘வீடுக்குள்ள தனியா செருப்பு போட்டுக்க மாட்டேங்கறான்."

‘‘டாய்லெட் உள்ள தண்ணிய தெறிச்சி வச்சிருக்கான்."

‘‘என் சீப்பை எடுத்து தலை வாரரான்."

‘‘ஈரக்காலோட சோஃபாவுல ஒக்காறரான்."

‘‘ஒரு பட்டக்ஸைத் தூக்கி பப்ளிக்கா கேஸ் பாம் விடறாண்டி."

‘‘ரெஸ்டாரண்ட்ல ஒழுங்கா சாப்பிடத் தெரியலை, பப்ல ஒழுங்கா குடிக்கத் தெரியலை, டேன்ஸ் ஆடத் தெரியலை, நெய்பர்ஸ்கிட்ட ஒழுங்கா பேசத் தெரியலை."

‘‘அவ்ளோ ஏண்டி லிப் கிஸ் அடிக்கும் போது ஏப்பம் விடறாண்டி, ஓரல் செக்ஸ் பண்றப்ப, நடுவுல எழுந்து பல் குத்துறாண்டி" என்று அடுக்கு அடுக்கு என்று அடுக்கினாள்.

எரிச்சல் உச்சகட்டத்தை அடைந்த ஒருநாளில் ‘‘ராம்கி, ஐ ஆம் சாரி, நான் அவசரப்பட்டுட்டேன், நாம் டிவேர்ஸ் பண்ணிக்கலாம்" என்றாள். யெஸ்ஸு எந்த வித மறுப்பும் தெரிவிக்கவில்லை.

‘‘அவ்ளோ ஒண்ணும் பெரிய பிரச்சனை இல்லை கொஞ்சம் வெயிட் பண்ணி பார்க்கலாம்" என்றான்.

‘‘எப்படியா இருந்தாலும், உடனே பண்ண முடியாது. என்னால தாங்க முடியலை. கொஞ்சநாள் தனித் தனியா இருந்து பாக்கலாம்." என்று கூறித் தனியாக ஒரு பங்களாவில் குடியேறினாள் தீப்திகா. தீப்திகா அப்பா அந்த பங்களாவை அப்போதுதான் வாங்கி இருந்தார். கடற்கரைச் சாலையில் கடலுக்கு அருகில் இருந்தது அந்த பங்களா.

அவ்வப்போது அந்த பங்களாவுக்கு வந்து தீப்திகாவைப் பார்ப்பான் யெஸ்ஸு. நாள் ஆகஆக யெஸ் மீது கொஞ்சம் கோபம் குறைந்து, அன்பு கூடியது தீப்திக்கு. ஓரிரு முறை புணர்ச்சியும் நடந்தது. அதன் பிறகு அந்த பங்களா சாவி ஒன்றை யெஸ்ஸிடம் கொடுத்தாள் தீப்தி. யெஸ்ஸும் இரண்டொரு நாட்கள் தொடர்ந்து தங்கினான்.

அலுவல் விஷயமாக ஒருநாள் பெங்களூர் சென்றாள் தீப்தி. யெஸ்தான் விமான நிலையத்தில் வழி அனுப்பி வைத்தான்.

வேலையில் பிஸியாக இருந்த போது தோழி ஏஞ்சலினிடம் இருந்து ஒரு மெசேஜ் வந்தது. அதில், யெஸ்ஸு அந்த கடற்கரை பங்களாவுக்கு வந்ததாகவும் ஏஞ்சலினைச் சந்தித்ததாகவும் இருந்தது. ஒரு மரியாதை நிமித்தமான மெசேஜாக இருந்தது அது.

ஏஞ்சலினிடம் சாவி கொடுத்து விட்டு வந்திருந்தாள் தீப்தி. ஏஞ்சலின் குடித்து கூத்தடிப்பதற்காக தீப்தியிடம் சாவி வாங்கி இருந்தாள்.

தான் இல்லாத போது, யெஸ் ஏன் அங்கு போக வேண்டும் என்ற கடுப்பில் சென்னை வந்தாள் தீப்தி. தீப்தி சொல்லாமல் வருவதை யெஸ்ஸு எதிர்பார்க்கவில்லை. ஏஞ்சலின் அப்போது அங்கு இல்லை.

''நீ ஏன் இங்க இருக்க?'' என்றாள் தீப்தி.

''இல்ல, உன் நினைப்பா இருந்துச்சி, அதான் இங்க வந்து உன் டிரஸ்ஸை கட்டிப்பிடிச்சிட்டு தூங்கலாம்னு வந்தேன்" என்றான் யெஸ்ஸு.

கொஞ்சம் ரிலாக்ஸான தீப்தி படுக்கையறைக்குச் சென்றாள். யெஸ்ஸும் பின்தொடர்ந்தான். அங்கே காண்டம் பாக்கெட் இருந்தது. தீப்தி யெஸ்ஸிடம் காண்டம் பயன்படுத்தியதில்லை. தீப்தி அதைப் பார்த்ததும், வெடுக்கென அதை எடுத்து மறைத்தான் யெஸ்ஸு.

''ஏய் ஏண்டா மறைக்கிற? அதான் பாத்துட்டேனே, காட்டு, வெளில எடு" என்றாள்.

எடுத்தான்.

''என்னாது இது? சொல்றா" என்று கத்தினாள் தீப்தி. தன் கைப்பையைத் தூக்கிக் கட்டில் மீது எறிந்து விட்டு, கட்டிலில் கால் மேல் கால் போட்டுக்கொண்டு அமர்ந்தாள்.

''இது... காண்டம்...'' இழுத்தான் யெஸ்ஸு.

''சொல்றா...''

''இல்ல, உன் டிரஸ்ஸை கட்டிகிட்டு, உன்னை நினைச்சி மாஸ்டுருபேட் பண்ணேன். அப்ப ஸ்பேர்ம் உன் டிரஸ்ல பட்டுடக் கூடாதுன்னு காண்டம் யூஸ் பண்ணேன்" என்றான் யெஸ்ஸு.

கோபம் தலைக்கேறியது தீப்திக்கு. அடக்கிக்கொண்டு ஏஞ்சலினுக்கு போன் அடித்தாள். ஸ்பீக்கரில் போட்டாள்.

''ஏஞ்சலின், ராம்கி நீயும்...'' வாக்கியம் முடிப்பதற்குள்,

ஏஞ்சலின் ''சாரிடீ, வேணும்னு பண்ணலை, திடீர்னு ஆக்ஸி டெண்ட்லா."

போனை கட் செய்த தீப்திகா தலையைச் சாய்த்து யெஸ்ஸை பார்த்தாள்.

“இப்ப வெளில போலைன்னா செருப்பு பிஞ்சிடும்" என்று சொல்லிச் செருப்பைக் கழட்டினாள்.

வேக வேகமாக வெளியேறினான் யெஸ்ஸு.

குறிப்பிட்ட நாட்களுக்குப் பிறகு விவாகரத்து வாங்கி விட்டாள் தீப்தி.

——————————————————

# ஏஞ்சலின், முத்த தேவதை

ஏ ஞ்சலின் – இறந்த காலம்

ஏஞ்சலின் வயிற்றில் இருக்கும் போதிலிருந்து பாடல் கேட்டுக் கொண்டே வளர்ந்தாள்.

ஏஞ்சலின் அப்பா பிரசவத்தின் போது லேபர் அறையில் இருந்தார். தெரிந்த மருத்துவர்.

பிரசவத்தின் போதும் இசையை ஒலிக்க விட்டார்.

அம்மாவும் கத்த

இசையும் ஒலிக்க

ஏஞ்சலின் தலை மட்டும் முதலில் இசைத்துக்கொண்டே வந்தது.

தரையைத் தொட்டவுடன்தான் மற்ற குழந்தைகள் கத்தும்.

ஆனால் ஏஞ்சலின் தலை மட்டும் காற்றில் தொங்க

உடல் இன்னும் யோனியில் இருக்க

சிறிது நேரம் கத்திக்கொண்டிருந்தாள்.

தலையைச்சுழற்றி டாக்டர் இழுத்துக்

கொடியறுத்துத் தரையில் போட்டதும்

பாடலின் உச்சத்தைத் தொட்டாள்.

கவிதைத்தனமான காதலின் மூலம்

கவித்துவமான தம்பதியருக்குக்

கவிதையாகப் பிறந்தாள்.

குழந்தை முதலே

ஆண்கள் உலகில் வாழ்ந்தாள், வளர்ந்தாள்.

குட்டிப்பையன் அழுதால்,

குட்டி ஏஞ்சலின் முத்தமிடுவாள்.

முத்தமிட்டு முத்தமிட்டு

ஆண்களை மீட்டெடுத்து

முத்த ஏஞ்சல் ஆனாள்.

தேர்வில் தோல்வி அடைந்தவனுக்கு முத்தம்,

அப்பாவிடம் அடி வாங்கியவனுக்கு முத்தம்,

காதலில் தோல்வியடைந்தவனுக்கு முத்தம்,

நல்ல ஜோக் சொல்லியவனுக்கு முத்தம்,

அழகாயிருப்பவனுக்கு முத்தம்,

அசிங்கமாக இருக்கிறோம் என

வருத்தப்படுபவனுக்கு முத்தம்,

தூக்கம் வராதவனுக்கு முத்தம்,

தூங்கிக்கொண்டிருப்பவனுக்கு முத்தம்,

ஆறுதல் சொல்ல முத்தம்,

மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருப்பவனுக்கு முத்தம்,

காதலி கிடைத்தவனுக்கு முத்தம்,

கன்னித்தன்மையை இழந்தவனுக்கு முத்தம்,

போதையில் புலம்புபவனுக்கு முத்தம்,

கத்தியால் கையைக் கிழித்துக்கொண்டவனுக்கு முத்தம்,

தன்னைக் கற்பழிக்க முயன்றவனை

கீழே தள்ளி முத்தம்.

முத்த தேவதையாக மொத்தமாக

வலம் வந்தவளை முத்தமிட எவனுமில்லை.

ஏக்கம் இல்லையெனினும்

ஆசை இருந்தது.

முத்தக்காரனைத் தேட விழையவில்லை

ஏஞ்சலின்.

உதட்டுப் பாதையில் மூளைக்கு வேலையில்லை

என்பது ஏஞ்சலினின் நிலைப்பாடு.

# ஏஞ்சலின் – எதிர்காலம்

மழை பெய்யும் இரவில்

மழையினூடாக இறங்கி

வெள்ளமாக ஓடியவனை

கண்டு கொண்டாள் ஏஞ்சலின்.

பெங்களூர்க்காரன் ஹரன்

சென்னைக்காரி ஏஞ்சலினை

விமானத்தை விட்டு இறங்கி

கா.ஃபி குடிக்கும் போது பார்த்தான்.அதிலிருந்து மூன்றாம் நாள்

முத்தமிட்டான்.

காதலனைக் கண்டு கொண்ட பரவசத்தில்

நண்பர்களுக்கு முத்தத்தை வாரி வழங்கினாள்.

முத்தமிட்ட மூன்றாம் நாளே

முழுவதும் கலந்தார்கள்.

ஹரனின் உடலில் முத்தம் வாங்காத பகுதி ஓரிரு செல்கள்தான் இருக்கும்.

ஹரன் ஊரில் இல்லா ஒரு நாளில்

முலை முத்தம் கொடுத்துக் கொண்டிருந்த நண்பன் ஒருவன் வயிற்றுக்குக் கீழே கையை இறக்க,

“வேணாண்டா ப்ளீஸ்" என்று தள்ளி விட்டு முத்தமிட்டாள் ஏஞ்சலின்.

ஏஞ்சலினிடம் அன்புக்கும் முத்தத்திற்கும் பஞ்சமில்லை.

அள்ளி அள்ளி அனைவருக்கும் வழங்கவே அவதாரம் எடுத்தவள்.

காமத்தில் அவளுக்கு மனத்தடை ஏதுமில்லை எனினும்

ஆளுக்கொரு எல்லை வைத்திருந்தாள்.

கன்ன முத்தம்

உதட்டு முத்தம்

கழுத்து முத்தம்

முலை முத்தம்

முதுகு முத்தம்

யோனி முத்தம்

என ஆளுக்கொரு முத்த எல்லை.

கட்டியணைத்தல்

உடனுறங்குதல்

சேர்ந்து குளித்தல்

கைகளால் களைத்தல்

எனக் காமவினைகளில் எல்லை

வகுக்காமலே வகுத்த எல்லைகள்.

ஹரனும் ஏஞ்சலினும் நிச்சயதார்த்தம்

செய்து கொண்ட பிறகு

“நீ விர்ஜினா?" என்றான் ஹரன்.

“அப்படின்னா?" என்றாள் ஏஞ்சலின்.

‘‘இதுக்கு முன்னால யார் கூடவாவது

செக்ஸ் வச்சிட்டு இருக்கியா?" என்றான்.

‘‘உங்கூட வச்சிகிட்ட பிறகுதான் அது செக்ஸான்னு முடிவு பண்ணேன்" என்றாள்.

ஏதோ புரிந்து கொண்ட ஹரன் ஏஞ்சலினை அணைத்து முத்தமிட்டான்.

திருமணத்துக்கு நான்கு நாள் முன்பு நண்பனொருவனை முத்தத்தால் குளிப்பாட்டிக் கொண்டிருந்தபோது,

முலையெல்லையைக் கடந்து தொடை வழியில் நுழைந்து அவனது எல்லையான யோனிப்பாதையில் கரம் பயணப் படுகையில் ‘‘ஹரன் பாவம்டா" என்றாள்.

ஏஞ்சலின் மனைவியாகிப் போனாள். ஏஞ்சலின் ஹரனைத் திருமணம் செய்து கொண்டாள்.

# தீப்திகா – சாரு நிவேதிதா – எதிர்காலம்

“ஓ வர் ஸ்பீடா போறன்னு சொன்னேன் இல்ல?" என்று கடிந்து கொண்டாள் ஆதிரை. ஏஞ்சலின் சீரியஸாக தம் அடித்துக் கொண்டிருந்தாள்.

"இவ இல்லன்னா , அது கூட தெரிஞ்சிருக்காது" என்றாள் தீப்தி, ஏஞ்சலினைப் பார்த்து. ஏஞ்சலின் இந்தப் பேச்சுகளைக் கண்டு கொண்டது போலவே தெரியவில்லை. மூவர் மட்டுமே அன்று கூடி இருந்தனர். தீப்தி டெல்லி செல்வதற்கான பார்ட்டி அன்று.

தீப்தி கேட்காமலேயே அவளுக்கு டெல்லிக்கு மாற்றல் வந்திருந்தது. அதையும் பதமாகக் கேட்டார்கள். அதிக சம்பளத்துடன், பதவி உயர்வுடன் கூடிய மாற்றல். எப்படி மனதை மாற்றுவது, ஒரு மாற்றம் வேண்டுமே என்று யோசித்துக்கொண்டிருந்த தீப்தி, உடனே ஓக்கே சொன்னாள்.

இதான் தீப்திகா. இதான் ஆட்டிட்யூட் என்று நிர்வாகத்தில் இருந்து பாராட்டுகளைப் பெற்றுக்கொண்டாள்.

செமையாகக் குடித்துமுடித்து, தூங்கியெழுந்து விமான நிலையம் சென்று கட்டிப்பிடித்து தீப்தியை வழி அனுப்பி வைத்தார்கள் ஏஞ்சலினும் ஆதிரையும்.

டெல்லி தீப்திக்கு ஏற்ற ஊராக இருந்தது. பழங்காலத்து மாளிகைகள் நவீன வசதியுடன் குளிர்சாதன மதுபான விடுதிகளாகவும் உணவகங்களாகவும் இருந்தன. பரவசத்தைக் கொடுத்தது.

புது வாழ்க்கை புத்துணர்ச்சியைக் கொடுத்தது.

உயர்ரக மதுபான விடுதியில் வார இறுதி நாள் ஒன்றில் மூன்று ஷாட்ஸ் அடித்துவிட்டு வீட்டில் போய் படம் மீதியைக் குடித்துக்கொண்டே படம் பார்க்கலாம் என்ற திட்டப்படி, இரண்டாவது ஷாட்டை முடித்து விட்டு, மூன்றாவது ஆர்டர் செய்தாள். அதை உடனே முடித்துவிட்டுச், சைகையால் பில் சொன்னாள். கண்டு கொள்ளவில்லை என்றதும் செக் பில் என்றாள் குரலை உயர்த்தி.

பேரர் பணிவாக அருகில் வந்து, உங்களுக்கான பில்லை அந்த ஜெண்டில் மேன் கொடுத்து விட்டார் என்று கைகாட்டினான்.

அந்த ஜெண்டில்மேன் லைவ் பேண்ட் குழுவில் நடுவில் நின்று கொண்டு 'சிக்ஷீணீபீறீமீ ஷீயீ யீவீறீtலீ , ழிஹ்ஸீஜீலீமீtணீஸீவீஸீமீ' பாடலைப் பாடிக்கொண்டு இருந்தான்.

‘‘அவர் என்ன பாடகரா?" என்று கேட்டாள் தீப்தி.

பதறிய பேரர், ‘‘இல்ல மேடம் அவர், பெரிய கோடீஸ்வரர். ஜாலியான ஆள். எங்களுக்கெல்லாம் வாரி வழங்குவார், ஆனால் முதன்முதலில் உங்களுக்குத்தான் டிரிங்க்ஸ் வாங்கிக் கொடுத்து இருக்கிறார்" என்றான்.

‘‘பட் ஐ டோன் என்கரேஜ் திஸ்" என்றவள், ‘‘என் பில்லை நானே கட்டிடறேன்" என்றாள்.

‘‘அவர் கொடுத்து பில் க்ளோஸ் ஆயிடிச்சே" என்று தலை சொறிந்தான் பேரர்.

‘‘நீங்க எப்படி என் அனுமதி இல்லாம, எனக்கான பில்லை இன்னொருத்தரிடம் வாங்கலாம்" என்றாள் தீப்தி.

‘‘இல்ல மேடம் , இது இந்த பாரின் கலாச்சாரம். வெள்ளையர்கள் காலத்தில் இருந்து இருப்பது. நீங்கள் புதுசு என்பதால், உங்களுக்குத் தெரியவில்லை" என்றான்.

‘‘சரி, இப்ப நான் என்ன செய்வது?’’ என்றாள்.

‘‘அவரிடமே, உங்கள் பணத்தைக் கொடுக்கலாம்" என்றான்.

அந்த ஜெண்டில்மேன், உச்ச ஸ்தாதியில் பாடிக்கொண்டு குதித்து குதித்து ஆடிக்கொண்டிருந்தான்.

தீப்திகா, அவன் பாடிக்கொண்டு இருக்கையிலேயே எழுந்து மேடையை நோக்கி நடந்து சென்றாள்.

அவன் வாத்திய இசைக்கான இடைவெளியில் குதித்து குதித்து டிரம்ஸ் வாசிப்பவனிடம் சென்று குச்சியைப் பிடுங்கி நான்கு அடிகள் அடித்தான். அங்கே இருந்து நடன அசைவுகளோடு நகர்ந்தவன் கீ போர்ட் வாசித்துக்

கொண்டிருந்தவளை ஒட்டி உரசியபடி, சில நொடிகள் வாசித்து விட்டு, மீண்டும் அவன் பாடத் தொடங்குவதற்காக மேடையின் நடுவே வந்தான்.

அப்போது சரியாகத் தீப்திகா மேடை மீது ஏறினாள்.

மீண்டும் அவன் மைக்கை இறுக்கமாகப் பற்றிக்கொண்டு, பாடலைத் தொடர ஆரம்பிக்கும் அந்தக் கணத்தில், அவன் முன் வந்த தீப்திகா கையில் பணத்தை வைத்துக்கொண்டு, ‘‘எனக்கான பில்" என்று பேச ஆரம்பித்ததும் அவள் கையைப் பற்றி இழுத்துச் சுழற்றித் தன்னுடன் சேர்த்துக்கொண்டு, பாடலைத் தொடர்ந்தான்.

திடீர் சுழற்சியால் குழம்பிய தீப்திகா லேசாகத் திமிற, பாடலின் சின்ன இடைவெளியில் தீப்திகாவின் முகத்தருகே மைக்கை நீட்டினான். தீப்திகா அமைதியாக இருக்க, அவளை விட்டு விட்டு பாடலைத் தொடர்ந்தவன், மீண்டும் வந்த சின்ன இடைவெளியில், மைக்கை இடது கையில் மாற்றிக்கொண்டு, என்ன செய்வதென்று தெரியாமல் நின்று கொண்டிருந்த தீப்திகாவை, வலது கையால் பற்றி வலது பக்கம் இருத்திக்கொண்டு குதித்து குதித்து பாடினான்.

வாத்திய இசைக்கான இடைவெளி வந்ததும் ஒருவன் இரண்டு ஷாட்களை எடுத்துக்கொண்டு மேடைக்கு வந்தான். மைக்கை பேண்டில் சொருகிக்கொண்டு, தீப்திகாவை இடுப்பில் கை கொடுத்து வளைத்து ,இடது கையால் தாங்கிக்கொண்டு, வலது கையால் ஒரு ஷாட் எடுத்து தீப்தியின் வாயில் ஊற்றி, அவளை நிமிர்த்தினான்.

அடுத்தக் கணம், தனக்கான ஷாட்டைக் கவிழ்த்திக் கொண்டவன் உடனடியாகப் பாடலின் கடைசி வரிகளை வயிற்றிலிருந்து எடுத்து தொண்டை கிழியப் பாடியவன், பாடல் முடிந்ததும்,

"இந்த மாலையை இனிமையாக்கிய பேரழகியே, என் உயிரை உனது காலடியில் சமர்ப்பிக்கிறேன்" என்று முட்டி போட்டான்.

அனைவரும் கைதட்டினார்கள். தீப்திக்கு, இது என்ன ஏதேனும் சினிமாவுக்குள் நாம் நடித்துக்கொண்டு இருக்கிறோமா என்று குழப்பம் ஏற்பட்டது.

‘‘இசையின் கிளர்ச்சியில் இப்படிச் செய்து விட்டேன். நான் அத்து மீறியதாக நீ நினைத்தால் என்னைக்  கொன்று விடு" என்றான் அவன்.

தீப்திக்கு சிரிப்பாக இருந்தது. யார் இவன்? விசித்திரமாக இருக்கிறான் என்று பார்த்துக்கொண்டு எதுவும் பேசாமல் நின்று கொண்டிருந்தாள்.

பாடல் முடிந்து விட்டதால், வா என்று அழைத்து தனியான ஒரு இருக்கைக்கு அழைத்துச் சென்றான்.

அவன் கை காட்டியதும் அமர்ந்தாள்.

அவன் அமர்ந்ததும், ஆட்டோமேடிக்காக, ஒரு பக்கெட் காக்டெயில் வந்து அமர்ந்தது மேசையில். நான்கு கண்ணாடிக் குடுவைகளும் வந்தன. ஒன்றில் ஆலீவ் காய்கள் மிதந்து கொண்டிருந்தன. இன்னொரு குடுவையில் மாதுளம் பழ முத்துக்கள் ரத்தக் கண்களோடு மின்னிக் கொண்டிருந்தன. வெள்ளரிக் காய்களும் பாதம் பருப்புக்களும் மற்ற குடுவையில் இருந்தன.

‘‘சாரி செல்லம்" என்று ஆரம்பித்த அவன், ‘‘ என் பேரு சாரு நிவேதிதா" என்றான்.

அந்தப் பெயரை அதுவரை கேள்விப்பட்டதில்லை தீப்தி. ‘‘தீப்தி, தீப்திகா" என்று சொல்லியபடி அவனுக்குக் கைகொடுத்தபடி, அவனை முழுதாக நோட்டமிட்டாள்.

உயர் ரக ஜீன்ஸ், ஆங்காங்கே கிழிந்து இருந்தது. கருநீல வண்ணத்தில் ஷு, ஒரு காதில் கடுக்கன், டிசைனர் லினன் முழுக்கை சட்டை, கைகளை மடித்து விட்டிருந்தான். குளிர்ப் பிரதேசத்தில் இருக்கும் நங்கையின் கொங்கையை ஒத்தக் காம்பற்ற கன்னங்கள்.

"அதென்ன சாரு நிவேதிதா?!",  என்றாள் தீப்திகா.

டேவிட் ஆஃப் கோல்ட் ஸ்லிம் சிகரட்டை எடுத்துப் பற்றவைத்து, காற்றில் வளைவுகளுக்குப் பின்னால் வளைவுகளைத் துரத்த விட்டான்.

‘‘என் பேரு சாருநிதி. என் அப்பா, எங்கம்மாவை கல்யாணம் பண்ணிக்கிறேன்னு ப்ராமிஸ் பண்ணி ஏமாத்திட்டு எங்க அக்காவையும் என்னையும் உருவாக்கிட்டாரு. கடைசி வரைக்கும் கல்யாணம் பண்ணிக்கவே இல்லை. சொல்லாம கொள்ளாம ஓடிட்டாரு. எங்கம்மாதான் என்னைத் தனியா

வளத்தாங்க. அவங்க பேரு நிவேதிதா. அதனால என் பேரை சாரு நிவேதிதான்னு மாத்திக்கிட்டேன்" என்றான் .

‘‘ஓ, சாரி, பட் லவ்லீ" என்றாள் தீப்தி.

‘‘அம்மா பேரை சேத்து வச்சிருக்கறது எனக்கு ரொம்ப பிடிச்சி இருக்கு" என்றாள். அவளே தொடர்ந்து, ‘‘அது இருக்கட்டும், மேடையில் நீ என்ன சினிமேட்டிக்கா நடந்துகிட்ட? அப்படில்லாம் ரியல் லைஃப்ல நடக்குமா?’’ என்றாள்.

‘‘இது ரியல்லைஃப்தானே குட்டிமா நாம என்ன கதைக்குள்ளயா இருக்கோம், இல்ல சினிமாவுக்குள்ள இருக்கோமா?’’ என்றான் சாரு.

‘‘ஹேய் இல்ல, அது ஓக்கே, ஆனா, எனக்கு எல்லாமே சினிமா மாதிரி இருந்துச்சி. நீ பிஹேவ் பண்ணது எடுத்த உடனே என்னை செல்லம்னு கூப்டது எல்லாமே, சினிமா மாதிரியே இருந்துச்சி."

‘‘நம்ம நாட்ல ரெண்டு எக்ஸ்டிரீம் இருக்கு. ஒண்ணு சினிமா, இன்னொண்ணு லிட்ரேச்சர். ரெண்டுமே ஓவர் எக்ஸாகரேஷன் தான். சினிமா எப்ப பாத்தாலும் ஹீரோயிஸத்தையும் லவ்வையும் காட்டிகிட்டு இருக்குன்னா, லிட்ரேச்சர் எப்ப பாத்தாலும் எழவையே பேசிகிட்டு இருக்கும். நாம இங்க இயல்பாவே இருக்க முடியாது. நாம வாழ்ந்துட்டு இருக்கும் பாதி வாழ்க்கையே சினிமா இன்ஃப்ளூயன்ஸ்லதான். நம்ம உணர்ச்சிகள், வேல்யூஸ், எதிக்ஸ், எதுக்கு அழணும், எதுக்கு சிரிக்கணும், உறவுகள் கிட்ட எப்படி பேசணும் எல்லாமே சினிமாவோட பாதிப்புதான். நாம வாழ்க்கைல பேசும் பாதிக்கு மேற்பட்ட டயலாக்ஸூம் சினிமா டயலாக்ஸ்தான். சினிமா இப்பிடி படுத்துதுன்னா, லிட்ரேச்சர் மூக்கைச் சிந்த சொல்லுது. ஏழ்மை, துரோகம், சோகம் , டிப்ரஷன் இதுதான் இங்க லிட்ரேச்சர். இதைப் படிச்சிட்டு கொஞ்சம் பேர் குளிக்காம அக்குளை சொறிஞ்சிகிட்டு, எவன் மாட்டுவான் மூஞ்சில குத்து விடலாம்னு அலைஞ்சிட்டு இருக்கானுங்க. நல்ல காலம் இவனுங்க ரொம்ப கம்மி." என்றான்

‘‘யேய் சாரு, நீ நார்மலாவே பேச மாட்டியா?’’

‘‘ஐ லவ் யூ டா செல்லம்."

ஒரு மாதுளம் பழ முத்தை எடுத்து சாரு மேல் எறிந்து சிரித்தாள் தீப்தி.

பேசிக்கொண்டே இரண்டு ஷாட் அடித்தார்கள்.

ஒரு ஷாட்டுக்கும் இன்னொரு ஷாட்டுக்கும் இடைவெளியில் தீப்தியை அழைத்துக்கொண்டு போய் நடனமாடினான் சாரு.

‘‘சரி நேரமாச்சி, கிளம்பலாமா?" என்று கேட்டாள் தீப்திகா.

‘‘இப்ப கிளம்பிப் போனா நார்மல் லைஃப். சினிமேட்டிக்கா எதாச்சும் செய்யலாமா?’’ என்றான் சாரு.

‘‘சினிமேட்டிக்கா வா? என்ன செய்யலாம்?"

‘‘அதாவது சுத்தமா எதிர்பாக்காத ஏதாவது ஒண்ணை செய்யணும்."

‘‘எனக்கு ஒண்ணும் தோண மாட்டேங்குதே."

‘‘இப்ப வழக்கமா என்ன நடக்கும்? பை சொல்லிட்டு ரெண்டு பேரும் பிரிஞ்சிடுவாங்க, இல்லன்னா, ஒருத்தர் இன்னொருத்தரை வீட்ல டிராப் பண்ணிட்டு போயிடுவாங்க."

‘‘ஆமாம்."

‘‘யாராச்சும் முதல் மீட்லயே லவ் பண்ணி, செக்ஸ் வரைக்கும் போவாங்களா? அது சினிமாலதானே நடக்கும்—."

‘‘டேய், என்ன டெக்னிக்கா? அதெல்லாம் இப்ப சர்வ சாதாரணம். பாத்துகிட்டு அடுத்த முப்பது நிமிஷத்துல செக்ஸுக்கு போயிடறாங்க. ரியல் லைஃப்லயே நடக்குது. வேற ஏதாச்சும் சொல்லு."

‘‘ஓஹோ, அப்படியா, சரி வா பாங்க்காக் வரைக்கும் போயிட்டு, ரெண்டு நாளில் வந்துடலாம்."

‘‘என்கிட்ட பாஸ்போர்ட் இல்லியே, உன்கிட்ட இருக்கா?’’

சாரு தன் பாஸ்போர்டை எடுத்து காட்டினான்.

‘‘எப்பவும் வச்சிருப்பேன். எங்கயாவது போகணும்னு தோணிச்சின்னா உடனே கிளம்பிடுவேன். எக்கச்சக்க கண்ட்ரீஸ்க்கு ஆன் அரைவல் விசா இருக்கு.

இந்த விசா பிரச்சனை மட்டும் இல்லன்னா, தோணிச்சின்னா சீலேவுக்குக் கூட டக்குன்னு போயிடுவேன்" என்றான்.

“இண்ட்ரஸ்டிங்க்" என்ற தீப்தி, “ஓவரா இல்லாம சிம்பிளா, ஆனா வழக்கமா நடக்காததா ஏதாச்சும் சொல்லு" என்றாள்.

“நைட்ல தாஜ்மஹால் பாக்கலாமா?" என்றான்.

இருவரும் காரின் பின் சீட்டில் அமர்ந்து சென்று கொண்டிருந்தார்கள். சாருவின் டிரைவர் ஸ்ரீராம் வண்டியை ஓட்டிக்கொண்டிருந்தான்.

“டிரங்கன் டிரைவ் பண்ணாம இருக்குறது, வெரி குட் ஹேபிட். உன்னை நான் மனதார பாராட்டுகிறேன்" என்றாள்.

“எனக்கும் டிரங்கன் டிரைவ் சுத்தமா பிடிக்காது. அதனாலதான் நான் கார் ஓட்டவே கத்துக்கலை" என்றான் சாரு.

“யேய் ஜோக்கா? இல்லை நிஜமாவே கார் ஓட்டத் தெரியாதா?”

“நிஜமாத்தான் செல்லம்" என்று சொல்லிய சாரு அவளின் கையை எடுத்து மடியில் வைத்துக்கொண்டு, ரேகைகளை உற்றுப்பார்த்தான்.

“உனக்கு கைரேகை ஜாதகம் பாக்கத் தெரியுமா?”

“அதான் பாத்துட்டு இருக்கேன்."

ஆர்வமானாள் தீப்தி.

“என்ன தெரியிது சொல்லு" என்றாள்.

“இன்னும் ஒரு நிமிஷத்துக்குள்ள உனக்கு ஒரு முத்தம் கிடைக்கப் போகுது."

“வாட்?”

“நீ ஒருத்தனை பளார்னு அடிக்கப் போறன்னும் சொல்லுது."

இப்படிச் சொல்லி முடித்த சாரு, கைகளால் தீப்தியைத் தொடாமல் முகத்தை மட்டும் நகர்த்தி, அவளது கன்னத்தில் ஒரு முத்தம் இட்டான்.

லைட்டாக ரசித்துக்கொண்ட தீப்தி, “உன் ஜாதகம் பொய். நான் இன்னும் அறையலையே" என்றாள்.

“இன்னும் ஒரு நிமிஷம் முடியலையே" என்ற சாரு ஒன்றைச் செய்தான். பளாரென்று அறைந்தாள் தீப்தி.

“ஜாதகம் சரிதானே" —— சாரு.

தீப்திக்குக் கோபத்தில் உதடு துடித்தது, அதே நேரத்தில் சிரிப்பும் வந்தது. அந்தக் கலவையான உணர்வில் அவனை இன்னொரு அடி அடித்தாள்.

“இன்னொரு கையை காட்டு, அதுல என்ன சொல்லுதுன்னு பாப்போம்" என்றான்.

“ஒரு மயிரும் வேணாம். கொஞ்ச நேரம் தூங்கலாம், அப்பதான் தாஜ்மஹாலை ரசிக்க முடியும்" என்று கூறிக் கண்ணை மூடிக் கொண்டாள். சாருவும்...

சாரு நிவேதிதாவிற்கு ஆக்ராவில் நண்பனின் ஹோட்டல் இருக்கிறது. அதன் மொட்டை மாடியில் தாஜ்மஹாலைப் பார்ப்பதற்காகவே, உயரமாக ஒரு கூண்டு கட்டி அதில் இருக்கைகளை போட்டு வைத்திருக்கிறான். அவனுக்கு சாரு தகவல் அனுப்பி விட்டதால், ஹோட்டலில் அறை தயாராக இருந்தது. அறையில் சிரமப் பரிகாரம் செய்து கொண்டு, மொட்டை மாடிக்குச் சென்று அந்தக் கூண்டில் ஏறினார்கள். பின்னாலேயே வந்த ஒருவன், ஒரு பீங்கான் குடுவையில், சைனீஸ் ஹெர்பல் டீ என்று சொல்லி வைத்து விட்டுப் போனான்.

நள்ளிரவைத் தாண்டி, தாஜ்மஹாலைப் பார்ப்பது, ரம்யமாக இருந்தது. “மும்தாஜும் ஷாஜகானும் இப்போது அங்கு ரகசியமாக சந்தித்து பேசிக்கொண்டு இருப்பார்கள் இல்லியா என்றான்" சாரு

“ஏன் இப்பிடி பேசற?”

“இல்ல, எனக்கு அப்படித்தான் தோணுது"

நிலவொளியில் தாஜ்மஹாலைப் பார்த்துக்கொண்டே லயித்தி ருந்தார்கள். நீண்ட நேர ரசித்தலுக்குப் பிறகு தீப்தி கேட்டாள், “உன்னை கோடீஸ்வரன்னு பேரர் பெருமையா சொன்னான். என்னா பண்ணிட்டு இருக்க?”

“எக்ஸ்போர்ட் அண்ட் இம்போர்ட்"

“ஓ, பிஸினஸ் மேனா? உன்னைப் பாத்தா சீரியஸா பிஸினஸ் பண்றவன் மாதிரி தெரியலையே. என்ன இம்போர்ட் பண்ற?"

‘‘முன்னதான் இம்போர்ட் பண்ணிட்டு இருந்தேன். இப்ப ஒன்லீ எக்ஸ்போர்ட் தான். நம்ம நாட்ல நிறைய அற்புதனமான பொருட்கள் இருக்கு. அதையெல்லாம் எக்ஸ்போர்ட் பண்றேன்"

‘‘பிஸினஸ் சீக்ரெட்டா? என்னன்னுதான் சொல்லேன்"

‘‘இதுல என்ன சீக்ரெட்? மெடிசினல் ப்ளாண்ட்ஸ், தேங்கா நாறு, ஆவாரம் பூ , வெள்ளரிக்காய் இதைப்போல நிறைய. ஜப்பானுக்கு முக்கியமா விதைகள் எக்ஸ்போர்ட் பண்றேன்"

‘‘இதுக்கெல்லாம் சீரியஸா வேலை பாக்கணுமே? நீ குடிச்சிட்டு பாட்டு பாடி கூத்தடிச்சிட்டு இருக்க?’’

‘‘சீரியஸா வேலை பாத்தா, பணம் நிறைய சேரும் தான். ஆனா செலவாகாதே. சேந்துட்டே இருக்குமே! அது பைத்தியக்காரத்தனம் இல்லியா?’’

‘‘ஏய் என்னடா சொல்ற? இப்படித்தான் செலவழிக்கணுமா? வீடு, பங்களா, தோப்பு, எஸ்டேட், தங்கம், வைரம்... அவ்ளோ ஏன் ஒரு தனித்தீவே வாங்கலாமே?’’

‘‘இதுக்கு பேருல்லாம் செலவு இல்லை. பணத்தை வேற ரூபத்துல மாத்தி வச்சிக்கிறோம். அதுவும் வளரும் பணமா. செலவுங்கறது நமக்கு செஞ்சிக்கிறது. நம்ம மகிழ்ச்சிக்கு செஞ்சிக்கிறது. எனக்கு ஜாலின்னா நாடு நாடா சுத்தறது, நல்ல நல்ல டிரஸ், ஷூ, கூலர்ஸ், பர்ஃப்யூம், நல்ல டிரிங்க் இதெல்லாம்தான். இதையெல்லாம் என்னால நேரடியா அனுபவிக்க முடியும், உடலாலயும் மனசாலயும். ஒரு தோப்பு வாங்கி போட்டுட்டு, நான் தென்னை மரத்தைதான் கட்டிப் பிடிச்சிக்கணும் இல்லன்னா மண்ணுல படுத்து பொரளலாம்."

‘‘ஓ... இப்பிடி ஜாலியா செலவு பண்ணிட்டே இருந்தா, பணம் தீந்துடும்னு பயம் இல்லியா?’’

‘‘நாளைக்கு என்னா ஆகும்னு யோசிக்கவே மாட்டேன். என்னை கோடீஸ்வரன்னு சொன்னான்னு சொன்னியே, என்கிட்ட எவ்ளோ பணம் இருக்குன்னு கூட எனக்குத் தெரியாது. என் மேனேஜருக்கும் ஆடிட்டருக்கும் தான் தெரியும். இப்ப கடன்ல கூட இருக்கலாம். நான் ஏன் கோடீஸ்வரன்

தெரியுமா? பணத்தைப் பத்தி எனக்கு பயம் இல்லை. பயம் இல்லாதவன்தான் கோடீஸ்வரன். அவன் தான் செலவு பண்ண முடியும். பயம் இருக்குறவன் எவ்ளோ கோடி இருந்தாலும் பிச்சைக்காரன்தான். அவன் செலவு பண்ணவே மாட்டான். சம்பாதிக்கறதை வச்சி இல்ல கோடீஸ்வரன். செலவழிக் கிறதை வச்சிதான் கோடீஸ்வரன்"

‘‘யப்பா படுவித்தியாசமான ஆளா இருக்கியே."

‘‘எனக்கு நீங்க எல்லாமுமே வித்தியாசமா இருக்கீங்க."

அவன் கன்னத்தில் ஒரு செல்லக் குத்து விட்டாள் தீப்தி.

‘‘சரி, தினமும் பப்புக்கு போய், எதாச்சும் பொண்ணைத் தூக்குவியா?’’

‘‘ச்சீ ச்சீ, நான் முதல்ல டிரிங்க் வாங்கிக் கொடுத்த பொண்ணே நீதாண்டி செல்லம்."

‘‘ஏன் எனக்கு வாங்கி குடுக்கணும்னு தோணிச்சி?’’

‘‘நீ பேரழகி, ப்ரியங்கா சோப்ராவுக்குத்தான் முதல்ல டிரிங்க் வாங்கி குடுக்கணும்னு இருந்தேன். அவளை நீ தோக்கடிச்சிட்ட."

இப்படி முகத்துக்கு நேராக யாரும் தீப்தியைப் புகழ்ந்தது கிடையாது. அவளால் இதை எப்படிக் கையாள்வது என்று தெரியாமல், வேறு வழியில்லாமல் வெட்கப்பட்டாள்.

‘‘சரி உன்னைப் பத்தி சொல்லு, கேர்ள் ஃபிரண்ட் இருக்கா? கல்யாணம் ஆயிடிச்சா?’’

‘‘கல்யாணம் ஆகலை. கல்யாணம் பண்ணிக்கவும் மாட்டேன். சிங்கிள்தான். கேர்ள் ஃபிரண்டும் இல்லை. ஃபீமேல் ஃபிரண்ட்ஸ் வேணா இருக்காங்க."

‘‘ஏன் கேர்ள் ஃபிரண்ட்ஸ் இல்லை?ஏன் கல்யாணம் பண்ணிக்க மாட்ட?’’

‘‘என் லைஃப் ஸடைலுக்கு ஒத்து வராது. அது இல்லாம இன்னொரு சிக்கல் என்னோட அக்கா ஹஸ்பெண்ட் கார் ஆக்சிடெண்ட்ல செத்துட்டாரு. அக்கா ஹோம் மேக்கர் தான். ரெண்டு குழந்தைங்க. அவளுக்கு வேற யாரும் இல்ல. அந்தக் குடும்பத்தை நான் தான் பாத்துக்கணும். அக்காவை இன்னொரு கல்யாணம் பண்ணிக்கோன்னு எவ்ளோ சொல்லிப் பாத்துட்டேன், அவளுக்கு

இண்ட்ரெஸ்ட் போயிடிச்சி. நான் கல்யாணம் பண்ணிகிட்டா, வரப்போற என் பொண்டாட்டி , அவங்களுக்கு பணம் குடுக்கக் கூடாதுன்னு சொல்வா. அவங்க கூட டைம் ஸ்பெண்ட் பண்ணக் கூடாதுன்னு சொல்வா. அந்த குழந்தைங்களுக்கு வேற யாரும் கிடையாது. என்னைதான் அப்பான்னே கூப்பிடுங்க."

‘‘ஏய் சாரிடா அண்டர்ஸ்டுட் யூர் சிச்சிவேஷன்."

‘‘அதெல்லாம் ஒண்ணும் பெரிய சிச்சிவேஷன்லாம் கிடையாது. நான் சொன்ன டோன் சோகமா இருந்திச்சா? கூல், எனக்கு சோகம்லாம் இல்லை. ஜாலியாதான் இருக்கேன். என்ன? கல்யாணம் வேணாம்னு இருக்கேன். இது ஒரு பிரச்சனையா?’’

‘‘இல்லதான்" தீப்தி சாருவை ஆறுதலாக அணைத்துக்கொண்டாள். அதிகாலையில் அறையில் தூங்கி, அன்று மாலை தில்லி திரும்பிப் பிரிந்தார்கள்.

அதிகாலையில் ஒரு இசை துணுக்கு சாருவிடம் இருந்து தீப்திக்கு வரும். இரவு தூங்குவதற்கு முன் இன்னொரு இசைத் துணுக்கு. இசையின் வெவ்வேறு தளங்களை சாரு, தீப்திக்கு அறிமுகப்படுத்தினான். அவளைச் சந்திக்கும் போது அவ்வப்போது பாடியும் காட்டுவான்.

நேரம் கிடைக்கும் போது எல்லாம் வெளிநாடுகளில் சுற்றினார்கள் இருவரும். முதலில் தோல்வியடைந்த இமயமலைப் பயணத்தை தீப்திக்குத் திகட்டத் திகட்ட வெற்றிகரமாகக் கொடுத்தான் சாரு. பேங்க் காங் ஏரியில் வைன் குடித்து விட்டு உறைந்து கிடக்கும் இரவில் இருவரும் மூங்கில் தோட்டம் பாட்டைத் திரும்பப் திரும்ப போட்டு நடனமாடினார்கள்.

‘‘உனக்குத் தமிழ் பாட்டு கூட பிடிக்குமாடா?" என்றாள் தீப்தி.

‘‘இசைக்கு என்ன மொழி? இசை நல்லா இருந்தா, நாய் பாஷைல குரைச்சா கூட நல்லாருக்கும்" என்றான்.

நடை, உடை, அழகுபடுத்திக்கொள்தல் என தீப்தியின் அன்றாட வாழ்வில் பெரும் தாக்கத்தை ஏற்படுத்தினான் சாரு. அவள் போட்டுக்கொள்ளும் சோப்பு,

ஷாம்பூ முதற்கொண்டு சாருவின் பேச்சைக் கேட்டு மாற்றினாள். பிரா பேண்ட்டி கூட பிராண்ட் மாறியது.

உணவும் தலைகீழாக மாறியது. எண்ணெய்ப் பலகாரங்கள் அறவே அவள் வாழ்வில் இருந்து வெளியேறின. காலையில் இட்லிக்குச் சட்னி தொட்டுச் சாப்பிட்டுக்கொண்டு இருந்தவள், இப்போது ஆட்டுக்கால் பாயா எங்கே கிடைக்கும் என்று தேடும் நிலைக்குப் போனாள்.

அவளுடைய வீட்டுக்கு வந்தால், ஏ பி சி ஜூஸ் போட்டு அவளுக்குக் கொடுப்பான். அது அவளுக்கு அவன் மேல் மிகப்பெரிய காதலை உருவாக்கியது. அவனே காய்கறி நறுக்கிச் சமைத்துப் போடுவான். வைன், லிக்யூர், பியர், ஷாட்ஸ் என குடித்துக்கொண்டு இருந்தவளுக்கு ரெமி மார்ட்டினையும் சாக்கேவையும் அறிமுகப்படுத்தி விட்டான்.

ஒரு விடுமுறை நாளின் அதிகாலையில் நடந்தது இது . காலையிலேயே வந்து விட்ட சாரு, காலை உணவு சமைத்துக்கொடுத்ததில் ஆரம்பித்து, அவளுடைய துணிகளை மடித்து வைத்து, அவளுக்குக் கால் அமுக்கி விட்டு, மதிய உணவு சமைத்து, ஒரு சினிமா பார்த்து, மாலையில் அற்புதமான சாலட் மற்றும் தாவா மீன் பிரட்டலையும் வைத்துக்கொண்டு சாக்கே ஊற்றிக்கொடுத்தான். ஏற்கனவே உருகி ஊற்றிக்கொண்டு இருந்த தீப்தி ஒரு ரவுண்ட் முடிந்ததும் அவனைக் கட்டிக்கொண்டாள்.

‘‘உன்னை ஏன் தெரியுமா எனக்கு பிடிச்சி இருக்கு?’’

‘‘நிச்சயம் ஒரு காரணம் இருக்காது, நிறைய இருக்கும், நீயே சொல்லு."

‘‘போடாங்... இவ்ளோ நாளா நாம ஒண்ணா தங்கியும், நீ என்னை ஃபக் பண்ண டிரை பண்ணவே இல்லை,"

‘‘இன்னும் எவ்ளோ நாள் ஆனாலும் டிரை பண்ண மாட்டேன் ஏன் தெரியுமா?’’

‘‘ஏன்டா?"

‘‘என்னால பொண்ணோட ஈடுபாடு இல்லாம ஒண்ணுமே செய்ய முடியாது. ஈடுபாடுன்னா வெறும் உடல் ரீதியான ஈடுபாடு மட்டும் இல்ல, என்னைக் கொஞ்சி, கட்டிப்பிடிச்சி, காதல்செஞ்சி, முத்தம் கொடுத்தாதான், செக்ஸே என்

மைண்ட்ல வரும். அதுக்கு அப்புறம் தான் ரெடி ஆவேன். அதுக்கு அப்புறம் நடக்கும் ஆட்டமே வேறு."

‘‘அப்பிடி என்னடா குட்டி ஆட்டம் போடுவ" என்று கொஞ்சிக் கொண்டே அவனை முத்தமிட்டாள். தீப்திக்கு அவன் மேல் அன்பு பெருக்கெடுத்தது. முத்தமிட்டுக்கொண்டே இருந்தாள். அவனும் முதன்முறையாக முத்தமிடுவதைப் போல முத்தமிட்டான்.

அவளுடையப் பாதங்களைத் தாங்கி உள்ளங்காலில் முத்தங்களை விதைத்தான். முதன்முறையாக உள்ளங்காலில் முத்தத்தைப் பெற்ற தீப்தி சொக்கிப்போனாள். அவளை ஒரு நாற்காலியில் அமர வைத்து அடிமை போல கீழே அமர்ந்து கொண்டான். அவளது கால்களைத் தன் நெஞ்சினில் வைத்துக் கெண்டைக் கால்களுக்கு முத்தமிட்டான். அவனது ஒவ்வொரு முத்தமும் அவளுக்கு, நீ என் அரசி, நீ என் இளவரசி என்ற செய்தியை அனுப்பிக்கொண்டு இருந்தது. அவனது செய்கையில், தான் ஒரு ஆண் என்ற எந்த வெளிப்பாடும் வெளிப்படவில்லை. தெய்வீக வழிபாடு போல ஒவ்வொன்றையும் அர்ப்பணிப்போடு செய்து கொண்டிருந்தான். அங்கே ஆண் பெண் என்ற பேதம் ஒழிந்து, இரண்டு உயிர்கள் ஒன்றாகக் கலந்து புது வகையாக, ஆண் தன்மையும் பெண்தன்மையும் முற்றாக ஒழிந்த பாலினம் உருவாகிக்கொண்டு இருந்தது.

தெய்வீக வழிபாடு போல, ஒவ்வொரு நிலையிலும் அதற்கான நேரம் எடுத்துக்கொண்டு, அடுத்த நிலைக்குச் சென்றார்கள். மனமோ புத்தியோ ஒன்றுமில்லாமல் ஆனது. உன்னதமான மயக்க நிலையில் இருவரும் ஒருவரை ஒருவர் ஆராதித்துக் கொண்டு இருந்தார்கள். ஒரே இடமாக இல்லாமல், ஒவ்வொரு நிலைக்கும் இடமும் மாறிக்கொண்டே இருந்தது. அவள் தன்னிலிருந்து பிரிக்கப்பட்ட ஆண்குறியுடன் அதன் மொழியில் பேசிக்கொண்டிருக்கும் போது, இவன் மிகவும் சிரத்தையாக லாரா ஃபாபியானின் ஜூ தேம் பாடலைப் பாடிக்கொண்டு இருப்பான்.

நின்று கொண்டு, நடந்து கொண்டு, அமர்ந்து கொண்டு, ஆடிக்கொண்டு, ஓடிக்கொண்டு, முட்டிப்போட்டுக்கொண்டு, படுத்துக்கொண்டு என்று அந்த

வழிபாட்டை இருவரும் நடத்திக்கொண்டு இருந்தார்கள். அவன் அதை நெறிப்படுத்திக்கொண்டு இருந்தான்.

ஒரு வழியாக தீபம் காட்டும் வேளை வந்து இருவரும் சொக்கித், தன்னிலை இழந்து, புதுப்பிறவி எடுத்துக், கடவுளைச் சந்திக்க இருக்கும் ஒரு நொடிக்கு முன்னர் மயங்கிச் சரிந்தனர். கிட்டத்தட்ட நூற்றி எண்பது நிமிடங்கள் ஆகி இருந்தன.

அதற்குப்பிறகும் ஒருவரை ஒருவர் நிரடியபடி, அறுபது நிமிடங்கள் மயங்கிக் கிடந்தார்கள். இந்த அனுபவம் தீப்திக்கு மிகவும் புதுமையாகவும் இவனுக்காகத்தான் தான் படைக்கப் பட்டிருப்பதாகவும் நம்ப வைத்தது. இவனையே திருமணம் செய்து கொண்டு தன்னுடன் பொத்தி வைத்துக்கொள்ள வேண்டும் என்று தோன்ற ஆரம்பித்தது.

‘‘டேய் நாம கல்யாணம் பண்ணிக்கலாமா?'' இந்த மெசேஜை அடிக்கடி அனுப்ப ஆரம்பித்தாள் தீப்தி. கிட்டத்தட்ட முன்னூறு தடவைக்கு மேல் அனுப்பி இருப்பாள். ஆனால் ஒரு முறை கூட, காப்பி பேஸ்ட் செய்யவில்லை. ஒவ்வொரு முறையும் புதிதாக டைப் செய்துதான் அனுப்புவாள்.

குட் மார்னிங், குட் நைட் மெசேஜ் எல்லாமே, ‘‘டேய் நாம கல்யாணம் பண்ணிக்கலாமா?'' என்று மாறியது.

அந்தக் குழந்தைகளோடு தீப்தி வீட்டில் இருக்கும் போது விடியோ கால் பேசுவான் சாரு. தீப்தியும் அந்தக் குழந்தைகளுடன் பேசிப் பேசி நன்கு அறிமுகமாகி விட்டிருந்தாள். அஸ்மிதா, நிஸ்மிதா என்ற பெயர் கொண்ட இரண்டு பெண்களும் தீப்தியிடமும் நெருக்கமாகி விட்டன.

அக்காவின் போட்டோவைச் சாருவிடம் காட்டி, ‘‘ஏன்டா இப்படி அநியாயத்துக்கு சோகமா இருக்காங்க?'' என்றாள் தீப்தி.

‘‘என்ன பண்ணாலும் அவளுக்கு சந்தோஷமே வர மாட்டேங்குது, பாவம்'' என்றான்.

‘‘நாம கல்யாணம் பண்ணிகிட்டா சந்தோஷப்படுவாங்க'' என்றாள்.

‘‘சரி பண்ணிக்கலாம் ஆனா சிம்பிளா பண்ணிக்கலாம்'' என்றான் சாரு.

கோவிலில் சில நண்பர்களை மட்டும் வைத்து திருமணம் செய்து கொண்டு, பதிவுத் திருமணம் செய்து கொள்ளலாம் என்று முடிவு செய்தார்கள்.

திருமணத்திற்கு ஒத்துக்கொண்டதைக் கொண்டாடும் விதமாக, இருவரும் மணாலி சென்றார்கள். குல்லு வரை விமானத்தில் சென்று, அங்கிருந்து ஜூம் கார் வாடகைக்கு எடுத்துக்கொண்டு மணாலி சென்று தங்கினார்கள்.

அன்று இரவு குளிர் முட்டைக்கும் கீழே சென்று கொண்டிருந்தபோது பனி மலையைப் பார்த்தபடி இருவரும் தங்கள் ரெஸார்டின் வெளியே மூங்கில் நாற்காலியில் அமர்ந்து இருந்தார்கள். விறகுக் கட்டைகள் எரிந்து கொண்டிருந்தன.

‘‘சாரு, கல்யாணம் பண்ணிக்கறதுக்கு முன்னால, நான் என்னைப் பத்தி என் பாஸ்டைபத்தி சொல்லிடறேன்" என்றாள்.

‘‘வேணாம் செல்லம், உன் இறந்த காலம் எனக்கு எதுக்கு? என்னவா வேணா இருந்துட்டு போகட்டும். இப்ப இருக்கும் தீப்தியாவா அப்ப இருந்திருக்க போற? இப்ப இருக்கும் தீப்திதான் என் தீப்தி. இது போதும் எனக்கு. நான் உன்னை லவ் பண்றேனா, இல்லை உன் கடந்த கால கதையையா?’’ என்றான்

‘‘இதுக்குதான்டா உன்னை எனக்கு ரொம்ப பிடிச்சி இருக்கு" என்றாள்.

‘‘இப்ப இல்ல, எப்பவும் நாம பாஸ்டை நோண்டிட்டு, இப்ப இருக்குற ப்ரஸண்டை பாழாக்கிக்கக் கூடாது" என்றான்.

‘‘சரிடா, அப்படியே இருப்போம்."

‘‘நீ பண்ண மாட்ட, இருந்தாலும் சொல்றேன். அக்காவுக்கு, அக்கா பசங்களுக்கு பணம் குடுக்கறதையோ, அவங்க கூட டைம் ஸ்பெண்ட் பண்றதையோ நீ கேட்டுத் திட்டக்கூடாது."

‘‘ச்சீ... சீ... அவங்க என் குழந்தைங்க மாதிரி. நானே செலவு பண்ணுவேன். நாம சேந்து பாத்துக்கலாம்" என்றாள்.

பயணம் முடிந்து குலு வந்து விமானம் ஏறும் போது சாருவின் மொபைல் மேலிருந்து கீழே விழுந்து நொறுங்கியது. கீழே இருப்பவன் அதை எடுத்து வந்து சாருவிடம் கொடுத்தான்.

டெல்லி வந்து இறங்கியதும் இருவரும் பிரிந்து செல்வதற்கு முன்னால் சாரு புது மொபைல் வாங்கினான்.

மதிய உணவை நண்டூஸ் சிக்கனில் முடித்துக்கொண்டு, பிரிவதற்கு முன்னால், “இந்த மொபைலை தூக்கிப் போட்டுடவா?" என்றான்.

“வேணாம்டா, சரி பண்ணிக்கலாம். இதுல பேக் அப் இருக்கும் இல்ல?”

“ஒரு பேக்கப்பும் இல்ல. எல்லாம்தான் க்ளௌட்ல இருக்கே. எனக்கு இந்த ரிப்பேர் பண்றது அதுக்கு அலைஞ்சி திரிஞ்சி வாங்கறது எல்லாம் பிடிக்காது" என்றான்.

“சரி குடு, நான் ரிப்பேர் பண்ணி பேக் அப் மொபைலா வச்சிக்கறேன்" என்று அதை வாங்கிக்கொண்டு இருவரும் பிரிந்தார்கள்.

மொபைல் சர்வீஸாகி வந்ததும் தீப்தி ஆர்வத்துடன் கேலரி சாட் மெசேஜ் என நோண்டினாள். பெரிதாக ஒன்றும் இல்லை. தன்னையே விதம் விதமாக படம் எடுத்து வைத்திருந்தான். ஒரு பக்கம் சந்தோஷமாக இருந்தாலும் என்னடா இது செல்லச் சண்டை போடக்கூட ஒன்றுமில்லையே எனச் சிரித்துக்கொண்டே யோசித்துக்கொண்டிருந்த தீப்தியின் கண்களுக்கு ஒரு சாதாரண டாக்குமெண்ட் சிக்கியது.

அசுவாரசியமாக அதைச் சொடுக்கித் திறந்தாள். அது ஒரு சாதாரண மான அக்நாலேட்ஜ்மெண்ட் டாக்குமெண்ட். அசுவாரசியமாக அதை மூடப்போகும் நேரத்தில் பின்மண்டையில் என்னமோ சொடுக்கியது.

அது அஸ்மிதாவின் ஆதார் அக்நாலெட்ஜ்மெண்ட் டாக்குமெண்ட். அதில் தந்தை பெயர் தெளிவாக “சாரு நிவேதிதா" என்று போட் டிருந்தது. தீப்திக்குக் கால்கள் வலுவிழந்தன. மொபைலைத் தூக்கி சுவற்றில் அடிக்கப் போன தீப்தி கட்டுப்படுத்திக்கொண்டாள்.

அக்கா என நினைத்து இதுவரை பேசாமல் இருந்த சுபாவிடம் சாட் செய்தாள். உடல் துடித்துக்கொண்டு இருந்தது. தண்ணீர் தாகத்தால் தொண்டை வறண்டது; வியர்த்துக் கொட்டியது.

சாட் மூலம் தொடர்ந்து பேசி இருவரும் அனைத்தையும் தெரிந்து கொண்டனர். கடைசியாக சுபா இப்படிச் சொன்னாள்.

‘‘எனக்கும் அவருக்கும் பன்னிரண்டு வருடகால திருமண பந்தம். காதல் திருமணம். நான் எங்கள் உறவு சீராக இருக்கிறது என்றுதான் நினைத்துக்கொண்டு இருக்கிறேன். இதுவரை பெரிதாக சண்டையோ மனஸ்தாபமோ வந்ததில்லை. அவரது காதல் குறைந்ததாகவும் உணரவில்லை. குழந்தைகளுக்கும் அவர் நல்ல தகப்பன். குழந்தைகளுக்கும் அவர் மேல் உயிர். மிக அருமையான வாழ்வை வாழ்ந்திருக்கிறேன். நீ இதைச் சொல்லவில்லை எனில் எனக்கு எதுவும் தெரியவந்திருக்காது. அவரிடம் எந்த மாற்றத்தையும் என்னால் உணர முடியவில்லை. அவர் உன்னிடம் செய்த செயலுக்காக நான் உன்னிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்கிறேன். அவரை தண்டித்து விடாதே தீப்தி."

ஒருமுறை மட்டும் கடைசியாக சாருவைச் சந்தித்துப் பேச சுபாவிடம் அனுமதி வாங்கிக்கொண்டு சுபாவிடம் இருந்து அகன்றாள் தீப்தி.

சாருவைச் சந்தித்து, இறுக்கமாக முகத்தை வைத்துக்கொண்டு பேசியபோது சாரு சொன்னதில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட முத்துக்கள் கீழே:—

‘‘உன்னை ஏமாத்தணும்னு எண்ணம் இல்ல தீப்தி. உன்னை எனக்கு புடிச்சது உண்மை. காதல் உண்மை, எல்லாமே உண்மை. கல்யாணம் ஆயிடிச்சின்னு சொன்னா நீ என்னை விட்டுட்டு போயிடுவியோன்னு பயந்துதான் சொல்லலை. ஆனா ஒருநாள் உன்கிட்ட நான் மாட்டிப்பேன்னு தெரியும். எனக்கு ஏற்கனவே கல்யாணம் ஆனதுக்கு நான் என்ன செய்வேன்? உன்னை முதலில் பாத்திருந்தா உன்னைத்தான் கல்யாணம் செஞ்சிருப்பேன். இப்ப என்னா? கல்யாணம் பண்ணிக்க வேணாம் லிவ் இன்னா இருக்கலாமே?’’

‘‘எந்திரிடா செருப்பு பிஞ்சிடும். வப்பாட்டியா இருக்க சொல்றியாடா? எதோ உன் காதல், அன்பு எல்லாம் எனக்கு உண்மையா இப்ப வரைக்கும் தெரியறதால சும்மா விடறேன். இன்னொண்ணு சொல்லட்டுமா? எவ்ளோ அன்பு, எவ்ளோ பாசம், எவ்ளோ காதல் நீ காட்டி இருந்தாலும் ஒரு சீட்டிங்க் பண்ண பாத்தியா? எல்லாமே பொய் ஆயிடிச்சி. எல்லாத்தையும் விட சீட்டிங்க் தான் பெருசு. ஆனா நான் அதை பொய்யின்னு நினைக்க விரும்பல. அதனால உன்னை சும்மா விடறேன். இல்ல உள்ள தூக்கிப் போட்டிருப்பேன். வெளில போடா" என்றாள்.

சாரு எழுந்து மிதமான வேகத்தில் வெளியேற ஆரம்பித்தான்.

‘‘போ, திரும்பப் போய் சுத்து, எவளையாச்சும் பொறுக்கு. நீதாண்டி பேரழகின்னு சொல்லு. அவ காலை நக்கு, அவ கவுந்ததும் மூணு மணி நேரம் மேட்டர் பண்ணு, போடா! பொண்ணுங்களை மயக்கறதுக்கு பாட்டு, டேன்ஸ், ஜென், லைஃப் ஸ்டைல், ஸோர்பான்னு எவ்ளோ ஐட்டத்தை கைல வச்சிகிட்டு திரிஞ்சிட்டு இருக்கடா நீ? சாதா பொறுக்கிங்களை விட நீதான்டா டேஞ்சர். அவனுங்களாவது ரேப் பண்ணிட்டு போய்டுவானுங்க. நீ குடுத்துட்டு போற இம்பேக்ட் இருக்கு பாரு, மெண்டல் ஆக்கிடும், போய்த் தொலை" என்று கத்தினாள்.

வெளியே சென்ற சாரு நிவேதிதா, அவளை வாட்ஸப்பில் இருந்தும் ஃபேஸ்புக்கிலும் ப்ளாக் செய்தான்.

‘‘கொழுப்பைப் பாரு, தேவடியா மவனே" என தீப்திகா கறுவிக்கொண்டாள்.

# சுபா — எதிர்காலம்

சாரு நிவேதிதா குழந்தைகளுடன் விளையாடிக்கொண்டிருந்தான். அமைதியாகப் பார்த்தபடி குழந்தைகளுக்கு தோசை சுட்டுக் கொடுத்துக்கொண்டிருந்தாள். குழந்தைகள் தூங்கியதும் சாருவிடம் வந்து அமர்ந்தாள்.

“என்னோட 12 வருஷ காதலையும், திருமண வாழ்க்கையையும் ஒண்ணுமில்லாம ஆக்கிட்ட இல்ல?”

“இல்ல செல்லம்...”

“டேய் இனிமே இந்த செல்லம்னு எல்லாம் ஒளறாத, புரியிதா?”

சாரு அமைதியாக இருக்க...

“குழந்தைங்க லைஃப் கெட்டுடக் கூடாதுன்னு தீப்திகிட்ட கெஞ்சி கூத்தாடி உன்னைக் காப்பாத்தி இருக்கேன். பொண்டாட்டி, பத்தினி நம்மமேல பாசம்னு எல்லாம் நினைச்சிக்காதே."

“சாரி செல்லம்."

“இனிமே செல்லம்னு சொன்ன, செருப்பு...”

சாரு மொபைலை எடுத்துப் பார்த்தான்.

“இப்ப எவளையாவது புதுசா புடிச்சி இருக்கியா? மொபைலை கீழ வைய்யி நான் சொல்றதைக் கேளு. நாம் டிவோர்ஸ் அப்ளை பண்ணுவோம். குழந்தைங்களுக்குத் தெரிய வேணாம். பெரியவங்க ஆனதும் சொல்லிக்கலாம். இனிமே நான் உன் பொண்டாட்டி கிடையாது. என்னையும் காலேஜ் டேஸ்ல எத்தனையோ பேர் லவ் பண்ணி இருக்காங்க. எனக்காகவே ராம்னு ஒருத்தன் இன்னும் கல்யாணம் பண்ணாமயே சுத்திட்டு இருக்கான். நான் அவன் கூட ரிலேஷன்ஷிப் வச்சிக்கறேன். நான் யார் கூட வேணா இனிமே சுத்துவேன். யார் கூட வேணா ரிலேஷன்ஷிப் வச்சிக்குவேன். நீ ஒரு மயிரும் கேக்கக்கூடாது. நீ

எவ கூட வேணா போ. மொதல்ல டிவோர்ஸ் அப்ளை பண்ணுவோம். குழந்தைங்க வளர்ர வரைக்கும் புருஷன் பொண்டாட்டியா நடிப்போம்."

“எப்டி? எப்டி? நான் ஒனக்கு அக்காவா? தங்கச்சி கூட இல்லை, அக்கா. ரெண்டு கொழந்தை பெத்ததும் அக்காவா? நீ பெரிய மன்மதக் குஞ்சி. என் கண்ணு முன்னாலயே நிக்காத, போய்த் தொலை" என்று எழுந்து படுக்கையறை உள்ளே நுழைந்து கதவைச் சாத்திக்கொண்டாள்.

சில மாதங்களுக்குப் பின் மியூச்சுவல் டிவோர்ஸ் வாங்கிக்கொண்டனர்.

கோர்ட்டில் இருந்து கிளம்பும் போது,

“கிளம்பலாமா செல்லம்?" என்றான் சாரு நிவேதிதா!

# பொற்செல்வி

மருத்துவ உயர்படிப்பை முடித்த பொற்செல்வி, நகரத்தில் ஒரு மருத்துவமனை கட்டினாள். படிக்கும்போது உடன் படிக்கும் தோழிகள் என்னென்னவோ கூத்தடித்தாலும், அதில் ஒதுங்கி இருக்காமல் கலந்து கொள்வாள். ஆனால் ஈடுபடமாட்டாள். ஒருத்தி கேட்டே விட்டாள்.

“என்ன ஜென்மம்டீ நீ? தண்ணி, சிகரட், கஞ்சா எதுவும் கிடையாது. பாய் ஃபிரண்டும் கிடையாது. போர்னும் பாக்க மாட்ட, ஆம்பளைல பெஸ்டியும் கிடையாது. எப்பிடிதான் இப்பிடி இருக்குறயோ?"

நடுவில் ஒருநாள் அமிர்த கடேஸ்வரன் பொற்செல்வியைப் பார்த்து தைரியமாகத் தன் காதலைச் சொல்லி விட்டான். கிட்டத்தட்ட, தான் விரும்பிய பெண்ணாக எல்லா வகையிலும் பொற்செல்வி இருப்பதாகவும் சின்ன வயதில் இருந்து காதலித்து வருவதாகவும் விளக்கமாகச் சொன்னான்.

சின்ன வயதில் காதலிப்பதே மிகத் தவறு. அதிலும் நான் சிறுமியாக இருக்கும் போது உனக்கு அந்த எண்ணமே வந்திருக்கக் கூடாது. இது ஒரு மனநோய். நீ நல்ல மனநல மருத்துவரைப் பார்க்க வேண்டும். இல்லையென்றால் நீ சிறுமிகளைப் பாலியல் பலாத்காரம் செய்ய ஆரம்பிப்பாய் என்று சொல்லிய பொற்செல்வி , இதுவரை சிறுமிகளைப் பாலியல் பலாத்காரம் செய்ய வேண்டும் என்று தோன்றியிருக்கிறதா? அப்படி ஏதேனும் செய்திருக்கிறாயா? என்னிடம் தைரியமாகச் சொல் என்றாள்.

“ச்சீச்சீ, பெரியவங்க கூடத்தான் செஞ்சிருக்கேன். ஒரு சின்னப் பெண்ணையும் தொட்டதில்லை" என்று கூறி நாக்கைக் கடித்துக் கொண்டான்.

“பரவாயில்லை, எதற்கும் டாக்டரைப் பாரு" என்று கூறி அவனை அனுப்பி வைத்தாள்.

படிப்பு முடிந்ததும் நகரத்தில் பெண்கள் சிறப்பு மருத்துவமனை ஒன்றைக் கட்டினாள். கிராமத்தில் இலவச மருத்துவமனை ஒன்றைக் கட்டினாள். அதற்கு

இடம் பெறுவது தொடர்பாக கலக்டர் செல்வகுமார் கணேசனைச் சென்று சந்தித்தாள். நிச்சயம் உதவுவதாகச் சொன்னார். நேர்மையான கலக்டர், எந்த கெட்டப் பழக்கமும் இல்லாத திறமையான கலக்டர்; அவரும் விர்ஜினாக இருந்தார்.

இது சம்பந்தமாக இருவரும் சில முறை சந்தித்துக்கொண்டு இருவருக்கும் ஒருவரை ஒருவர் பிடித்து விட்டது. வீட்டில் பேசி, திருமணம் செய்து கொள்ளலாம் என முடிவெடுத்தார்கள்.

இந்த நிலையில்தான் கிராமத்து இலவச மருத்துவமனை திறப்பு விழா.

மரத்துக்குக் கீழே டீக்கடையும் பக்கத்தில் பேருந்து நிறுத்தமும் இருக்கும் இடத்தை ஒட்டி இருக்கும் பெரிய மைதானத்தைதான் கலக்டர் ஒதுக்கிக் கொடுத்து இருந்தார்.

மணி மாஸ்டருக்கு இனி வியாபாரம் பிய்த்துக்கொண்டு போகும். மணி உற்சாகமாக டீ ஆத்திக்கொண்டு இருந்தார்.

‘‘எத்தனை மணிக்குண்ணே திறப்பு விழா?" என்றான் ஒருவன் .

மணி சைகையாலேயே, ‘‘தெரியலை" என்பது போல ஆட்டினார்.

திரும்பவும் ‘‘எத்தனை மணிக்குண்ணே திறப்பு விழா?" என்றான் .

‘‘என் பூள்ள தான் கத்திரிக்கோல் கட்டித் தொங்க விட்டுட்டுப் போயிருக்காங்க. என் பூளைப் புடிச்சி இழுத்துட்டுப் போவாங்க. அப்ப பாத்து தெரிஞ்சிக்கோ" என்றார்.

‘‘இன்னொருவன், அண்ணே இது பொண்ணுங்களுக்கு எலவச ஆஸ்பத்திரியாமே" என்றான்.

‘‘ஆமா, நீ ஓஸிலதான ஒழுக்குற? அதுக்கு ஓஸில பிரசவம் பாக்க வேணாமா? இல்லன்னா பணத்துக்கு பயந்துகிட்டு நீங்க எல்லாம் 'வாங்கை' உள்ள விட்டு புள்ளை ஒடம்புல மாட்டி இழுத்து எடுப்பீங்கடா" என்றார்.

திறப்பு விழா மேடையில், பொற்செல்விக்கும் செல்வகுமார் கணேசனுக்கும் திருமண அறிவிப்பையும் வெளியிட்டு, மருத்துவ மனையையும் திறந்தார்கள்.

அன்று வந்த பிரசவ கேஸுக்குப் பொற் செல்வியே மருத்துவம் பார்த்துச் சுகப் பிரசவத்தில் ஷமித்ராவை எடுத்தாள்.

"குழந்தை ரொம்ப அழகா இருக்கா" என்றாள் பொற்செல்வி.

அதே கிராமத்தில் பெரிய பந்தல் போட்டு அனைவரையும் அழைத்து பிரம்மாண்டமாகத் திருமணம் செய்து கொண்டாள் பொற்செல்வி.

அன்னம், சந்திரா, சுமதி, ஆறுமுகம், பாலு, சின்னப்பொண்ணு, பழநி, மணி மாஸ்டர் என எல்லோரும் கலந்து கொண்டார்கள்.

‘‘எப்பண்ணே தாலி கட்டுவாங்க" என்றான் ஒருவன்.

‘‘ரெண்டு மொலையும் சிக்கிக்கிச்சாம். சிக்கெடுத்துட்டு இருக்காங்க, சிக்கு எடுத்ததும் தாலி கட்டிடுவாங்க. தாலியும் போய் சிக்கிக்கக் கூடாது" பாரு என்றார்.

திருமணம் முடிந்தும் அன்பு காதல்தான் முக்கியம், செக்ஸா வாழ்க்கை என்று முடிவெடுத்து, செல்வகுமார் கணேசனும் பொற்செல்வியும் நான்கைந்து மாதங்கள் உடலுறவு இல்லாமலேயே வாழ்ந்து வந்தார்கள். பிறகு ஒருநாள் போனால் போகட்டும் என மிகவும் சாத்வீகமான முறையில் ஈடுபட்டதால் கரு உண்டானது.

நகரத்தில் பெரிய மருத்துவமனை சொந்தமாக இருந்தாலும் பொற்செல்வி கிராமத்து மருத்துவமனையைத் தேர்ந்தெடுத்து, அங்கேயே தீப்திகாவைப் பெற்றெடுத்தாள்.

# தீப்திகா – ராஜேஷ் குமார் –

# எதிர் காலம்

ப் ரியங்கா பிரதமர் ஆகி இருந்த நேரம். டெல்லி வாழ்க்கை மிகவும் மனவுளைச்சலைக் கொடுத்துக்கொண்டு இருந்ததால் நிர்வாகத்திடம் சென்னைக்கு மாற்றல் கேட்டிருந்தாள் தீப்தி.

சாரு நிவேதிதா ஏற்படுத்தி இருந்த தாக்கத்தை, ஏமாற்றத்தை அவளால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. தினமும் குடிக்க ஆரம்பித்தாள். பப்பில் சென்று குடிப்பது, அங்கிருந்து கிளம்பி வீட்டுக்கு வந்து குடிப்பது. காலையில் அலாரம் வைத்து, அதை அணைத்து, நன்கு தூங்கி, அலுவலகத்தில், க்ளையண்டை பார்க்க போவதாகப் பொய் சொல்லித் தூங்குவது, மதியம் எழுந்து கடமைக்கு வேலை பார்ப்பது, மாலையில் செமையான ஒரு க்ளையண்டைப் பிடித்து நல்ல பேர் வாங்குவது என வாழ்க்கை குழப்பி அடித்தது.

பப்பில் எவனாவது வழிந்தால், போதையில் அவனை வீட்டுக்குக் கூட்டி வந்து புணர்வாள் தீப்தி. அந்த நேரத்தில் அவனை அவளுக்குப் பிடித்து இருக்க வேண்டும்.

மேட்டர் முடிந்ததும், அவனைக் கிளம்பு என்பாள். அவன் விழிக்கையில், ‘‘கழுவிட்டு கௌம்புடான்னு சொன்னேன்" என்பாள்.

சில சமயங்களில் பப்பில் பல பேரை முத்தமிட்டு இருக்கிறாள். ஒரு சனிக்கிழமையில் பிரபல டிஸ்கோவில், அவளிடம் வரும் அனைவரையும் முத்தமிட்டாள். கன்ன முத்தம் எல்லாம் இல்லை, அனைத்தும் லிப் கிஸ். ஆதூரமான லிப் கிஸ். அந்த க்ளப்பே களை கட்டியது அன்று. அனைவரும் வரிசையில் நின்று முத்தம் பெற்றுக்கொண்டு விலகினார்கள்.

மறுநாள், டெல்லியில் வரலாறு காணாத பிரேக் அப்கள் நடந்தன.

அவள் பலரையும் முத்தமிட்டதை சிலர் விடியோ எடுத்து, அது வைரல் ஆனது. ஆனால் போதுமான ஒளி இல்லாததால் அது தீப்திகா என்று தெரியவில்லை.

ஒருநாள், அழகாக, மழித்துக்கொண்டு அமுல் பேபி போல இருந்த ஒரு ஆள் இவளிடம் வழிந்து கொண்டிருந்தான்.

“இங்க வா, உன் பேரு என்ன?" என்றாள்.

“ஆசீஃப் காந்தி" என்றான்.

“ஆசீஃப் காந்தியா? என்னடா ஒளர்ர? போதையா" என்றாள்.

“இல்ல, எங்க தாத்தாவுக்கு காந்தியை பிடிக்கும், அதான்" என்றான்.

“நான்வெஜ் சாப்புடுவியா?”

“ம்ம்... சாப்புடுவேன்."

“உங்க தாத்தா?”

“சாப்புட மாட்டார்."

“ஓ.. ஒங்க தாத்தா பெரிய பருப்புதான். ங்கொய்யாள, காந்தின்னு பேரை வச்சிகிட்டு தண்ணி அடிக்கிறியா நீ?”

“காந்தின்னு நானா பேரை வச்சிகிட்டேன்? காந்தின்னு பேரை வச்சிப்புட்டு, தாய்லாந்து போகக் கூடாதுன்னா எப்புடீ?"

“போகக்கூடாதுடா ங்கொய்யான், அதான் இந்த நாடு. அதனாலதான் இப்ப ப்ரியங்கா ப்ரைம் மினிஸ்டர், புரியிதா?"

“புரியிது சிஸ்டர்."

“சிஸ்டரா?”

“சரி, ஒளறிட்டேன், சாரி. லவ் யூ சிஸ்டர்.”

“ஹா ஹா... நீ சிஸ்டர்ன்றதே கிக்காத்தான் இருக்கு. வறியா மேட்டர் பண்ணலாம்?”

“ஹி ஹி... என்ன சிஸ்.... சாரி என்ன மிஸ்?”

“மிஸ்டர்னு ஒளறிடாத.”

அவனை தூக்கிக்கொண்டு தன் வீட்டுக்குப் போனாள்.

போகும் வழியில்,

‘‘டேய் ஒழுங்கா மேட்டர் பண்ணுவியாடா?’’

‘‘டிரை பண்றேன் டார்லிங்."

‘‘ஓ... சிஸ்டர், இப்ப டார்லிங்கா? செம செம. உன் சிஸ்டரை டார்லிங்க்னு கூப்டு இருக்கியாடா?"

‘‘ஓ... கூப்புடுவனே."

‘‘உன் சிஸ்டரை மேட்டர் பண்ணி இருக்கியா?’’

சீரியஸ் ஆனான் ஆசீ்ஃப் காந்தி.

‘‘மைண்ட் யுவர் வேர்ட்ஸ் தீப்தி."

‘‘ங்கோத்தா என்னாடா மைண்ட் மை வேர்ட்ஸ். டிரைவர், வண்டியை ஒரு நிமிஷம் நிறுத்துங்க."

கார் நின்றது.

‘‘இறங்குடா."

இறங்கினான்.

ஒரு சிகரட் பற்ற வைத்துக்கொண்டாள்.

‘‘என்னா சிலும்பற?’’

‘‘தேவையில்லாம என்னையும் என் தங்கச்சியையும் வச்சிப் பேசாத."

‘‘சரி, உன் தங்கச்சி, என்னை மாதிரி குடிச்சி பப்ல ஒருத்தன் கூட மேட்டர் பண்ண போனா ஓக்கேவா, ஏதும் பிரச்சனை பண்ண மாட்டியா?’’

யோசித்தான் ஆசீ்ஃப் காந்தி.

‘‘நீ சொல்ற பதில்லதான் இருக்கு. இன்னிக்கு நாம மேட்டர் பண்றமா இல்லையான்னு."

‘‘இல்ல, பிரச்சனை பண்ண மாட்டேன்."

‘‘அவ நம்பரைக் குடு."

கொடுத்தான்.

அதை தீப்தி சாரு நிவேதிதாவுக்கு அனுப்பினாள், அது போக வில்லை. சாரு பிளாக் செய்து இருப்பதால். அதற்குப்பிறகு அவனை அழைத்துக்கொண்டு வீட்டுக்குச் சென்றாள்.

மியூசிக் போட்டாள்.

‘‘ஐ வாண்ட் எ ஸ்டிரிப் டீஸ் டேன்ஸ். ஸ்டெப் பை ஸ்டெப்."

ஆசீ·ப் காந்தி ஒவ்வொன்றாகக் கழட்டி நடனம் ஆடினான்.மொத்தமாகக் கழட்டி நிர்வாண நடனம் ஆட கூச்சப்பட்டான்.

ஒரு ரவுண்ட் கொடுத்தாள்.

நிர்வாண நடனம் ஆடினான்.

‘‘உன் காம்பை திருகிகிட்டே ஆட்றா."

ஆடினான்.

‘‘திரும்பி நின்னு சூத்தை ஆட்றா."

ஆட்டினான்.

‘‘ஒரே இடத்துல நின்னுகிட்டு, பூள் முனையைப் பிடிச்சிகிட்டு, அதை லெ·ப்ட்ல இழுக்கணும், உன் இடுப்பு ரைட்ல போகணும், ஆட்றா" என்றாள்.

ஆடினான்.

‘‘அதையே ஆப்போசிட்டா பண்ணு, கண்டினியஸா பண்ணு" என்றாள்.

செய்தான்

‘‘இந்தா, இங்க வா, என் காலை சப்பு" என்றாள்

செய்தான்.

அவன் சின்னப்பையன். போதையில் எல்லாவற்றையும் செய்தான்.தீப்திகாவை விட இரண்டு வயது இளையவனாக இருப்பான்.

‘‘உனக்கு என்கிட்ட என்ன பிடிக்குது?" என்றாள்.

‘‘உன் பூப்ஸ்" என்றான்.

பிரேசியரை கிழித்துக் கடாசினாள்.

‘‘ஒரு வாட்டி தொட்டுக்கோ" என்றாள்.

இடது கையால் விரல்கள் நடுங்க தொட்டான்.

‘‘போ, போய் அந்த சேர்ல ஒக்காந்துக்கோ, என் பூப்ஸைப் பாத்து கையடி" என்றாள்.

சத்தியத்துக்குக் கட்டுப்பட்டவன் போல அந்த நாற்காலியில் அமர்ந்து, சுய இன்பம் செய்ய ஆரம்பித்தான்.

குடி உச்சத்தில் இருந்ததால் விரைப்பு வர நேரமானது.

‘‘ங்கோத்தா என் பூப்ஸைப் பாத்துமே உனக்கு விரைப்பு வரலையாடா?’’

‘‘சாரி, சாரி இன்னொரு வாட்டி தொட்டுக்கவா? ஒரே ஒரு கிஸ் குடுக்கறியா?" அவன் உடல் நடுங்கியது.

‘‘வாடா.’’

அவனை இழுத்து அணைத்துக்கொண்டாள். அவனுக்குக்கு முத்தமிட்டாள். அவன் குறிப்பற்றினாள். அது எழுந்தது. ‘‘போடா போய் பெர்ஃபாமன்ஸ் பண்ணு" என்றாள்.

அவன் போய் அமர்ந்து எழுந்த குறியை இயக்கினான்.

அதை விடியோ எடுத்தாள் தீப்தி.

அவன் முடிவுக்கு வந்ததும், அவனைத் தள்ளிக்கொண்டு போய், வெளியே விட்டு கதவைச் சாத்தினாள்.

‘‘ப்ளீஸ் ப்ளீஸ், டிரஸ் ப்ளீஸ்" என்று அரற்றினான்.

ஒரு துண்டை மட்டும் கதவுக்கு வெளியில் போட்டாள்.

அவன் எப்படி வீட்டுக்குப் போனான் என்பது ஒரு விருது வாங்கப்போகும் உலகத் திரைப்படத்திற்கான ரா மெட்டீரியல்.

ஆசீஃப் காந்தி சென்றதும் நிர்வாணமாக, க்யூட்டி மென்றில்லா பாடிய 'ஃபக்கிங் கேர்ள்' என்ற பாடலுக்கு நடனம் ஆடிக்கொண்டு இருந்தாள்.

இதேபோல ஒருநாள் ராம பக்தர் ஒருவனை வீட்டுக்குக் கூட்டிக் கொண்டு வந்தாள்.

அவன், எதைப் பேசினாலும், ராம் என்ற வார்த்தையை ஆரம்பித்துதான் பேசினான்.

‘‘ராம், தண்ணி குடிக்கணும்."

‘‘ராம், டாய்லெட் எங்க இருக்கு?’’

‘‘ராம், யூ ஆர் சோ க்யூட்."

‘‘ராம், யூ ஆர் சோ செக்ஸி."

அவனை ராம் ராம் சகேதே ராம் ராம் என்ற் ஹே ராம் பாடலுக்கு முண்ட கட்டையாக ஆட விட்டாள் தீப்தி.

அவனும் லேசான தொப்பையை தள்ளிக்கொண்டு ஆடினான்.

வழக்கம் போல, ‘‘என்கிட்ட என்னடா பிடிச்சி இருக்கு" என்று கேட்டதும்,

‘‘ராம், எனக்கு உன் யோனியை ரொம்ப பிடிச்சி இருக்கு" என்று சொன்னான்.

‘‘வாடா" என்று அழைத்துக்கொண்டு போய் குளியலறையில் வைத்து, அவன் முகத்தில் சிறுநீர் பொழிந்தாள்.

அவன் ஏதோ செய்தான். குடித்தான் என்று சொல்வதில் ஒரு நயம் இல்லை.

அவனையும் வெளியில் அனுப்பி கதவைச் சாத்தினாள்.

சில நேரங்களில் யாரையேனும் போதையில் புணர்ந்தால் கூட கடைசியில் வெளியே துரத்திக் கதவைச் சாத்துவதை மறப்பதில்லை.

இப்படி இருக்கையில் தான் சென்னைக்கு மாற்றல் கிடைத்தது. அதே நேரத்தில்தான், கல்லூரியில் நண்பனாக இருந்த ராஜேஷ் குமார் மெசேஜ் அனுப்பி இருந்தான்.

அவனுக்கு ரிப்ளை செய்து சென்னைக்குச் சென்று அவனைச் சந்தித்தாள்.

அவன் கல்லூரிக் காலத்திலிருந்தே அவளைக் காதலிப்பதாகச் சொல்லியதும், இவ்வளவு கசப்பனுபவங்களுப் பின்னும் அவளுக்கு காதல் மீண்டும் பிடிக்க ஆரம்பித்தது. அவளது பைத்தியக்காரத்தனங்கள் குறைய ஆரம்பித்தது. அவள்

காதலிப்பதைத் தாண்டி தன்னைக் காதலிக்கும் ஒருவனை மீண்டும் ரசிக்க ஆரம்பித்தாள்.

ராஜேஷ் குமாருடன் முதன்முறை குடித்து விட்டு பைக் எடுக்கையில், ஆம், ஹெரிடேஜ் பைக்கை இன்னும் தீப்திதான் வைத்திருந்தாள். ஆர் சீ புக் இன்னும் யெஸ்ஸு பேரில் இருந்தாலும், தீப்திகாதான் வைத்து இருந்தாள். விவாகரத்தின் போது யெஸ்ஸு அதைத் திரும்பக் கேட்கவில்லை.

அதை எடுக்கும் போதுதான் பார்க்கிங்கில் வைத்து முதன் முதலில் ராஜேஷ் குமாரை முத்தமிட்டாள்.

முதன்முறை ராஜேஷ் குமாரை முத்தமிட்டது அவளுக்கு மறந்து போனது. மறுநாள் போதையில்லாமல் “முத்தமிட்டு, முதல் கிஸ்ஸை செலிபரேட் பண்ணலாமா?" என தீப்தி கேட்டபோது, “நேத்து முத்தமிட்டாயே, அது மறந்துடிச்சா?" என்றான் ராஜேஷ் குமார்.

“ஆமாண்டா கிஸ் பண்ணனா?" என தீப்தி சொல்லியதும்,

“ஏய் என்ன தீப்தி? இப்படி யார் கூட குடிக்க போனாலும், கிஸ் பண்ணிட்டு மறந்துடுவியா?" என ராஜேஷ் குமார் கேட்டதில் தீப்திக்கு கோபம் வரவில்லை. அதிலுள்ள உண்மையான பொஸஸிவ் நெஸ்ஸைக் கண்டு கொண்டாள்.

பொய் சொன்னாள்.

ராஜேஷ் குமார் “தகவல் தெழில்நுட்பத்துறையில் இருப்பதால், இங்கு ராத்திரி க்ளையண்டை சந்திக்கும் பழக்கம் இல்லாததால இதுலாம் என்னன்னு புரியலை" என்றான்.

“இனிமேல் பிசினஸ் டின்னர் போக மாட்டேன்" என்றாள். அங்கு அவள் எந்தத் தவறும் செய்யாமல் இருந்தாலும்.

ராஜேஷ் குமாரும் தீப்தியும் திருமணம் செய்து கொண்டார்கள்.

திருமணத்திற்கு ஆதிரை சென்று செல்ஃபீ எடுத்துப் போட்டாள்.

இந்த நாவல் முடியும் வரை தீப்தியும் ராஜேஷ் குமாரும் இனிமையாக வாழ்ந்து வந்தார்கள்.

# இனியா

எ ல்லோருக்கும் கதை இருக்க வேண்டிய அவசியம் இருக்கிறதா? கதையிலா பெருவாழ்வு வாழ்ந்தவர்கள் இருக்கிறார்கள்தானே?

கதையேதுமில்லா ஒரு கணத்தில் இனியாவும் சங்கீத்தும் பிரிய நேரிடுகிறது. அந்த பிரிவுக்குக் காரணமும் கதையும் ஏதுமில்லை. இருந்தாலும் உவப்பில்லை.

அப்போது சங்கீத் கேட்கிறான்.

‘‘ஒரே ஒருமுறை என்னுடைய முலைகளை நான் பார்த்துவிட்டுச் சென்று விடுகிறேன்"

எந்த மறுப்பும் சொல்லாமல், தன்னுடைய, டீ ஷர்ட்டைக் கழற்றி போட்டு விட்டு பிரேசியரை அவிழ்த்து வீசி நெஞ்சை நிமிர்த்தாமல், சங்கீத்தைப் பார்க்கிறாள் இனியா.

சங்கீத் அழுகிறான்.

இனியா சிரிக்கிறாள்.

சங்கீத் வெளியேறுகிறான்.

மாரடைப்பு அல்ல, மார்படைப்பில் ஒருவர் இறக்கிறார்கள்.

# தீப்தி – ஆதிரை

ஆதிரையிடம் தீப்தி சொன்னது:–

எனக்கு அலுத்து போச்சிடீ. செக்ஸே வேணாம்னு மரத்துப் போச்சி. இனிமே எனக்கு செக்ஸ்ல புதுசா ஏதும் இல்லடீ. ஐ ஹேட் எ ஆவ்சம் செக்ஸ் வித் சாரு நிவேதிதா. பட் ஹீ ஹேஸ் சீட்டட் மீ. அதுக்கு அப்புறம் எத்தனையோ செக்ஸை பாத்துட்டேன். இனிமே என்னை செக்ஸ் காம் டவுன் பண்ணாதுன்னு தெரிஞ்சி கிட்டேன்.

"ஏன்டி திரும்பவும் கல்யாணம் பண்ணிக்கப்போற?" –ஆதிரை

"கல்யாணம் தேவைடி. கல்யாணம் பண்ணாம தனியா இருந்தா, கண்டவனும் வரான். கண்டவனும் கை வைப்பான்டி."

"நீ இதுவரைக்கும் கண்டவனை கை வைக்க விட்டதே இல்லையேடீ? நீதான்டி கண்டவன் மேல கை வச்சிருக்க!"– – ஆதிரை

தீப்தியிடம் ஆதிரை சொன்னது:–

லக்ஸ் இவ்ளோ டார்ச்சர் பண்ணியும், நான் ஏன் லக்ஸ் கூட லவ் பண்ணிட்டு இருந்தேன்னு தான கேக்கற? லக்ஸ் எல்லாம் எனக்கு ஒரு மேட்டரே இல்ல. எனக்கு என் லவ்வுன்னு தோணிச்சி. என் லவ்வை நான் காப்பாத்தணும்னு யோசிச்சேன். எனக்கு என் லவ் முக்கியமா இருந்துச்சி. என் லவ்ல லக்ஸ் வந்துட்டான். எவன் வந்து இருந்தாலும் என் லவ்தான் எனக்கு முக்கியமா இருந்து இருக்கும். இப்பதான் புரியுது, அது முட்டாள்த்தனம்னு!

# தீப்தி, ஏஞ்சலின், ஆதிரை, பிரபா, கன்யா, இனியா – நிகழ்காலம்

ஆட்டம் உச்சத்தில் இருந்தது. பிரபா கொஞ்ச நேரம் மயங்கிக் கிடந்து, பின் எழுந்து முகத்தை கழுவிக்கொண்டு வந்து அமர்ந்திருந்தாள். கன்யா பிரபாவின் மடியில் படுத்துக்கொண்டாள். தீப்தி ஆடிக்களைத்து சோஃபாவில் விழுந்தாள். ஆதிரை அவள் பக்கத்தில் அமர்ந்து கொண்டாள். இனியாவும் ஏஞ்சலினும் மெலோடி பாடலை ஒலிக்க விட்டு உட்கார்ந்தபடி கையை மட்டும் ஆட்டி நடனம் ஆடிக்கொண்டு இருந்தார்கள்.

இனியா திடீரென்று “நான் கல்யாணமே செஞ்சிக்க வேணாம்னு இருக்கேண்டி" என்றாள்.

பிரபா துள்ளி எழுந்து அவளை ஹைஃபை செய்தாள். ஆதிரை காற்றில் ஹைஃபை செய்தாள்.

எல்லோரும் ஹோ என்று கத்தினார்கள்.

“நாம எல்லோரும் சேந்து ஒரு பிஸினஸ் செய்யலாமா?" என்றாள் தீப்தி.

அனைத்து பெண்களும் ஒரே குரலில் ஆமோதித்தனர்.

“என்னா பிஸினஸ்?"

“ஈவண்ட் மேனேஜ்மெண்ட்

கேட்டரிங்க்

க்ரீச்

டிராவல்ஸ்

பார்

ரெஸார்ட்.”

என விதம் விதமாக ஐடியா தெறித்தது.

டிடெக்டிவ் ஏஜென்ஸீஸ் பெண்களுக்கு மட்டும் சர்வீஸ் என்ற ஐடியா ஏகோபித்த ஆதரவைப் பெற்றது.

கடைசி ரவுண்டை ஊற்றிக்கொண்டு ‘‘நாம யாரும் கல்யாணமே பண்ணிக்க வேண்டாம். ஆம்பளைங்களே நமக்கு வேண்டாம், ப்ளடி ஃபக்கிங்க் பாஸ்டர்ட்ஸ். செக்ஸ் வேணும்னா வீ வில் கோ ஃபார் பெய்ட் செக்ஸ்" என்று கோரஸாக உறுதிமொழி எடுத்துக்கொண்டு சியர்ஸ் அடித்தனர்.

# பொண்டாட்டி குறுங்கதைகள் –
# மரணக் காதல்

இனியாவுக்கும் கணேசன் அன்புவுக்கும் மரண காதல். எத்தனை காதல் கதைகளைத்தான் படிக்க முடியும்? எனவே இந்தக் காதல் கதையே வேண்டாம். அதனால் மரணக் காதலோடு நிறுத்தியாகி விட்டது.

இனியா சங்கீத்தை பிரேக் அப் செய்ததற்குப் பிறகு உருவானது மரணக் காதல்.

இனியாவுக்கு சாதி, மதம் இன்ன பிற குடும்பச் சிக்கலால் நரசிம்மனுடன் திருமணம் நிச்சயக்கப்படுகிறது; திருமணமும் நடந்து விடுகிறது.

இந்த மரணக் காதலில் என்ன சிறப்பு என்றால், இருவரும் பார்த்துக் கொள்ளவேயில்லை; சாட், போன் மட்டுமே.

இனியாவின் திருமணத்திற்கு கணேசன் பணமும் நகையும் கொடுத்து உதவுகிறான். இல்லையென்றால் பெரும் பிரச்சனை ஆகி இருக்கும். அந்த பெரும் பிரச்சனை தனி நாவல்.

கணேசன் பர்மாவில் வேலை கிடைத்துச் செல்லத் தயாராகிறான். அதை இனியாவிடம் சொல்கிறான். இனியா நான்கு மாதம் கர்ப்பமாக இருக்கிறாள்.

“ஒரு தடவை உன்னைப் பாத்துடறேன்" என்கிறாள்.

ஆனால் இனியா வீட்டில் கடும் கட்டுப்பாடு. வெளியில் சென்றால் யாரேனும் உடன் வருவார்கள்.

தீப்தி மூலம், ப்ரியாந்தினியின் மருத்துவமனையில் இருவரும் சந்திப்பதாக ஏற்பாடாகிறது.

அந்த மருத்துவமனைக்குத்தான் செல்வேன் என அடம் பிடித்து, உறவினர் இருவர் உடன் வர ப்ரியாந்தினியின் மருத்துவமனைக்குச் செல்கிறார்கள்.

உறவினர்கள் வரவேற்பறையில் அமர்ந்து கொள்ள, இனியா இன் பேஷண்ட்ஸ் இருக்கும் ஒரு அறைக்குச் செல்கிறாள். அங்கே கணேசன் அன்பு.

இருவரும் முதன்முறையாகக் கட்டிக்கொள்கிறார்கள். பத்து நிமிடம் அப்படியே இருக்கிறார்கள். அழுகிறார்கள்.

‘‘உன் புருஷன் எப்படி?’’

‘‘அவன் கிடக்கறான் முட்டா புண்டை"

‘‘ஏன்டி டார்ச்சர் பண்றானா?’’

‘‘இல்லடா டார்ச்சர்லாம் பண்ணா செருப்படி அடிச்சிடுவேன். நல்லவன்தான் அந்த கேனப்புண்டைய விடு நீ எப்டி இருக்க?’’

‘‘ஓக்கே டீ."

‘‘நான் சீக்கிரமா போணும்டா" என்று சொல்லியபடி ரவிக்கையை அவிழ்க்கிறாள்.

‘‘யேய்... என்ன பண்ற? இதெல்லாம் வேணாம்."

காதில் வாங்கிக்கொள்ளாமல் கழட்டி வீசிவிட்டு அவனுடைய பேண்டைக் கழட்டுகிறாள். அவனுடைய சட்டையைக் கழட்டிக் கடாசி விட்டு முத்தமிட்டுக் கொஞ்சி விட்டு ‘‘சீக்கிரம் செய்டா" என்கிறாள்

‘‘வயிறு இப்படி இருக்கேடீ, எதாச்சும் ஆயிடப் போகுது."

ஆறு மாத கர்ப்பமே வயிறு கொஞ்சம் பெரிதாக இருந்தது.

‘‘பிரஷர் போடாம பண்ணு. பேபிக்கு தெரியக்கூடாது."

‘‘மல்லாந்துப் படுத்தா சரி வராதுடா, மல்லாந்து படுக்கவும் கூடாதுடா" என்றாள்.

‘‘இப்ப ஏன்டி அப்படி கஷ்டப்பட்டு செஞ்சிகிட்டு" என்றான்.

‘‘இவன் ஒருத்தன்... இருடா ஏதாச்சும் யோசிக்கிறேன்" என்றவள் யோசித்தாள்.

இரு தலையணைகள் எடுத்து வைத்துக்கொண்டு அதன்மேல் சாய்ந்து பார்த்தாள் சரிவரவில்லை. சரிவரவில்லை என்று சுலபமாக சொல்லிவிடுகிறோம். அதற்கு முன்னால் அவனை இழுத்து மேலே படரவிட்டு வயிற்றின் மேல் பாரம்

போடாமல் முயற்சி செய்து பார்த்து முடியவில்லை என்பதற்கு பிறகுதான் சரிவரவில்லை என்பது வருகிறது.

கட்டிலின் நுனியில் அமர்ந்துகொண்டு கால்களைத் தரையில் வைத்துக் கொண்டு முதுகுக்கு இரண்டு தலையணைகளைக் கொடுத்து சாய்ந்துகொண்டு கணேசனை அழைத்தாள்.

இனியாவின் முகம் இப்போது மிகவும் கவர்ச்சியான அழகோடு மிளிர்ந்து கொண்டிருந்தது. வழவழப்பான கால்களில் வெரிகோஸிஸ் பச்சைக் கோலங்கள் போட்டபடி மின்னல் தெறிப்புடன் தெரிந்தன.

இனியாவின் வயிறும் வயிற்றிலிருக்கும் குழந்தையும்தான் காரணம்.

இதை உணர்ந்துகொண்ட இனியா கணேசனை இழுத்து வயிற்றின்மேல் படாமல் அணைத்துக் கொண்டாள். இனியா ஒரு படகு போலவும் கணேசன் மூன்றாம் பிறையைத் திருப்பிப் போட்டதுபோலவும் அணைத்துக் கிடந்தனர்.

இனியா கணேசனின் ஆண்குறியைப் பற்றி குறிக் குலுக்கினாள்.

கணேசன் இனியாவின் வயிற்றை மறந்து இனியாவின் முகத்தையும் முலையையும் மனதிலும் கண்களிலும் நிலைநிறுத்தி முத்தமிட இனியாவின் உதவியோடு கணேசனின் குறி சிரமப்பட்டு உள்நுழைந்தது.

‘‘கொஞ்சம் காலத் தூக்கிக்க முடியுமாடி?’’

‘‘அதெல்லாம் வேணாம். சீக்கிரம் செய்டா.’’

எங்கு போகிறது என்ன நடக்கிறது என்று தெரியாமல் கைகளைக் கட்டிலில் ஊன்றியபடி காற்றில் இயங்கினான் கணேசன்.

உச்சத்திற்குப் பிறகு காற்றில் அந்தரத்தில் துடித்துக் கொண்டிருந்தான்.

வயிற்றில் ஒரு கையை வைத்துக் கொண்டு கணேசனைப் பற்றி தன்மீது மெல்லப் படர விட்டுக்கொண்டு தட்டிக் கொடுத்தாள்.

முடிந்ததும் ‘‘ஏன்டி இவ்ளோ அவசரமா?’’

‘‘எனக்கு என்னமோ, ஒரு மாதிரி இருந்துச்சிடா, ஒரு குற்றவுணர்ச்சியா என்னான்னு தெரியலை. இப்ப ஓக்கே."

அவள் கிளம்பினாள்.

மெசேஜ் வந்தது.

‘‘சாரிடா, ப்ளோ பண்ண மறந்துட்டேன்"

கணேசன் தாய்லாந்து சென்று ஒரு வாரம் தங்கி விடாமல் குடித்து, ஒரு வாரத்துக்கும் இரண்டு கேர்ள் ஃபிரண்டுகளை வாடகைக்கு அமர்த்திக்கொண்டு, யாரைப் புணர்கிறோம் என்று போதையில் தெரியாமலேயே புணர்ந்து , சில சமயங்களில் விந்தே வராமல் அவர்கள் மேலேயே படுத்து உறங்கி, கடைசியில் பர்மா போய்ச்சேர்ந்து சம்பாதிக்க ஆரம்பித்தான்.

# முற்றும்

க லா ஆடிக்கொண்டிருந்தாள்; அனைவரும் குறி கேட்டு முடித்து இருந்தனர், பூசாரி சூடத்தைக் கொளுத்தி வாயில் போடப்போகும் நேரத்தில் அடித்துப் பிடித்து ஓடி வந்து கலா காலில் விழுந்தான்.

“ஏன்டா இவ்ளோ லேட்டா வர? நான் மலையேறப் போறேன்."

“மன்னிச்சிடு, மன்னிச்சிடு, எழுதி முடிச்சிட்டேன்."

“என்னாடா எழுதி இருக்க? ஒரே காலக் கொழப்பமா இருக்கேடா?”

எழுதி முடித்ததைக் கலாவின் காலடியில் வைத்தான். அதை எட்டி உதைத்தாள் கலா. பக்கங்கள் பறந்தன; கலா தன் காலை எடுத்து அவன் தலை மேல் வைத்தாள். குங்குமத்தை அள்ளி அவன் முகத்தில் வீசினாள்.

“தீப்தியை, பொற்செல்வியோட பொண்ணுன்னு சொல்ற. தீப்தி கதை இப்ப நடந்துட்டு இருக்கு. அப்ப பொற்செல்வியோட காலம் என்ன? அன்னத்தோட காலம் என்ன?”

“அன்னத்தோட காலம், ஆயிரத்தி தொள்ளாயிரத்தி அறுவது, இல்லன்னா எழுவதுன்னு வச்சிக்கலாம்."

“டிவிஎஸ் 50 எண்பதுலதானடா வந்திச்சி? அது இல்லாம ஹீரோ புக் வேற வருது. அதை எப்பிடிடா ஜாஃபர் ஓட்டிட்டு வர முடியும்? அதை சைக்கிள்னு மாத்திக்கோ. இப்பல்லாம், இவனுங்க படிக்கிறானுங்களோ, இல்லியோ, இதை மாதிரி கொறை கண்டு புடிக்கிறதுல கில்லியா இருக்கானுங்க. ஈஸியா கூகிள் பண்ணி கண்டு புடிச்சிடுவானுங்களேடா.”

“அதை வேணும்னுதான் ஆத்தா பண்ணி இருக்கேன். யாரும் நாவலைப் பத்தி பேச மாட்டாங்க. வந்த மாதிரியே காட்டிக்க மாட்டாங்க, குறை இருந்திச்சின்னா, அதைக் கண்டுபுடிச்சி சொல்ற ஆசைலயாவது பேசுவாங்க. அதுக்குத்தான் ஆத்தா, நிறைய லாஜிக்கல் தவறுவகளை வச்சிருக்கேன்.”

‘‘டேய் பொல்லாதவன்டா நீ, தெரியாம பண்ண தப்பையும் தெரிஞ்சிதான் பண்ணேன்னு சொல்லிடலாம் இல்ல?’’

‘‘ஹி ஹி ஆமாம் ஆத்தா. லாஜிக்கா முக்கியம், கதைதானே முக்கியம். இது என்ன சயிண்டி·ஃபிக் ·ஃபார்முலாவா? இதை வச்சி ராக்கெட் விட போறாங்களா?’’

‘‘இதுல என்னடா பெரிய மயிறு கதை இருக்கு ? உனக்கு என்னாடா பொண்ணுங்களைப் பத்தி தெரியும்? நீ யார்ரா எழுதுறதுக்கு? உனக்கு என்னா தெரியும் பொண்டாட்டிங்களைப் பத்தி?’’

‘‘அதான் முன்னாலயே கேட்டேன், நீயும் ஒரு பொண்டாட்டி தானேன்னு, நீ இல்லடா, நான ஆத்தான்னு சொல்லிட்ட. யாருமே பொண்டாட்டி கெடையாது, எல்லாருமே ஆத்தான்னு சொல்லிட்ட. பொண்ணுங்களும் பொண்டாட்டியைப் பத்தி எழுத மாட்டறாங்க. அப்புறம் யாருதான் எழுதறது?’’

‘‘என்னா மசுருக்குடா எழுதணும். எங்களுக்கு எங்களைப் பத்தி தெரியும். நீ எழுதறது ஆம்பிளைங்களுக்கு. அவனுங்களுக்கு ஒரு கிளுகிளுப்பு வேணும். உனக்கும் ஒரு கிளுகிளுப்பு. உங்க அரிப்புக்கு பொண்டாட்டிதான் கெடைச்சாளா?’’

‘‘சத்தியமா கிளுகிளுப்பு மட்டும் இல்ல ஆத்தா. யாருக்கும் பொண்டாட்டின்னா என்னான்னே தெரிய மாட்டேங்குது. அதான் கொஞ்சமாச்சும் எழுதிப் பாத்து புரிஞ்சிக்கலாம்னுதான்."

‘‘போடா புண்ணாக்குக்கு பொறந்தவனே, உலகம் அழியிற வரைக்கும் உங்க மசுரானுங்களால பொண்டாட்டியை புரிஞ்சிக்கவே முடியாதுடா. நீங்க புரிஞ்சிக்கிறதுக்கா நாங்க இருக்கோம்? புரிஞ்சிதான் என்னா மசுரைப் புடுங்க போறீங்களா? புரிஞ்சிக்காம இருக்குற வரைக்குமாச்சும் பொண்டாட்டிங்களுக்கு கொஞ்சம் சே·ஃபு. ஜெயமோகன் தீப்தி கூட போவான். ஆனா அதை மன்னிச்சி ப்ரியாந்தினி ஏத்துகிட்டு அவன் கூட வாழணும். அவதான் பத்தினி, அதானே நீ எழுதி இருக்க?’’

‘‘இல்ல ஆத்தா, கடைசியா ஒண்ணு எழுதி இருக்கேன். அதை உன்கிட்ட சொல்லிட்டு, சேத்துடலாம்னு."

# பொண்டாட்டி குட்டிக்கதைகள் – ப்ரியாந்தினி

ஜெயமோகன், மாலத்தீவுக்கு செல்வதற்கு அனைத்து ஏற்பாடு களையும் செய்து ப்ரியாந்தினியிடம் காட்டினான். அவனைப் ப்ரியாந்தினி கட்டிக்கொண்டாள்.

மருத்துவமனையில் இருந்த ஓர் இரவில், ரேண்டமாகப் பார்த்து பிரெசீலியன் ஒருவனுடன் சாட் செய்தாள். விடியோ சாட்டுக்கு வந்தார்கள். அவன் ஒரு பாடகன்.

சாட், ஃப்லிர்டாக மாறியது. லவ் யூ சொல்லிக்கொண்டார்கள்; கொஞ்சிக் கொண்டார்கள்.

‘‘என்னை நிர்வாணமாகப் பாக்கறியா?" என்றாள்.

‘‘வித் ப்ளஷர்" என்றான்.

ப்ரியா ரெண்டு ரவுண்ட் தண்ணி அடித்து விட்டு, உடைகளை ஒவ்வொன்றாக் கழட்டினாள். அவன் விடியோவில் பார்த்துக் கொண்டே தன் உடைகளைக் கழட்டினான். அதை ப்ரியா பார்க்க வில்லை.

முழு நிர்வாணமாகி அவனுக்கு அனைத்தையும் தெளிவாகக் காட்டினாள். அவன் சுயஇன்பத்தில் ஈடுபட்டான்; முடிந்ததும், அவனுக்கு பை சொல்லாமல், அவனை பிளாக் செய்தாள்.

ஜெயமோகனுடன் மாலத்தீவு சென்று விடுமுறையை அனுபவித்தாள்.

‘‘இது கொஞ்சம் பரவால்லைடா, ஆனாலும் பத்தலை.’’

‘‘இல்ல ஆத்தா, செல பொண்ணுங்க புருஷன் என்ன தப்பு பண்ணாலும் அவன் வேணும், குடும்பம் வேணும்னு இருக்காங்களே, எல்லாருமா இன்னொருத்தன் கூட ஓடிப்போறாங்க? இல்ல கோச்சிகிட்டு உன்னை மாதிரி தனியா வந்து ஒக்காந்துக்குறாங்களா? அப்படி தனியா கோவமா ஒக்காந்துக்குறதுல என்ன ஆயிடப் போகுது?"

‘‘உனக்கு என்னாடா நாயே என்னைப் பத்தி தெரியும்? என்னையே நக்கல் பண்றியா?’’

‘‘அய்யோ ஆத்தா, என்தாயி நீ, என் தெய்வம் நீ" என்று சொல்லியபடி கலாவின் காலில் விழுந்தான்.

அவனை எட்டி உதைத்த கலா, ‘‘ஆதிரையை லக்ஸ் சிகரட்டால சுட்டதை நீ எழுதவே இல்லையே? என்னா ஆம்பிளை பாசமா?"

‘‘இல்ல ஆத்தா, அதை எழுதினா சீரியல் மாதிரி ஆயிடும்னுதான்."

‘‘சீரியல் மாதிரி நீங்கதானடா பண்றீங்க? நான் சொல்றேன் கேட்டுக்க. மொத தடவை தெரியாம சிகரட் ஆதிரை மேல பட்ற மாதிரி பண்ணான். அவளுக்கு சுட்டுச்சி. அப்புறம் லைட்டா தெரியற மாதிரியே வெளையாட்டா செய்ற மாதிரி செஞ்சி செஞ்சி பழக்கப்படுத்தினான். அப்புறம் நேரடியாவே சுட ஆரம்பிச்சான். அதை செக்ஸ்ல ஒரு ஆக்டிவிட்டியா மாத்தினான். அவ மொலைல சுட்டான். வயித்துல சுட்டான். அப்புறம்... அதை நினைச்சாலே என் பெத்த வயிறு பத்தி எரியிதுடா கட்டைல போறவனுங்களா."

‘‘மன்னிச்சிடு ஆத்தா."

‘‘நான் சொல்றேன் கேட்டுக்க, பொற்செல்வி நல்லா படிப்பா, நல்லா சமைப்பா, யாரையும் சைட் கூட அடிக்க மாட்டா, தற்காப்பு கலை தெரியும், அழகா இருப்பா, நல்லா சம்பாதிப்பா, எல்லாத்துக்கும் மேல அவ விர்ஜின். இந்த மாதிரி காம்போல ஒங்களுக்கு ஒரு பொண்ணு கேக்குது. இவதான் ஒங்களோட கனவுக்கன்னி இல்லியா? ஆனா நீங்க எல்லா கண்டார ஓழி வேலையும் பாப்பீங்க. எல்லா எச்ச வேலையும் பாத்துட்டு இருக்கும் ஒங்களுக்கு பொண்டாட்டின்னா பொற்செல்விதான் வேணும். இப்ப சொல்றேன் கேளு, இந்த நாவல்ல, பொற்செல்வியே கெடையாது. அவ கற்பனை. அவ ஃபேக்கு. அவ விர்ச்சுவல். அப்படி ஒரு ஆளே உலகத்துல இல்லை. அவ ஒன்னோட, ஆம்பளைங்களோட மன அரிப்பு. அவளை நாவல்ல இருந்து தூக்கறேண்டா."

‘‘அய்யோ ஆத்தா, பொற்செல்வியைத் தூக்கிட்டா தீப்திகாவே நாவலில் வர முடியாதே! பொற்செல்வியோட மகள்தானே தீப்திகா. தீப்திகாவையும் தூக்கணும்னா ஹீரோயின எப்படித் தூக்கறது? இவளைத் தூக்கினா

ஜெயமோகன், சாரு, யெஸ் எல்லாரையும் தூக்கணும். கடைசில நாவலே இருக்காது.’’

‘‘ஆமாடா, நாவலே இருக்காதுதான். அதனாலதான் சொல்றேன், இந்த நாவலே ஒரு ஃபேக் நாவல்டா..."

‘‘ஆத்தா, என்னா ஆத்தா இப்டி சொல்லிட்ட? இந்த நாவலை விடட்டுமா வேண்டாமா? ரொம்ப கஷ்டப்பட்டு எழுதி இருக்கேன் ஆத்தா."

‘‘வுடு, வுடு, ஒங்க வண்டவாளங்க எல்லாம் சனத்துக்கு தெரியட்டும்.ஆனா, பொண்டாட்டின்னு தலைப்புக்கு கீழ ஃபேக் நாவல்னு போட்டு விடணும்."

‘‘சரி ஆத்தா."

‘‘அதே மாதிரி நாவலை எனக்கு டெடிகேட் பண்ணிடு.’’

‘‘சரி ஆத்தா, ஐ லவ் யூ ஆத்தா.’’

# அன்பான நன்றிகள்

இந்த நாவல் உருவாக்கத்தில் பல நண்பர்கள் பல வழிகளில் உதவினார்கள். வெறித்தனமான அன்பு இருந்தால்தான் இப்படி ஒத்துழைக்க முடியும். இரவு பகல் பாராமல் உழைத்து அருமையான அட்டைப் படம் போட்டுக்கொடுத்த கார்த்திகேயன் மேடி—க்கு அன்பும் நன்றியும்.

பொண்டாட்டி நாவலுக்கு ஒரிஜினல் மியூசிக் போட்டுக்கொடுத்த நண்பர் சத்யாவுக்கு நிரம்பித் தளும்பும் அன்பும் நன்றியும்.

பிலீவர் பாடல் மெட்டில் நாவல் வரிகளில் இருந்து பாடல் வரிகள் எழுதிப் பாடிக்கொடுத்த ரோஹித் ஸ்ரீநிவாஸனுக்கு அள்ள அள்ளக் குறையாத நன்றிகள். அதே பாடலுக்கு ஃபீமேல் வெர்ஷன் பாடிக்கொடுத்த வைஷ்ணவிக்கு மிக்க நன்றி.

டீசருக்கு உதவி செய்த டிமிட்ரி, சக்தி மற்றும் எடிட்டர் சுனிலுக்கு நன்றிகள். ஆரம்பம் முதல் வெவ்வேறு வேலைகளுக்கு போட்டோ, விடியோ, எடிட்டிங் என கலந்து கட்டி வேலை செய்த போட்டோகிராஃபர் சிவாவுக்கு மலைக்கவைக்கும் அன்பும் நன்றியும்.

பொண்டாட்டி தீம் பாடலுக்கு ஆடிக்கொடுத்த அஜித் மற்றும் மோகன் இருவருக்கும் நன்றி மற்றும் சியர்ஸ்.

மிகவும் கடினமான ஒரு வேலை. எனக்கு சமமாக வேலை பார்த்து, ராப்பகல் பாராமல் உழைத்து, ஒளி வேகத்தில் அட்டகாசமாக பிழை திருத்தம் செய்து கொடுத்த வெண்பாவுக்கு நன்றி சொல்லி கழன்று கொள்ள முடியாது. விழாவில் கௌரவப்படுத்தி டிரீட் கொடுக்க வேண்டும். இப்போதைக்கு நன்றி வெண்பா.

கடைசியாக, கடைசி நேரத்தில் கழுத்தறுத்து, இழுத்து இழுத்து மிகவும் தாமதமாக நாவலைக் கொடுத்தாலும் பொறுத்துக்கொண்டு, அட்டகாசமான முறையில் புத்தகத்தை வெளியிடப் போகும் ஸீரோ டிகிரி பப்ளிஷிங் ராம்ஜிக்கும் காயத்ரிக்கும் மரியாதையும் நன்றிகளும்.

# Thanks


Suresh Raja Manickam

Sasikala

Karthik, Malaysia

Anojen Perinbharaj, Sri Lanka

Karunanidhi Arjith

Prasanth, Sri Lanka

Chef Prabhu

Murali, Mexico

Prabakar, Director

Rtn Ram

Karthik Pitchumani

Gopalakrishnan

Hari Rahman

Pichaikkaaran

Manoharan Masanam

Karuppusamy

Selvakumar

Ganesan Anbu

Revathi

Kavitha

Nithya

Dinesh, Yercaud

Kavi palani

Sujai Gangadharan

Karthik Nagendran

Sathya Moorthy, Aanamalai

Rajavenkates Raja Manickam

Moorthy, Ex. Dada

Roselin, Paris

Ramya

Vennila

Sunitha

Saira

Suganthi

Sasi Rekha

Soundarya

Maha Lakshmi

# அராத்து

பாண்டிச்சேரியில் பிறந்து, கடலூர் மாவட்டம் புவனகிரியில் வளர்ந்தவர். சமூக வலைத்தளங்களில் தொடர்ந்து எழுதி வருவதன் மூலம் கவனம் பெற்றவர். நீயா நானா உட்பட பல தொலைக்காட்சி விவாதங்களில் கலந்து கொண்டிருக்கிறார். விகடன், குமுதம் மற்றும் அந்திமழையில் இவரது சிறுகதைகள் வெளிவந்து இருக்கின்றன.

மென்பொருள் துறையில் டிரெயினிங் & கன்சல்டிங் நிறுவனம் நடத்தி வரும் இவர், தொழில்முறை எழுத்தாளர் அல்ல. பொழுதுபோக்குக்காக எழுதுபவர். இவர் இதுவரை எந்த விருதும் வாங்கியதில்லை!

வெளிவந்துள்ள இவரது நூல்கள்

1. பிரேக்&அப் குறுங்கதைகள்
2. தற்கொலைக் குறுங்கதைகள்
3. அராஜகம் 1000 – ட்வீட் தொகுப்பு
4. இங்கு பஞ்சர் போடப்படும் & நகைச்சுவை கட்டுரைகள்
5. உயிர் மெய் – நாவல்
6. காட்டுப்பள்ளி – குழந்தைகள் நாவல்
7. ஆழி டைம்ஸ் – குழந்தை குறும்புகள்
8. நள்ளிரவின் நடனங்கள் – சிறுகதைகள்